வந்துவிட்டார்! திகம்பர சாமியார்

# மதன கல்யாணி

2



வடுவூர் கே.துரைசாமி ஐயங்கார்

# மதன கல்யாணி

பாகம் – 2

வடுவூர் K. துரைசாமி ஐயங்கார்



ஜெனரல் பப்ளிஷர்ஸ்
244, (ப. எண்.) ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை – 600 004.

# மதன கல்யாணி



14—வது அதிகாரம்

## காணிக்குற்றம் கோடிக்கேடு

பன்னிரண்டாவது அதிகாரத்தின் முடிவில் கல்யாணியம்மாளும், சிவஞான முதலியாரும் சைதாப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனை அடைந்து, அந்த ஸ்டேஷனுக்கு இன்ஸ்பெக்டரே இல்லையென்றும், அதற்குச் சிறிது நேரத்திற்கு முன் எந்த இன்ஸ்பெக்டரும் குதிரையின் மீதேறி அங்கே வரவில்லை என்றும்இ சப் இன்ஸ்பெக்டர் சொல்லக்கேட்டுத் திகைத்துக் கல்லாகச் சமைந்து நின்றதாகச் சொல்லப்பட்டது அல்லவா.

அவ்வாறு போலீஸ் இன்ஸ்பெக்டர் போல வேஷம் போட்டு வந்து கொள்ளையடிப்பது, அதுவரையில் கண்டும் கேட்டுமிராத அபூர்வ சம்பவமாதலால், அதைக்கேட்ட கல்யாணியம்மாள், சிவஞான முதலியார், வண்டிக்காரன் ஆகிய மூவரும் அதியாச்சரிய மடைந்ததன்றி, சப் இன்ஸ்பெக்டரும், இதர ஜெவான்களும் அந்த வரலாற்றைக் கேட்டு அளவற்ற வியப்பும் திகைப்பும் அடைந்து, அப்படியே மூக்கின் மீது விரலை வைத்து ஒன்றையும் சொல்ல மாட்டாமல் வாய்பேசா ஊமைகளாக நின்றனர். அவ்வாறு, ஐந்தாறு நிமிஷநேரம் கழிய, அந்த ஸ்டேஷன் சப் இன்ஸ்பெக்டர், முதலில் ஒரு ஜெவானைத் தமது வீட்டிற்கு அனுப்பி, ஒரு சேலையையும் சில வஸ்திரங்களையும் எடுத்துவரச் செய்து, அம்மூவருக்கும் கொடுத்து அணிந்துகொள்ளச் செய்த பின்னர்; அவர்கள் யாரென்ற விவரங்களையும், வழிப்பறியின் வரலாறுகளையும், திருடன் அடிபட்டிருந்தபின், போலீஸ் இன்ஸ்பெக்டரைப்போல வந்தவர் சொத்துகளடங்கிய மூட்டையை எடுத்துக்கொண்டு ஓடிப்போன விவரத்தையும், அவ்வாறு மூட்டையை அபகரித்துக்கொண்டு போனவரது உயரம், பருமன், நிறம், உத்தேச வயது முதலிய குறிப்புகளையும், அவர் ஏறி வந்த

குதிரையின் அங்க அடையாளங்களையும், மூட்டைக்குள்ளிருந்த பொருட்களின் விபரங்களையும் நன்றாகக் கேட்டு, அவர்களது வாக்குமூலங்களை வாங்கிக்கொண்ட பின், பிணங்களை வைத்திய சாலைக்கு அனுப்பிவிட்டு, அவர்களைப் பெட்டிவண்டியில் ஏறிக் கொள்ளச் செய்தார். அதன் பிறகு சப் இன்ஸ்பெக்டர் தமது கத்தி, துப்பாக்கி முதலியவற்றை எடுத்துக்கொண்டு, ஆயுதபாணிகளான வேறு நான்கு ஜெவான்களையும் அழைத்துக்கொண்டு, வழிப்பறி நடந்த இடத்திற்குப் பெட்டிவண்டியை ஓட்டும்படி செய்து தாமும் ஜெவான்களோடு அந்த இடத்திற்கு வந்தார். சிவஞான முதலியாரும், வண்டிக்காரனும் கீழே இறங்கி, எந்தெந்த இடத்தில் என்னென்ன காரியம் நடந்ததென்பதை நன்றாகக் குறித்துக் காட்டினர். அவ்வளவோடு திருப்தியடைந்த சப் இன்ஸ்பெக்டர், அவர்கள் தங்களது ஊருக்குப் போகலாமென்றும், மாஜிஸ்டிரேட்டு அவர் களுக்கு உத்தரவு அனுப்பும்போது ஆஜராகி, தம்மிடத்தில் வாக்குமூலம் கொடுக்க வேண்டுமென்றும் கூற, சிவஞான முதலியார் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டதன்றி, தாங்கள் தனிமையில் ஊருக்குப்போக அஞ்சுவதால் தங்களோடு சில உஜெவான்களையும் பந்தோபஸ்தாக அனுப்பும்படி கேட்டுக் கொள்ள, சப் இன்ஸ்பெக்டர், அவர்களோடு இரண்டு ஜெவான் களை அனுப்பிவிட்டு, மூட்டையை எடுத்துக்கொண்டு போன வேஷதாரியின் குதிரைக் குளம்படியைப் பின்பற்றியபடியே போய் அவர் யாரென்பதைக் கண்டுபிடிக்கப் போவதாகச் சொல்லிவிட்டு, சைதாப்பேட்டைப் பக்கமாக நடந்தார். பெட்டி வண்டி விடியற்காலம் ஐந்து மணிக்கு மாரமங்கலம் சமஸ்தானத்து பங்களாவின் வாசலில் வந்து நின்றது. சிவஞான முதலியார் கல்யாணியம்மாளை இறங்கச் செய்து, தாம் அன்று பகலில் மறுபடியும் வருவதாகச் சொல்லிவிட்டு, பெட்டிவண்டி யோடு தமது ஜாகைக்குப் போய்ச் சேர்ந்தார்.

கல்யாணியம்மாள் அதிக சந்தடி செய்யாமல் பங்களாவிற்குள் நுழைந்து தனது அந்தப்புரத்தை அடைந்தாள். அவள் அந்த இரவு முழுதும், பட்டபாடுகளினால் களைத்துப்போய் முற்றிலும் தளர்ந்து சோர்வடைந்தவளாய், தனது கட்டிலின் மேல் உட்கார்ந்து அப்பாடா என்று படுத்தாள். இரண்டு நாட்களாகச்

சிறிதும் துயிலாமலும், சரியானபடி போஜனம் செய்யாமலும், பலவிடங்களுக்குச் சென்றலைந்த துன்பங்களினாலும், பலவகைப்பட்ட மனவேதனைகளினாலும், திருடர்களது பீதியினாலும் தளர்ந்து தள்ளாடி ஒய்ந்து எப்போது படுக்கப் போகிறோமென்ற அளவற்ற ஆவலோடு வந்தவளாதலால், கட்டிலில் படுத்தது அவளுக்கு பிரம்மாநந்த சுகமாக இருந்தது. கட்டிலில் படுத்துக் கைகால்களை நீட்டிவிட்டு இப்புறம் அப்புறம் இரண்டு மூன்று முறை புரண்ட பிறகே, அவளது தேகம் கட்டுக்கடங்கியது. அவ்வாறு அவளது சரீரம் சிறிது அமைதி யடைந்ததானாலும் அவளது மனத்துன்பங்கள் மாத்திரம் பழைய நிலைமையிலேயே இருந்து அவளை வதைத்துக்கொண்டிருந்தன. இன்னதென்று அறியவொண்ணாத பலவகையான சஞ்சலங்கள் அவளது மனதையும் அடிவயிற்றையும் குழப்பிப் புண்படுத்திக் கொண்டிருந்தன. ஐந்து நிமிஷ நேரம் படுத்திருந்தவள் உடனே எதையோ நினைத்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்து தனது தலைப்பக்கத்திலிருந்த மின்சார விளக்கின் விசையை அழுத்த, அந்தப்புரத்தில் பளிச்சென்ற பிரகாசம் உண்டாயிற்று. அப்போது தற்செயலாக தனது உடம்பையும் சேலையையும் நோக்கிய கல்யாணியம்மாள் மிகவும் வெட்கமடைந்தாள். அவள் எப்போதும் வைர ஆபரணங்களையும், உயர்ந்த பட்டாடை களையும் இடைவிடாமல் அணிந்திருப்பவளாதலால், எவ்வித ஆபரணமுமின்றி ஒளிமழுங்கி மரம்போல இருந்த தனது தேகத்தையும், தன்மீதிருந்த நான்கு ரூபாய் பெறுமானமுள்ள மதுரைச் சுன்னடிச் சேலையையும் பார்க்க, அவள் தனக்குத் தானே மிகுந்த லஜ்ஜை அடைந்ததன்றி, தான் மாரமங்கலம் ஜெமீந்தாரிணியான கல்யாணியம்மாள் தானோ என்ற ஒருவகை யான ஐயமுங்கொண்டாள். தான் எதிர்பாராத வகையில் தனக்கு ஏற்பட்ட இழிவையும் ஆபத்தையும் நினைத்து அவள் இரண்டொரு நிமிஷநேரம் தனக்குள் துக்கித்தவளாய், தான் அப்படிப்பட்ட கேவலமான நிலைமையிலிருப்பதை எவரேனும் காண்பாரானால், அதனால் தனக்கு மிகுந்த இழுக்கே நேருமென்று நினைத்தவளாய், சரேலென்று கட்டிலை விட்டிறங்கி, தனது ஆடையாபரணங்களிருந்த பெட்டிகளைத் திறந்து, உயர்வான

வேறொரு சேலையையும், இன்னொரு ஜதை ஆபரணங்களையும் எடுத்து, அதிக விரைவாக அணிந்துகொண்டு, நிலைக்கண்ணாடியில் தனது அழகைப் பார்த்துத் திருப்தியடைந்தவளாய், சிறிது தூரத்தில் கிடந்த தனது சாய்மான நாற்காலியில் உட்கார்ந்து உல்லாஸமாகச் சாய்ந்துகொண்டாள். அவ்வாறு சாய்ந்ததனால், அவளது மனதின் வேதனைகள் திரும்பவும் தலைகாட்ட ஆரம்பித்தன. முதல் நாளைய இரவில் நடந்த வழிப்பறியின் நினைவே மற்றவை களைவிட, அதிக உறுதியாக மனதில் எழுந்து அப்போதே நிகழும் நாடகக் காட்சிபோல சான்னித்தியம் செய்யத் தொடங்கியது. அந்தத் திருடர்களை நினைக்கும் போதே அவளது தேகம் கிடுகிடென்று நடுங்கியது. அடிமுதல் முடிவரையில் உரோமம் சிலிர்க்க, தேகம் முழுதும் சகிக்கவொண்ணாத ஒருவித மரப்புப் பரவியது. வண்டிக்காரனது அபார சக்தியினாலும், அபூர்வமான தந்திரத்தினாலும், தாங்கள் தப்பியதை நினைக்க நினைக்க, அவளது மனதில் ஒரு வகையான வியப்பும், ஆனந்தமும், தெய்வபக்தியும் சுரந்தன. போலீஸ் இன்ஸ்பெக்டரைப் போல உருமாரி வந்து, தங்களது மூட்டையை அபகரித்துக்கொண்டு போனவர் யாராயிருக்கக்கூடுமென்று, அவள் எவ்வளவு தூரம் யோசித்தும், எதுவும் விளங்காமல் போயிற்று. ஒருகால் அவர் சென்னையைச் சேர்ந்த போலீஸ் இன்ஸ்பெக்டராயிருப்பாரோ என்றும், அவரே சமயம் பார்த்து அவ்வாறு மூட்டையை அபகரித்துக்கொண்டு போயிருப்பாரோவென்றும், சென்னையிலும் பக்கங்களிலும் உள்ள போலீஸ் இன்ஸ்பெக்டர்களையெல்லாம் சிவஞான முதலியாரைக் கொண்டு பார்க்கச்செய்தால், அந்தச் சந்தேகம் தீர்ந்துவிடுமென்றும் கல்யாணியம்மாள் எண்ணமிட லானாள். அவளுக்குத் தனது பணம், ஆபரணங்கள், சேலை முதலியவைகள் களவு போனதைப் பற்றி சிறிதும் விசனமே உண்டாகவில்லை, பாலாம்பாள் தனக்கு எழுதிக்கொடுத்த கடிதம் போனதைப் பற்றியே அவள் கரைகடந்த விசனமும் அளவற்ற கவலையுமடைந்தாள். ஆனால், தாங்கள் அந்தக் கடிதத்தை இழந்து விட்டோமென்ற செய்தி பாலாம்பாளுக்குத் தெரியாதாகை யால், அந்தக் கடிதம் இன்னமும் தங்களிடத்தில் இருப்பதாகவே எண்ணி பாலாம்பாள் தனது வாக்குறுதியை நிறைவேற்றி

வைப்பாள் என்ற ஒரு தைரியம் அவளது மனதில் இருந்து கொண்டிருந்தது. அத்தனை துன்பங்களைக் காட்டிலும் தானும் சிவஞான முதலியாரும் பத்திரத்தில் கையெழுத்திட நேர்ந்ததே மகா விபரீதமான துன்பமாகக் காணப்பட்டு, அவளை இடைவிடாமல் வதைத்துக் கொண்டிருந்தது. அன்றைய தினம் இரவில் கண்மணியம்மாளுக்கும், மைனருக்கும் நிச்சயதாம்பூல முகூர்த்தம் வைக்கப்பட்டிருந்த விஷயத்தில் தான் என்ன செய்கிறதென்று அவன் யோசித்து யோசித்து தனது மூளையைச் சித்திரவதை செய்துகொண்டது முற்றிலும் அவமானமாயிற்று. தாங்கள் முதல் நாள் எழுதிக் கொடுத்த பத்திரத்திற்கு முற்றிலும் மாறாக, அன்றையதினமே வேறொரு பெண்ணைக் கலியாணம் செய்வதற்கு நிச்சயதார்த்தம் நடத்தினால், தாங்கள் பாலாம்பாளுக்கு உடனே ஒரு கோடி ரூபாய் கொடுக்க நேருமே என்று நினைத்துப் பெரிதும் கவலையும் பீதியும் கொண்டாள். ஆனதுபற்றி நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை நிறுத்திவிட வேண்டும் என்ற யோசனையே நல்லதாகத் தோன்றியது. நிச்சய தாம்பூல முகூர்த்தம் நிறுத்தப்பட்டுப் போனதற்கு, தக்க காரணம் சொல்லாவிட்டால், மீனாக்ஷியம்மாள் சந்தேகப்படுவதன்றி, தன்னைப் பற்றிப் பலரிடத்திலும் அவதூறாக ஏதேனும் வம்பு பேசுவாளென்ற அச்சம் ஒரு புறத்தில் எழுந்தது. ஆதலால், முகூர்த்தம் இரண்டு நாட்கள் வரையில் ஒத்தி வைக்கப்பட்டிருப்ப தாக எழுதிவைத்தால், அதன் பிறகுதான் சிவஞான முதலியாரோடு நன்றாக ஆற\ அமர யோசனை செய்து, மீனாக்ஷியம்மாளுக்கு முடிவான கடிதம் எழுதலாம் என்ற யோசனை தோன்றியது. உடனே, கல்யாணியம்மாள் எழுந்து முன்னதிகாரத்தில், மீனாக்ஷியம்மாள் கண்மணிக்குக் காட்டிய கடிதத்தை எழுதிவைக்க, பொழுதும் விடிந்தது. அவள் உடனே எழுந்து, தனது காலைக் கடன்களை முடித்துக் கொண்டு தனது வேலைக்காரர்களில் ஐவரை அழைத்து, மீனாக்ஷியம்மாளுக்கு எழுதப்பட்ட கடிதத்தை ஒருவனிடம் கொடுத்தனுப்பிவிட்டு, வேறு நால்வரை, பங்களாக்களுக்கெல்லாம் அனுப்பி, முகூர்த்தம் பின்னால் நடக்கப் போகிறதென்று தனது பந்துமித்திரர்களுக்கு எல்லாம் சொல்லி விட்டு வரும்படி அனுப்பிவிட்டு, திரும்பவும் ஒரு ஸோபாவில்

உட்கார்ந்துகொண்டாள். அவளது மனநிலைமைகள் குடித்தவனது மன நிலைமையைப்போலவும், பைத்தியங்கொண்டவனது மன நிலைமையைப் போலவும், எண்ணிய விஷயத்தைப் பற்றியே திரும்பத் திரும்ப எண்ணிக்கொண்டிருந்தது. பாலாம்பாளது நினைவு உண்டானால் அவளுக்கு ஒரு பெருத்த பூதத்தைக் கண்ணிற்கெதிரில் காண்பதைப்போல இருந்தது. அவளும், சிவஞான முதலியாரும் பாலாம்பாளிடத்தில் சம்பாஷித்திருந்த சமயத்தில், மைனரால் எழுதிக் கொடுக்கப்பட்ட பத்திரத்தைத் தாங்கள் ஒப்புக்கொள்வதைப்போல நடித்து, மைனரைத் தப்பவைக்க வேண்டும் என்றும், அவ்வாறு அவன் தப்பி வந்தபிறகு தங்களது முந்தைய ஏற்பாட்டின் படி அவனுக்கும் கண்மணியம்மாளுக்கும் கலியாணம் செய்து வைத்துவிட வேண்டும் என்றும், அதன் பலனாக, கண்மணியம்மாளுக்கும் பாலாம்பாளுக்கும் பலவிதமான சச்சரவுகள் உண்டாகும் என்றும், கண்மணியம்மாள் துன்பப்பட வேண்டும் என்றும் நினைத்திருந்தாள். ஆனால், அந்த பத்திரத்தில், தாங்களும் கட்டாயமாகக் கையெழுத்திடும்படி நேர்ந்ததும், அதன் பிறகு கண்மணியைக் கலியாணம் செய்துவைத்தால், தாங்கள் பாலாம்பாளுக்கு ஒரு கோடி ரூபாய் கொடுக்கும்படி யான நிலைமையில் தாங்கள் இருப்பதும் அவளுக்குச் சகிக்க இயலாத துன்பமாகத் தோன்றியது. தாங்கள் அவளை ஏமாற்ற நினைக்க, அவளே மகா சமர்த்தியமாக ஏமாற்றி, தங்களை அவளுக்குக் கட்டுப்பட்டவர்களாகச் செய்து கொண்டதை நினைத்து நினைத்து நடுநடுங்கினாள். மைனருக்குப்பின், சமஸ்தானத்திற்கு வாரிசாக ஏற்பட, அவன் அக்கினி சாட்சியாகத் தாலி கட்டின மனைவியின் வயிற்றில் ஓர் ஆண் குழந்தை பிறந்தே தீரவேண்டும் என்பதை அவள் அறிவாளாதலால், மைனருக்குத் தாம் எப்படியும் கண்மணியைக் கலியாணம் செய்துவைத்தே தீரவேண்டும் என்றும், அதனால், தங்களுக்கும், பாலாம்பாளுக்கும் எவ்வகையான சச்சரவுகளும், வியாஜ்ஜியங்களும், பொருள் நஷ்டமும் ஏற்பட்டாலும் அவற்றிற்குத் தாம் ஆளாகியே தீரவேண்டும் என்றும் அவள் எண்ணமிடலானாள். அவள் ஒருகால் மைனரைச் சிறைச்சாலையில் இருந்து மீட்பாளோ மீட்கமாட்டாளோ என்ற

சந்தேகமும் உண்டாயிற்று. ஆனால் தாங்கள் அவளுக்கு ஏராளமான பொருள் கொடுப்பதாகவும் வேறு பல சுதந்திரங்களை உண்டாக்கிக் கொடுப்பதாகவும், ஒப்புக்கொண்டு கைம்மாட்டி எழுதிக் கொடுத்திருக்கையில், அவள் அப்படிப்பட்ட பெருத்த அதிர்ஷ்டத்தையும் சந்தர்ப்பத்தையும் இழந்துவிட நினைக்க மாட்டாளாதலால், அவள் மைனரை எப்படியும் விடுவிப்பாள் என்ற உறுதியான நம்பிக்கையும் உண்டாயிற்று. அவ்வாறு பலவகையான துன்பங்களில் அகப்பட்டுத் தத்தளிக்க நேர்ந்ததைப்பற்றி அவள் பெரிதும் துயருற்றிருந்த நிலைமையில் அப்போதைக்கப்போது, அவளது மனதில் மதனகோபாலனது நினைவும் எழுந்தெழுந்து மறைந்தது. அவனது விஷயத்தில் தான்செய்தது பெருத்த அக்கிரமமான காரியம் பன்பதும் அவளது மனதில் அடிக்கடி பட்டது. ஆனால் கண்மணியம்மாள் அவன் மீது பிரியம் வைக்கலாமா என்ற எண்ணமும், தான் நிஷ்கபடமாக அவன்மீது வாத்சல்யம் வைத்து, அவனை அணைத்துக் கொள்ள எவ்வளவு மன்றாடியும், மிகவும் கேவல நிலைமையில் இருப்பவரான அந்தச் சிறுவன் அதை மறுக்கலாமா என்ற எண்ணமும் தோன்றவே, தான் செய்த காரியங்கள் யாவும் அவனுக்கு நியாயமான தண்டனைகளே என்று அவள் தனக்குத்தானே ஒருவாறு ஆறுதல் செய்துகொண்டாள். எந்த பங்களாவிலும் அவனைச் சேர்க்காமல் எல்லோரும் அவனை விலக்கியிருப்பது நிச்சயமாதலால், இனி அவனால் தனக்கு எவ்விதமான இடரும் ஏற்படாதென்று நினைத்தவளாய், அவள் ஒறுவாறு திருப்தி யடைந்து உட்கார்ந்திருந்தபோது, அவளுக்குத் தனது புதல்வியரது நினைவு உண்டாயிற்று. தாங்கள் திருடர்களிடத்தில் அகப்பட்டுக்கொண்ட விஷயத்தையும், நிச்சயதாம்பூல முகூர்த்தம் ஒத்திவைக்கப்பட்ட விஷயத்தையும், தான் அவர்களுக்கு ஒருவாறாக அறிவித்து வைக்கவேண்டியது அவசியமாகத் தோன்றியது. ஆகவே, அவள் உடனே ஒரு வேலைக்காரியைக் கூப்பிட்டு, தனது புத்திரிகளை அழைத்து வரும்படி உத்தரவு செய்ய, அவள் அவ்வாறே அழைத்துவரப் போய்விட்டாள். போனபின், கல்யாணியம்மாள் அந்த விஷயங்களைத் தனது குமாரிகளிடத்தில் எவ்வாறு மாற்றிக்

கூறுவதென்பதைக் குறித்து சிந்தனையில் ஆழ்ந்தாள். ஆனால் அந்தச் சீமாட்டி மற்ற எல்லோரைக் காட்டிலும், தனது மூத்த புத்திரியான துரைஸானியம்மாளிடத்திலேயே அதிக அச்சம் கொண்டிருந்தாளாதலால், தான் அவளிடம் பொய் பேசுவதில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்ற கவலையும் தோன்றியது. மதனகோபாலனது விஷயத்தில் துரைஸாசியம்மாள் தனது உண்மையை அறிந்துகொண்டாள் என்ற பெருத்த பயம் அவளது மனதில் தோன்றி வதைத்துக்கொண்டே இருந்தது.

அவ்வாறு ஐந்து நிமிஷநேரம் கழிந்தது. அப்போது ஒரு வேலைக்காரன் வாசற்படிக்கு அப்பால் நின்றவண்ணம், “அம்மணீ! அம்மணீ!” என்று பயபக்தியோடு கூப்பிட, கல்யாணியம்மாள் திடுக்கிட்டு நிமிர்ந்து, “யாரடா அது? வா இப்படி” என்று அதிகாரமாக அழைக்க, அந்த பங்களாவின் வாசற் காவற்காரன் உள்ளே நுழைந்து அடங்கி ஒடுங்கி, அவளுக்கெதிரிற் சிறிது தூரத்தில் வந்து நின்று, ஒரு கும்பிட்டு போட்டு நிற்க, அவனைக் கண்டு ஒருவாறு சஞ்சலமடைந்த கல்யாணியம்மாள், “என்னடா சங்கதி? எங்கே வந்தாய்” என்று அதிகாரமாகக் கேட்க, அந்த வேலைக்காரன் “ஒண்ணுமில்லீங்க; வாசல்லெ ஒரு ஐயா வந்திருக்கிறாரு. இவுரு இருக்கிறது மைசூராம். நம்ப கிட்டுனாபுரம் செமீந்தாரையா மைசூருலெ சந்தனக்கட்டை யாபாரம் பண்ணறாவளல்ல அவுங்களோடெ கூட்டாளியாம் இவுரு. எசமானெப் பார்க்கணுமாம்; கேட்டுக்கினு வரச்சொன்னாரு. ரொம்ப பெரிய மனிசருகணக்கா இருக்கறாரு,” என்றான்.

அதைக்கேட்ட கல்யாணியம்மாள் ஒருவகையான வியப்பும் திகைப்பும் அடைந்து தனது நெற்றியை அழுத்திக்கொண்டு இரண்டொரு நிமிஷநேரம் சிந்தனை செய்தாள். கிருஷ்ணாபுரம் என்பது மாரமங்கலத்துப் பக்கத்தில் உள்ள இன்னொரு பெருத்த சமஸ்தானம்; அதன் ஜெமீன்தார் சுமார் ஐம்பது வயதடைந்தவர். அவரது மனைவி மக்கள் முதலியார் இறந்துவிடவே, அவர் அந்த விரக்தியாலும் வேறு பல ரகசியமான காரணங்களலும் அவர் அந்த ஊரைவிட்டுப் பதினைந்து வருஷ காலமாக மைசூரிலிருந்து பெருத்த முதல் வைத்து சந்தனக்கட்டை வர்த்தகம் செய்துவந்தார். அவர் தமது சமஸ்தானத்தில் குடிகளிடத்தில் இருந்து தமக்குச்

சேரவேண்டிய வரிகளை வசூலித்துத் தமது காரியங்களை எல்லாம் நிருவகிப்பதற்கு கிருஷ்ணாபுரத்தில் ஓர் ஏஜண்டை வைத்திருந்தார். அவரது தம்பியின் குழந்தைகளே கண்மணியம்மாள் துரைராஜா என்ற இருவர்களும்; மீனாக்ஷியம்மாள் அந்தக் கிருஷ்ணாபுரத்து ஜெமீந்தாரது தங்கையானாலும் அவர்களிருவருக்கும் பலவகையான காரணங்களால் உள்ளுக்குள் மனஸ்தாபம் இருந்து வந்தமையால், அவர்கள் ஒருவரையொருவர் சந்தித்து பதினைந்து வருஷ காலத்திற்குமேல் ஆயிற்று. ஆனால் அவர் துரைராஜா, கண்மணியம்மாள் முதலியவர்களது போஷணைக்காக மாதாமாதம் பெருத்த பணத்தொகைகளை அனுப்பும்படி தமது ஏஜண்டுக்கு உத்தரவு செய்திருந்ததன்றி, அப்போதைக்கப்போது, அவர்களுக்குக் கடிதமும் எழுதிவந்தனர். அவரது அபாரமான சமஸ்தானத்திற்கும் சொத்துக்களுக்கும் துரைராஜாவே வார்சுதார் ஆவான் என்று யாவரும் நினைத்து வந்தனர். அவருக்கும் மீனாக்ஷியம்மாளுக்கும் மனதிற்குள்ளாக மனஸ்தாபம் இருந்து வந்ததானாலும் அவர்கள் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் ஒருவருக்கொருவர் கடிதப் போக்குவரத்து மாத்திரம் வைத்துக் கொண்டிருந்தனர். இந்த வரலாற்றை எல்லாம் கல்யாணியம்மாள் நன்றாக அறிந்தவளானாலும், அவளுக்கும் கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாருக்கும் எவ்விதப் பழக்கமும் உண்டானதில்லை. கல்யாணியம்மாள் மாரமங்கலம் ஜெமீந்தாரிணியானதற்கு முன்னால் தனது இளம்பிராயத்தில், அவரை ஒருமுறை மாரமங்கலத்தில் பார்த்திருந்ததன்றி, அதன் பிறகு அவர் எப்படி இருப்பார் என்பதையே அவள் கண்டறிந்தவள் அன்று.

ஆதலால், இப்போது அவரது கூட்டாளியான ஒருவர் தன்னைப் பார்க்க வந்திருக்கிறார் என்பதைக் கேட்கவே, அவர் தன்னிடத்தில் எதற்காக வந்திருக்கிறார் என்பது விளங்காமையால் அவள் சிறிது நேரம் தடுமாறிய பின், அந்த வேலைக்காரனை நோக்கி, ‘‘கிருஷ்ணாபுரம் ஜெமீன்தார் இவரை என்னிடம் அனுப்பினார் என்று இவரே சொன்னாரா?’’ என்றாள். வேலைக்காரன், "ஆமாங்க. என்னமோ ரொம்ப அவசரமான சங்கதியாம். தலெ போற காரியமாம். எசமாங்கிட்ட ஒடனே பேசணுமாம்" என்றான்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் திரும்பவும் சிந்தனையில் ஆழ்ந்தவளாய் யோசனை செய்து செய்து பார்த்தாள். கிருஷ்ணா புரம் ஜெமீந்தார் தமது கூட்டாளியை, எவ்விதமான அவசர காரியத்தின் பொருட்டு அனுப்பி இருக்கப் போகிறார் என்று நினைத்து நினைத்துப் பார்த்தாள். கண்மணியம்மாளது நிச்சயதாம் பூலம் அன்றைய தினம் நடக்கப் போவதைப் பற்றி கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாருக்கு மீனாக்ஷியம்மாள் முதல் நாள் இரவில் தந்தி அனுப்புவதாகச் சொன்னது நினைவிற்கு வந்தது. அந்தத் தந்தி அவருக்குக் கிடைத்திருக்கலாம் என்றும், அவருடைய கூட்டாளி யான இந்த மனிதர் சில நாட்களுக்கு முன்னாகவே, ஏதோ வர்த்தக சம்பந்தமாக, பட்டணத்திற்கு வந்திருக்கலாம் என்றும், இவருக்கு கிருஷ்ணாபுரம் ஜெமீந்தார் நிச்சயதாம்பூல முகூர்த்த சம்பந்தமாக ஏதேனும் பதில் தந்தி கொடுத்து, தன்னை அவசரமாகப் பார்க்கும் படி கேட்டுக் கொண்டிருக்கலாம் என்றும் கல்யாணியம்மாள் ஒரு வகையான யூகம் செய்து கொண்டாள். இந்த மனிதரை உடனே பார்த்து, விஷயம் இன்னதென்பதை அப்போதே அறிந்து கொள்ளாவிடில், தனக்கு முன்னமேயே ஏற்பட்டுள்ள எண்ணிறந்த வாதைகளுக்குத் துணையாக, இந்த உறுத்தலும் சேர்ந்து தன்னை வருத்திக் கொண்டிருக்கும் என்று நினைத்தவளாய், அவரை உடனே தன்னிடத்திற்கு அழைத்து வரும்படி வேலைக்காரனிடம் உத்தரவு செய்தாள். அவன், திரும்பி வாசலை நோக்கி இரண்டோரடி நடக்க, அதற்குள் கல்யாணியம்மாள் "அடே! நம்முடைய குழந்தைகளை இங்கே அழைத்து வரும்படி இப்போது தான் காமாட்சியை அனுப்பினேன். நீ முதலில் குழந்தைகளுடைய அந்தப்புரத்துக்குப் போய், நான் ஒரு பெரிய மனிதரிடத்தில் பேசிக் கொண்டிருப்பதால் மறுபடியும் நான் சொல்லி அனுப்பிய பிறகு வரலாம் என்று, நான் சொன்னதாகச் சொல்லிவிட்டு நீ, பிற்பாடு வாசலுக்குப் போய் அந்த ஐயாவை அழைத்துக் கொண்டுவா" என்றாள். அதைக் கேட்ட வேலைக்காரன் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு வெளியில் போய்விட்டான்.

துரைஸானியம்மாள் தனது தாயின் நடத்தையைப் பற்றி முதல் நாள் இரவில் இருந்தே பலவகையான சந்தேகங்களைக் கொண்டவளாய் தனது தங்கையின் புத்தியையும் கலைத்துக் கொண்டிருந்தவள் ஆதலால் இப்போது, உடனே வரும்படியாக

முதலில் ஒரு வேலைக்காரி சொன்னதையும், இரண்டொரு நிமிஷ நேரத்திற்குப் பிறகு, இன்னொரு வேலைக்காரன், அம்மாள் யாருடனோ சம்பாஷித்துக் கொண்டிருப்பது பற்றி, மறுபடி சொல்லி அனுப்பிய பிறகு வரலாம் என்று கூறியதையும் கேட்க, அவளது சந்தேகம் இன்னமும் பலமாக அதிகரித்துக் கொண்டே போனது. தனது அம்மாளிடத்தில், தமக்குத் தெரியாமல், ரகசிய மாகப் பேசக்கூடிய பெரிய மனிதர் யார் என்பதையும், அவர்கள் எதைப்பற்றிப் பேசுகிறார்கள் என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும் என்னும் ஒருவகையான ஆசையும் ஆவலும் விலக்க இயலாவகையில் அவளது மனத்தில் எழுந்து அவளைத் தூண்டியது. முதல் நாளிரவில், ஒளிந்திருந்து கேட்டதைப் போல, அப்போதும் தாங்கள் போய்க் கேட்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டவளாய் துரைஸானியம்மாள், தனது தங்கையையும் அழைக்க, அவள் தனது இயற்கைப்படி அதைத் தடுக்க, அக்காள் தங்கையை வற்புறுத்தி அவளது கையைப் பிடித்து பலவந்தமாக இழுத்துக் கொண்டு குறுக்கு வழியாகச் சென்று, முதல் நாள் ஒளிந்திருந்த ஜன்னலை அடைந்தாள்.

அதன் பிறகு ஐந்து நிமிஷ நேரம் கழிந்தது. சற்று முன் வந்து போன வேலைக்காரன், கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாரது கூட்டாளியை அழைத்துக் கொண்டு உள்ளே வந்து சேர்ந்தான். அவர் சுமார் ஐம்பது வயதடைந்தவராகக் காணப்பட்டார். அவர் தீக்ஷை வளர்த்திருந்தமையால், சிரத்திலும் முகத்திலும் உரோமம் அடர்ந்து மூடிக் கொண்டிருந்தது. அவரது கண்களும், கன்னங் களிலும் காதுகளிலும் சில பாகங்களுமே வெளியில் தெரிந்தன. ஆனால் அவர் விலையுயர்ந்த ஜரிகைத் தலைப்பாகை, நாகரிகமான சட்டை, வெள்ளை வெளேரென்று சலவை செய்யப்பட்ட வஸ்திரங்கள், வைரக்கடுக்கன்கள், மோதிரங்கள், தங்கச்சங்கிலி கடிகாரம், தங்க மூக்குக் கண்ணாடி முதலியவற்றை அணிந்து, கையில் தங்கப்பூண் கட்டப்பட்ட கருங்காலித்தடி பிடித்து நொண்டியைப் போல உந்தி உந்தி நடந்து, கல்யாணியம்மாள் இருந்த இடத்திற்கருகில் வந்து சேர்ந்தார். அவரது அபாரமான தாடி மீசைகளையும் நொண்டிய நடையையும் காணவே, கல்யாணி யம்மாள் நகைக்கும்படியான நிலைமையை அடைந்தாள்.

இருந்தாலும், அவரது விலையுயர்ந்த ஆடையாபரணங்களைக் கொண்டும் அவர் கிருஷ்ணாபுரத்து ஜெமீந்தாரால் அனுப்பப் பட்டவர் என்ற நினைப்பினாலும் அவள் தனது நகைப்பை அடக்கிக் கொண்டு சாய்வான நாற்காலியில் இருந்த வண்ணம் மிகவும் அமர்த்தலாக நிமிர்ந்து அவரை நோக்கி, தனது கையை நீட்டி ஒரு நாற்காலியைச் சுட்டிக்காட்டி, அதில் உட்கார்ந்து கொள்ளும்படி ஊமை ஜாடையாக உபசரித்ததன்றி, அந்த மனிதரை உற்று நோக்கி, அவர் தன்னிடம் மரியாதையாக அடங்கி ஒடுங்கி நடந்து கொள்ளுகிறாரா அல்லது தன்னை அலட்சியமாக மதிக்கிறாரா என்பதை ஆராய்ந்தாள். அந்த மனிதரும் அவளைச் சிறிதும் இலட்சியம் செய்யாதவர் போல, அவளைக் காட்டிலும் அதிக அமர்த்தலாகத் தமது சிரத்தை வைத்த வண்ணம், ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கம்பீரமாக நிமிர்ந்து கல்யாணியம்மாளைப் பார்த்து, "உங்களை இதுவரையில் பார்த்தறியாத நான் திடீரென்று வந்தது உங்களுக்கு மிகவும் ஆச்சரியமாகவே இருக்கலாம்" என்றார். அப்போது கல்யாணியம்மாள், அவரோடு வந்த வேலைக்காரனை வெளியில் போய் இருக்கும்படி சொல்லி அனுப்பிய பிறகு அவரைப் பார்த்து மிகவும் கம்பீரமாக நிமிர்ந்து, "ஆம்; உண்மைதான். தக்க மனிதர்களிடத்திலிருந்து கடிதம் கொண்டு வருபவரை அன்றி மற்றவர்கள் உள்ளே வர நான் அனுமதி கொடுக்கிறதில்லை. ஏனென்றால், கண்ட பிச்சைக்காரர்கள் எல்லாம் வண்ணானிடத்தில் துணியை இரவல் வாங்கிக் கட்டிக் கொண்டு, யாராவது ஒரு பெரிய மனிதருடைய பெயரைச் சொல்லிக் கொண்டு மகா பெரிய பிரபுவைப் போல உள்ளே நுழைந்து விடுகிறதும், உள்ளே வந்தவுடனே, தங்களுக்கு ஏதாவது பொருளுதவியையோ வேறு வகையான காரியங்களையோ செய்ய வேண்டும் என்று கெஞ்சிக் காலில் விழுந்து, விடாமல் உபத்திரவிக்கிறதும் வழக்கம். அதைப் போல நீரும், கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாருடைய பெயரை உள்ளே நுழைவதற்கு ஒரு மந்திரமாக வைத்துக் கொண்டு வந்தீரோ என்னவோ என்று என் மனம் சந்தேகப்பட்டது. ஏனென்றால், அவருக்கும் எனக்கும் இதுவரையில் எவ்விதமான பழக்கமும் இல்லை ஆகையால், அவர் இப்படி அநாகரிகமான அனுப்பி இருக்க மாட்டார் என்று என்

மனம் சந்தேகப்படுவதற்கு நியாயம் இருக்கிறதல்லவா" என்று மிகவும் அலட்சியமாக மொழிந்தாள்.

அதைக் கேட்ட அந்த மனிதர் புன்னகை செய்து, "அடாடா! நன்றா நினைத்தீர்கள்! என் உடம்பிலிருக்கும் துணிகள் சட்டைகள் எல்லாம் என்னுடையவைகளே! நீங்கள் சந்தேகப்படவே வேண்டாம். நான் உங்களிடத்தில் எவ்விதமான யாசகத்துக்கும் வரவில்லை என்பதை நீங்கள் உறுதியாக நம்பி, உங்களுடைய கவலையை நீக்கி விடலாம். நான் கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாருடைய கூட்டாளி. சந்தனக்கட்டை வியாபாரம் செய்யும் பசவண்ண செட்டியார் என்றால், மைசூரில் குழந்தைகளுக்குக் கூட நன்றாகத் தெரியும்; நான் வேறே எதற்காகவும் வரவில்லை; எங்களுடைய ஊர் மனிதரான ஒருவரைக் குறித்து ஒரு முக்கியமான நிகழ்ச்சியின் சம்பந்தமாக உங்களோடு பேசிவிட்டுப் போக வேண்டும் என்று வந்தேன். அந்த மனிதருடைய பெயர் மதனகோபாலன் என்பார்கள்" என்றார்.

அவரது சொல்லைக் கேட்ட கல்யாணியம்மாள் திடுக்கிட்டுத் திகைப்பும் குழப்பமும் அடைந்தாள். அந்த மனிதர் மதனகோபாலனது விஷயமாகப் பேச வந்திருப்பார் என்பதை அவள் சிறிதும் எதிர்பார்க்காமலும், அவர் கேட்ட பிறகு, தான் எவ்விதமாக மறுமொழி சொல்வதென்பதைப் பற்றி யோசியாமலும் இருந்தவள் ஆதலால், அவள் இரண்டொரு நிமிஷ நேரம் திக்குமுக்காடிப் போய்விட்டாள். ஆனாலும், அவள் மிகுந்த தைரியமும் சமயோசிதமான தந்திரமும் உடையவள் ஆதலால், அதிசீக்கிரத்தில் அவள் தனது துன்பக்குறிகளை மாற்றிக் கொண்டாள். அந்த மனிதர் மதனகோபாலனது விஷயத்தில் தன் மீது குற்றம் சுமத்தி தன்னைக் கண்டிக்க வந்திருக்கிறார் என்பது அவளது மனதில் நிச்சயமாகப் பட்டது. அந்த அவமானத்திலும் சங்கடத்திலும் இருந்து தான் எவ்வாறு தப்புவதென்ற பெருத்த கவலை, அவளது மனதை வதைத்துப் புண்படுத்தியது ஆனாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், நிரம்பவும் அலட்சியமாகவும் கம்பீரமாகவும் நிமிர்ந்து உட்கார்ந்து, "ஓகோ! அப்படியா! நீர் வயதான பெரிய மனிதர் என்பதை உத்தேசித்து, நீர் சொல்லும் சமாதானங்களை

நான் கேட்க இணங்குகிறேன். ஆனால் அந்தத் தறுதலைப் பையனை நான் ஒரு நாளும் மன்னிக்க முடியாது" என்று அழுத்தமாகக் கூறினாள்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் ஒருவாறு ஆயாசம் அடைந்தவர் போலக் காட்டிக் கொண்டு, "என்ன அம்மணீ! மன்னிக்க முடியாதா? அவனா மன்னிப்புக் கேட்கிறது? தவறு செய்தவர்கள் அல்லவா மன்னிப்புக் கேட்க வேண்டும். அவன் தனக்கு நியாயம் வேண்டும் என்று கேட்கிறான்; மன்னிப்புக் கேட்கவில்லை" என்றார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் முன்னிலும் அதிக ஒய்யாரமாக நிமிர்ந்து, "நீர் பேசும் வார்த்தைகளைக் கவனித்தால், அந்த மனிதன், தான் செய்த காரியத்தை வேறே விதமாக மாற்றி உம்மிடத்தில் சொல்லி இருக்கிறான் என்றே நினைக்க வேண்டி இருக்கிறது" என்று, தான் சொல்வதே உண்மையான செய்தி என்ற உறுதி தோன்றி சிறிதும் சலனமில்லாத முகத்தோற்றத்தோடு மொழிந்தாள்.

பசவண்ண செட்டியார், "அவன் தன்னுடைய உயிரே போவதானாலும், பொய் பேசக்கூடிய பையனே அல்ல என்பது உங்கள் மனசுக்கே நன்றாகத் தெரியும் ஆகையால், அதை நான் அதிகமாக ருஜுப்பிக்க வேண்டிய அவசியமே இல்லை" என்று புன்சிரிப்பாக மொழிந்தார்.

கல்யாணியம்மாள் அதைக் கேட்டவுடனே மிகுந்த கோபங் கொண்டவள் போலத் தனது முகத்தை விகாரப்படுத்திக் கொண்டு, "என்ன சொன்னீர்? அவன் பொய் சொல்லக் கூடியவனல்ல என்றால், நான் சொல்வது பொய் என்று பொருள்படும்படி அல்லவா நீர் பேசுகிறீர்! பேசுவதை யோசித்து ஜாக்கிரதையாகப் பேசும்; யாரிடத்தில் பேசுகிறோம் என்பது ஞாபகமிருக்கட்டும்" என்று அதிகாரமாக மொழிந்தாள்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் அருவருப்பான புன்னகை செய்து, "அம்மணீ! தயவு செய்து கோபித்துக்கொள்ளக் கூடாது. ஒருவர் செய்த தவறை எடுத்து நேருக்கு நேர் சொல்வதே மிகவும் அசங்கியமான காரியம். அதிலும், வாதி ஆண்மகனாகவும்,

எதிரி பெண்பாலாகவும் இருந்து விட்டால், விஷயத்தை உடைத்துப் பேசுவது பரம சங்கடமாகப் போய்விடுகிறது. நம்முடைய வழக்கும் அம்மாதிரியான வழக்காக இருக்கிறது" என்று நயமாகப் பேசினார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் பதைபதைத்தவளாய் எழுந்து நின்று, "சரி; சரி; உம்மோடு இவ்விதமாக மேலும் சம்பாஷணை செய்ய எனக்குக் கொஞ்சமும் இஷ்டமில்லை. இவ்வளவோடு நிறுத்திக்கொள்ளும்" என்று மிகவும் உறுதியாகக் கூறினாள்.

அதைக் கேட்ட கிழவர், "அம்மணீ! பிரபுக்களுடைய வீண் உருட்டலுக்கும் மிரட்டலுக்கும் பயந்து, நான் கேவலமாகப் பணிந்து போகக்கூடிய மனிதனல்ல என்பதை நீங்கள் தயவு செய்து தெரிந்து கொள்ள வேண்டும். சமஸ்தானாதிபதிகளுடைய போலிப் பிரகாசத்தைக் கண்டு என்னுடைய கண் கூசிப் போகும் என்று நினைக்க வேண்டாம். நட்சத்திரங்கள் தூரப்பார்வைக்கு மகா பிரகாசத்தோடு ஜொலிக்கின்றன. ஆனால், அவைகள் கீழே விழுந்தால், உபயோகமற்ற வெறுங்கல்லுகளாய் இருக்கின்றன. அதைப் போலவே நம்முடைய சமஸ்தானங்களின் சொந்தக்காரர் களான சில்லரைத் தெய்வங்களுடைய யோக்கியதையும் வெளிப் பகட்டே அன்றி வேறல்ல. இப்படிப்பட்ட தெய்வங்களை நான் பூஜிக்கிறவனுமல்ல. அவைகளைக் கண்டு பயப்படுகிறவனுமல்ல" என்று நிதானமாகவும் அழுத்தமாகவும் கூறினார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் நிரம்பவும் அவமானமடைந் தாள். அவளது எண்சாண் உடம்பும் ஒரு சாணாகக் குன்றியது. அவள் மறுபடியும் தனது ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டவ ளாய், "ஐயா! வேண்டும் என்றே என்னைத் தூஷிப்பதற்காக நீர் இங்கே வந்தீரா? அப்படியானால் சொல்லிவிடும். நான் வாயைத் திறக்காமல் நீர் சொல்லுவதை எல்லாம் கேட்டுக் கொண்டாகிலும் இருக்கிறேன். பார்வைக்கு நீர் மிகவும் மரியாதைப்பட்ட மனிதராகவும் வயதான பெரியவராகவும் இருப்பதால், என்னுடைய வேலைக்காரரைக் கூப்பிட்டு, உம்மை வெளியில் எப்படித் தள்ளச் சொல்லுகிறது என்று யோசிக்கிறேன். இவ்வளவு

தூரம் துணிந்து பேசியது நீரல்லாமல் வேறே எவனாய் இருந்தாலும் இந்நேரம் அவன் படுகிறபாடு தெரிந்திருக்கும்" என்று மிகவும் ஆடம்பரமாகக் கூறினாள்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் மிகுந்த அருவருப்போடு கலகலவென்று நகைத்து, "ஓகோ! அப்படியும் செய்வீர்களோ! ஒரு நாளுமில்லை. நான் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் நிஜம் என்பது உங்களுடைய உள்ளத்துக்கே நன்றாகத் தெரியும் ஆகையால் அப்படிப்பட்ட முழு அக்கிரமம் செய்ய உங்களுடைய மனம் இடங்கொடுக்கும் என்று நான் நினைக்கவே இல்லை. உங்களுடைய இருதயத்தில் கையை வைத்துப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று கல்யாணியம்மாளது முகத்தை உற்று நோக்கி முறைப்பாகப் பார்க்கவே, உண்மையில் குற்றவாளியான கல்யாணியம்மாள் நிமிர்ந்து பார்க்கும் துணிவில்லாதவளாய், தனது முகத்தைக் கீழே கவிழ்த்துக் கொண்டாள். அதைக் கண்ட கிழவர் மேலும் பேசத் தொடங்கி, "அம்மணீ! நான் ஒரு சிறிய திருஷ்டாந்தம் சொல்லுகிறேன். தயவு செய்து பொறுமையாக அதைக் கேளுங்கள். விஷயம் இன்னதென்பது உங்களுக்கே நன்றாக விளங்கிவிடும். ஒரு பெருத்த சமஸ்தானத்துக்கு அதிபதியான ஜெமீந்தாரிணியம்மாள், இளம்பிராயத்திலேயே விதவையாய் இருந்தும், கற்பில் அருந்ததி என்று பெயரெடுத்து, ஊரார் எல்லாரும் தன்னை ஆகாசம் வரையில் புகழும்படி அவ்வளவு யோக்கியதையாக இதுவரையில் நடந்து, மகா உன்னத பதவியிலும் பெருமையிலும் இருந்து வந்த அந்தச் சீமாட்டி என்ன செய்தாள் என்றால், தன்னுடைய பங்களாவுக்கு வந்து கொண்டிருந்த ஒரு தொழிலாளியான எளிய பையனிடத்தில் தப்பான எண்ணங் கொண்டுவிட்டாள். ஒரு நாள் அந்தப் பையன் தனக்கு வேறோரிடத்தில் ஏற்பட்ட ஒரு விபத்தினால் மனம் குழம்பி, ஞாபகப் பிசகாக வழிதவறி, அந்தச் சீமாட்டியின் அந்தப்புரத்துக்குள் நுழைந்து விட்டான். நுழைந்தவன் தன்னுடைய பிழையை அறிந்து மிகவும் வருந்தி, அதன் பொருட்டு அந்த அம்மாளிடத்தில் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வெளியில் போக முயலுகையில், அந்த ஜெமீந்தாரிணி அவனை உருக்கமாக அழைத்து யோகக்ஷேமம் விசாரித்து, அவனுடைய

தேக அசௌக்கியத்தைப் பற்றிப் பரிதபித்து, சோபாவில் உட்காரும்படி உபசரித்து, காப்பி குடித்துவிட்டு அரை நாழிகை நேரமாவது தன்னோடு பேசியிருந்து விட்டுப் போகாவிட்டால், அவனை விடுகிறதில்லை என்று சொல்லி, கையைப் பிடித்திழுத்து சோபாவில் உட்கார வைத்து, கண்மணீ என்றழைத்து, காமவெறி கொண்டு மானம் வெட்கம் முதலியவற்றை எல்லாம் காற்றில் தூற்றிவிட்டு, தன்னைக் கட்டியணைத்து ஒரு முத்தம் கொடுத்து விட்டுப் போக வேண்டும், இல்லாவிட்டால் இப்போதே தன்னுடைய உயிர் போய்விடும் என்றும் சொல்லி, அவன் மேல் பாய்ந்து அணைத்துக் கொள்ள முயல, அவன், அதற்கு இணங்காமல் ஓட, சீமாட்டியம்மாள் விடாமல் துறத்த, அதற்குள் பின்னால் யாரோ மனிதர் வர, பையன் தப்பி ஓடிவிடுகிறான்; இதை என்னவென்று சொல்லுகிறது? இதை நீங்கள் அந்தப் பையனுடைய குற்றமென்றே சொல்லுவீர்கள். அதுவும் உண்மை தான். ஏனென்றால் இத்தனை வருஷங்களாக புருஷ சுகத்தை வெறுத்து அதில் விரக்தி கொண்டிருந்த விதவைகள்கூட மயங்கி தலைகால் தெரியாமல் தங்களுடைய மானத்தையும் கற்பையும் இழக்கும்படியாகச் செய்யத்தக்க, அவ்வளவு அழகும் உத்தம லட்சணங்களும் அவனிடத்திலிருந்தது எவ்வளவு பெரிய குற்றம் பார்த்தீர்களா? அது கொஞ்சமும் மன்னிக்கத்தக்க குற்றமா! ஏன் சும்மா நிற்கிறீர்களே! நீங்கள் தான் சொல்லுங்கள் அம்மணீ!" என்று கூறிய வண்ணம் சொல்லம்புகளைச் சரமாரியாக அவளது செவிகளிலும் இருதயத்திலும் சொருகிய வண்ணம், அவளது வதனத்தை ஒரே முறைப்பாகப் பார்க்க, கல்யாணியம்மாளது நிலைமை எப்படி இருந்திருக்கும் என்பதை யூகித்துக் கொள்வதே நல்லதாகும். சகிக்க ஒண்ணாத அவமானத்தினாலும் கோபத்தி னாலும் அவளது தேகம் இருந்ததோ அல்லது கரைந்தோ புகைந்தோ காணாமல் போய்விட்டதோ என்று நினைக்கும்படி ஆகிவிட்டது. அவள் தனக்கொரு தேகம் இருக்கிறதென்பதையே உணரவில்லை. அது ஆகாயத்தில் பறப்பது போல இருந்தது; மூளை விற்றென்று சுழன்றது; அறிவு பிறழ்ந்தது; வியர்வை குபீரென்று மயிர்க்காலுக்கு மயிர்க்கால் வெளிப்பட்டு, பனிக் காலத்தில் காலையில் மரங்கள் சொரியும் பனித்திவலைகளைப்

போல, கலகலவென்று உதிர்ந்து வெள்ளமாக ஓடின. ஈசனது நெற்றிக்கண்ணைப் போல பசவண்ண செட்டியார் தமது கண்களை விழித்து அவளைப் பார்த்த பார்வையில், அவளது தேகம் பஸ்மீகரமாகிப் போய்விடுமோ என்று நினைக்கும்படி இருந்தது. கல்யாணியம்மாள் அவமானத்தினால் துடிதுடித்து ஏதோ மறுமொழி கூற வாயெடுக்க, வாய் குழறியது. கண்கள் திருட்டு விழி விழிக்கின்றன. உண்மையில் அவள் மதனகோபால னிடத்தில் துன்மார்க்கமான கருத்தைக் கொண்டவளன்று ஆனாலும் அவள் செய்த அற்பப் பிழையினால் அவளது திடமான மனம் கோழைத்தனம் அடைந்து விட்டது. அவளது ஒவ்வோர் அங்கமும் அவள் குற்றவாளிதான் குற்றவாளிதான் என்று பறைசாற்றுவது போல, ஆயிரம் நாக்குகள் கொண்டு விளம்பரப்படுத்தியது. அப்போது ஜன்னலிற்கப்பால் ஒளிந்திருந்த இளங்குமரிகள் இருவரும், திகைப்பும் திக்பிரமையும் கொண்டு பேச்சு மூச்சற்று, சித்திரப் பதுமைகள் போல அசைவற்று அப்படி யப்படியே நின்றனர். துரைஸானியம்மாள் கீழே தொங்கிய தனது கையால், கோமளவல்லியை இடித்திடித்து, அவளது அவ நம்பிக்கையை விலக்கிக் கொண்டிருந்தாள்.

பசவண்ண செட்டியாரோ பெண் பேதையான ஒரு ஸ்திரீயைச் சித்திரவதை செய்கிறோமே என்ற தயாளம் சிறிதுமின்றி மேலும் அவளைப் பார்த்து, "என்ன அம்மணீ! பேசாமல் கீழே குனிந்து கொண்டு நிற்கிறீர்களே! என்னவோ நல்ல அழகான உத்தம லட்சணங்கள் பொருந்திய மனிதனைக் கண்டால், ஆண்பிள்ளை களின் மனசிலேயே ஒரு விதமான சபலம் ஏற்படும்போது பெண் பிள்ளைகளின் மனசில் அப்படிப்பட்ட ஆசை உண்டாவது இயற்கைதான். அதிலும், அபாரமான செல்வத்திலும் சுகத்திலும் இருந்து, செழுமையாக வளர்ந்துள்ள ஸ்திரீ தன்னுடைய யௌவனப் பருவத்தில், பல வருஷங்களாக புருஷ சுகத்தையே அடையக்கூடாமல் இருந்து வந்த அந்த ஜெமீந்தாரிணியின் மனம் சஞ்சலப்பட்டதென்றால், அதைப் பற்றி அந்த அம்மாளை எவரும் அதிகமாகத் தண்டிக்க மாட்டார்கள். ஏனெனில், அது சாஸ்திரப்படி தவறானதானாலும், மனித சுபாவத்துக்கு ஒத்ததே. அந்தப் பையன் என்ன செய்தான் என்றால், அந்த அம்மாளை அவன்

தன்னுடைய மனசாலும் இழிவாகவே நினைக்கவில்லை. 'இது மனித சுபாவம்; அன்னியப் பெண்பிள்ளைகள் தனியாக இருக்கும்படியான இடத்தில் நான் போனதனால், அந்த அம்மாள் இப்படிச் செய்யும்படியாக நேரிட்டது. அந்த அம்மாளுடைய கற்பு கெடுவதற்கு நான் அங்கே போனதே காரணம்; குற்றம் என்னுடையதுதான். இனி எச்சரிப்பாக நடந்து கொள்ள வேண்டும்' என்று அவன் தனக்குத் தானே கண்டித்துக் கொண்ட தன்றி இந்தச் சம்பவத்தை அவ்வளவோடு தன் மனசிலிருந்தும் விலக்கி விட்டான். அப்படி இருக்க, இந்த ஜெமீந்தாரிணியம்மாள் என்ன செய்தாள் என்றால், குதிரை கீழே த்ள்ளியதுமல்லாமல், புதைப்பதற்குக் குழியும் தோண்டியதென்கிறபடி, தான் அந்தப் பையன் விஷயத்தில் பெருத்த தவறு செய்ததுமன்றி, அவனே தன்னுடைய கையைப் பிடித்திழுத்தான் என்ற ஒரு கட்டுக்கதை யையும் வெளியிட்டு, அவன் இந்த ஊரில் வீணை கற்றுக் கொடுக்கப் போகும் ஒவ்வொரு பங்களாவுக்கும் போய், அவன் மேல் அபாண்டமான அவதூறைக் கற்பித்து, அவனை எல்லோரும் வேலையைவிட்டு நீக்கும்படி செய்திருக்கிறாள் என்றால் அந்தப் பையனுடைய மனம் எப்படித்தான் கொதிக்காது? இந்த அக்கிரமத்தைக் கேட்கும் மற்றவர்கள் தான் இதை எப்படி சகித்திருப்பார்கள்? நீங்களே சொல்லுங்கள். உங்களுக்கும் அந்தப் பையனைப் போலக் குழந்தைகள் இருக்கிறார்கள். உங்களுடைய குழந்தையின் மேல் யாராவது இப்படிப்பட்ட அபாண்டமான பழி சுமத்தினால், உங்களுடைய வயிறு எப்படி எரியாது?" என்று கூறித் தமது கண்களைச் சிமிட்டிக் கொண்டு கல்யாணியம்மாளது முகத்தை உற்று நோக்கினார்.

அவரது கொடிய சொற்களும் கூரிய பார்வைகளும் கல்யாணி யம்மாள் சகிக்கக்கூடிய வரம்பைக் கடந்தவையாகப் போய் விட்டன. தான் அதுகாறும் அவருக்குப் பயந்து செம்மறி ஆடு போலக் கீழே குனிந்து நின்றதைப் பற்றி அவள் ஒருவாறு தன்னைத் தானே இகழ்ந்து கொண்டவளாய், தனது வீட்டிற்குள் எவனோ ஓர் அன்னியன் வந்து, தன்னை அவ்வளவு தூரம் அவமானப்படுத்தும்படி தான் இடங்கொடுத்ததைப் பற்றி தனக்குள் மிகவும் வருந்தியவளாய், எதுவரினும் வரட்டும் என்ற

ஒரு வகையான மூர்க்க குணத்தைக் கொண்டு, மிகுந்த கோபத்தோடு நிமிர்ந்து அவரைப் பார்த்து, "ஓய் செட்டியாரே! நீர் அந்தக் கிருஷ்ணாபுரத்து ஜெமீந்தாருடைய பெயரைச் சொல்லிக் கொண்டு வந்ததை உத்தேசித்து, உம்மை அவமரியாதைப் படுத்தக்கூடாதென்று நான் இதுவரையில் தாட்சணியம் பார்த்தேன். நீர் மகா சாமர்த்தியமாகப் பேசுவதாகப் பிதற்ற ஆரம்பித்து விட்டீரே. நான் என்ன தெருவில் திரியும் தாசியென்று நினைத்து இவ்வளவு தூரம் பேசுகிறீரா? இந்த வார்த்தைகளைக் கேட்க ஆச்சரியமும், திகைப்பும் இதுவரையில் என்னுடைய வாயைத் திறக்க முடியாமல் அடைத்துவிட்டன. அந்த மதனகோபாலன் இங்கே செய்ததைப் பற்றி, நான் அவன் விஷயத்தில் ஏதாவது கடுமையான காரியங்களைச் செய்துவிடப் போகிறேன் என்ற முன் ஜாக்கிரதையினால், நீர் உண்மையை இப்படி மாற்றி, பழியை எல்லாம் என் மேல் போட வந்தீர் போலிருக்கிறது. இப்படிப்பட்ட சதிகார மனிதனோடு இனிமேல் ஒரு நிமிஷமும் பேசிக் கொண்டிருக்க எனக்கு மனமில்லை. நீர் எழுந்து போகலாம். என்னை யார் என்று எண்ணிக் கொண்டீர்? அவதூறு பேசும் நாக்கை அறுத்துவிடச் சொல்லுவேன். மரியாதையாக எழுந்து வெளியில் நடவும்" என்று கூறினாள். மிகுந்த கோபத்தினால் முகம் கருத்து, இரத்தம் தெறிக்கும் நிலைமையை அடைந்தது. கண்கள் கோவைப்பழங்களாகச் சிவந்து தீப்பொறிகள் சிந்தின; தேகம் பதைத்துப் பறந்தது.

அவளது சொற்களைக் கேட்ட அந்தக் கிழவர் தமது கைத்தடியை எடுத்துக் கொண்டு மிகவும் அலட்சியமாகவும் அமர்த்தலாகவும் தமது ஆசனத்தை விட்டெழுந்து, "அப்படியே ஆகட்டும் அம்மணீ! நான் வந்தும் அதிக நேரமாகிவிட்டதாகையால், நீங்கள் சொல்லாவிட்டாலும் நானே போக வேண்டியவன்; எனக்கும் இதைப் போல பங்களாவும், சோபா, நாற்காலி முதலிய வசதிகளும் இருக்கின்றன; ஆகையால், நான் இங்கே அநாவசியமாக உட்கார்ந்திருப்பதற்காக வரவில்லை; 'நாம் பெரிய சமஸ்தானத்தின் ஜெமீந்தாரிணியாயிற்றே. இவன் கேவலம் வாத்தியம் வாசிக்கிற ஓர் ஏழைப் பையன்தானே. இவன் நம்மை என்ன செய்யக் கிடக்கிறது. பணத்தை வாரி இறைத்தால்

அவனை நசுக்கிவிடலாம்' என்று நினைத்து நீங்கள் இறுமாப்புக் கொள்ள வேண்டாம். அந்தப் பையனுக்கு பந்துக்களும் சிநேகிதர்களும் எவருமில்லை என்று நினைத்து மனப்பால் குடிக்க வேண்டாம். நீங்கள் செலவு செய்யும் ஒவ்வொரு ஆயிரத்துக்கும் நான் ஒன்பதாயிரம் வீதம் செலவழிக்கக் கூடியவன்; யாருடைய கை மேலென்று பார்க்கலாம்; பல பங்களாக்களில் நீங்கள் போய் அவனுடைய நடத்தையைப் பற்றி அவதூறாகப் பேசிய விஷயத்தில், நாங்கள் நியாயஸ்தலத்தில் உங்கள் மேல் பிராது கொடுக்கிறோம். உங்களுடைய பெண்களையும் சாட்சிகளாகப் போடுகிறோம். அவர்களுக்கு அவனுடைய நடத்தை எப்படிப் பட்டதென்பது தெரியும். உங்களுடைய யோக்கியதையைப் பற்றி சந்தி சிரிக்கும் போது நீங்கள் இப்போது அடைவதைவிட அதிகமான ஆனந்தம் அடைவீர்கள்" என்று மேலும் ஏதோ பேச ஆரம்பிக்க, அதைக் கண்ட கல்யாணியம்மாள், காரியம் அவ்வளவு விபரீதமான நிலைமைக்கு வந்த பிறகு, துணிந்து வாயடியடித்து, அவரை அனுப்பி விடுவதே நல்லதென்று நினைத்தவளாய்த் தனது ஆசனத்தை விட்டு முறுக்காக எழுந்து, "சரி, சரி; அப்படியே செய்யலாம். நீர் சரியான ஆண்பிள்ளையாய் இருந்தால் உடனே போய் பிராதைக் கொடுத்துவிட்டு மறுவேலை பார்க்க வேண்டும். யாருடைய நடத்தை தவறானதென்பதை அவ்விடத்தில் நான் நன்றாக மெய்ப்பிக்கிறேன். நீர் போகலாம்; இங்கே இருக்க வேண்டாம்" என்று கூறினாள்.

உடனே வாசலை நோக்கி இரண்டோரடி நடந்த கிழவர் திரும்பிப் பார்த்து, "அம்மணி! கடைசியாக ஒரே ஒரு வார்த்தை சொல்லி விடுகிறேன். நியாயஸ்தலத்தில் உங்களுடைய சாமர்த்தியத்தைக் கொண்டு நீங்கள் வென்று கொள்ளுங்கள்; ஆனால், உங்களுக்கு இரண்டு பெண் குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்கள் வயது வந்து பெருத்த பெண்பிள்ளைகளைப் போல இருக்கிறார்கள். அவர்களைத் தக்க இடத்தில் நீங்கள் கலியாணம் செய்து கொடுக்க வேண்டிய சமயம் இது. அவர்கள், தங்கள் தாயினுடைய நடத்தை இப்படிப்பட்டதென்பதைத் தெரிந்து கொள்வார்களானால், அது அவர்களுடைய நல்ல நடத்தையைக் கெடுக்கக்கூடிய ஒரு கெட்ட உதாரணமாக அல்லவா முடியும். தவிர, நியாயஸ்தலம் வரையில்

அசங்கியமாக இந்த விஷயம் போகும்படி நீங்கள் விரும்பும் பட்சத்தில், அங்கே இந்த வழக்கு எப்படி முடிந்தாலும், உலகத்தார் மாத்திரம் மதனகோபாலன் யோக்கியன் என்றே எப்போதும் நினைப்பார்கள்; ஏனென்றால், அவனுடைய நன்னடத்தை அவ்வளவு அதிகமாக எல்லோருக்கும் தெரிந்திருக்கிறது. ஆகையால், நீங்களே அவன் மேல் அடாப்பழி சுமத்துகிறீர்கள் என்று ஜனங்கள் அறிந்து கொள்வதன்றி நீங்கள் மிகவும் விபசார புத்தியுள்ளவர்கள் என்பதையும் சுலபத்தில் கண்டு கொள்வார்கள். தாயார் இப்படிப்பட்ட கேவலமான நடத்தையுள்ளவளாக இருக்கையில், தக்க மனிதர் எவரும், பெண்களைக் கலியாணம் செய்து கொள்ள முன்னுக்கு வருவார்களா? உங்களுடைய பையன் கூட, உங்களுக்கு அடங்கி நடப்பதில்லை என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்த விஷயம் அவனுடைய காதுக்கு எட்டினால் அவன் உங்களை இனி ஒரு பொருட்டாக மதிப்பானா? ஆகையால், ஒரு காரியம் செய்யுங்கள். நீங்கள் யார் யார் வீட்டில் போய் அவன் மேல் அவதூறு சொன்னீர்களோ, அங்கங்கே மறுபடியும் போய், அவன் யோக்கியன் என்றும், நீங்கள் நேற்று சொன்னது தவறென்றும் சொல்லி, அவனுடைய மானஹானியை விலக்கி விடுங்கள். நாங்கள் அவ்வளவோடு திருப்தியடைந்து நின்று விடுகிறோம். ஆனால், அப்படிச் செய்வது உங்களுக்குக் கொஞ்சம் அவமானமாகத்தான் இருக்கும். இருந்தாலும், உலகமே வெளிப்படையாகச் சிரிப்பதைவிட, பத்துப்பேர் தமக்குள் உங்களைப் பற்றி இழிவாக நினைப்பது ஒரு பொருட்டல்ல. நன்றாக யோசனை செய்து கடைசி முடிவாகச் சொல்லி விடுங்கள். ஏதோ தவறுதலாகக் காரியம் நடந்துவிட்டது. அதைப்பற்றி, நாங்கள் உங்களை மிகவும் கொடுமையாக நடத்த விரும்ப வில்லை" என்றார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் எதுவரினும் வரட்டும் என்றும், தான் எப்படியாகிலும் தந்திரம் செய்து தப்பித்துக் கொள்ளலாம் என்றும் நினைத்து மிகவும் துணிவடைந்தவளாய், "நான் சொல்ல வேண்டியதை எல்லாம் முதலிலேயே சொல்லி விட்டேன். இனிமேல் சொல்வதற்கு ஒன்றுமில்லை. நீர் வயசான

பெரியவராய் இருக்கிறீரே என்னும் நினைவினால், இவ்வளவு நேரம் பொறுத்துக் கொண்டிருந்தேன். அந்த மரியாதைகூட ஏன் பார்த்தோம் என்ற விசனம் இப்போது உண்டாகிறது" என்றாள்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் புரளியாக நகைத்து, "ஓகோ! அப்படியா! இந்த அந்தப்புரத்துக்குள் ரகசியமாக நடந்த சங்கதி வெளியாகிவிட்டதே என்று இதுவரையில் உங்களுடைய முகமே காட்டிவிட்டது. பயத்தினால் பத்து நிமிஷ நேரம் வாய் குழறிப் போய்விட்டது. நான் வயசான கிழவனாயிற்றே என்ற மரியாதையினால், உங்களுடைய வார்த்தைகள்கூட பயபக்தியைக் காட்டியிருக்கலாம்" என்று கூறிய வண்ணம் வெளியில் போய் விட்டார்.

உடனே கல்யாணியம்மாள், வெளியில் நின்ற வேலைக்காரனை அழைத்து, தனது உடம்பு அசௌக்கியமாக இருப்பது பற்றி, தான் சயனித்து சாயுங்காலம் வரையில் துயில வேண்டும் என்றும், எவர் வந்தாலும் சாயுங்காலத்துக்கு மேல் வரும்படி சொல்லி அனுப்பி விட வேண்டும் என்றும் கூறி உத்தரவு செய்து அவனை அனுப்பி விட்டு, கதவுகளைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டு, கட்டிலின் மேல் ஏறிக் குப்புறப் படுத்துக் கொண்டு, குழந்தையைப் போல ஓவெனக் கதறியழத் தொடங்கினாள். பிள்ளையார் பிடிக்கப் போய், அது குரங்காக முடிந்ததைப் போல, தான் ஏதோ ஓர் அற்பத் தவறு செய்ததிலிருந்து, விஷயம் விபரீதமாக வளர்ந்து விட்டதே என்ற கவலையும், அதனால் தனது மானமே போய் விடும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டதே என்ற கலக்கமும், மைனரால் பெருத்த சங்கடங்கள் உண்டாய்விட்டனவே என்ற துயரமும், தனது மூத்த புத்திரியே தனக்கு எதிராளி போல, தனது குற்றங்களைக் கண்டு இடித்துக் காட்டுகிறாளே என்ற சஞ்சலமும், இன்னும் பலவகையான துன்பங்களும் ஒன்றுகூடி அவளைச் சித்திரவதை செய்தமையால், அவள் தனது மனோவேதனைகளைச் சகிக்க மாட்டாதவளாய், கட்டிலில் புரண்டு புரண்டு அழுத வண்ணம் கிடந்ததன்றி, தனது செல்வம் யாவும் போனாலும், தனது மானம் ஒன்றை மாத்திரம் இழக்காமல் எப்பாடுபட்டாகிலும் எக்காரியம் செய்தாகிலும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற

ஒரே நினைவைக் கொண்டவளாய், சிந்தனைக் கடலில் ஆழ்ந்து விட்டாள்.

கல்யாணியம்மாளது நிலைமை இவ்வாறிருக்க, ஜன்னலுக் கப்பால் ஒளிந்து நின்று தங்களது தாய்க்கும் பசவண்ண செட்டி யாருக்கும் நடந்த சம்பாஷணையை ஒரு சொல்லேனும் விடாமல் கேட்டிருந்த துரைஸானியம்மாளும், கோமளவல்லியும் அவ்விடத்தை விட்டு மெல்ல அப்பால் சென்று, தத்தம் விடுதியை அடைந்து சிந்தனையில் ஆழ்ந்தனர்.

மதனகோபாலனைப் பற்றி, தங்களது தாய் கூறிய வரலாறு உண்மையானதல்ல என்பதை சிற்சில சூசனைகளால் முதல் நாளில் இருந்தே சந்தேகித்திருந்த துரைஸானியம்மாள் பசவண்ண செட்டியார் சொன்ன வரலாறே உண்மையான தென்று தீர்மானித் துக் கொண்டதன்றி, தங்களது தாய் கேவலம் விபசாரி என்றும் வெளிக்கு மாத்திரம் மகா சுத்தமான மனுஷியைப் போல நடித்து, பிறரை அற்ப குற்றங்களுக்கெல்லாம் மிகவும் கொடுமையாக நடத்தி, தனது உண்மையான யோக்கியதையை எவரும் சந்தேகியாமல் இருக்கும் பொருட்டு அதிக்கிரமமான பதிவிரதை வேஷம் போட்டு நடலக்காரி என்று நினைத்துக் கொண்டதன்றி, உலகத்தில் உள்ள எல்லா ஸ்திரீகளும் இப்படியே வெளி வேஷம் போட்டு உள்ளே அசுத்தர்களாக இருப்பார்கள் என்றும் யூகம் செய்து கொண்டாள். அவள் நல்ல பக்குவகாலம் அடைந்து, செழுமை நிறைந்த யௌவன மங்கை ஆதலால், அவளது மனதில் பலவகையான துர்நினைவுகளும், துராசைகளும் தலைகாட்டத் தொடங்கின. அவள் எதையும் துணிந்து செய்யக்கூடிய தைரியசாலி ஆனாலும், அதுகாறும் தனது தாயின் கட்டுப் பாட்டினாலும் அவளிடத்தில் கொண்ட அச்சத்தினாலும் பலவாறு சபலித்துச் சென்ற தனது மனதை மிகவும் பாடுபட்டு அடக்கிக் கொண்டே வந்திருந்தாள். இப்போது தனது தாயே விபசாரியாக இருப்பதைக் காணவே, அவளுக்குத் தானும், தனது மனம் போன போக்கில் தனது ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்ற ஓர் எண்ணம் உண்டாகிவிட்டது. ஆகவே, அவள் அதுகாறும், தன் மனதிற்குள்ளாகவே காதலித்து வந்த ஒரு

மனிதனை நினைத்து அப்போதே பெருமூச்சுவிடத் தொடங்கினாள். தான் எப்பாடு பட்டாகிலும் அன்றிரவிற்குள் அந்த மனிதனுடைய கள்ள நட்பை அடைந்தே தீர வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டதன்றி, மகா பரிசுத்தமான எண்ணமும் நடத்தையும் உடையவளான கோமளவல்லியின் மனதையும் கலைத்து அவளையும் துன்மார்க்கத்தில் நடத்த வேண்டும் என்ற முடிவையும் செய்து கொண்டாள்.

ஆனால் கோமளவல்லியோ, தனது தாய் மகா சுத்தமானவள் என்ற நினைவை உறுதியாகக் கொண்டிருந்தவள் ஆதலால், பசவண்ண செட்டியார் சொன்னது முழுதும் கட்டுப்பாடான பொய்யென்றும், மதனகோபாலன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு, குற்றத்தை எல்லாம் தனது தாயின் மீது சுமத்தி இருக்கிறான் என்றும் நினைத்து, பொல்லாத வேளையின் பயனாக தனது தாய்க்கு அப்படிப்பட்ட இழிவும் அவமானமும் ஏற்பட்டுவிட்டதே என்று பரம சங்கடம் அடைந்து சகிக்க இயலாத துயரத்தில் ஆழ்ந்ததன்றி, தான் உடனே போய், தனது தாய்க்கு ஆறுதல் கூறி அவளது விசனத்தை விலக்க வேண்டும் என்றும் நினைத்தாள். ஆனால், தனது தாயின் அனுமதியின்றி தாங்கள் ஒளிந்து கொண்டதை எவ்வாறு வெளியிடுவது என்ற கவலை கொண்டவளாய் மிகவும் சஞ்சலமுற்றிருந்தாள்.

வாசகர்களே! ஒரே வயிற்றில் ஜனித்து, ஒன்றாகவே இருந்து இத்தனை வருஷ காலம் வளர்ந்து வந்தவர்களான இவ்விரண்டு மடந்தையரின் மனப்போக்கும் ஒன்றுக்கொன்று எவ்வாறு மாறுபட்டிருந்த தென்பதைப் பார்த்தீர்களா? ஒன்றாகவே இருந்து தங்களது தாயின் நடத்தையைக் கவனித்தவர்களான இருவரில் ஒருத்தி தனது தாயே விபசாரி என்றும் மதனகோபாலன் யோக்கியன் என்றும் நினைக்க, மற்றவள், அவனே அயோக்கியன் என்றும் தனது தாய் குற்றமற்றவள் என்றும் நினைத்தது அவரவர்களது குணத்தைப் பொருத்திருந்த தென்றே சொல்ல வேண்டும். ஒருவனுக்கு அமிர்தம் போல இருப்பது இன்னொருவனுக்கு விஷமாக முடிகிறது. காக்கை மாம்பழத்தைத் தின்கிறதில்லை; ஆனால் வேப்பம்பழமே அதற்கு மகா இனிமையாகத் தோன்றுகிறது. கிளியோ வேப்பம் பழம் கசப்பானதென்று தள்ளி

விட்டு மாம்பழத்தைத் தின்கிறது. இது அதனதன் நாவின் அமைப்பையும் பழக்கத்தையும் பொருத்ததாக இருக்கிறது. ஒன்றுக்கொன்று மாறுபட்ட குணமும் மனப்போக்கும் நோக்கமும் அமைப்பும் பெற்று முரணும் கோடாநுகோடி ஜீவன்கள் நிறைந்துள்ள உலகில் மனிதன் எல்லோரையும் திருப்தி செய்யும் படி நடப்பது மகா கடினமான காரியமல்லவா! அதிலும், கோமள வல்லியைப் போல, பிறர் விஷயத்தில் விரைவாகக் குற்றம் கருதாமல், மிகவும் தயாளமாக நினைப்பவர் சிறுபாலோரும், துரை ஸானியம்மாளைப் போல பிறர் விஷயத்தில் கெடுதலான அபிப் பிராயத்தையே கொள்வோர் பெரும்பாலோராகவும் இருக்கின்ற னர். பொதுவாக, ஒரு குடும்பத்தில் உள்ள சிறுவர் சிறுமியர்கள், எதிலும் தங்களது பெற்றோரது உதாரணத்தைப் பின்பற்றியே நடப்பது இயற்கையாக இருப்பது பற்றி, பெற்றோர் மிகவும் எச்சரிக்கையாக ஒழுகி, துரைஸானியைப் போல் உள்ள தமது மக்கள் சந்தேகிக்க இடங்கொடாதபடி நடப்பதே முதன்மையான கடமையாகிறது. இல்லையானால், அப்படிப்பட்ட குழந்தைகள் துர்நடத்தையில் இறங்கி தமது ஆயுட்காலம் முழுதும் கெட்டுத் துயரடைவதற்கு, அவர்களே உத்திரவாதியாகின்றனர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ! கல்யாணியம்மாள் தான் செய்த ஓர் அற்பப் பிழையை மறைக்க எத்தனையோ பொய்களைச் சொல்லவும், தீமைகளைச் செய்யவும் நேர்ந்ததன்றி, துரைஸானி யம்மாள் கெடுவதற்கும், அதனால் அவளுக்கும் மற்றவருக்கும் தீராத் துன்பமும் மாறாத் துயரமும் உண்டாவதற்கும் வழி ஏற்பட்டது. ஆதலால் குழந்தைகளுடைய பெற்றோர் தமது நடத்தையில் மிகவும் எச்சரிப்பாக இருப்பார்களாக.

★ ★ ★

15–வது அதிகாரம்

## துரையம்மாள்

முன்னதிகாரத்தில் குறிக்கப்பட்ட தினத்திற்கு மறுநாள் பிற்பகல் இரண்டு மணி சமயத்தில், மீனாக்ஷியம்மாளது பங்களாவின் மேன் மாடியில், நமது உல்லாச புருஷர்களான துரைராஜாவும், மாரமங்

கலம் மைனரும் மிகுந்த உற்சாகத்தோடு நகைத்தும் சம்பாஷித்தும் இடையிடையில் பீடி என்னும் உயர்தரச் சுருட்டை வாயில் வைத்து புப் புப் என்று புகையை வெளிப்படுத்திக் கொண்டும் இருந்தனர். மைனர் கருப்பாயியின் வீட்டிலிருந்து தப்பியோடியது, போலீஸ் இன்ஸ்பெக்டரைப் போல வேஷந்தரித்து வந்த பெண் பிள்ளையோடு குதிரை மீது சென்றது, பாலாம்பாளுக்குத் தான் பத்திரம் எழுதிக் கொடுத்தது, அங்கே திருடர் வந்தது, தான் போலீஸ் ஸ்டேஷன் சிறைச்சாலையில் இருந்தது, அதன் பிறகு தன்னை பாலாம்பாள் விடுவித்தது முதலிய விவரங்களை எல்லாம் துரைராஜாவிடத்தில் சொல்லாமல் மறைத்துவிட்டு, தான் அந்த இரண்டு நாட்களும், பாலாம்பாளது வீட்டிலேயே பரமசுகம் அனுபவித்திருந்ததாக அவனிடத்தில் தெரிவித்ததன்றி பாலாம் பாளது அழகைப்பற்றியும், குணத்தைப் பற்றியும் பெரிதும் புகழ்ந்து அவள் அதுகாறும் தன்னைத் தவிர, வேறு எந்தப் புருஷனையும், கையால் தீண்டிக்கூட அறியாதவள் என்றும், அவள் தன் மீது தனது உயிரை வைத்து, தன்னை விட்டு ஒரு நொடி நேரமும் பிரியமாட்டேன் என்கிறாள் என்றும் கூறி, அவளை அபாரமாகப் புகழ்ந்ததன்றி அவளது சிநேகம் தனக்குக் கிடைத்ததைப் பற்றி மகா பெருமையாகப் புகழ்ந்து பேசிக் கொண்டான்.

அதைக் கேட்ட துரைராஜா மிகவும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்து, "அப்படியானால் நம்முடைய வேலைக்காரப் பொன்னம்பலம் ஏமாறியா போய்விட்டான்! நீ இந்த இரண்டு நாளாக மோகனாங்கியின் வீட்டில் அல்லவோ சுகத்தில் மூழ்கிக் கிடக்கிறாய் என்று நினைத்தேன்" என்றான்.

*மைனர் (மிகவும் அலட்சியமாக):-* ஆமாம்! மோகனாங்கி மாத்திரம் இவளைவிட அழகில் மகா சிறந்தவளோ! இரண்டு பேரும் அழகில் சமமானவர்கள் என்றே நினைக்கிறேன். மோகனாங்கிகூட சுத்தமக்கென்றே சொல்ல வேண்டும்; இவளுடைய புத்திசாதுரியம் அவளுக்கு வரவே வராது. எப்படி இருந்தாலும் இருக்கட்டும்; இப்போது என் மனசு மோகனாங்கி யிடத்திலேயே செல்லவில்லை. இவளே எனக்குப் போது மானவள்.

*துரைராஜா:-* அப்படியானால், அந்த மோகனாங்கி இருக்கிற இடத்தைக் கண்டுபிடித்து நான் அவளைச் சிநேகம் செய்து கொள்வதில் இனிமேல் உனக்கு ஆட்சேபனை இல்லையே?

*மைனர்:-* அதைப்பற்றி எனக்கு இரட்டிப்பு சந்தோஷம், அவள் எங்கே இருக்கிறாள் என்ற விவரத்தைக்கூட நான் பாலாம்பாளி டத்தில் கேட்டு வந்து சொல்லுகிறேன்; ஆனால், இன்னொரு சங்கடம் இருக்கிறது; நான் இனிமேல் மோகனாங்கியைப் பற்றி நினைக்கக் கூடாது என்ற நிபந்தனையின் மேலே தான் அவள் என்னுடைய விருப்பத்துக்கு இணங்கினாள். இப்போது நான் அவளுடைய விலாசத்தைக் கேட்டாள் அவள் கட்டாயம் சந்தேகங் கொள்வாள் ஆகையால், இன்னும் ஐந்தாறு நாள்கள் கழிந்த பின், உன்னையும் என்னோடுகூட அங்கே அழைத்துக் கொண்டு போய், நீ என்னுடைய சொந்தக்காரன் என்று சொல்லி, உனக்காக அந்த மேல்விலாசம் வேண்டும் என்று கேட்டால், அவள் சந்தேகப் படாமல் ரகசியத்தை வெளியிட்டு விடுவாள். அதுவரையில் பொருத்துக் கொண்டிரு; நீ பழைய பெருச்சாளி, அந்த விஷயத்தில் உனக்கு என்னைப் போல அவ்வளவு ஆத்திரம் இருக்காது.

*துரைராஜா:-* மோகனாங்கியோடு சிநேகம் செய்து கொள்ள யாருக்குத்தான் ஆத்திரம் இருக்காது. வேறு எந்த விஷயத்தில் என்னுடைய ஆத்திரம் தணிந்தாலும் இந்த விஷயத்தில் நான் சாகிற வரையில் என்னுடைய ஆவல் தணியாது. அது இருக்கட்டும் இன்றைய தினம் *பார்க் பேர்* ஆரம்பமாகிறதே; பாலாம்பாளோடு போகப் போகிறாயா? இல்லாவிட்டால், அம்மாள் தங்கைகள் இவர்களை அழைத்துக் கொண்டு போகப்போகிறாயா?

*மைனர்:-* பாலாம்பாளுக்கு இன்று உடம்பு சரியாக இல்லை; அவள் நாளைக்கு வரப்போகிறாள். நான் இந்த இரண்டு நாளும் அங்கே இருந்துவிட்டு இன்று காலையிலே பங்களாவுக்கு வந்தேன். என்னோடு ஒருவரும் பேசவேயில்லை. அவர்களுக் கெல்லாம் என்மேல் கோபம் போலிருக்கிறது. நேற்றைய தினம் இங்கே இவர்கள் எனக்கும் கண்மணிக்கும் நிச்சயதாம்பூல முகூர்த்தம் வைத்திருந்தார்களாம். அதற்கு நான் வரவில்லை என்ற

கோபம் போலிருக்கிறது. மறுபடியும் நாளைக்கு முகூர்த்தம் வைத்திருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன். இன்னம் ஒரு வருஷம் கழித்தே கலியாணம் செய்து வைப்பதாக இதுவரையில் சொல்லிக் கொண்டிருந்தவர்களுக்கு இப்போது என்ன அவசரம் வந்துவிட்டதோ தெரியவில்லை. நானும் பாலாம்பாளும் சந்தோஷமாக இருப்பதற்கு இடைஞ்சலாக, நான் இப்போது நிச்சய தாம்பூலம், கலியாணம் முதலிய எதையும் செய்து கொள்ளப் போகிறதில்லை. முன் ஏற்பாட்டின்படி இன்னம் ஒரு வருஷகாலம் கழித்துத் தான் கலியாணம் செய்து கொள்ளுவேன் என்று அவர்களிடத்தில் சொல்லிவிட்டு வந்துவிட்டேன். ஆகையால் நான் பார்க் பேருக்கு அவர்களை அழைத்துப் போக மாட்டேன். வேண்டுமானால் அவள்களே போகட்டும். அவர்களுக்கு வழி தெரியாதோ; வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். அழைத்துக் கொண்டு போகட்டும்; இன்றைக்கு நீயும் நானும் போய்விட்டு வருவோம் வா – என்றான்.

அதைக் கேட்ட துரைராஜா மைனரைக் கபடமாகப் பார்த்துப் புன்னகை செய்து, "நீயும் நானும் போவதில் என்ன சுகமிருக்கிறது. எங்கே போனாலும் ஆணும் பெண்ணுமாகப் போனால் தான் இன்பமாய் இருக்கும்" என்று கூறி தனது கண்ணைச் சிமிட்டினான்.

அதைக் கண்ட மைனர், "அப்படியானால், நீ சொல்வதில் ஏதோ சூக்ஷுமமிருக்கிறது. நீ திருடனல்லவா! யாராவது ஆசாமியை வரும்படி சொல்லி இருந்தாலும் இருப்பாய். அப்படி இருந்தால் நிஜத்தைச் சொல்லிவிடு. நான் தனியாகவாவது போகிறேன்" என்றான்.

அதைக் கேட்ட துரைராஜா முன்னிலும் அதிகமான புன்னகையும் மகிழ்ச்சியும் காட்டி சிறிது தயங்கி, "நான் யாரையும் வரும்படி சொல்லவில்லை. என்னையே ஒருத்தி வரச்சொல்லுகிறாள். என் அதிர்ஷ்டம், நான் சும்மா இருந்தாலும், ஊரிலிருக்கும் பெண் பிள்ளைகள் என்னைச் சும்மா இருக்க விடுகிறதில்லை. இதோ இந்தக் கடிதத்தைப் படித்துப் பார். உனக்கு பாலாம்பாள் அகப்பட்டால், எனக்கு மாத்திரம் எவளும் கிடைக்கமாட்டாள் என்று எண்ணிக் கொண்டாயோ?" என்று கூறிய வண்ணம் தனது சட்டைப் பையில் இருந்த ஒரு கடிதத்தை எடுத்து மைனரிடத்தில் கொடுத்தான்.

அவனது வார்த்தையைக் கேட்டு ஒருவாறு வியப்பும் சந்தோஷமும் உற்சாகமும் அடைந்த மைனர் கடிதத்தை ஆவலோடு வாங்கிப் பிரித்து வாசிக்கத் தொடங்கினான்; அந்தக் கடிதம் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

***கிருஷ்ணாபுரம் சின்ன ஜெமீந்தாரான துரைராஜாவுக்கு***

நான் ஒரு பெருத்த ஜெமீந்தார் வீட்டுப் பெண். நான் இன்னமும் புருஷ சுகத்தையே அறியாதவள். என்னைக் காட்டிலும் அழகில் சிறந்தவள் இல்லை என்று எல்லோரும் என்னைக் கொண்டாடுவ தன்றி, எப்படிப்பட்ட மகாராஜாவின் மகன்கூட, என்னுடைய ஒரு புன்சிரிப்புக்காக மாத்திரம் தன்னுடைய உடல் பொருள் ஆவி முதலிய சகலத்தையும், நான் உதட்டை அசைக்குமுன், என் காலடியில் வைத்துவிடுவான். அப்படிப்பட்ட மேலான ஸ்திரீயான எனக்கு எந்தப் புருஷனிடத்திலும் ஆசை என்பதே ஏற்பட வில்லை. இந்த உலகத்தில் புருஷராகப் பிறந்தவர்களில் நீர் ஒருவர் தான் என்னுடைய ஆசை முழுதையும் கொள்ளை கொண்டு விட்டீர்; நான் அணைத்தால் உம்மையே அணைவதன்றி, என்னுடைய உயிரை விட்டு விடுவதே சரியான காரியம் என்று நினைத்து விட்டேன். மனசைவிட்டு கால் நாழிகை நேரமாகிலும் உம்மோடு பேசி என் மனசில் உள்ளதை வெளியிட வேண்டும் என்று எனக்குப் பெருத்த ஆசையாக இருக்கிறது. எங்களுடைய பங்களாவுக்கு நீர் வருவதும், உம்முடைய பங்களாவுக்கு நான் வருவதும், நாம் ஒருவருக்கொருவர் சிநேகம் செய்து கொள்ளாத தற்கு முன், சரிப்படாதென்று நினைக்கிறேன். இன்றைய தினம் **பார்க் பேர்** காட்சி ஆரம்பமாகிறது; அங்கே சோலைக்குள் நாம் இருவரும் சந்தித்து தாராளமாகப் பேசி எல்லா ஏற்பாடுகளையும் முடித்துக் கொள்ள வேண்டும் என்று நான் பிரியப்படுகிறேன். யௌவனப் பெண்ணான நானும், யௌவனப் புருஷரான நீரும் நம்முடைய சொந்த உடைகளோடு ஒளிந்தொளிந்து பேசினால், பிறர் சந்தேகங் கொள்வார்கள்; அல்லது நமக்குத் தெரிந்தவர்கள் நாம் பேசுகிறதைக் கண்டுகொள்வார்கள். ஆகையால், நாமிருவரும் ஒரு தந்திரம் செய்வோம். நான் வெள்ளைக்கார துரைஸானியைப் போல தொப்பி முதலிய சகலமான உடைகளையும் அணிந்து

கொண்டு, முகம் வெளியில் தெரியாமல் முகமூடி போட்டு மறைத்துக் கொண்டு வந்து சேருகிறேன். நீரும் ஒரு வெள்ளைக் கார துரையைப் போல தொப்பி உடைகளை அணிந்து கொண்டு வந்து சேரும். நீர் நல்ல சிவப்பான தேகம் உடையவர் ஆதலாலும், நாம் இரவில் சந்திக்கிறபடியாலும் எவரும் உம்மை இன்னார் என்று கண்டுபிடிக்க முடியாது. யாரோ துரையும் துரைஸானியும் தனியாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்றால், எவரும் நமக்கருகில் நெருங்கவும் மாட்டார்கள்; நாம் என்ன செய்கிறோம் என்பதைக் கவனிக்கவும் மாட்டார்கள். நாம் தாராளமாக மனசை விட்டுப் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போய்விடலாம். ஆனால் முகமூடி போட்ட துரைஸானிகள் எத்தனையோ பேர் வருவார்கள். ஆகையால் இந்தக் கடிதத்தோடு ஒரு வைரப்பதக்கம் அனுப்பி இருக்கிறேன். இதே மாதிரியான இன்னொரு வைரப்பதக்கம் என்னிடத்தில் இருக்கிறது. அதை நான் என்னுடைய இடது மார்பின் மேல் சொருகிக்கொண்டு, பாலிவாலா பார்சீ நாடகக் கொட்டகைக்கெதிரில் நின்று கொண்டிருக்கிறேன். நீரும் வெள்ளைக்கார துரை உடையில் வருவதால், நானும் சுலபத்தில் உம்மை அடையாளங்கண்டு கொள்ளும் பொருட்டு, இந்த வைரப் பதக்கத்தை நீர் உமது சட்டையில் வலது மார்பின் மேல் சொருகிக் கொண்டு, சரியாக இரவு ஒன்பது மணிக்கு அந்த இடத்துக்கு வந்து சேரும். நாம் உடனே சந்தித்து, சந்தேகத்துக்கு இடமின்றிப் பேசிக் கொண்டே சோலைக்குள் போய் விடுவோம். நீர் இன்று வரத் தவற மாட்டீர் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். உமக்கு வேண்டிய வெள்ளைக்கார உடைகளை எல்லாம் வாங்கிக் கொள்வதற்காக இதோடு 500-ரூபாய் நோட்டு ஒன்று அனுப்பி இருக்கிறேன். இப்போதே துரைராஜாவாக இருக்கும் உம்மை, நான் துரைஸானியாக வந்து அடைவதே பொருத்தமான காரியமல்லவா. நீர் இன்று வரத்தவறினால், உமக்கு என் மேல் பிரியம் இல்லை என்று நான் யூகித்துக் கொண்டு, நாளைக்கே நான் கிணற்றில் விழுந்து உயிரை விட்டு விடுகிறேன். நான் உம்மை விட்டாலும், என்னைக் கொன்ற பழி உம்மை விடாது.

இப்படிக்கு உம்முடைய,
**துரையம்மாள்.**

—என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படிக்கவே, மைனர் பெரிதும் வியப்பும் திகைப்பும் அடைந்து அதை இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பப் படித்தான். அது உண்மையில் ஒரு பெண் பிள்ளையின் எழுத்தைப் போலவே இருந்ததாயினும், அதை எவரும் கண்டு கொள்ளாவிதம் அவள் தனது இயற்கை யான எழுத்தை வேறுவிதமாக மாற்றி மறைத்து எழுதி இருந்ததாகக் காணப்பட்டது. மைனர் கடிதத்தை துரைராஜாவிடத்தில் கொடுத்து விட்டு, அதோடு வந்திருந்த வைரப்பதக்கத்தை வாங்கிப் பார்த்தான். நீரோட்டம் ஜிலுஜிலென்று ஜ்வலிக்கும் விலை உயர்ந்த வைரங்கள் நிறைந்த அந்தப் பதக்கம் சுமார் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் பெறக்கூடியதாகக் காணப்பட்டது. அதைக் காணவே, அந்தக் கடிதம் எழுதியவள், உண்மையாகவே எழுதி இருக்கிறாள் என்பதும், புரளிக்காக எழுதவில்லை என்பதும் நிச்சயமாகத் தெரிந்தது.

உடனே மைனர் துரைராஜாவை நோக்கி, "பேஷ்! நீ நல்ல அதிர்ஷ்டசாலிதான். பெண்கள் இப்படிக் கிடைப்பதல்லவா உண்மையான இன்பம். நாம் போய் குட்டிச்சுவர் ஏறிக்குதித்து பல வகையில் அவஸ்தைப்பட்டு பெண்களுடைய சிநேகத்தை அடைவதில் என்ன சுகமிருக்கிறது. அவர்களே நம்மிடத்தில் மோகங் கொண்டு இந்தப் பெண்ணைப் போல வர வேண்டும். அதிருக்கட்டும்; இவள் யார் என்பது உனக்குக் கொஞ்சமாகிலும் தெரிந்ததா?" என்றான்.

***துரைராஜா:-*** எப்படித் தெரியப் போகிறது. இந்தக் கடிதத்தி லிருந்து நீ எவ்வளவு சங்கதி தெரிந்து கொண்டாயோ அவ்வளவே நானும் தெரிந்து கொண்டேன். இன்று காலையில் ஒரு வேலைக் காரன் வந்து என்னைக் கூப்பிட்டு, இந்தக் கடிதத்தை என்னிடம் கொடுத்துவிட்டுப் போனான். அவனை நான் யார் என்று கேட்பதற்குள், அவன் போய்விட்டான். அதைப் பிரித்துப் பார்க் கிறேன். உள்ளே, கடிதம் பதக்கம் நோட்டு எல்லாம் இருக்கின்றன. அவள் உண்மையில் யௌவன ஸ்திரீயோ, வயசானவளோ, அழகுள்ளவளோ, குரூபியோ, குட்டையோ, நெட்டையோ? உனக்கு எவ்வளவு சங்கதி தெரிகிறதோ அவ்வளவே எனக்கும்

தெரிகிறது. தான் அபாரமான அழகுள்ளவளென்றும், யௌவனப் பருவத்தினளென்றும் அவளே எழுதி இருப்பதிலிருந்து, உண்மையில் அவள் அப்படியே இருப்பாள் என்று நாம் நினைக்கக்கூடாது.

***மைனர்:-*** ஏன் நினைக்கக்கூடாது? இப்போது வெள்ளைக்காரி வேஷம் போட்டுக்கொண்டு தன்னுடைய மேனியை மறைத்துக் கொண்டு வருவதனாலேயே, அவள் எப்போதும் தன் இயற்கைத் தோற்றத்தை மறைத்து உன்னை ஏமாற்ற முடியுமா? பொய் சொல்லி, உன்னுடைய நிரந்தரமான பிரியத்தைச் சம்பாதித்துக் கொள்ள முடியாதென்பது அவளுக்குத் தெரியாதென்று பார்த்தாயா? அவள் எழுதியிருப்பதில் கொஞ்சமும் தவறிருக்காது. அவள் உண்மையிலேயே அபூர்வமான கட்டழகைக் கொண்ட சுந்தரவதியாகத் தான் இருப்பாள். அதைப்பற்றி சந்தேகமே இல்லை. உன்னுடைய அபாரமான செலவுகளுக்கும் அவள் பெருத்த பணத் தொகைகளைக் கொடுக்கக்கூடியவளாகத் தான் இருக்கிறாள். இந்தக் காரியம் பலித்துவிட்டால், நீ இனிமேல் மோகனாங்கியைத் தேடி அலைய வேண்டியதே இல்லை.

***துரைராஜா:-*** இன்று ராத்திரி வரப்போகிறவள் எவ்வளவு அற்புத மான அழகு வாய்ந்தவளாக இருந்தாலும், மோகனாங்கியின் அழகுக்கு இணை வரமாட்டாள். இதையும் பார்ப்போம்; அதையும் பார்ப்போம். இதில் நஷ்டமென்ன. உலகத்திலுள்ள எப்படிப்பட்ட அழகான பெண்ணையும் நாம் வசியப்படுத்தியே தீரவேண்டும் என்பது என்னுடைய கொள்கை.

***மைனர்:-*** சரி; உன்னிஷ்டப்படியே செய். ஆனால், அவள் ராத்திரி ஒன்பது மணிக்கல்லவா வரப்போகிறாள். சாயுங்காலம் 5-மணி முதல் 9-மணி வரையில், அதற்காக நீ தனியாக இருந்து தபசு பண்ணப் போகிறாயா? அதுவரையில் நாம் இருவரும் சேர்ந்து போய் வேடிக்கை பார்ப்போம்.

***துரைராஜா:-*** அதற்கென்ன; அப்படியே செய்வோம். நான் இப்போது வெள்ளைக்காரர் கம்பெனிக்குப் போய் முக்கியமாக ஒரு தொப்பி வாங்க வேண்டும். மற்ற உடைகள் எல்லாம், என்னிடத்தில் இருப்பவைகளே போதும் – என்றான்.

**மைனர்:-** "சரி; அப்படியானால் புறப்படு; போவோம்" என்றான்.

உடனே துரைராஜா எழுந்து தொப்பியைத் தவிர, மற்ற உடைகளை எல்லாம் தரித்து, மைனரையும் அழைத்துக் கொண்டு வெளிப்பட்டான். அவர்கள் இருவரும் பல இடங்களுக்குப் போய் அலைந்துவிட்டு, மாலை ஏழு மணிக்கு பார்க்குச் சோலையை அடைந்து, டிக்கெட்டுகள் வாங்கிக் கொண்டு, கண்காட்சிகள் நிறைந்திருந்த அடைப்புக்குள் நுழைந்தனர். அதற்குள் அந்த அடைப்பிற்குள் லட்சக்கணக்கில் ஜனங்கள் வந்து நிறைந்திருந்தனர். கனவான்களும் சீமாட்டிகளும் அழகான ஆடையாபரணங்களை அணிந்து எங்கும் ஒரே கும்பலாக நின்றிருந்தனர். பாண்டு வாத்தியங்கள் ஒரு புறத்தில் முழங்கின. ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு விதமான காட்சி இருந்து கண்ணைக் கவர்ந்தது. நாடகக் கொட்டகைகளும், தாசிகளின் கோலாட்டங்களும், சூதாட்டங்களும், காப்பிக் கடைகளும், மற்றும் பலவகையான வேடிக்கைகளும் ஏராளமாக நிறைந்து மனிதரது மனதைப் பலவகையில் மயக்கி சின்னாபின்னம் ஆக்கின. அன்று இரவு போஜனத்தை முடித்துக் கொண்டு வந்து, இரவு முழுதும் அவ்விடத்திலேயே சுற்றி அலைந்து, தரையிலோ வேறு எந்த மூலையிலோ படுத்திருந்து மறுநாட் காலையில் போகும் தீர்மானத்தோடு வந்திருந்தோரே பெரும்பாலோர். நமது மைனரும், துரைராஜாவும் பணத்தை வாரி ஏராளமாகச் செலவு செய்து, ஒவ்வொரு வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டும், சிற்றுண்டி காப்பி முதலிய உணவுகளை இடையிடையே புசித்துக்கொண்டும், சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தனர். எங்கும் மின்சார விளக்குகள் டால் வீசிக் கொண்டிருந்தன. நாழிகை ஏற ஏற சென்னையில் உள்ள பரத்தையர் யாவரும் முகத்தில் மாவைத் தடவி, போலி ஆபரணங்களையும் தாம்பூலங்களையும் அணிந்து,

*"மாணினம் வருவ போன்றும் மயிலினம் திரிவ போன்றும்*
*மீனினம் மிளிர்வ போன்றும் மின்னினம் மிடைவ போன்றும்*
*தேனினம் சிலம்பி யார்ப்ப சிலம்பினம் புலம்ப எங்கும்*
*பூதனை கூந்தல் மாதர் பொம்பெனப் புகுந்து மொய்த்தார்."*

என்றபடி, வந்து கும்பலில் கலந்து கொண்டு மின்சார விளக்கடிகளில் நின்று, தமது கண்ணடிகளினாலும் குலுக்கு பிலுக்குகளி

னாலும் புருஷரை எல்லாம் மயக்கினர். எங்கு நோக்கினும், ஆண் பாலரும் பெண்பாலரும் ஜதைஜதையாகப் பிரிந்து போய் உல்லாச மாக இருந்தனர்.

அந்த நிலைமையில் மணி ஒன்பதாயிற்று. உடனே மைனர் துரைராஜாவை விட்டுப் பிரிந்து, அவன் திரும்பி வரும் வரையில் ஒரு குறித்த இடத்தில் இருப்பதாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டான். துரைராஜா மாத்திரம் **பாலிவாலா பார்சீ நாடகக் கொட்டகைக்** கெதிரில் தொப்பியணிந்து துரையைப் போலவே நின்று கொண்டிருந்தான். அவனது வலது மார்பில் சொருகப் பட்டிருந்த வைரப் பதக்கம் மின்சார விளக்குகளின் பிரகாசத்தினால் நட்சத்திரத் திரளைப் போல ஜில்ஜில்லென்று ஒளிவீசின. அவன் இப்புறம் அப்புறம் திரும்பிப் பார்த்த வண்ணம் மிகவும் பதை பதைத்து நின்று கொண்டிருந்தான். மணிக்கூண்டுகளில் மணி சரியாக ஒன்பதடித்தது. அடுத்த நிமிஷத்தில் அவனுக்குப் பக்கத்தில் ஒரு வெள்ளைக்காரப் பெண் வந்து நின்றாள். திரும்பி அவளைப் பார்த்த துரைராஜா ஒரு நிமிஷ நேரம் அப்படியே ஸ்தம்பித்துப் போய்விட்டான். தன்மீதிருந்த வைரப் பதக்கத்தைப் போலவே, அவளது இடது மார்பின் மீதும் ஒரு பதக்கம் அமர்ந்து புன்னகை செய்து ஒளிக்கற்றைகளாகிய லட்சம் கரங்களால், அவனை வர வேற்பது போலத் தோன்றியது. அந்த ஸ்திரீ தத்ரூபம் வெள்ளைக் காரியைப் போலவே காணப்பட்டாள். ஆனால் அவளது முகம் முழுதும் முகமூடியால் மறைக்கப்பட்டிருந்தது. கண்களுக்காக விடப்பட்டிருந்த இரண்டு தொளைகளின் வழியாக, இரண்டு அற்புதமான கருவிழிகள் ஜ்வலித்தன. அவளது நடை உடை பருமன் திரட்சி உயரம் அங்க அமைப்பு மார்பின் எழுச்சி முதலிய யாவும் ஒன்றுகூடி, அவள் பதினேழு அல்லது பதினெட்டு வயதடைந்த மகா அழகு வாய்ந்த அற்புத ரமணீய மங்கை என்பதை வெளிப்பார்வையிலேயே நன்றாகத் தோற்றுவித்தன. அப்படிப்பட்ட தெய்வ கன்னிகையைக் கண்ட துரைராஜா கரை கடந்த பிரம்மாநந்த மடைந்து பூரித்துப் புளகாங்கித முற்றவனாய், தனது அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் என்று நினைத்து அளவளாவி, அவளிடத்தில் எப்படி நெருங்குவதென்று அஞ்சி மௌனமாக நின்றான். அதற்குள் அந்த ஸ்திரீயே அவனிடத்தில் நெருங்கி

சோலைக்குள் போவோம் என்று கையால் சைகை செய்து முதலில் நடக்க, துரைராஜாவும் கூடவே தொடர்ந்து சென்றான். பிறர் எவரும் தம்மைக் கண்டு சந்தேகியாத படி, அவர்கள் இருவரும் புருஷன் பெண்ஜாதிகளைப் போல நடித்து ஜனக்கும்பலை எல்லாம் கடந்து, கண்காட்சிகளிருந்த அடப்பை விட்டு வெளியில் வந்து, வடக்குப் பக்கத்தில் அடர்ந்திருந்த பூஞ்சோலைக்குள் நுழைந்தனர்.

அந்தச் சோலையில் ஆங்காங்கு மின்சார விளக்குகள் நிறைந்து பிரகாசம் கொடுத்துக் கொண்டிருந்தன. பூந்தொட்டிகளுக்கும் மரங்களுக்கும் இடையிடையில் பெஞ்சுப் பலகைகள் போடப் பட்டிருந்தன. மூலை முடுக்குகளிலெல்லாம் ஆண்பாலாரும், பெண்பாலாரும் உட்கார்ந்திருந்தனர். துரைராஜாவும், போலி வெள்ளைக்காரப் பெண்ணும் நெடுந்தூரத்துக்கப்பால் சென்று, எவரும் காணப்படாமல் நிருமானுஷ்யமாய் இருந்த ஒரு மூலையை அடைந்து, அவ்விடத்தில் கிடந்த ஒரு பெஞ்சுப் பலகையில் உட்கார்ந்து கொண்டனர். அவ்விருவரும் வெளிப்பார் வைக்குப் புருஷன் பெண்ஜாதிகளைப் போலக் காணப்பட்டமை யால், ஜனங்களாயினும் போலீஸாராயினும் அவர்களைப் பற்றி எவ்வித சந்தேகமும் கொள்ளவில்லை. ஏனெனில், அவர்களைப் போல எத்தனையோ துரைகளும் துரைஸானிகளும், இந்திய புருஷரும் ஸ்திரீகளும், ஜதை ஜதையாக எங்கும் காணப்பட்டமை யால், இவ்விருவர் சென்றதில் அசாதாரணமான விஷயம் எதுவும் தோன்றவில்லை. மைனர், துரைராஜாவை விட்டு, அப்பால் போய் விட்டான் ஆயினும், அவர்கள் ஒன்றுகூடி சோலைக்குள் போன போது, அவன் ஜனக் கும்பலுக்குள் நுழைந்து வந்து, அந்தப் போலி வெள்ளைக்கார மடந்தையின் பின்புறத்தில் நெருங்கி, அவளது அற்புதமான அழகு யௌவனம் பருவம் முதலிய சிறப்பு களைக் கண்டு நெடுமூச்செறிந்து, துரைராஜாவின் அதிர்ஷ்டத்தைக் குறித்து ஒருவாறு பொறாமை கொண்டு தவித்திருந்தான். அந்தப் பெண் மயிலின் வதனம் நன்றாக மூடப்பட்டிருந்ததாயினும், விசாலமான அழகிய கண்கள் இரண்டை மாத்திரம் நன்றாகக் கண்ட துரைராஜா, அப்படிப்பட்ட சுந்தர விழிகளைக் கொண்ட முகம், எவ்வளவு சொகுசாக இருக்குமோ என்று நினைத்து அளவளாவி,

தனது பெரும் பாக்கியத்தைப் பற்றி அளவற்ற பெருமையடைந்து ஆனந்தத்தினாலும், மனவெழுச்சிப் பெருக்கினாலும், உற்சாகத்தி னாலும் இன்பமோ துன்பமோ என்பது தெரியாத நிலைமையை அடைந்து, மிகவும் தவித்திருந்தான். அவனது இருதயம் தடக் தடக்கென்று அடித்துக் கொண்டிருந்தது. பெஞ்சுப் பலகையில் உட்கார்ந்து கொண்ட இருவருக்கும் இடையில், ஒரு சாண் அளவே இடைவெளி இருந்ததாகையால், அப்படிப்பட்ட இன்பக் களஞ்சியத்திற்கு அவ்வளவு சமீபத்தில் இருந்ததனால் துரைராஜா வின் தேகம் ஆனந்த பரவசமடைந்து, கட்டிலடங்காமல் துடித்தது. அவளது அழகிய முகத்தைப் பார்க்கவும், அவளை ஆலிங்கனம் செய்து அவளிடத்தில் சரசலீலைகள் புரியவும் அவனது மனம் பதறியது. நாற்புறங்களையும் அவன் திரும்பிப் பார்த்து எவரும் தங்களைப் பார்க்கவில்லை என்பதை உணர்ந்து கொண்டு, கரை கடந்த காதலோடு அந்த ஸ்திரீயின் முகத்தை உற்று நோக்கி மிகவும் உருக்கமான குரலில் பேசத் தொடங்கி, "இப்போது தான் எவருமில்லாத தனியான இடத்தில் இருக்கிறோமே; அந்த முகமூடியை கொஞ்சம் விலக்கி, இந்தப் பரம பக்தனுக்கு அந்த சுவர்க்க தரிசனம் காட்டக்கூடாதா? என்னுடைய ஆயுசு காலம் முடிய என் மனசில் இன்பச்சுடர் கொளுத்தும் அந்தச் சந்திர பிம்பத்தை எனக்குக் காட்ட இன்னமுமா ஆட்சேபம்?" என்று தனது கையை மெதுவாக அவளது மோவாய்க் கருகில் கொண்டு போனான். அந்த ஸ்திரீ அவனது கை தன்மீது படாமல், இன்னமும் சற்று விலகிய வண்ணம் "துரையே! இந்த முகத்தை மாத்திரமல்ல, என்னுடைய அபாரமான செல்வம், அளவில் அடங்காத காதல், கட்டழகும் யௌவனமும் வழிந்த என்னுடைய உடம்பு முதலிய சகலமான பொருளையும் சுகபோகங்களையும் உமக்கே கொடுக்க வேண்டும் என்ற ஆவலும், பிரேமையும் கொண்டு தானே நான் இத்தனை பாடுகள் பட்டு, செய்யத்தகாத காரியங்களை எல்லாம் செய்து இவ்வளவு தூரம் வந்தேன். அப்படி இருந்தும் என்னுடைய முகத்தைக் காட்டுவேனோ மாட்டேனோ என்ற சந்தேகம் ஏன் உண்டாக வேண்டும்? வலைக்குள் வீழ்ந்த புறா வேடனுடைய கையில் அகப்படாமலும் அவனுடைய போஜனத்துக்கு மாதுரியமான உணவாக அமையா

மலுமா போய்விடப் போகிறது. இனிமேல் எல்லாம் உம்முடை யது தான்; கவலைப்பட வேண்டாம். ஆனால், இங்கே திடீரென்று யாராவது வருவார்கள். அவர்கள் ஒருக்கால் நமக்குத் தெரிந்தவர்க ளாக இருக்கலாம். அவர்களைக் கண்டவுடன் நான் பயந்து முகமுடியை மாட்டிக் கொண்டால், அது சந்தேகத்துக்கு இடம் கொடுக்கும். அவர்கள் இவ்விடத்திலேயே வட்டமிடுவார்கள். நாம் நம்முடைய மனசைவிட்டுப் பேசி, நம்முடைய எண்ணங்களை எல்லாம் வெளியிட்டுச் சொல்லக்கூடாமல் போய்விடும். அற்ப சுகத்துக்காக ஆசைப்பட்டு, முதலுக்கே மோசம் வந்துவிடப் போகிறது. என்னுடைய மாளிகையை விட்டு நான் இன்றைக்கு வந்ததே பெருத்த பாடாக முடிந்து விட்டது. இந்தச் சந்திப்பு வீணாகப் போனால், இனிமேல் இப்படிப்பட்ட சந்தர்ப்பம் சமீபத்தில் வாய்க்குமோ வாய்க்காதோ? ஆகையால், என்னுடைய தேகசுகத்தில் எதையும் இப்போது அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையைக் கொஞ்ச நேரத்துக்கு அடக்கிக் கொள்ள வேண்டும்" என்று மிகவும் நயமாகவும் அன்பாகவும் கூறினாள். அவள் அவ்வாறு பேசிய போது தனது இயற்கையான குரல் தெரியாதபடி ஒருவாறு மாற்றிக்கொண்டே பேசியதை துரைராஜா எளிதில் கண்டு கொண்டான். அவள் சொன்ன சொல் நியாயமானதென்று பட்டதாயினும், அவளது அழகிய முகத்தை, அன்று பிரிவதற்குள் எப்படியும் பார்த்தே தீரவேண்டும் என்ற ஆசை மாத்திரம் அடங்காமல் இருந்தது. உடனே துரைராஜா அவளை நோக்கி, "சரி; உன்னுடைய பிரியப்படியே ஆகட்டும். உன்னுடைய பிரியத்தை எல்லாம் நீ என் மேல் வைத்திருப்பதாகச் சொல்லும் போது, உன்னுடைய மனசுக்கு மாறான எந்தக் காரியத்தையும் நான் செய்ய மாட்டேன் என்பதை நீ நிச்சயமாக எண்ணிக் கொள்ளலாம்" என்று மிகுந்த தயாளத்தோடு மறுமொழி கூறினான்.

அதைக் கேட்ட வெள்ளைக்கார பெண், "மனசுக்கு ஒத்தபடி நடக்கும் அந்த மேலான குணம் உம்மிடத்தில் நிரம்பி இருப்பதி னாலே தான் என்னுடைய ஆசை முழுதையும் நீர் கவர்ந்து கொண்டீர். நானும் உமக்கு நிரந்தரமான அடிமையாகி விட்டேன். இனி எல்லாம் உம்முடையதே; கிணற்று நீரை இனி வெள்ளம் கொண்டு போகாது; ஆனால், என்னுடைய முகம் ஒரு வேளை

விகாரமானதாக இருக்குமோ என்று நீர் சந்தேகிக்கலாம். அப்படிப் பட்ட சந்தேகமே கொள்ள வேண்டாம். நீர் பெண்பிள்ளை விஷயத்தில் மகா நாகரீகமான மனிதர் என்றும், சுலபத்தில் குற்றங் கண்டு பிடிக்கக் கூடியவர் என்றும் நான் அறிவேன். என்னுடைய முகம் உம்முடைய மனசுக்குப் பிடிக்காததாக இருந்தால் நீர் என்மேல் நீடித்த பிரியம் வைக்கமாட்டீர் என்பதும் எனக்கு நன்றாகத் தெரியும். இப்போது நான் முகத்தை மறைத்துக் கொண்டிருந்தால், எப்போதும் முகத்தை மறைத்து வைத்துக் கொண்டே உம்மை ஏமாற்ற முடியாதல்லவா? ஆகையால் முகம் எப்படி இருக்குமோ என்ற சந்தேகம் உமக்குத் தேவையில்லை. இப்படிப்பட்ட அழகான முகத்தை நான் இதுவரையில் பார்த்ததே இல்லை என்று நீரே ஒப்புக்கொள்வீர் என்பதை நான் உறுதியாகச் சொல்லுகிறேன்" என்றாள்.

அதைக் கேட்ட துரைராஜா கரைகடந்த மகிழ்ச்சி அடைந்து அதற்கு என்ன மறுமொழி கூறுவதென்பதை அறியாதவனாய் சிறிது நேரம் தயங்கினான்.

உடனே அந்தப் பெண்பாவை, "நான் பணத்துக்கு ஆசைப் பட்டவளே அல்ல. எனக்கு லட்சக்கணக்கில் சொத்துகள் இருக்கின்றன. கண்ட புருஷர் மேலும் நான் ஆசை வைக்கக்கூடிய வேசியல்ல. யௌவனப் பருவமும், மனசாலும் வாக்காலும் செய்கையாலும் கொஞ்சமும் கெடாத கற்பும், அபூர்வமான அழகும் என்னிடத்தில் இருந்தும், நான் ஆசைப்படும் இந்தப் புருஷனைத்தான் அடைய வேண்டும் என்ற அந்த ஒரு பிடிவாத குணம் மாத்திரம் என்னிடத்தில் இருக்கிறது. இப்போது நான் என்னுடைய உறவினருக்குள் அடங்கினவளாக இருக்கிறேன். அவர்கள் என்னை வேறொரு புருஷனுக்குக் கட்டிக்கொடுக்க உத்தேசித்திருக்கிறார்கள். அவர்கள் என்னை உமக்குக் கட்டிக் கொடுக்கப் பிரியப்படவில்லை. அவர்கள் செய்யப்போகும் கலியாணத்தை எப்படியாவது தடுத்துவிட வேண்டும் என்பதே என்னுடைய எண்ணம். நான் இன்னமும் சொற்பகாலம் அவர்களுக்கு அடங்கி நடக்க வேண்டியவளாக இருக்கிறேன். அதுவரையில் நாம் இப்படித்தான் ரகசியமாகச் சந்தித்து சந்தோஷப்பட வேண்டும்; இன்னம் சொற்பகாலத்தில், நானே

என்னுடைய சமஸ்தானத்துக்கு எஜமானியாவேன்; அப்போது உம்மையே கலியாணம் செய்து கொண்டு விடுகிறேன். அதுவரையில் ரகசியமாக என்னுடைய சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி நான் வரச் சொல்லும் இடத்துக்கு நீர் வந்து போய்க் கொண்டிருக்க வேண்டும். இந்தக் காரியம் உமக்குக் கொஞ்சம் துன்பகரமானதாகத்தான் இருக்கும். இருந்தாலும், தன்னுடைய உயிரையே உம்முடைய பொருட்டு தத்தம் செய்யத் தயாராக இருக்கும் ஒரு பெண்ணை உத்தேசித்து, நீர் இந்தத் துன்பங்களை ஒரு பொருட்டாக மதிக்கமாட்டீர் என்று நினைத்து இவ்வளவு தூரம் துணிந்து உமக்கு எழுதி இந்த வேஷத்தோடு இவ்வளவு தூரம் வந்தேன். இதிலிருந்தே என்னுடைய பிரியமும் உறுதியும் எவ்வளவு அதிகமாக இருக்கிறதென்பதை யூகித்துக் கொள்ளலாம். உம்முடைய பிரியத்தை எல்லாம் என்மேல் வைப்பீரா? இன்னம் சொற்பகாலம் வரையில், அதாவது ஒரு வருஷ காலம் வரையில், ரகசியத்தில் நான் செல்லும் இடங்களுக்கு வந்து என்னைச் சந்தோஷிப்பித்துப் போவீரா? இது நான் உள்ள வரையில் நீர் உள்ளவரையில் நீடித்து நிற்க வேண்டும். நான் என் சமஸ் தானத்துக்கு எஜமானியான உடனே நீர் என்னைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும். சொற்ப காலம் வந்து விட்டு, அவ்வளவோடு திருப்தி அடைந்து, என்னை வஞ்சித்துவிடக் கூடாது. இந்த ஏற்பாட்டுக்கு நீர் சம்மதப்படுகிறீரா? உம்மை நான் என்னுடைய ஜீவாதாரமாக மதிக்கலாமா? தயவு செய்து உண்மையாகப் பேச வேண்டும்" என்று மிகவும் உருக்கமாகவும் வாத்சல்யத்தோடும் கூறினாள்.

அதைக் கேட்ட துரைராஜா கடைகடந்த களிப்பும், சகிக்க ஒண்ணாத ஆனந்தமும் அடைந்தவனாய் அவளை நோக்கி, "என் மேல் இவ்வளவு பிரியம் வைத்து எத்தனையோ துன்பங்களையும் மதியாமல், என்னையே அடைய வேண்டும் என்ற அந்த ஒரே உறுதியை வைத்திருக்கும் பெண்மணியை அடைந்து சுகப் படுவதைவிட இந்த உலகத்தில் மனிதன் அடையக்கூடிய பேரானந்தம் வேறு இருக்கிறதா? அழகு யௌவனம் பிரியம் ஏராளமான செல்வம் முதலிய சகலமான சம்பத்தையும் பாக்கியத் தையும் பரிபூரணமாகக் கொடுக்கக் காத்திருக்கும் ஸ்ரீதேவியான

உன்னை அடைய நான் எவ்வளவோ நல்ல பூஜை செய்திருக்க வேண்டும் என்றே நினைக்கிறேன். கரும்பு தின்னக் கூலி கேட்பாருண்டோ? இந்த விஷயத்தில் நீ சந்தேகங்கூடக் கொள்ள வேண்டுமா? இந்த நிமிஷம் முதல் நான் உன்னுடைய அடிமை என்றே நீ மதித்துக் கொள்ளலாம். நீ என்னுடைய உயிரையே கேட்டாலும் அதை இதே நிமிஷத்தில் எடுத்து உன் பாதத்தடியில் வைத்து விடுகிறேன். இனி உன்னை சந்தோஷமாக வைப்பதே நான் ஜென்மம் எடுத்ததன் பலன் என்று மதித்துக் கொண்டு, ஒரு நிமிஷமும் உன் மனம் கோணாதபடி நடந்து கொள்ளுவேன். நீ உன்னுடைய சமஸ்தானத்துக்கு எஜமானியாகிற வரையில் உன்னுடைய பிரியப்படியே, நாம் ரகசியமாக சந்தித்து வருவோம். இனி எந்த விஷயத்திலும் உன்னுடைய நோக்கம் போலவே நான் நடந்து கொள்ளுவேன் என்பதை நீ பிரமாணமாக எண்ணிக் கொள்ளலாம். கொஞ்ச காலமானவுடன் நான் உன்னைக் கைவிட்டு விடுவேன் என்ற சந்தேகமே உனக்கு வேண்டாம். உன்னுடைய முகத்தைப் பார்க்காமல் இருக்கும் போதே, உன்னுடைய வார்த்தைகளே என் மனதை இளக்கி, தன்னை உனக்கு மாறாத அடிமையாக்கி விட்டன. அப்படியிருக்க, உன்னோடு நெருங்கி, உன்னுடைய அன்பையும் பிரியத்தையும் சுகத்தையும் நான் அடைந்தால், அதன் பிறகு, நம்முடைய பந்தம் அதிக உறுதியான தாகுமே அல்லாது தளராது. நானும் பெருத்த தனிகனல்ல. என்னுடைய பெரிய தகப்பனாருக்குப் பிறகே, நான் கிருஷ்ணா புரத்து ஜெமீந்தாராக வேண்டும். அவருக்கும் எங்களுக்கும் மனதில் அவ்வளவாக பிரியமும் இல்லை. ஆகையால், அவர் தம்முடைய ஆயுசு காலத்துக்குள்ளாகவே எல்லாவற்றையும் அழித்து விடுவார் என்றே நினைக்க வேண்டி யிருக்கிறது; ஆகையால், அதைக் கருதியும், நான் உன்னைக் கட்டிக்கொள்வது, எனக்கு அனுகூலமானதாகவே இருக்கிறது. என் வார்த்தையை நீ உறுதியாக நம்பலாம்" என்று மிக உருக்க மாகவும், வாத்சல்யத்தோடும் கூறினான்.

அதைக் கேட்டு நிரம்பவும் சந்தோஷம் அடைந்தவளைப் போலக் காணப்பட்ட அந்தப் பெண், "சரி; இப்போதே என்னுடைய மனசு குளிர்ந்தது. நீர் ஒருகால் என்னுடைய

நிபந்தனைக்கு இணங்காமல், என் கோரிக்கையை மறுத்து விடுவீரோ என்று மிகவும் கவலை கொண்டு வந்தேன், அது விலகியது. ஆனால் இன்னொரு பயம் என் மனதிலிருந்து வருத்து கிறது. இதற்கு முன் எப்போதும் பேசியறியாத நான் உமக்குக் கடிதம் எழுதி இவ்வளவு துணிகரமாக வேஷம் போட்டுக் கொண்டு வந்து உம்மோடு சிநேகம் செய்து கொள்ளுவதிலிருந்து, நான் நாணமும் கற்புமில்லாத துஷ்டை என்று நீர் எண்ணிக் கொள்ளுவீரோ என்ற பெருத்த அச்சம் இன்னமும் என் மனதில் இருந்து துன்பப்படுத்துகிறது. நான் வேறு விதத்தில் உம்மோடு பேச வேண்டும் என்று எவ்வளவோ முயன்று பார்த்தேன். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. ஆகையால், என் மனசுக்கு விரோதமாகவே, நான் இந்த மார்க்கத்தில் இறங்கினேன். இதைப் பற்றி உம்முடைய மனசில் ஏதேனும் சஞ்சலம் உண்டா?" என்று கிள்ளை போல மொழிந்தாள்.

அதைக் கேட்ட துரைராஜா, "அடாடா! அப்படியும் நினைப்ப துண்டா! அதைவிட விசுவாசங்கெட்ட நினைவு வேறுண்டா? ஸ்ரீ தேவியைப் போல தானாக வரும் பாக்கியத்தை, எந்த மூடனாவது இகழ்வானா? ஒருநாளுமில்லை. வேறு வழியில்லாவிட்டால் என்ன செய்கிறது? இப்படித்தான் செய்ய வேண்டும். இதைப்பற்றி எனக்குக் கொஞ்சமும் ஆயாசமில்லை" என்றான்.

அதைக் கேட்ட அந்த வெள்ளைக்கார மடந்தை, "சரி; அவ்வளவு தான் நான் கேட்டது. இனி நான் பாக்கியசாலி தான். உம்முடைய சொல்லை நான் வேதவாக்கியமாக நம்புகிறேன். இந்த நேரம் முதல் நான் உம்மை என்னுடைய கணவனாகவே மதிக்கிறேன். நீரும் என்னை உம்முடைய சொந்த நாயகியாகவே உறுதியாக எண்ணிக் கொள்ளலாம். இனி என்னுடைய மனசில் உள்ள சங்கதிகளை எல்லாம் உம்மிடத்தில் வெளியிட்டுச் சொல்லியே தீரவேண்டும். முதலில் நம்முடைய சிநேகம் நீடித்து நிற்பதற்கும், நாம் அடிக்கடி ஒருவரை ஒருவர் சந்தித்து இன்புறுவதற்கும் ஒரு முக்கியமான இடைஞ்சலை நீக்கி வைக்கிறது உம்முடைய கையிலே தான் இருக்கிறது. அதை நீர் நீக்கி வைத்தால் தான், நீர் என்னிடத்தில் பிரேமை உள்ளவர் என்பது எனக்கு நன்றாக வெளியாவதன்றி,

அதனால் நம் இருவருக்கும் பெருத்த அனுகூலமும் ஏற்படும்" என்றாள்.

உடனே துரைராஜா அவளை நோக்கி, "அது என்ன இடைஞ்சல் என்பதைச் சொன்னால், உடனே விலக்கி வைக்கிறேன். என்னுடைய சாமர்த்தியத்தை அதிலேயே நீர் பார்த்துக் கொள்ளலாம்" என்றான்.

வெள்ளைக்கார துரைஸானி, "அது ஒன்றும் பெரிய காரியமல்ல; சின்ன விஷயந்தான். இருந்தாலும், அதை நாம் உடனே செய்யா விட்டால் அதனால் நம்முடைய சிநேகத்துக்குப் பெருத்த இடர் வந்து சேரும்; எப்படி என்றால், என்னை வேறொருவனுக்குக் கட்டிக்கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று நான் சொன்னேன் அல்லவா. ஆனால் இந்த ஆறுமாச காலமாக நான் உம்மைப் பற்றியே நினைத்து உம்மிடத்திலேயே காதல் கொண்டு உம்மையே அடைய வேண்டுமென்று உறுதி செய்து கொண் டிருக்கிறேன். ஆனால் என்னுடைய கோரிக்கையை எப்படி நிறை வேற்றுகிறதென்றும், உம்மோடு எப்படிப் பேசுகிறதென்றும் யோசனை செய்து செய்து பார்த்தேன். ஒன்றும் தோன்றவில்லை. இந்த விஷயத்தில் எனக்கு யோசனை சொல்லக்கூடிய நம்பிக்கை யான சிநேகிதையும் எனக்கு இல்லை கடைசியாக இந்தக் கலியாணம் மிகவும் நெருங்கிவிட்டதாகையால், அதை யாரிடத்தி லாகிலும் சொல்லிப் பார்ப்போம் என்ற ஒரு பைத்தியக்கார நினைவைக் கொண்டு ஒரு தவறு செய்து விட்டேன். என்னிடத்தில் ஒவ்வொரு நாளும் காலையிலும் சாயுங்காலத்திலும் வந்து ஒருவன் எனக்கு வீணை கற்றுக் கொடுத்து வருகிறான். அவன் என்னிடத்தில் மிகவும் மரியாதையாகவும் விசுவாசமாகவும் நடந்து கொண்டிருந்தான். அவனை நான் யோக்கியன் என்று நினைத்து அவனிடத்தில் என்னுடைய ரகசியமான எண்ணத்தை வெளியிட்டேன். இப்போது என் உறவினர் எனக்குப் பார்த்திருக்கும் புருஷன் என் மனசுக்குப் பிடிக்கவில்லை என்றும், உம்மையே கட்டிக் கொள்ளப் பிரியப்படுவதாகவும் அதற்கு என் உறவினர்கள் இணங்கமாட்டார்கள் ஆகையால், ஒரு யோசனை சொல்லும்படியாக நான் அவனிடம் கேட்டேன். அவன் என்ன

செய்தான் என்றால், நான் எதிர்பார்க்காத விதமாகப் பேசத் தொடங்கியதன்றி, அவன் உம்முடைய நடத்தை மிகவும் கெட்டதென்று கூறி உம்மைப் பற்றி நிரம்பவும் இழிவாகப் பேசத் தொடங்கினான். நீர் தாசிகள் வீட்டிலும் வேசைகள் வீட்டிலும் அடிமையாகக் கிடக்கிறீர் என்றும், சூதாடுகிறீர் என்றும், குடிக்கிறீர் என்றும், வீட்டில் உள்ள ஆபரணங்களை எல்லாம் திருடுகிறீர் என்றும் சொல்லி, உலகத்தில் உம்மைவிடக் கேவலமான துஷ்டனும் இழிகுணம் உடையவனும் இருக்க மாட்டான் என்றான்; அவனுடைய வார்த்தையைக் கேட்கவே என் மனசில் பெருத்த விசனமும் கோபமும் உண்டாகி விட்டன. அந்த விஷயத்தை இந்த மனிதனிடத்தில் ஏன் சொன்னோம் என்று ஆகிவிட்டது. இருந்தாலும், அவனுடைய மனசுக்கு விரோதமாக நான் மறுத்துப் பேசினால், அவன் உடனே போய் என்னுடைய உறவினரிடத்தில் இந்தச் சங்கதியை வெளியிட்டு விடுவான் என்ற நினைவினால், நான் அவனோடு அதிகமாக வாதாடவில்லை. நான் அவனைப் பார்த்து, "ஐயா! அப்படியா சங்கதி! அந்த மனிதர் இப்பேர்ப்பட்ட துன்மார்க்கர் என்பது எனக்கு இது வரையில் தெரியாது. நான் அவர்மேல் ஆசைப்பட்டது தவறென்பது இப்போது தான் தெரிகிறது. இன்று முதல் என்னுடைய மனசை மாற்றிக் கொள்ளுகிறேன். ஆனால், நீர் இந்த விஷயத்தை என்னுடைய பந்துக்களிடம் சொல்ல வேண்டாம்" என்று மிகவும் நயந்து கேட்டுக் கொண்டேன். அவன் என்ன காரணத்தினாலோ, உம்மிடத்தில் பெருத்த பகைமை பாராட்டிக் கொண்டிருக்கிறான். அவன் உம்மைத் தூஷித்ததிலிருந்தும், எனக்கு அவன் சொன்ன மறுமொழியில் இருந்தும், அவன் இந்த விஷயத்தை இப்போது வெளியிடா விட்டாலும் பிந்தியாவது என்னுடைய மனிதர் களிடத்தில் வெளியிட்டு விடுவானாகில், என்னுடைய மனிதர்கள், தாங்கள் உத்தேசித்துள்ள கலியாணத்தை உடனே முடித்துவிட ஆரம்பிப்பார்கள். நம்முடைய கருத்து நிறைவேறாமல் போய் விடும். ஆகையால், அந்த மனிதன், இந்தச் சங்கதியை வெளி யிடாமல் இருப்பதற்கு நாம் ஏதாவது தக்க மார்க்கம் செய்துவிட வேண்டும்" என்றாள்.

அதைக் கேட்ட துரைராஜா மிகுந்த வியப்பும் திகைப்பும் ஒரு வகையான வெட்கமும் அடைந்து, தன்னைப்பற்றி அவ்வளவு தூஷணையாக அவளிடத்தில் எவனோ சொல்லி இருக்கிறானே என்ற கவலையும் விசனமும் கொண்டதன்றி, அப்படிப்பட்ட துஷ்டனை, தான் தக்கபடி தண்டிக்க வேண்டும் என்ற ஒரு வகையான பதைப்பையும் கொண்டவனாய், "ஆகா! அப்படியா! என்னைப் பற்றி அவ்வளவு இழிவாகப் பேசிய அந்தத் துஷ்ட னுடைய பெயரைச் சொல்; இன்றைக்கே அவனைக் கொன்று போட்டு விடுகிறேன். இரண்டு வியாதிக்கும் ஒரே மருந்தாகப் போய்விடட்டும்" என்றான்.

அதைக் கேட்ட வெள்ளைக்காரப் பெண், "அவனைக் கொல்வது மாத்திரம் வேண்டாம். ஏனென்றால், அதனால் உமக்கும் எனக்கும் பெருத்த தீராத பாவமும் பழியும் உண்டாவதன்றி, போலீசாரும் உம்மைப் பிடித்து மரண தண்டனைக்கு ஆளாக்கி விடுவார்கள். அதன் பிறகு, உம்மைக் கணவனாக அடைய வேண்டும் என்ற என்னுடைய ஆசையும் நிராசையாகப் போய்விடும். ஆகையால், அவனை நீர் கொல்வதாய் இருந்தால், நான் அவனுடைய பெயரையே உம்மிடத்தில் வெளியிடப் போகிறதில்லை" என்றாள்.

உடனே துரைராஜா, "மெய்தான். நீ சொல்வதும் நியாயமாகத் தான் இருக்கிறது. அவனை நான் கொல்லவில்லை; ஆனால் வேறு எப்படித்தான் அவனுடைய வாயை அடக்குகிறது" என்றான்.

வெள்ளைக்காரப் பெண், "அவன் குறைந்தது ஆறுமாச காலமாவது எங்களுடைய வீட்டுக்கு வராமல் இருந்தால், அதுவே போதுமானது. அதற்குள் எனக்கு வேறொரு வித்துவானை அமர்த்தி விடுவார்கள். இவன் அதன்பிறகு எங்களுடைய மனிதரிடத்தில் பேசும்படியான சந்தர்ப்பமே இல்லாமல் போய் விடும்; அதற்குத் தக்க யோசனை நீர் தான் செய்ய வேண்டும். ஆனால், அவனைக் கொல்வது மாத்திரம் கூடாது" என்றாள்.

துரைராஜா, "சரி; அப்படியே செய்கிறேன்; இதுதானா ஒரு பெரிய காரியம்? அவனை நான் கொல்லுகிறதில்லை. ஆறுமாச காலம் வரையில் அவன் தன்னுடைய வீட்டை விட்டு வெளியில் வராதபடி நான் செய்துவிடுகிறேன். நீ இனிமேல் அவனைப்பற்றி

எவ்விதக் கவலையும் கொள்ள வேண்டாம்" என்று மிகவும் உறுதியாகக் கூறினான். "அவன் இனிமேல் நாளைக்குச் சாயுங்காலம் தான் எங்களுடைய வீட்டுக்கு வருவான். அதற்குள் காரியத்தை நிறைவேற்றி விடவேண்டும்" என்றாள் பெண்.

துரைராஜா, "தடையில்லை. உடனே செய்து முடிக்கிறேன். அவனுடைய பெயர் என்ன?" என்றான்.

வெள்ளைக்காரப் பெண், "இவ்வளவு காலமாக அவன் எங்களுடைய வீட்டுக்கு வந்துவிட்டுப் போகிறான். ஆனால் அவனுடைய பெயர் என்ன என்பதை விசாரிக்கவே இல்லை. நான் இப்போது வீட்டுக்குப் போய், நாளைய தினம் காலையில், எங்கள் வீட்டு வேலைக்காரியிடத்தில் கேட்டு அவனுடைய பெயரையும் விலாசத்தையும் அறிந்து, ஒரு கடிதத்தில் அந்த விவரத்தை எழுதி உமக்கு அனுப்பி வைக்கிறேன். நீர் தாமசமின்றி உடனே இதற்குத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இதுதான் முதல் பரிட்சை. இதில் தேறினால்தான், நீர் என்மேல் சரியான பிரியம் வைத்திருக்கிறீர் என்ற நம்பிக்கை எனக்கு உண்டாகும். அதன்மேல் தான், நான் இன்னார் என்பதை உமக்கு வெளி யிடுவேன்; வெளியிடுவது மாத்திரமல்ல; அன்றிரவே உமக்கு நான் பத்தினியாகி, உம்மை இன்பசாகரத்தில் ஆழ்த்துவேன் என்பதையும் நீர் நிச்சயமாக நம்பலாம். எனக்கு நேரமாகிறது; நான் வீட்டில் இல்லை என்பதை என்னுடைய ஜனங்கள் கண்டு கொள்வார்கள். நான் உத்தரவு வாங்கிக் கொள்கிறேன்" என்றாள்.

அவள் போவதாகச் சொன்னதைக் கேட்டு மிகவும் துயரமடைந்த துரைராஜா, "அந்த மனிதனுடைய காரியத்தை நான் திருப்திகரமாகச் செய்து விடுகிறேன். நீ அவனுடைய விலாசத்தை மாத்திரம் தாமச மின்றி எழுதியனுப்பு. அதிருக்கட்டும்; நான் அவன் விஷயத்தில் செய்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்டேன் என்பதை நான் உனக்கு அறிவிக்க வேண்டுமே. நீ இன்ன இடத்திலிருக்கிறாய், உன் பெயர் என்ன என்ற விவரங்கள் தெரியாவிட்டால், நான் எப்படி உனக்கு எழுதுகிறது" என்றான்.

வெள்ளைக்காரப் பெண், "நீர் எழுதியனுப்ப வேண்டாம். நாளைக்குச் சாயுங்காலம் அவன் எங்கள் வீட்டுக்கு வராமல் இருந்தால், உடனே எங்கள் மனிதர் அவனுடைய வீட்டுக்கு ஆள் அனுப்பி அவன் வராத காரணத்தை அறிந்து கொண்டு வரச் சொல்லுவார்கள். அதன் மூலமாக நான் தெரிந்து கொண்டு மேல் நடக்க வேண்டியதற்கு நான் உமக்கு எழுதியனுப்புகிறேன். கொஞ்ச காலத்துக்கு நீர் எனக்குக் கடிதம் எழுதுகிறதென்ற நினைவே கொள்ள வேண்டாம். நாம் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளாவிட்டால், காரியம் கெட்டுப் போகும்; நான் போக வேண்டும்; நேரமாகிறது; உம்மை நம்பி இருக்கலாமா? பிரமாணமாக என்னுடைய கோரிக்கையை முடித்து வைத்து, எனக்கு சுகம் கொடுப்பீரா?" என்று கூறிய வண்ணம் எழுந்தாள். அதைக் கேட்ட துரைராஜாவும் எழுந்து, தான் அவளது விருப்பப் படியே செய்வதாய் பிரமாணம் செய்து கொடுத்தான்.

பிறகு அவர்கள் இருவரும் அவ்விடத்தை விட்டு, சந்தேகத்திற்கு இடங்கொடாமல் மெல்ல உலாவி நடந்த வண்ணம் மூர்மார்க்கெட்டு வரையில் வந்து, ஜனக்கும்பலில் கலந்து கொண்ட பின்னர், இருவரும் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்து விலகினர். முகமூடி போட்டு வந்த அந்த ஸ்திரீ, பக்கத்திலிருந்த டிராம் வண்டியில் ஏறி, மேற்குப் பக்கமாய்ப் போய்விட்டாள்.

அந்த அற்புதமான ஸ்திரீயின் வார்த்தைகளினாலும் அழகி னாலும் மயங்கிக் கலகலத்துப் போன துரைராஜா, திகைத்துத் திக்பிரமை கொண்டு, அவள் சென்ற பக்கம் திரும்பி, அவளது இனிய வடிவம் மறைகிற வரையில் பார்த்துக் கொண்டே நின்றான். கைக்கெட்டியது வாய்க்கெட்டாது போனதென்பதைப் போல, தன் மீது அவ்வளவு காதலும் பிரேமையும் கொண்டு தன்னைத் தேடி வந்த அந்தப் பெண்பாவை, தனக்கு ஒரு சாண் தூரத்தில் உட்கார நேர்ந்ததும், தன்னிடத்தில் அவளது வரலாறுகளை எல்லாம் சொல்ல நேர்ந்ததும், அவள் இன்னாள் என்பதை இன்னமும் தான் அறிந்து கொள்ளக்கூடாமல் போனதும், அவளது கரத்தைக்கூட தான் ஸ்பரிசிக்கும் பாக்கியம் தனக்குக் கிடைக்காமல் போனதும் அவனுக்குப் பெருத்த ஏமாற்றமாக முடிந்து, ஏக்கத்தை உண்டாக்கின. அவன் என்ன செய்வதென்பதை உணராதவனாகத்

திகைத்து நின்றிருந்த தருணத்தில், "என்ன சங்கதி? ஏன் இப்படி நிற்கிறாய்" என்ற ஒரு குரல் உண்டாயிற்று; உடனே திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்த துரைராஜா தனக்கருகில் மைனர் வந்து நின்றதைக் கண்டான். காணவே, ஒருவாறு லஜ்ஜை அடைந்தவனாய், "என்ன மாப்பிள்ளை! ஜாகைக்குத் திரும்பலாமா?" என்றான்.

அப்போது அவளுக்கருகில் ஜனக்கும்பல் இருந்தமையால், அவர்கள் இருவரும் அப்பால் நடக்கலாயினர். அப்போது மைனர், "அடேயப்பா! ஆசாமி பலே சொகுசாக இருக்கிறாளே! சீமையில் இருந்து நேராக இப்போதே கப்பலில் வந்திறங்கிய அசல் வெள்ளைக்காரி போல இருக்கிறாளே! மெய்யாகவே இவள் வெள்ளைக்காரியா அல்லது நம்முடைய ஜாதியாளா? இருந்தாலும் நீ நல்ல அதிர்ஷ்டசாலியப்பா! எனக்கு பாலாம்பாள் கிடைத்ததைப் பற்றி நான் இதுவரையில் மகா பெருமையாக நினைத்துக் கொண்டிருந்தேன். இந்த கந்தருவப் பெண்ணைப் பார்த்தபின், அவள் இவளுடைய கால்தூசுக்கும் இணை நிற்கமாட்டாள் என்று நினைக்கிறேன். என்ன சமாசாரம்? முகதரிசனமாவது கிடைத்ததா? அல்லது, அதற்கு மேலும் ஏதாவது கிடைத்ததா?" என்றான்.

அதைக் கேட்ட துரைராஜா ஒன்றையும் சொல்லமாட்டாமல், சிறிது நேரம் தத்தளித்துத் தயங்கி, அஸ்வாரஸ்யமாகப் பேசத் தொடங்கி, "என்ன மாப்பிள்ளை! போம்; முகதரிசனமும் கிடைக்க வில்லை. அவள் யார் என்பதும் தெரியவில்லை. அவளைக் கையால் தொடக்கூட முடியவில்லை" என்றான்.

அவனது சொல்லை நம்பாத மைனர், "ஓகோ! என்னை ஏமாற்றுகிறாயே! இதற்கென்று இத்தனை பாடுபட்டு இவ்வளவு தூரம் வந்தவள் ஒன்றையும் சொல்லாமல் சும்மா போய் விடுவாளோ! யாருக்குக் காது குத்துகிறாய்? என்னிடத்தில் சொன்னால் நான் போட்டிக்கு வரப் போகிறேன் என்று பயப்படுகிறாய் போலிருக்கிறது. அப்படியானால், அவள் எழுதிய கடிதத்தை மாத்திரம் ஏன் என்னிடத்தில் காட்டினாய்?" என்று நிஷ்டூரமாகப் பேசினான்.

அதைக் கேட்ட துரைராஜா நயமாக, "மாப்பிள்ளை! உன்னிடத்தில் நான் பொய் சொல்லுவேனா? பிரமாணமாகச்

சொல்லுகிறேன். அவளை நான் இன்னம் தொடக்கூட இல்லை. அவளுடைய பெயர்கூடத் தெரியவில்லை. அவள் யாரோ ஒரு ஜெமீந்தார் வீட்டுப் பெண்ணாம். அது வரையில் நிச்சயமாகத் தெரிகிறது. அவளுடைய பெற்றோர் அவளை வேறு யாருக்கோ கட்டிக்கொடுக்கப் போகிறார்களாம். அந்த மனிதன் அவளுடைய மனசுக்குப் பிடித்தவனல்லவாம். அவள் என்மேல் அபாரமான பிரியம் வைத்திருக்கிறாள் என்பது நன்றாகத் தெரிகிறது. என்னுடைய நடத்தையைப் பற்றி அவளிடத்தில் எவனோ தாறுமாறாக என்னென்னவோ உளறி வைத்திருக்கிறான். அதனால், அவள் என்னை உடனே நம்பமாட்டேன் என்று மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொண்டாள். அவளுடைய முகத்தையா வது காட்டும்படி நான் எவ்வளவு தூரம் கேட்டும், அவள் அதற்கு இடங்கொடுக்கவே இல்லை. என்னோடு இன்னும் சில முறை பேசிப்பழகிய பிறகுதான், அவளுக்கு என்மேல் ஒரு நம்பிக்கை ஏற்படுமாம். அவள் திரும்பவும் எனக்கு எழுதும் போது, நான் அவளைப் பார்க்கும்படி சொல்லிவிட்டு, தனக்கு நேரமாய் விட்டதென்று எழுந்து போய்விட்டாள். அவ்வளவே நடந்த விஷயம்" என்றான்.

அந்த வெள்ளைக்காரப் பெண் வீணை வித்துவானைப் பற்றிக் கூறிய வரலாற்றையும், அவன் விஷயமாக தான் செய்திருந்த வாக்குறுதியையும் துரைராஜா மைனரிடத்தில் சொல்லாமல் மறைத்து விட்டான். மற்ற விவரங்களைக் கேட்ட மைனர் புரளியாக நகைத்து, "சே! இவ்வளவுதானா! **மலை கல்லி எலி பிடித்தாய்** போலிருக்கிறது. கடைசியில், இன்றையப் பொழுது வீணாகப் போய்விட்டது. கேவலம் ஒரு முத்தத்துக்குக் கூடப் பஞ்சமாகப் போய்விட்டது. நானாய் இருந்தால், தோட்டத்துக்குள் தனியாக வந்த அந்தப் பெண்ணை இவ்வளவு எளிதில் விட்டிருப் பேன் என்று பார்த்தாயா? உண்டு இல்லை என்று ஒருகை பார்த்தே விட்டிருப்பேன்" என்று கூறினான்.

***துரைராஜா:-*** "உன்னுடைய சாமர்த்தியம் எனக்கு வரவே வராது. அது போகட்டும்; என்னைவிட்டுப் போன பிறகு, நீ யார் யாரைப் பார்த்தாய்? நம்முடைய ஜனங்கள் யாரையாவது கண்டாயா?" என்று பேச்சை மாற்றினான்.

**மைனர்:-** எங்களுடைய பெட்டிவண்டி வந்திருந்தது. அது திரும்பிப் போன போதுதான் நான் அதைப் பார்த்தேன்; எங்களுடைய வண்டிக்காரன் ஓட்டிக்கொண்டு போனான். உள்ளே கோமளவல்லியின் முகம் தெரிந்தது. அதற்குள் வேறு சிலரும் இருந்தனர். துரைஸானியும் வந்திருக்கலாம். அம்மாள், இன்றைக்கிருந்த கோபத்தில், வந்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன் – என்றான்.

இவ்வாறு சம்பாஷித்த வண்ணம் அவ்விரண்டு உல்லாச புருஷர்களும் சிறிது தூரம் சென்று, ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு இரவு ஒரு மணிக்கு தத்தம் பங்களாவை அடைந்தனர்.

துரைராஜா தனது சயனத்திற் படுத்துக்கொண்டான் ஆயினும், அவன் அன்றிரவு முற்றிலும் தூக்கம் என்பதே கொள்ளாதவனாய், அன்று நிகழ்ந்த அதியற்புதமான சம்பவத்தைப் பற்றியும், மகாபூடகமாக வந்து மிகவும் எச்சரிப்பாக நடந்து கொண்ட அந்த அதிசுந்தர மங்கை பிரேரித்த விஷயங்களைப் பற்றியும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பொழுதும் புலர்ந்தது. அவன் அந்தப் பெண்மணி அனுப்புவதாகச் சொன்ன கடிதத்தின் வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருந்ததன்றி, அந்த வீணை வித்துவானை எப்படியாவது அன்றைக்குள் அடித்து அவனுடைய கைகால்களை எல்லாம் முறித்தெறிந்து விடவேண்டும் என்றும் தீர்மானித்திருந்த சமயத்தில், அவனுடைய வேலைக்காரனான பொன்னம்பலம் விரைவாக ஓடிவந்து யாரோ ஒருவன் கொணர்ந்தான் என்று ஒரு கடிதத்தைக் கொடுத்துச் சென்றான்.

துரைராஜா சகிக்க ஒண்ணா ஆவலோடு அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்க்க, அதற்குள் ஆயிரம் ரூபாய் நோட்டு ஒன்றும், ஒரு சிறிய துண்டுக் காகிதமும் இருந்தன. அவைகளைத் தவிர வேறு கடிதமே காணப்படவில்லை. அந்தத் துண்டுக் காகிதத்தில்,

**மதனகோபாலன்,**

வீணை வித்துவான்.

சுந்தர விலாஸ், கோமளேசுவரன்பேட்டை.

என்ற சொற்களைத் தவிர வேறு ஒரு வாக்கியமும் காணப்படவில்லை.

அதைக் கண்ட துரைராஜா, "ஆகா இந்தத் துஷ்டனா அந்த இடத்திலும் இடைஞ்சலாக இருக்கிறான். இங்கே என்னுடைய தங்கையின் மனதைக் கலைத்த அயோக்கியனல்லவா இவன். சரி, எவ்விதமான விரோதமுமின்றி ஒரு மனிதனை எப்படி அடிக்கிற தென்று நான் முன் நினைத்ததற்கு இப்போது இவனே வந்து வாய்த்ததும் நன்மைதான். இவனைத் தண்டிப்பது பாவமாகாது; தங்கை விஷயத்தில் இவன் நடந்து கொண்டதற்கு நான் இவனைத் தண்டிப்பது நியாயமானதே" என்று தீர்மானித்துக் கொண்டு உடனே புறப்பட்டு கோமளேசுவரன் பேட்டையை நோக்கிச் சென்றான்.

★ ★ ★

16—வது அதிகாரம்

## புதுமோகம்

அவ்வாறு துரைராஜா மதனகோபாலனுக்குத் துன்பமிழைக்கும் பொருட்டு கோமளேசுவரன் பேட்டைக்குப் போன தினத்தின் காலையில், கல்யாணியம்மாள் தனது அந்தப்புரத்தில், ஒரு கட்டிலின் மேல், தேக அசௌக்கியத்தோடு சயனித்துக் கொண்டிருந்தாள். அவள் ஒரு பெருத்த சால்வையால் தனது கால் முதல் தலை வரையில் நன்றாகப் போர்த்திக் கொண்டிருந்ததன்றி, அவளது நெற்றியிலும் நெற்றிப்பூட்டுகளிலும், பசைகளால் கனமான பற்றுப் போடப்பட்டிருந்தது. கடுமையான ஜுரமும், தலை நோவும் கொண்டவள் போல, அந்தச் சீமாட்டி, முக்கி முனகிய வண்ணம் படுத்திருந்தாள். அவளது குமாரனான மைனர், அவனது சயனக்கிரகத்தில் இருந்ததால், அவனை அவசரமாக அழைத்து வரும்படி, சிறிது நேரத்திற்கு முன் உள்ளே நுழைந்து கட்டிலண்டையில் வந்து நிற்க, அவளைக் கண்ட கல்யாணியம் மாள், "என்னடி! தம்பீ வரவில்லையா?" என்றாள். அதைக் கேட்ட வேலைக்காரி, "இல்லை, வருகிறார்; அவர் நேற்று ராத்திரி பார்க் பேர் வேடிக்கைகள் பார்த்துவிட்டு ஒருமணிக்கு வந்து படுத்தாராம்; இப்போதுதான் எழுந்திருந்தார். அவரே இங்கே அவசரமாக வர நினைத்திருந்தாராம். தாங்களும் அழைத்ததாக நான் சொன்னேன்.

தங்களிடத்தில், கொஞ்ச நேரம் பேசிவிட்டு, அவர் எங்கேயோ அவசரமாகப் போக வேண்டுமாம். பல் தேய்த்துவிட்டு உடைகளைப் போட்டுக் கொண்டு பிரமாணமாக இதோ ஐந்து நிமிஷத்தில் வருகிறேன் என்று சொல்லி என்னை அனுப்பினார்" என்றாள்; "சரி; வரட்டும். அவரோடு நான் ஒரு ரகசியமான சங்கதியைப் பற்றிப் பேச வேண்டும். ஆகையால், அவர் வந்தவுடனே நீ வெளியில் போய் இருந்துவிட்டு அவர் போனவுடனே திரும்பி வா; தெரிகிறதா?" என்றாள் கல்யாணியம் மாள். அதைக் கேட்ட தாதி, அங்ஙனமே செய்வதாக ஒப்புக் கொண்டாள். அதன் பிறகு அந்தப் பணிமகள் தனது எஜமானி யம்மாளது விருப்பத்தின்படி, பக்கத்தில் உட்கார்ந்து, தலையை மெதுவாகப் பிடித்துக் கொண்டிருந்தாள். அவ்வாறு கால் நாழிகை நேரம் கழிந்தது. மைனர் துரை தன்னை மிக்க ஆடம்பரமாக அலங்கரித்துக் கொண்டு, தனது அன்னை இருக்கும் இடமாயிற்றே என்ற அச்சம் சிறிதுமின்றி, டம்பாச்சாரி நடை நடந்து, உள்ளே நுழைந்தான். அவன் வந்ததைக் கண்டவுடன், தாதி கட்டிலை விட்டு மிகவும் பணிவாகக் கீழே இறங்கி மெதுவாக வெளியிற் போய்விட்டாள். அப்போது கட்டிலிற்கருகில் வந்த மைனர், தனது தாய் தேக அசௌக்கியத்தோடு படுத்திருக்கிறாள் என்பதை உணர்ந்து கொண்டானாகிலும், சிறிது இரக்கம் கொள்ளாமலும், அனுதாபம் காட்டாமலும், மிக்க அசட்டையாக அப்புறம் பார்த்த வண்ணம் சற்று தூரத்தில் கிடந்த சொகுசான ஒரு பெருத்த சாய்வான நாற்காலியில் உட்கார்ந்து, "அப்பாடா" என்று சாய்ந்து, தனது தாய் படுத்திருந்த மஞ்சத்தின் பக்கமாக தனது கால்களை நீட்டிவிட்டான். அவன் உட்கார்ந்து கொண்ட நாற்காலி, கல்யாணி யம்மாள் தனக்காகவே செய்து, தான் மாத்திரம் உட்கார்ந்து வந்த சிம்மாசனம் போன்ற ஒரு சிறந்த நாற்காலி; அதன் கம்பீரத்தைக் கண்டு, அதன் மேல் உட்கார்ந்து கொள்ள எவரும் அஞ்சுவார்கள். துரைஸானியம்மாள், மைனர் முதலிய சகலமானவர்களும், அதுகாறும் அந்த நாற்காலியில் உட்கார்ந்ததே இல்லை. அப்படிப் பட்ட மரியாதையான உன்னத ஆசனத்தில் மைனர் வழக்கத்திற்கு மாறாக உட்கார்ந்ததையும், தான் தேக அசௌக்கியமாக இருந்ததைக் கண்டும், அவன் சிறிதும் ஜீவகாருண்யமற்ற

கல்நெஞ்சனாக இருந்ததையும் கண்ட கல்யாணியம்மாளது மனம் மிகவும் பதறியது. "ஆ! தெய்வமே! எனக்கு இப்படிப்பட்ட துராத்மாவா புத்திரனாக வந்து வாய்க்க வேண்டும்! ஆகா! நான் பூர்வ ஜென்மத்தில் மகா பாதகம் செய்திருக்கிறேன்" என்று நினைத்து கல்யாணியம்மாள் தன்னைத் தானே நொந்து கொண்டாள் ஆயினும், சந்தர்ப்பத்தைக் கருதி அவள் தனது ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, தலை நோவைப் பொறாது வருந்துபவள் போல நடித்து, "அப்பா! அம்மா!" என்று இரண்டு மூன்று முறை முணங்கினாள். அதற்குள் மைனர், தான் வந்திருப்பதைப் பற்றி தனது தாய்க்கு எச்சரிக்கை செய்பவன் போல, இரண்டு மூன்று முறை கனைத்து, தனது தொண்டையைச் சீர்திருத்திக் கொண்டவனாய், "இம்; சரி; எனக்கு நேரமாகிறது. அவளைவிட்டு நான் நேற்று காலையில் வந்தது. அவள் தனியாக இருப்பாள்; நான் அவசரமாகப் போக வேண்டும். இப்போது முதலில் பதினாயிரம் ரூபாய் வேண்டும். கட்டிலைவிட்டு எழுந்து வர முடியாவிட்டால், திறவுகோல் இருக்குமிடத்தைச் சொன்னால் நானே பெட்டியைத் திறந்து பணத்தை எடுத்துக் கொண்டு போகிறேன்" என்று மிகவும் அலட்சியமாகவும் அமர்த்தலாகவும் கூறினான்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட கல்யாணியம்மாள் மெதுவாக எழுந்து பக்கத்திலிருந்த ஒரு திண்டில் சாய்ந்து மைனரை நோக்கிய வண்ணம், "எதற்காகப் பதினாயிரம் ரூபாய் வேண்டும்?" என்றாள்.

மைனர் கல்யாணியம்மாளைப் பழிப்பவன் போலத் தனது வாயைக் கோணலாக வைத்துக் கொண்டு, "ஓகோ! எதற்காகப் பதினாயிரம் ரூபாய் வோண்டுமோ! இரண்டு நாளைக்குள் எல்லாம் மறதியாகப் போய்விட்டது போலிருக்கிறது! இதுதான் பெரிய மனுஷ்யாளுடைய தர்பார் என்பது. காரியம் ஆகிற வரையில் கழுதையின் காலையும் பிடிக்க வேண்டும் என்கிறபடி இருக்கிறது நீங்கள் சொல்வது. அன்றைக்கு ராத்திரி நீங்கள் இரண்டு பேரும் பத்திரத்தில் ஆடம்பரமாகக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்த போது மறுநாள் வந்து அவளுக்கு வேறொரு ஜாகை அமர்த்திக்

கொடுத்து, அவளுக்கு வேண்டிய சௌகரியங்களை எல்லாம் செய்து கொடுப்பதாகச் சொல்லிவிட்டு வந்த நீங்கள், அதன்பிறகு அவள் இருக்கிறாளோ இறந்து போய்விட்டாளோ என்பதைக்கூட நினையாமல் பேசாதிருந்து விட்டீர்களே! இது தான் நாணயமோ? பிள்ளைக்கும் பெண்களுக்கும் சொல்லிக் கொடுக்கும் புஸ்தக நீதி எல்லாம், உங்களுடைய சொந்த விஷயத்தில் மாத்திரம் விலக்கு போலிருக்கிறது! ஆனால் நீங்கள் இப்படி கௌரதைக் குறைவாக நடந்து கொண்டாலும் நான் உங்களைக் காட்டிக் கொடுக்காமல், அவளுக்கு ஆகவேண்டிய காரியங்களை எல்லாம் செய்து விட்டேன். மைலாப்பூரில் உள்ள ஒரு பங்களாவை மாசம் ஒன்றுக்கு 250-ரூபாய் வாடகைக்குப் பேசி, அதில் அவளைக் கொண்டு போய் வைத்து, அவளுக்கு வேண்டிய ஆள்மாகாணங் களையும் ஏற்பாடு செய்துவிட்டேன். பங்களாவுக்கு அறுமாசத்து வாடகைப் பணம் முன்னால் கொடுப்பதாக ஒப்பந்தம் செய்திருக் கிறேன். அதற்காக 1500-ரூபாய் வேண்டும். அவளுடைய முதல் மாசச் சம்பளமாகிய ஐயாயிரம் ரூபாயை இப்போதே கொடுக்க வேண்டும்; தவிர, அவளுக்கு வேண்டிய ஒரு பீடனும் இரண்டு குதிரைகளும் வேண்டும். அவைகள் 1500-ரூபாய் ஆகும். இன்னமும் உள்ள சில்லரைச் செலவுகளுக்காகவும் என்னுடைய சொந்தச் செலவுகளுக்காகவும் 2000-ரூபாய் வேண்டும். இவைகள் எல்லாம் சேர்ந்து பதினாயிரம் ரூபாய் ஆகின்றன. இப்போது கணக்கு சரிதானா? இந்த அற்பத் தொகைக்கே இப்படி மூக்கால் அழுதால், பத்திரத்தின் தேதியிலிருந்து பத்து நாட்களுக்குள் 25-ஆயிரம் ரூபாய்க்கு நகைகள் வாங்கிக் கொடுக்க வேண்டுமே, அதற்கு என்ன சொல்லுவீர்களோ தெரியவில்லையே!" என்று புரளியாகப் பேசினான்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள், "ஆகா! அப்படியா! **தான் தேடாப் பொன்னுக்கு மாற்றுமில்லை உரையுமில்லை** என்பார்கள். அதைப் போல இருக்கிறது உன்னுடைய காரியம். ஒவ்வொரு குடியானவனும் வருஷம் முழுவதும் தன்னுடைய உடம்பை சாறாகப் பிழிந்து பாடுபட்டு நிலத்திலிருந்து எடுக்கும் வருமானத்தில் பெரும் பாகத்தை நம்மிடத்தில் கொட்டிக் கொடுத்து விட்டு,

அவனவன் அரைவயிறு கால் வயிற்றுக்கு கஞ்சியையோ, கூழையோ குடித்து விட்டு ராப்பகல் உழைப்பாலும் பட்டினியாலும் சாகிறான். அப்படிச் சேரும் பணங்களை எல்லாம் தண்ணீரைப் போல, நீ ஆயிரக்கணக்கில் வாரி இறைக்கப் பார்க்கிறாய். ஐயாயிரமாம்; இருபதினாயிரமாம்; கோடியாம்; எவ்வளவு தாராளமப்பா! இந்தத் தடவை போலீஸ் ஸ்டேஷனில் போயிருந்து அவமானப்பட்டதோடு நல்ல புத்தி வந்துவிடும் என்றல்லவா நாங்கள் நினைத்தோம். அந்தப் பைத்தியம் நன்றாகப் பிடித்துக் கொண்டு ஆட்டுகிறதே; நம்முடைய கண்மணியம்மாளின் காலில் ஒட்டிய தூசுக்கும் இணை வருவாளா அந்தக் கூத்தாடிச்சி; அவள் இது வரையில் உன்னைப் போல எத்தனை மனிதர்களை ஏமாற்றி வாயில் போட்டுக் கொண்டவளோ? அப்படிப்பட்ட தேவடியாளுடைய சிநேகத்தைச் சம்பாதித்துக் கொண்டதைப் பற்றி, கேவலம் வெட்கித் தலை குனிவதை விட்டு, ஒரு பெரிய மகாராஜாவின் மகளைக் கலியாணம் செய்து கொண்டவனைப் போல மகா அகம்பாவமும் பெருமையும் பாராட்டிக் கொள்வதுமல்லாமல், பெற்ற தாயாரிடத்தில் இதைப் பற்றிக் கொஞ்சமும் லஜ்ஜை இல்லாமல் பேசுவதைப் பார்க்க, என் மனம் பதறுகிறது" என்றாள்.

அதைக் கேட்ட மைனரது முகம் கோபத்தினால் கருத்தது. கை கால்கள் படபடவெனத் துடித்தன. அவன் மிகுந்த அகம்பாவத்தோடு, கல்யாணியம்மாளை முறைப்பாகப் பார்த்து, "இப்போது இவ்வளவு கண்ணிய புத்தியோடு பேசுகிறவர்கள் அந்தப் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டு, அதை ஒப்புக்கொண்ட காரணமென்ன? எட்டினால் குடுமியைப் பிடிக்கிறது எட்டா விட்டால் காலைப் பிடிக்கிறது என்கிற நியாயம் போலிருக்கிறது. ஓகோ! அவள் சுலபத்தில் விட்டுவிடுவாள் என்று எண்ணிக் கொண்டீர்கள் போலிருக்கிறது! நான் மாத்திரம் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டிருந்தாலாகிலும், நீங்கள் அவளுடைய வாயில் மண்ணைப் போட்டு விடலாம்; இப்போது நீங்கள் இரண்டு பேரும் கையெழுத்துச் செய்து நல்ல வசமாக மாட்டிக் கொண்டிருக்கிறீர்கள். அப்படி இருக்க, இப்போது யாரிடத்தில் ஆத்திரத்தைக் காட்டுகிறது?" என்றான்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள், "நீ செய்த தப்புக் காரியத்தினால் தான் எங்களுக்கு இப்படிப்பட்ட அவமானமும் துன்பங்களும் உண்டாயின. நீ கச்சேரியில் இழுபட்டு கொள்ளைக் காரன் என்றும் கொலைக்காரன் என்றும் குற்றம் சுமத்தப்பட்டு, தண்டனை அடைந்து அநியாயமாக அழிந்து போய்விடாமல் தப்ப வேண்டுமே என்ற கவலையினாலே தான் நாங்களும் அந்தப் பத்திரத்தில் கையெழுத்துப் போடும்படியான இழிவு எங்களுக்கு ஏற்பட்டது. நீ செய்த முட்டாள் காரியத்தினால், நீயும் பெருத்த விபத்தில் மாட்டிக் கொண்டதன்றி, அதன் பொருட்டு நாங்கள் எப்படிப்பட்ட இழிவுகளுக்கும் துன்பங்களுக்கும் ஆளாக நேர்ந்தது பார்த்தாயா? அன்றிரவு நீ அம்பட்டக் கருப்பாயியின் வீட்டிலிருந்து, தப்பித்து ஓடியபின் அந்தத் திருடன், உன்னை எப்படியும் கண்டுபிடித்துக் கொன்று விடுவதாகச் சபதம் கூறினானாம். அதன் பொருட்டு நான் ஆறாயிரம் ரூபாய் கொடுக்கும்படி நேர்ந்தது. அதன் பிறகு இரவோடிரவாக நாங்கள் ஆலந்தூருக்குப் போய், எங்களுடைய பெருமையை எல்லாம் இழந்து கேவலமான ஒரு தாசியிடத்தில் போய் கெஞ்சாததை எல்லாம் கெஞ்சி, அந்தப் பத்திரத்திலும் கையெழுத்துச் செய்து விட்டு வர நேர்ந்தது. வரும் வழியில் திருடர்களிடம் அகப்பட்டு, சுமார் லட்சம் ரூபாய் வரையில் பெறுமானமுள்ள சொத்துக்களை இழந்து, அடிபட்டு இடுப்புத் துணிகள்கூட இல்லாமல் அவமானப் பட்டு வர நேர்ந்தது. அது முதல் இன்னமும் நான் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. நேற்று ராத்திரி முழுதும், ஜுரத்தி னாலும் தலை நோவினாலும், நான் கண்களை மூடவே இல்லை. நிச்சயதாம்பூல முகூர்த்தம் வைத்து பெரிய மனிதர்களான எத்தனையோ ஜனங்களை அழைத்துவிட்டு, கடைசியில், அதையும் ஒத்திவைத்து அவமானப்பட நேர்ந்தது; இத்தனை சங்கடங்களுக்கும் என்னை ஆளாக்கிய நீ, 'உடம்பில் என்ன அசௌக்கியம்?' என்ற ஒரு மரியாதை வார்த்தை கேட்கத் தாயார் ஏதோ தேக அசௌக்கியமாக இருக்கிறாளே என்ற மன இரக்கம் கூடக் கொள்ளவில்லை பார்த்தாயா? அது தான் போனாலும், 'நான் தேவடியாள் வீட்டுக்குப் போக வேண்டும், பணம் கொடு' என்று இந்த நிலைமையில் வேறு எவனாகிலும் தன்னுடைய தாயாரிடத்

தில் வந்து கேட்பானா? அடாடா! பெற்றாலும் பெற்றேன், உலகத்தில் எவருக்கும் கிடைக்காத மணியான பிள்ளையைப் பெற்றேன். இம்; சரி; தம்பீ! போ; போ; இன்று மறுபடியும் நிச்சய தாம்பூல முகூர்த்தம் வைத்திருக்கிறது. நீ உண்டாக்கியிருக்கிற இத்தனை துன்பங்களினிடையில் அதை எப்படி நடத்துகிறது. கண்மணியம்மாளைக் கட்டிக்கொள்ள உனக்கு மனமில்லை என்றும், நீ ஒரு தாசியை வைத்துக் கொண்டிருப்பதாகவும், மீனாக்ஷியம்மாளுக்கு நான் கடிதம் எழுதி அனுப்பி விடுகிறேன். பாவம் அவர்கள் நம்மை நம்பி இருந்து அந்தக் குழந்தையை வேறு எங்கேயாவது கட்டிக் கொடுப்பதையும் கெடுத்துக் கொண்டால், அதனாலும் நம்க்குப் பல துன்பங்கள் வந்து சேரும். அப்படியே சொல்லி அனுப்பிவிடலாம் அல்லவா? உனக்கு ஆக்ஷேபனை ஒன்றுமில்லையே?" என்றான்.

மைனர் மறுபடியும் கல்யாணியம்மாளைப் பழிப்பவன் போலத் தனது வாயைக் கோண வைத்துக் கொண்டு, "ஓகோ! என்னால் தான் இத்தனை துன்பங்களும் வந்தனவோ! கண்மணியை இப்போதே கட்டிக்கொள்ள சம்மதம் என்று நான் அன்றைய தினம் சொன்ன போது இன்னம் ஒரு வருஷத்துக்குப் பிறகு தான் செய்ய வேண்டும் என்றும், அதுவரையில் நான் இந்த ஊரை விட்டுப் போக வேண்டும் என்றும் சொல்லி அடம்பிடித்தது யார்? அன்றைக்கே என்னுடைய பேச்சைக் கேட்டிருந்தால், எனக்கு இந்த பாலாம்பாளுடைய சிநேகம் ஏற்பட்டிருக்கா தல்லவா? முதலில் மறுத்துவிட்டு, நான் இல்லாத காலத்தில் இவ்வளவு சீக்கிரமாக உங்களை யார் நிச்சயதாம்பூல முகூர்த்தம் வைக்கச் சொன்னது? ஆகையால் இத்தனை துன்பங்களுக்கும், இந்த முகூர்த்தம் நின்றதற்கும் நீங்களே காரணமானவர்களன்றி நானல்ல. என்னுடைய தகவலின்றி நீங்கள் முகூர்த்தம் வைத்தீர்கள் அல்லவா; அதைப் போலவே என்னுடைய தகவலின்றியே நிச்சய தாம்பூல முகூர்த்தம், கலியாணம், சாந்தி முகூர்த்தம் முதலிய எல்லாக் காரியங்களையும் நடத்திக் கொள்ளுங்களேன்? உங்களை யார் தடுத்தது? நான் அந்தக் கண்மணியின் மேல் எவ்வளவோ பிரியம் வைத்திருந்தேன். அவளிடத்தில் சந்தோஷமாகப் பேச வேண்டும் என்று நான் எவ்வளவு காலமாகப் பிரயத்தனப்

பட்டேன். அவள் என்னைக் கண்டால், பூனையைக் கண்ட எலியைப் போல, வாயை மூடிக்கொண்டு ஓடி ஒளிந்து கொண்டாள். இருந்தாலும் அவளுடைய அற்புதமான அழகைக் கருதி, என்னுடைய பிரியம் மாத்திரம் மாறாதிருந்தது. இப்போது என்னுடைய மனம் மாறிவிட்டது. இந்த பாலாம்பாள் கண் மணியைவிட அழகிலோ ஆயிரம் மடங்கு மேலானவள்; அவளுடைய நல்ல குணமோ அபாரமானது. அவள் என்மேல் வைத்திருக்கும் பிரியமோ அளவிலடங்காததாக இருக்கிறது. அப்படிப்பட்ட உத்தமமான ஸ்திரீயை வஞ்சிக்க எனக்கு மனமில்லை. அவளே எனக்குப் போதுமானவள். கண்மணியின் விஷயத்தில் நீங்கள் எப்படியாவது செய்து கொள்ளலாம். எனக்கு நேரமாகிறது. நான் போக வேண்டும். பணம் பெயருமா பெயராதா? அதையும் சொல்லி விட்டால் நான் போகிறேன். பாலாம்பாளே வக்கீல் மூலமாக நோட்டீஸ் விட்டால், பணம் தானாகவே அவளுடைய வீட்டைத் தேடி ஓடி வருகிறது" என்று கூறிய வண்ணம் போக எத்தனிப்பவனைப் போல முறுக்காக எழுந்தான்.

அதைக் கண்ட கல்யாணியம்மாள் தனது கோபத்தை அடக்கிக் கொண்டு, மிகவும் அன்பான குரலில் அவனை நோக்கி, "தம்பீ! ஆத்திரப்படாதே; போகலாம்; உட்கார்; உனக்கு நான் பணம் இல்லை என்று சொல்லுவேனோ? இந்த சமஸ்தானத்துக்கே, நாளைக்கு, நீ எஜமானாகப் போகிறவன். என்னிடத்திலுள்ள சொத்துக்கள் எல்லாம் உன்னைச் சேர்ந்தவை; உனக்குக் கொடுக் காமல், இவ்வளவு பொருளையும் நான் என்ன செய்யப் போகிறேன். நீ என்னவோ அவளுக்குப் பத்திரம் எழுதிக் கொடுத்து விட்டாய்; உனக்கு ஏற்பட்ட அவமானத்திலிருந்து உன்னை விடுவிக்க வேண்டும் என்னும் கருத்தோடு நாங்களும் அதில் கையெழுத்துப் போட்டு விட்டோம். இப்போது அவளும் உன் வசத்தில் வந்துவிட்டாள்; அவளுக்குக் கொடுப்பதாகச் சொன்ன தொகைகளையும் நாம் இப்போது கொடுத்துவிடலாம்; அதைப் பற்றியும் நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் நான் இப்போது உன்னிடத்தில் முக்கியமான ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்காகவே உன்னை வரவழைத்தேன். நீ அவளுக்குப் பத்திரம் எழுதிக் கொடுத்தாயே? அதை அவளுடைய சம்மதியின்

மேல் அங்கேயே எழுதிக் கொடுத்தாயா? அல்லது அவளுடைய சம்மதி இல்லாமல் நீயே அதை எழுதிக் கொடுத்தாயா?" என்றாள்.

***மைனர்:-*** ஏன்? அவளுடைய சம்மதியின் மேலே தான் நான் அவளுக்கெதிரில் எழுதிக் கொடுத்தேன்.

***கல்யாணி:-*** அப்படியா! அதை நீயே எங்கிருந்தோ எழுதிக் கொணர்ந்து கொடுத்ததாகவும், அவள் அதை ஒப்புக் கொள்ள வில்லை என்றும் சொன்னாளே!

***மைனர்:-*** அவள் யௌவனப் பெண்ணல்லவா; வெட்கத்தினால் அப்படிச் சொல்லியிருக்கலாம். அதனால் குடி முழுகிப் போய் விட்டதோ.

***கல்யாணி:-*** அப்படியானால், அங்கே வந்த திருடர்கள், தாமாகவே வந்தார்களா? அல்லது உன்னுடைய தூண்டுதலின் மேல் வந்தார்களா?

***மைனர்:-*** நன்றாக இருக்கிறதே சங்கதி! நான் அவளோடு சந்தோஷமாக இருந்த போது, திருடர்கள் தாமாக வந்தார்கள். நான் மெத்தையின் கீழே அகப்பட்டுக் கொண்டேன். அதன் பிறகு வந்த போலீஸ்காரர்கள் நான் தான் திருடனென்று தவறுதலாக என்னைப் பிடித்துக் கொண்டார்கள், அந்தச் சமயத்தில் பாலாம்பாள் மூர்ச்சித்துக் கிடந்தாள் ஆகையால், அவள் என்னை அப்போதே விடுவிக்கக்கூடாமல் போய்விட்டது. மறுநாள் அவளே தானாக வந்து என்னை விடுவித்திருப்பாள். அதற்குள் நீங்கள் போய் பத்திரத்தில் கையெழுத்துச் செய்ததும் அல்லாமல், அநாவசியமான பல துன்பங்களை எல்லாம் நீங்களே உண்டாக்கிக் கொண்டீர்களே.

***கல்யாணி:-*** அப்படியா சங்கதி! அவள் என்ன சொன்னாள் தெரியுமா? நீ பத்திரம் எழுதிக் கொடுத்ததற்கும் அவள் இணங்க வில்லையாம். அதன்மேல், நீ கோபங்கொண்டு வெளியில் போய், திருடர்களை அழைத்து வந்து, எல்லாரையும் அடித்துப் போட்டு விட்டு, அவளைப் பலவந்தமாகக் கட்டித் தூக்கிக்கொண்டு போக முயன்றதாக அல்லவா அவள் சொன்னாள்!

***மைனர்:-*** உங்களுடைய கையெழுத்தையும் பத்திரத்தில் வாங்க வேண்டும் என்ற எண்ணத்தோடு, அவள் அப்படி மாற்றிச் சொல்லி இருக்கலாம்.

***கல்யாணி:-*** தம்பீ! அவள் மகா ஜெகஜாலப் புரட்டுக்காரியாக இருக்கிறாள். அவளுடைய வாயிலிருந்து வரும் ஒவ்வொரு வார்த்தையும் மோசக்கருத்தானதாகவே இருக்கிறது. நீயோ கள்ளம் கபடம் ஒன்றும் தெரியாத குழந்தைப் பையன். நீ போய் அப்படிப்பட்ட மலையாள பகவதியுடைய வலையில் மாட்டிக் கொண்டிருக்கிறாய். அவள் உன்னிடத்தில் இருப்பதை எல்லாம் பிடுங்கிக் கொண்டு இன்னம் எவனாவது அவளுடைய மனசுக்குப் பிடித்த பெரிய மனிதன், அவளுடைய சிநேகத்தில் பிரியப்பட்டால், அவள் ஏதாவது பெருத்த கேசுகளில் உன்னை மாட்டி வைத்து விடுவாள். ஆகையால் நீ அவளிடத்தில் சிநேகமாய் இருப்பது என் மனசுக்குக் கொஞ்சமும் சம்மதமாக இல்லை. இப்போது தான் நீ அவளோடு இரண்டொரு நாள் இருந்து பழகிவிட்டாயே; ஒரு நாள் பழகினாலும் அது தான்; ஆயிரங்காலம் பழகினாலும் அது தான். அதுவும் தவிர, அவளுக்குப் பழைய சிநேகிதர் ஒருவர் இருக்கிறாராம். அவரையும் அவள் சுலபத்தில் விட்டு விடுவாள் என்று நான் நினைக்கவில்லை. ஆகையால் அவளால் உனக்குப் பெருத்த தீங்கு சம்பவிக்கும் முன் நீ விலகிக் கொள்வதே நல்லது.

***மைனர்:-*** சரி! சரி! அழகாக இருக்கிறது பிரசங்கம்! அவளுடைய பெருந்தன்மையும் கண்ணிய புத்தியும் யாருக்கு வரும்! அவளுடைய உண்மையான யோக்கியதையை அறிந்து கொள்ளாமல் வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று பேசினால், அதனால் என்ன உபயோகம்? அவள் என்மேல் வைத்திருக்கிற பிரியத்துக்கு இந்த உலகத்திலேயே இணை இருக்காதே. நான் கிணற்றில் விழு என்றால், அவள் உடனே விழுந்து உயிரை விடுவாளே; அப்படிப்பட்ட உயிருக்குயிரான பெண்ணை நான் இனி விட்டுவிடுவேனோ? இந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் யார் எதைச் சொன்னாலும் நான் கேட்கத் தயாராக இல்லை. எனக்காக அவள் எப்பேர்ப்பட்ட காரியம் செய்தாள் தெரியுமா? அந்தப் போலீஸ்காரர்கள் எல்லோரும்

அப்படியே திக்பிரமை கொண்டு திகைத்துப் போய்விட்டார்களே! போலீஸ்காரரிடத்திலிருந்து அவள் என்னை விடுவித்த அந்த ஒரு தந்திரத்துக்குச் சன்மானமாக நான் அவளுக்கு இந்த உலகத்தையே கொடுத்தாலும், இணையாகாதே.

*கல்யாணி:-* சரி; சொக்குப்பொடி நன்றாக ஏற்றிவிட்டது. இனிமேல் ஓடி ஆடி உபத்திரவப்பட்டு தானாகத்தான் வழிக்கு வர வேண்டும். அதிருக்கட்டும், உன்னைப் போலீஸ் ஸ்டேஷனில் இருந்து விடுவித்தபோது அவள் ஏதோ தந்திரம் செய்தாள் என்கிறாயே. அது என்ன தந்திரம்.

*மைனர்:-* ஆகா! எப்படிப்பட்ட தந்திரம் தெரியுமா! அதை நினைத்தால், எனக்கு இன்னமும் சிரிப்பு வருகிறது. அவள் இது வரையில் ஒரு நாடகத்தில் இருந்து வந்தால் அல்லவா, அதன் சொந்தக்காரனான ஒரு கிழவன், அவள்மேல் மோகங்கொண்டு, அவளை வைப்பாட்டியாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டு, தினம் தினம் ஆயிரக்கணக்கில் வந்து குவியும் அவனுடைய பணத்தை எல்லாம் அவளிடத்தில் கொண்டு வந்து கொட்டி, அவளை தேவேந்திர போகத்தில் ஆழ்த்திக் கொண்டிருந் தான். ஆனால் அவளுக்கு அவன் மேல் கொஞ்சமும் பிரியமே இல்லை. அவள் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், அவனிடம் எல்லாவற்றையும் நன்றாகக் கறந்து கொண்டே வந்தாள். அவளுடைய பங்களாவில் கொள்ளை நடந்ததனால், அங்கே இருந்த ஆடையாபரணங்கள் பணம் முதலிய சகலமான சொத்தும் போய்விடவே, அந்தக் கிழவன் மறுநாளே, திரும்பவும் எல்லாப் பொருளையும் கொண்டு வந்து நிரப்பி, கொள்ளைப் போன சொத்துக்களைப் பற்றி அவள் கொஞ்சமும் விசனப்படாத படி, அவன் அவளை சந்தோஷப்படுத்தினான். அவளுடைய பாதுகாப்புக்கு வேண்டிய ஆள்மாகாணங்களை எல்லாம் ஏற்படுத்திக் கொடுத்தானாம். அன்று சாயுங்காலம் அவளைத் தனியாக விட்டுவிட்டு, நாடகத்துக்காகப் போய்விட்டானாம். அன்று இரவு தான் நீங்கள் அவளுடைய பங்களாவுக்குப் போனீர்களாம். நீங்கள் அவளிடத்திலிருந்து வந்த பிறகு, ராத்திரி 2-மணிக்கு அவன் ஒரு மோட்டார் வண்டியில் பங்களாவுக்கு

வந்து சேர்ந்து, பொழுது விடிகிற வரையில், அவளுக்கு வேண்டிய சைத்தியோபசாரங்களை எல்லாம் செய்து கொண்டிருந்தானாம். நீங்கள் வந்த விவரம் முதலிய எதையும் அவள் அவனிடத்தில் சொல்லவில்லையாம்; வேலைக்காரர்களிடத்திலும், அந்த விஷயத்தைப் பற்றி எச்சரித்து வைத்திருந்தாளாம். அவள் அவனிடத்தில் பரமப்பிரீதியாக இருப்பவளைப் போல நடித்தாளாம். பொழுது விடிந்தவுடன் ஒரு போலீஸ்காரன் வந்து சப் இன்ஸ்பெக்டர் அழைப்பதாகச் சொன்னானாம். உடனே கிழவன் அவனைத் தனது மோட்டார் வண்டியில் உட்கார வைத்துக் கொண்டு மகா பெருமையாகவும் அமர்த்தலாகவும் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தான். நான் அதுவரையில் என்னுடைய பெயரையும் வெளியிடவில்லை; சாப்பிடவு மில்லை. பாலாம்பாள் வந்து எப்படியும் என்னை விடுவிப்பாள் என்று நான் உறுதியாக நினைத்திருந்தேன். அந்தக் கொள்ளைக் கேசில், பாலாம்பாள் வாக்குமூலம் கொடுக்கப் போகிறாள் என்பதை உணர்ந்து, ஆலந்தூரில் உள்ள ஜனங்கள் யாவரும் ஆயிரக்கணக்கில் ஸ்டேஷனுக் கெதிரில் வந்து நெருங்கி நின்றனர். அந்தச் சமயத்தில் சிறைச்சாலைக்குள்ளே இருந்த என்னை சில போலீஸ்காரர் வெளியில் அழைத்து வந்து சப் இன்ஸ்பெக்டருக் கெதிரில் நிறுத்தினார்கள். அப்போது சப் இன்ஸ்பெக்டர் அவருக் கெதிரில் நின்ற பாலாம்பாளைப் பார்த்து, "உன்னுடைய பங்களாவில் கொள்ளை நடந்தபோது அங்கே வந்திருந்த திருடர்களில், இவனும் ஒருவன் தானா?" என்றார். அதைக் கேட்ட பாலாம்பாள் அப்போது தான் என் பக்கம் திரும்பி நான் நின்றதைக் கண்டாள். கண்டவுடனே அவள் திகைத்து திக்பிரமை கொண்டு இரண்டொரு நிமிஷ நேரம் வாய் திறந்து பேசமாட்டாமல் தவித்து பிறகு சப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "ஐயா! என்ன இது! இவரையா இந்த இரண்டு நாளாக நீங்கள் சிறையில் வைத்திருக்கி றீர்கள்! உண்மையான திருடன் எவனையோ நீங்கள் பிடித்து அடைத்து வைத்திருக்கிறீர்கள் என்றல்லவா நான் இது வரையில் நினைத்திருந்தேன். எப்படிப்பட்ட அக்கிரமமான காரியம் செய்து விட்டீர்கள்! இவர் ஒரு பெருத்த சமஸ்தானத்தின் அதிபதி யல்லவா? இவருடைய முகத்தைப் பார்த்து இவர் திருடர் என்று

எந்தக் குருடனாவது சொல்லுவானா; விட்டுவிடுங்கள் இவரை; அடாடா! என்ன கர்மம் இது. இதுதானா போலீசாருடைய நீதி?" என்று கணீர் கணீர் என்று மணியடிப்பதைப் போல மிகவும் கம்பீரமாகவும் அழுத்தமாகவும் பேசவே, சப் இன்ஸ்பெக்டர் முதலிய போலீசார் கலகலத்துப் போயினர். ஜனங்கள் யாவரும் திகைப்பும் வியப்பும் பதைபதைப்பும் அடைந்து போலீசாருடைய அக்கிரமத்தைப்பற்றி முணுமுணுக்கத் தொடங்கினர். அப்போது பாலாம்பாளுக்குப் பக்கத்தில் நின்றிருந்த நாடகக்கார கிழவனும் வியப்படைந்து, பாலாம்பாளுடைய முகத்தையும் என்னுடைய முகத்தையும் மாறி மாறிப் பார்த்தவனாய் விழித்துக் கொண்டு நின்றான். அப்போது சப் இன்ஸ்பெக்டர் மறுபடியும் பாலாம் பாளைப் பார்த்து, "அன்றிரவில், உனக்கெதிரில் தானே நாங்கள் இவரைக் கைதி செய்தோம். நீ ஏன் அப்போதே இந்த விவரத்தைச் சொல்லவில்லை?" என்று அதிகாரமாகக் கேட்க, பாலாம்பாள் முற்றிலும் குழம்பினவளாக நடித்து, "ஐயோ! எனக்கெதிரிலா இவரைப் பிடித்தீர்கள்? அதை நான் பார்க்கவே இல்லையே. நீங்கள் என்னுடைய கட்டுகளை அவிழ்த்து விட்டபோது என்னுடைய ஸ்மரணை தப்பிப் படுத்தவள் இன்று காலையில் தானே நான் என்னுடைய சுயநினைவை அடைந்தேன். ஆகா! இவரை நீங்கள் பிடித்துக் கொண்டு போகிறீர்கள் என்பது அப்போதே எனக்குத் தெரிந்திருந்தால் நான் சும்மா இருந்திருப்பேனா! இந்தச் சிறைச்சாலைக்கு வரும்படியான இழிவும் துன்பமும் இவருக்குத்தான் ஏற்பட்டிருக்குமா!" என்றாள்.

அதைக் கேட்ட சப் இன்ஸ்பெக்டர் முன்னிலும் அதிகரித்த கலக்கமும் குழப்பமும் அடைந்து, "அப்படியானால், இவர் அன்றைய ராத்திரி உன்னுடைய படுக்கையறையில் இருக்கக் காரணம் என்ன?" என்றார்.

அதைக் கேட்ட பாலாம்பாள் சப் இன்ஸ்பெக்டரைப் பார்த்துப் புரளி செய்பவள் போலக் கலகலவென்று சிரித்து, "நல்ல அழகான கேள்வி இது? பி.ஏ., எம்.ஏ., படித்த இன்ஸ்பெக்டர் ஒரு பெண் பிள்ளையைப் பார்த்துக் கேட்கக்கூடிய கேள்வியா இது! இவரைத்

திருடர் என்று கைதியாக்கின புத்திசாலித்தனத்தைப் போலத் தான், கேள்வி கேட்டும் புத்திசாலித்தனமும் இருக்கிறது. ஒரு பெண் பிள்ளையும், ஒரு யௌவனப் புருஷரும் நடுஇரவில் தங்களுடைய படுக்கை அறையில் இருக்கலாமா? அது தவறான காரியந்தான்; இனிமேல், புருஷனும் பெண்ஜாதியும் படுக்கை அறைக்குப் போவதற்கு முன் ஒவ்வொரு நாளும் போலீசாரிடத்தில் லைசென்ஸ் வாங்கிக் கொண்டு போக வேண்டும் என்று உத்தரவு செய்து விடுங்கள். லைசென்ஸ் இல்லாமல் படுக்கையறையில் காணப்படும் புருஷரை எல்லாம் திருடர்கள் என்று பிடித்துக் கொள்ளலாம்" என்றாள். அதைக் கேட்ட ஜனங்கள் யாவரும் கோவெனக் கூக்குரலிட்டுக் கைக்கொட்டிச் சிரித்துப் போலீசாரைப் புரளி செய்யத் தொடங்கினர். அப்போது சப் இன்ஸ்பெக்டருக்கு ரௌத்திராகாரமான கோபம் பொங்கி எழுந்தது; மீசை துடித்தது; கண்கள் கோபத்தினால் சிவந்தன, என்றாலும், சப் இன்ஸ்பெக்டர் ஏராளமான ஜனக்கும்பலிருந்ததைக் கருதி தமது கோபத்தையும் அவமானத்தையும் அடக்கிக் கொண்டு அவளை நோக்கி, "அப்படியானால், இவர் உன்னுடைய புருஷரா?" என்றார்.

உடனே பாலாம்பாள் கோபமடைந்தவள் போலக் காட்டிக் கொண்டு, "இது என்ன மூடக் கேள்வி? நான் தான் இவர் திருடர்களைச் சேர்ந்தவரல்ல என்று ஒரே வார்த்தையில் சொல்லி விட்டேனே; அதன் பிறகு இவர் புருஷனா என்று கேட்கலாமா? இவர் திருடரா இல்லையா என்பதை நீங்கள் கேட்டுத் தெரிந்து கொள்வது அவசியமான சங்கதி; அதைத் தெரிந்து கொண்டு விட்டீர்கள்; அதன் பிறகு இவர் புருஷரா அல்லது ஆசை நாயகரா என்பது போன்ற கேள்விகளைக் கேட்பது, எங்கள் இருவரையும் இத்தனை ஜனங்களுக்கெதிரில் அவமானப்படுத்துவதைத் தவிர வேறல்ல" என்றாள்.

அதைக் கேட்ட சப் இன்ஸ்பெக்டர் மிகவும் குழம்பிப் போய் நாடகக்காரக் கிழவனுடைய முகத்தைப் பார்க்க, அவன் பிணம் போல அநேகமாகச் செத்துப்போய் நின்று கொண்டிருந்தான். அதன் பிறகு கொஞ்ச நேரம் ஏதோ யோசனை செய்த சப் இன்ஸ்பெக்டர் அவளை மிகவும் கம்பீரமாகப் பார்த்து,

"பாலாம்பாள்! நாங்கள் கேள்வி கேட்டால், அது சாட்சிகளுக்கு சங்கடத்தை உண்டாக்கக்கூடிய கேள்வியாக இருந்தாலும், அவள் அதற்கு சரியான மறுமொழி சொல்லியே தீரவேண்டும். நீயோ தாறுமாறாகப் பதில் பேசுகிறாய். ஏதோ அறியாத பெண்பிள்ளை ஆயிற்றே என்ற தயவினால் நான் இதுவரையில் என்னுடைய கோபத்தை அடக்கிக் கொண்டிருந்தேன். இந்த மனிதருக்கும் உனக்கும் என்ன உறவு என்பதையும், இவர் யார் என்பதையும், நீ எங்களிடம் வெளியிட்டாலல்லது நாங்கள் உன்னுடைய வார்த்தையைக் கொண்டே இவரை விட முடியாது. உன்னை யாரோ கலைத்து இப்படி மாற்றிச் சொல்லும்படி தூண்டி இருக்கிறார்கள் என்பது தெரிகிறது" என்று கண்டிப்பாகப் பேசினார். அதைக் கேட்ட பாலாம்பாள் மிகவும் துடியாக அவருக்கு மறுமொழி சொல்ல ஆரம்பித்து "சரி; இவர் யார் என்பதையும், இவர் திருடரல்லர் என்பதையும் திருப்திகரமாக உங்களுக்கு மெய்ப்பிக்கிறேன். ஆனால், அந்த விவரத்தை நான் இத்தனை ஜனங்களுக்கு முன்னால் சொல்ல மாட்டேன். இதோ இந்த தஸ்தாவேஜைப் பாருங்கள்" என்று சொல்லிய வண்ணம் சப் இன்ஸ்பெக்டர் உட்கார்ந்திருந்த மேஜைக்கருகில் போய் நின்று கொண்டு தன்னுடைய மடியில் சொருகிக் கொண்டிருந்த நம்முடைய பத்திரத்தை எடுத்து அவருக்கு மாத்திரம் காட்ட, அவர் அதைப் படித்துப் பார்த்து, அதிலிருந்து சில விவரங்களைத் தம்முடைய புஸ்தகத்தில் எழுதிக் கொண்டதன்றி, என்னைக் கூப்பிட்டு, ஒரு காகிதத்தில் என்னுடைய கையெழுத்தைப் போடச் செய்து, அதையும், பத்திரத்தின் எழுத்துகளையும் ஒத்திட்டுப் பார்த்து, "சரி; நீ சொன்னதை எல்லாம் ஒப்புக் கொண்டேன். இவர் திருடர் என்று தவறுதலாகப் பிடிபட்டார் என்பது நிஜமே. அதைப் பற்றி எங்களுக்கு நிரம்பவும் விசனமாக இருக்கிறது. இவர் இனி சுயேச்சையாகப் போகலாம். ஆனால் அதற்கு முன் உன்னிடத்தில் இன்னொரு கேள்வி கேட்க வேண்டும். அதற்கு மாத்திரம் நீ பதில் சொல்லிவிட்டு உன்னுடைய புருஷனோடு நீ ஜாகைக்குப் போகலாம். உனக்கு இந்தப் பக்கத்தில் பகையானவர்கள் யாராவது இருக்கிறார்களா? இந்தத் திருட்டு நடந்த விஷயத்தில் உனக்கு யார் பேரிலாவது சந்தேகம் உண்டா? அப்படி இருந்தால், சொல்லிவிடு,

அதைக் கொண்டு நாங்கள் உண்மையான திருடர்களைப் பிடிக்க, ஒரு சூசனை ஏற்படும்" என்றார்.

அதைக் கேட்ட பாலாம்பாள், "இந்த ஊரில் எனக்குப் பகையான வர்கள் வேறு ஒருவருமில்லை. ஆனால் இப்போது காரியம் நடந்திருப்பதைப் பார்த்தால், என்ன மனிதரால்தான் இந்தக் கொள்ளை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கலாம் என்ற ஒரு சந்தேகம் உதிக்கிறது. இதோ நிற்கிறாரே கிழவர். இவராலேயே இந்தக் கொள்ளை நடந்திருக்கலாம் என்று நான் நினைக்கின்றேன்" என்றாள்.

அதைக் கேட்ட கிழவனுடைய உடம்பு பயத்தினால் கிடுகிடென்று ஆடியது; அவனுடைய முகத்தில் பிரேதங்களை வந்து மூடிக்கொண்டது. அவன் ஒன்றும் சொல்லமாட்டாமல், திருடனைப் போல முழிக்கிறான். ஜனங்கள் எல்லோரும் திகைப் படைந்து அவனையே உற்றுப் பார்க்கிறார்கள்; அப்போது சப் இன்ஸ்பெக்டர் பாலாம்பாளைப் பார்த்து "இதுவரையில் உனக்கு அன்னியோன்னிய சிநேகிதராக இருந்த இவர் மேல் நீ சந்தேகப்பட வேண்டிய காரணம் என்ன?" என்றார். உடனே பாலாம்பாள், "நான் இவருடைய நாடகத்தில் முக்கிய ஸ்திரீ வேஷம் போட்டுக் கொள்ளுகிறவள். இந்தக் கிழட்டு மனிதருக்கு நெடுநாளாக என் மேல் துராசை இருந்து வந்தது. அதை இவர் பல தடவைகளில் வெளியிட்டும் அதற்கு நான் இணங்கவில்லை; கடைசியாக நான் இந்தப் புருஷரைத் தேடிக்கொண்டேன். அதை உணர்ந்த இந்தக் கிழட்டு மனிதர், இந்தக் கொள்ளை நடந்த தினத்துக்கு முதல் நாள் என்னைத் தனியாக அழைத்து, "நான் எவ்வளவோ கெஞ்சியும், நீ கடைசியாக இன்னொருவனைப் பிடித்துக் கொண்டு விட்டாயே! நான் உன்மேல் வைத்திருக்கிற பிரியம் இன்னமும் மாறவே இல்லை; எனக்கு 50-லட்சத்துக்கு ஆஸ்தி இருக்கிறது. அதை எல்லாம் உனக்கே கொடுத்து விடுகிறேன். எப்படியாவது நீ தீர்க்காலோசனை செய்து, புதிய மனிதனைத் தள்ளிவிடு; இல்லா விட்டால் நான் எப்படியும் உன்னை விடமாட்டேன். நீயும் அவனும் ஒன்றாகக் கூடி இருக்கும்படி நான் விடமாட்டேன். அந்த மனிதனுக்கு நீ இடங்கொடுத்தால், அவனை நீ இனி காணாதபடி

அடித்து விடுவேன்" என்று பயமுறுத்தினார். நான் அதை எல்லாம் பொறுத்துக் கொண்டு பெரிய மனிதனாயிற்றே என்று மரியாதை பார்த்தேன்; அன்றிரவு நானும் இவரும் தனியாகப் படுக்கை அறையில் இருந்தோம் என்பதை அறிந்தே, இந்த மனிதர் ஏதோ ஏற்பாடு செய்திருக்கிறார் என்று நினைக்க வேண்டியிருக்கிறது; ஆனால் இந்த மனிதர்தான் நிச்சயமாகச் செய்தார் என்று நான் மெய்ப்பிக்க முடியாது; அப்படி இருக்கலாமோ என்ற சந்தேகம் மாத்திரம் உண்டாகிறது" என்றாள்.

அவள் சொல்லி வாய்மூடும் முன் அந்தக் கிழவன் மூர்ச்சித்து, வேரற்ற மரம் போலப் படேரென்று கீழே விழுந்து விட்டான். போலீசாரில் சிலர் குபீரென்று பாய்ந்து அவனை எடுத்துக் கொண்டு ஸ்டேஷனுக்குள் போயினர். அதன் பிறகு சப் இன்ஸ்பெக்டர் எங்களைப் பார்த்துப் போக அனுமதி கொடுக்க, நானும் பாலாம்பாளும் நாடகக்காரக் கிழவனுடைய மோட்டார் வண்டியிலே ஏறிக்கொண்டு அவளுடைய பங்களாவுக்குப் போய் அவளுடைய சயன மாளிகையை அடைந்தவுடனே, அவள் நிரம்பவும் ஆசையாகவும் சந்தோஷமாகவும் ஓடிவந்து என்னைக் கட்டிக்கொண்டு, "எப்படி இருக்கிறது நான் செய்த தந்திரம்?" என்றாள். அடடா! அப்போது எனக்குண்டான ஆனந்தத்தை நான் என்னவென்று சொல்லுவேன்! அதற்கு மேல் அங்கே நடந்த சங்கதிகளை எல்லாம் உங்களிடத்தில் சொன்னால், நீங்கள் பொறாமைப்படுவீர்கள். ஆகையால் அவைகளை வெளியிட எனக்கு இஷ்டமில்லை. என்னைத் தப்பவைக்கிறதற்காக இப்படிப் பட்ட அபாரமான தந்திரம் செய்து, இதுவரையில் கண்ணுக்குக் கண்ணாக இருந்த அந்த மனிதனை ஒரு நொடியில் விலக்கிவிட்ட வளான அந்தப் பெண் என்னிடத்தில் உண்மையான பிரியம் வைக்கமாட்டாள் என்று யாராகிலும் சொல்ல முடியுமா? அப்படிச் சொன்னாலும் அதை நான் கேட்கப் போகிறதில்லை – என்றான்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் திகைப்பும் வியப்பும் அடைந்தவளாய் என்ன மறுமொழி கூறுவதென்பதை அறியாத வளாய் சிறிது நேரம் மௌனமாக இருந்து பிறகு மைனரை நோக்கி, "தம்பீ! பார்த்துக் கொண்டாய் அல்லவா அவளுடைய யோக்கி யதையை? அவள் தனக்குப் பிரியம் இருக்கும் வரையில் ஒருவரை

உயிருக்குயிராக மதித்து அவரிடம் குலுக்கு பிலுக்கெல்லாம் செய்வதும், அவர் தனக்கு வேண்டாவிட்டால், எப்படிப்பட்ட பெருத்த விபத்திலும் அவரை மாட்டிவிட்டுத் தப்பித்துக் கொள்ளும் குணமும் அவளிடத்தில் பூர்த்தியாக நிறைந்திருக் கின்றன என்பது இப்போதாவது தெரிகிறதா? இது தான் தேவடியாளுடைய குணம்; வெளிப்பகட்டும், மோசக் கருத்துமே அவர்களுடைய ஜீவாதாரமான வர்த்தகச் சரக்கு; குடும்ப ஸ்திரீகள், தங்களுடைய புருஷரிடத்தில் கரைகடந்த வாத்சல்யத்தை வைத்து, அதை தங்களுடைய மனசுக்குள் அடக்கி வெளியில் காட்டாமல் மறைத்துக் கொண்டிருப்பார்கள்; அவர்கள் இப்படிப்பட்ட ஜெக ஜாலமும் செய்யமாட்டார்கள்; இப்படிப்பட்ட படுமோசத்திலும் இறங்கமாட்டார்கள். அவர்களுடைய பிரியம் எப்போதும் மாறாமல் இருந்து, நிமிஷத்துக்கு நிமிஷம் பெருகி மலையாக வளர்ந்து கொண்டே போகும்; உங்களைப் போல இருக்கும் அறியாத சிறு பிள்ளைகளுக் கெல்லாம், உலக அனுபோகம் இல்லை ஆகையால், உண்மை எது, வேஷம் எது என்பது தெரிகிறதில்லை. அவள் இப்போது உன்னிடத்தில் யதார்த்தமான பிரியம் வைத்திருப்பது உண்மையாக இருக்கலாம். எவளோ வழியில் போகிற ஒரு தேவடியாளுடைய பிரியம் இருப்பதால், நீடித்த சுகமும் இன்பமும் இன்பமும் ஏற்படப் போகிறதில்லை. நம்முடைய கண்மணியம்மாளுக்கு உன்னிடத்தில் பிரியம் இல்லை என்று நினைக்காதே. குடும்ப ஸ்திரீகள், கலியாணம் ஆகிறவரையில் அதை வெளியில் காட்டமாட்டார்கள். கலியாணம் ஆகிவிட்டால், அதன் பிறகு தெரியும் அவள் உன்மேல் எவ்வளவு அபாரமான பிரேமை வைத்திருக்கிறாள் என்பது. இந்த விஷயத்தில் நீ பிரியம் ஒன்றையே முக்கியமான காரியமாக எண்ணுகிறாய் போலிருக்கிறது. நீயோ பெருத்த சமஸ்தானத்துக்கு அதிபதியாகப் போகிறவன். உனக்குப் பிறகோ, நீ தாலி கட்டின பெண்சாதி வயிற்றின் பிள்ளைக்குத்தான் இந்த சமஸ்தானம் சொந்தமாகும். நாம் எப்படித்தான் பத்திரம் எழுதிக் கொடுத்திருந் தாலும் பாலாம்பாளின் வயிற்றுக் குழந்தைக்கு இந்த சமஸ்தானம் சேராது. அதை நான் வக்கீல்களிடத்தில் கேட்டு சந்தேகமறத் தெரிந்து கொண்டு விட்டேன். ஆகையால் நீ, அவளுடைய சிநேகத்தை இவ்வளவோடு நிறுத்திக்கொள்ள வழி தேட வேண்டும். நான்

வெகு சீக்கிரத்தில், உன்னுடைய பிரியப்படி, நம்முடைய கண்மணியம்மாளை உனக்குக் கட்டிவிடுகிறேன். நீங்கள் சந்தோஷமாக இருங்கள்" என்றாள்.

அதைக் கேட்ட மைனர், புரளியாக நகைத்து, "ஓகோ! பாலாம்பாள் நம்மை எல்லாம் சும்மா விட்டுவிடுவாள் என்று நினைக்க வேண்டாம்; ஒரு கோடி ரூபாய் நஷ்டஈடு வாங்குதுமல்லாமல், கிரிமினல் தரப்பிலும் நம்மை இழுத்து ஜெயிலில் அடைத்துவிட மாட்டாளா!" என்றான். கல்யாணியம்மாள், "நாம் எல்லோரும் அப்படிப்பட்ட அபாயத்தில் மாட்டிக் கொள்ளும்படியான காரியத்தை நான் செய்யச் சொல்லுவேனா? நீ ஒரு காரியம் செய்; இப்போது உனக்குத் தேவையான அளவு பணத்தை எடுத்துக் கொண்டு போய், அவளிடத்தில் சந்தோஷமாகவும் சந்தேகத்துக்கு இடங்கொடுக்காமலும் நடந்துகொள். அந்தப்படியாக இருந்து, அந்தப் பத்திரத்தை அவள் எங்கே வைத்திருக்கிறாள் என்பதைக் கண்டு பிடித்து, அதை மெதுவாக எடுத்துக்கொண்டு வந்துவிடு. அல்லது, அங்கேயே நெருப்பில் போட்டு அழித்துவிடு. அது போதும். அவள், நம்மை எல்லாம் வஞ்சித்துத் தானே அதை எழுதி வாங்கினாள். அவளை நாமும் வஞ்சித்து, அதை விலக்கிக் கொள்ளுவது பாவமாகாது; நியாயமான வழியில் நடக்கிறவர்களை நாமும் நியாயமாக நடத்த வேண்டும். மோசத்தை மோசத்தினால் தான் ஜெயிக்க வேண்டும்" என்றாள்.

அதைக் கேட்ட மைனர் மிகுந்த பதைப்போடு எழுந்து நின்று, "நல்ல காரியம் செய்யச் சொல்லுகிறீர்கள்! நாம் அவளுடைய பங்களாவைத் தேடிப்போய், நாமாகப் பத்திரம் எழுதிக் கொடுத்து விட்டு வந்தோமே அல்லது, அவள் நம்மை வஞ்சித்து பலவந்தமாகப் பத்திரம் எழுதி வாங்கவில்லை. என் விஷயத்தில் அவள் நடந்து கொண்ட வரையில் அவள்மேல், நான் ஒரு கடுகளவும் குறை சொல்ல நியாயமில்லை. ஏதடா இவனும் போய் சந்தோஷப் பட்டுப் போகிறானே என்கிற பொறாமையினால், எங்களைச் சேர விடாமல் அடித்துவிட வேண்டும் என்கிற எண்ணம் போல் இருக்கிறது! வாலறுந்த நரியின் கதையைப் போல தனக்குப் புருஷன் பாலிய வயசிலேயே இல்லாமல் போய் விட்டால், தன்னைப் போலவே உலகத்திலுள்ள பெண் பிள்ளை எல்லோரும்

நாசமாகப் போக வேண்டும். அதற்காக, இல்லாத எழிலெல்லாம் எடுத்துப் பேசுகிறது. கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்துப் பிடிக்கிற மாதிரி யோசனை சொல்லுகிறது. நம்மைப் போல மற்றவருக்கும் சுவாமி கொடுத்த புத்தி இருக்கிறது என்பதை கொஞ்சமும் நினைக்காமல் உளறுகிறது. அவமானப் படுகிறது. நான் அந்த மதனகோபாலனைச் சேர்க்க வேண்டாம் சேர்க்க வேண்டாம் என்று எத்தனையோ தடவை சொல்லி எச்சரித்தேன். அவன், படுக்கையறை வரையில் வரும்படி விடுகிறது. அவன் வந்து, எஜமானியம்மாளையே பெண்டாள ஆரம்பிக்கிறது! அந்த சங்கதி ஊர் முழுதும் பரவி சிரிப்பாகச் சிரிக்கிறது! அதை ஒருவரும் கேட்பாரில்லை. வீட்டுக்குள் அடங்கி ஒடுங்கி, கௌரதையை இழக்காமல் இருக்க வேண்டிய பெண் பிள்ளைகள், தங்களுடைய மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள மறந்து போகிறது; வெளியில் போய் எல்லாக் காரியங்களையும் ஜெயிக்கும் திறமையுள்ள ஆண் சிங்கங்களுக்கு புத்தி சொல்லி அவர்களை அடக்கக் கிளம்பி விடுகிறது. யார் என்ன சொன்னாலும் நான் இந்த பாலாம்பாளை என்னுடைய உயிருள்ள வரையில் விடவேமாட்டேன். இப்போது நான் அங்கே போனவுடன், இங்கே நடந்த சம்பாஷணையை எல்லாம் அவளிடத்தில் சொல்லப் போகிறதன்றி, அவளுக்கு நான் எழுதிக் கொடுத்திருக்கும் பத்திரத்தையும் ரிஜிஸ்டர் ஆபீசில் பதிவு செய்து வைத்து விடுகிறேன். ஏனென்றால், நான் தான் சொன்னபடி செய்ய வில்லையே என்று, வேறு ஆளை விட்டு நீங்கள் அந்தப் பத்திரத்தை அபகரித்துக் கொண்டுவர ஏற்பாடு செய்தாலும் செய்வீர்கள். அதற்கு இடம் கொடுக்காமல் தடுத்து விடுகிறேன். எனக்கு நேரமாகிறது. போகலாம் அல்லவா? பணம் மரியாதையாக வராதோ?" என்றான்.

அவன் மதனகோபாலனைக் குறித்துப் பேசிய வார்த்தைகளும் தனது நடத்தையைக் கண்டித்துப் பேசிய வார்த்தைகளும் பழுக்கக் காய்ந்த சலாகைகள் போல கல்யாணியம்மாளது செவிகளில் நுழைந்து, அவளது மனத்தைத் துளைத்துப் புண்படுத்தின ஆதலால் அந்த அம்மாள் கோபத்தினாலும், வெட்கத்தினாலும், தத்தளித்ததன்றி, அவன் பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்து கொடுப்பா னாகில், அதனால் தங்களுக்கு விலக்க ஒண்ணாத பெருத்த

விபத்தும் அந்த விஷயத்தைப் பிறர் அறிவதான மானஹானியும் உண்டாகி விடுமே என்ற கவலையும் சஞ்சலமும் எழுந்து வதைக்கத் தொடங்கின. மைனர் மிகுந்த பிடிவாத குணமுள்ளவன் ஆதலால், அவனது விருப்பத்திற்கு மாறாகப் பேசி அவனது மூர்க்க குணத்தை அதிகபடுத்துவதைக் காட்டிலும், அவனிடத்தில் அன்பாகப் பேசி, அவனை நல்வழிப்படுத்த வேண்டும் என்று நினைத்த கல்யாணியம்மாள், தனது உணர்ச்சிகளை எல்லாம் அடக்கிக் கொண்டு, அன்பான குரலில் பேசத் தொடங்கி, "அப்பா! தம்பீ! நீ சந்தோஷப்படுவதைத் தடுக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறதாக நினைக்காதே. பதினாயிரமல்ல, இருபதினா யிரம் ரூபாய் வேண்டுமானாலும் நான் உனக்குக் கொடுக்கத் தடையில்லை; அவளோடு நீ சிநேகமாகவே இரு. ஆனால், நான் சொன்னதை எல்லாம் உன் மனசுக்குள்ளாகவே சிந்தனை செய்து பார்ப்பாயானால், எல்லாம் சரியான வார்த்தை என்பதை அறிந்து நீயே சரியானபடி நடந்து கொள்வாய். அந்தப் பத்திரத்தை நீ எடுத்துக் கொண்டு வரவேண்டாம். அதை அவளே வைத்துக் கொள்ளட்டும். ஆனால், நீ அதை சப் ரிஜிஸ்டரார் கச்சேரியில் பதிவு செய்வதாகச் சொன்னாயே, அதை மாத்திரம் செய்ய வேண்டாம். ஏனென்றால், ரகசியமாக இருக்க வேண்டிய இந்த விஷயம், பலர் அறிய பகிரங்கத்துக்கு வந்துவிடும். ஊரில் உள்ள வர்கள் எல்லாரும் நம்மை இழிவாக மதித்து ஏளனம் செய்வார்கள். துரைஸானியம்மாள், கோமளவல்லியம்மாள் இவர்களுக்கெல் லாம் கலியாணம் ஆக வேண்டும். இதனால், அதற்கு பெரிய இடைஞ்சல் ஏற்பட்டுவிடும். அவளுடைய பேச்சைக் கேட்டு, அந்தக் காரியத்தில் மாத்திரம் இறங்கிவிடாதே" என்று கூறிய வண்ணம் மெதுவாக எழுந்து கட்டிலை விட்டுக் கீழே இறங்கிப் போய், இரும்புப் பெட்டியைத் திறந்து, பதினாயிரம் ரூபாய்க்கு நோட்டுகளை எடுத்து மேஜையின் மீது வைத்துவிட்டு, மறுபடியும் வந்து கட்டிலின் மீதேறிப் படுத்துக்கொண்டாள்.

அதற்கு முன் கடுமையான அதிகாரம் செலுத்தி, தன்னை நடுங்கச் செய்துவந்த கொடுங்கோல் சக்கரவர்த்தினியான தனது தாய், தனக்கு அடங்கிப் போய் விட்டாள் என்ற நினைவினால் மிகுந்த இறுமாப்படைந்த மைனர், தான் இனி தனக்குத் தேவையான

போதெல்லாம் பணம் கறந்து விடலாம் என்ற எண்ணத்தோடு, மிகவும் ஒய்யாரமாக நடந்து போய் மேஜையின் மீதிருந்த நோட்டு களை எடுத்து, அலட்சியமாக மடித்துத் தனது சட்டைப் பைக்குள் சொருகிக் கொண்டு, "சரி; பத்திரம் எழுதிக்கொடுத்து இன்றைக்கு ஐந்து நாளாகிறது. இன்னம் ஐந்து நாளைக்குள், அவளுக்கு வேண்டிய நகைகளை எல்லாம் வாங்கிக் கொடுத்துவிட வேண்டும். நாளைக்காவது, மறுநாளாவது நான் திரும்பி வருவேன். இருபத்தையாயிரம் ரூபாய் தயாராக இருக்கட்டும்; தயாராக இல்லாவிட்டால், பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்து கொடுத்து விடுவேன்" என்று கூறிவிட்டு, வெளியில் போய்விட்டான்.

கல்யாணியம்மாளது மனதில், அதற்கு முன்னிருந்த சங்கடங் களுக்குத் துணையாக இன்னொரு புதிய துன்பம் வந்து சேர்ந்தது; மைனர் பாலாம்பாள் மீது கொண்டிருந்த மோகாவேசத்தில், பத்திரத்தை ரஜிஸ்டர் செய்து கொடுத்து விடுவானோ என்ற பெருத்த கவலை எழுந்து வருத்தத் தொடங்கியது. அதே சிந்தனை யாக, அந்த அம்மாள் கால் நாழிகை நேரம் சயனித்திருந்தாள். மைனர் போன வரையில் வெளியில் நின்று கொண்டிருந்த தாதி, உடனே உள்ளே வந்து சேர்ந்தாள். கல்யாணியம்மாள் அவளை நோக்கி, "அடீ! நீ நம்முடைய குமாஸ்தா மோகனரங்கனிடத்தில் போய், கடிதம் எழுதுவதற்குக் காகிதம், மைக்கூடு, இறகு ஆகிய இவற்றை எடுத்துக் கொண்டு இங்கே உடனே வரும்படி சொல்லி அனுப்பிவிட்டு, நீ வாசலில் இரு" என்றாள். அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு தாதி வெளியில் போய் விட்டாள். கல்யாணியம்மாள் தனது துன்பங்களையும் துரதிர்ஷ்டங்களையும் நினைத்து நினைத்து சகிக்கலாற்றாத துயரை அடைந்தவளாய்ப் படுத்திருந்தாள். தான் எந்தக் காரியத்தைச் செய்தாலும் அதிலிருந்து தனக்குப் புதிய புதிய துன்பங்கள் விளைவதையும், ஒரு சிறிய தீங்கை விலக்கும் பொருட்டு தான் ஒரு தந்திரம் செய்தால் அது, முன்னிலும் அதிக விபத்தான பெரிய துன்பத்தில் தன்னைக் கொண்டு போய் விடுவதையும் நினைத்த கல்யாணியம்மாள் தனது காலபலனை நிந்தித்துக் கொண்டிருந்த சமயத்தில், மோகன ரங்கன் என்ற குமாஸ்தா காகிதம் முதலிய எழுது கருவிகளோடு

மிகவும் வணக்கமாக உள்ளே நுழைந்தான். அவன் சுமார் பதினெட்டு வயதடைந்தவன் என்றும், மன்மதனைப் பழித்த மகா வசீகரமான அழகும், மிருதுவான சொல்லும், குளிர்ந்த பார்வையும், அழகான நடையும், பதற்றமில்லாத சொற்களும், கபடமற்ற மனதும், பெண் சாயலும் வாய்ந்த சுந்தரப் புருஷன் என்பது, நான்காவது அதிகாரத்தின முடிவில் சொல்லப்பட்டிருக் கிறது. இவனும், மதனகோபாலனும் சமமான அழகு வாய்ந்தவர் களாயினும், மதனகோபாலனது தோற்றத்தில் ஆண்மையும், கம்பீரமும் இயற்கையிலேயே அமைந்திருந்தன; மோகனரங்க னிடத்திலோ, பெண்தன்மையும், நாணமும் நிறைந்திருந்தன. மதனகோபாலன், பெண்பாலார் கண்களுக்கும், மனத்திற்கும் ஆனந்த வடிவமாகக் காணப்பட்டான். மோகனரங்கனோ, ஆண்பாலாரே அதிகமாக மயங்கத் தகுந்த அற்புதமான முகக்களையைப் பெற்றிருந்தான். இருவரும் சகலமான உத்தம குணங்களும் புருஷ லட்சணங்களும் வாய்ந்தவர்களாக இருந்தனர் ஆயினும், மோகனரங்கனிடத்தில் ஸ்திரீகளின் வசீகரத் தன்மை உச்சி முதல் உள்ளங்கால் வரையில் ஜ்வலித்தது. மகாவிஷ்ணுவின் மோகனாவதாரம் போல விளங்கிய மோகனரங்கன் என்னும் யௌவனப் புருஷன் புது மாமியாருக்கெதிரில் வரும் நாட்டுப் பெண்ணைப் போல, நாணிக் கோணி நடந்து வர, கல்யாணி யம்மாளிடத்தில் அவன் கொண்டிருந்த பயத்தினால், அவனது கால்களும், கைகளும், முகமும், உடம்பும் ஒன்றோடு ஒன்று கோபித்துக் கொண்டு மூலைக்கு மூலை நெளிந்து சென்றன; அவன் வந்ததை உணர்ந்த கல்யாணியம்மாள் எழுந்து மெத்தையில் சாய்ந்து கொண்டவளாய் அவனை நோக்கி, "ஏய் மோகனரங்கம்! இப்படியே இந்த மேஜைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு ஒரு கடிதம் எழுது; நான் சொல்லுகிறபடி எழுது" என்றாள். அதைக் கேட்ட மோகனரங்கன் கட்டிலுக்கருகில் ஒரு மேஜையின் மேல், காகிதம் முதலியவைகளை வைத்துக் கொண்டு, பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து, இறகைக் கையில் எடுத்துக் கொண்டு, கல்யாணியம்மாளது முகத்தை நோக்க, அந்த அம்மாள் அடியில் வருமாறு கடிதம் எழுதச் சொன்னாள்:-

கடிதம்

மகா-ா-ா-ஸ்ரீ மகாகனம் பொருந்திய மீனாக்ஷியம்மாள் அவர்களுக்கு கல்யாணியம்மாள் நமஸ்காரம் செய்து எழுதிக் கொள்வது; உபய க்ஷேமம்.

நேற்றைக்கு முந்திய நாள் பகலில் நீங்கள் இங்கே வந்து என்னைப் பார்த்துவிட்டுப் போன பிறகு, என்னுடைய தேக அசௌக்கியம் அதிகரித்திருக்கிறதன்றி குறையவில்லை. வைத்தியர்கள் அடிக்கடி வந்து பார்த்து மருந்து கொடுத்துவிட்டுப் போகிறார்கள். அப்படி இருந்தும், குணம் ஏற்படவில்லை. நேற்று இரவு முழுதும் தலைநோவினாலும், ஜுரத்தினாலும் நான் நிரம்பவும் சங்கடப்பட்டேன்; இமைப்பொழுது கூட நான் தூங்க வில்லை. இந்த மூன்று நாளைய ஜுரத்தினாலும், ஆகாரம் நித்திரை முதலியவை பிடியாமையினாலும், நான் படுக்கையை விட்டு எழுந்திருக்கவும் வல்லமை அற்றவளாக இருக்கிறேன். என்னுடைய உடம்பு இன்றைக்குள் சரியான நிலைமைக்கு வரா விட்டால், நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை நிறுத்தி விடுவோம் என்று நீங்கள் அன்றைய தினம் சொன்னீர்கள். அதை நான் ஒப்புக் கொள்ளாமல், எப்படியும் அதை இன்றைய தினம் முடித்து விடலாம் என்று உங்களிடம் நான் உறுதியாகச் சொல்லி இருந்தேன். கடைசியில், நீங்கள் சொன்னபடியே தான் செய்யும் படி நேர்ந்துவிட்டது; இந்த முகூர்த்தத்தை மிக விமரிசையாக நடத்த வேண்டும் என்பது என்னுடைய விருப்பமாகையால், நான் படுத்த படுக்கையாக இருக்கும் போது, அதை நடத்தினால், அது அவ்வளவு திருப்திகரமாக நடக்கும் என்று நான் நினைக்க வில்லை. அதுவும் தவிர, இதன் பொருட்டு மிகவும் கண்ணியம் பொருந்திய எத்தனையோ பிரபுக்களும் சீமாட்டிகளும் வருவார்கள். அப்போது, நான் விகாரமாகப் படுத்திருப்பதும், அவர்கள் ஒவ்வொருவரும் என்னிடம் வந்து சந்தோஷத்துக்குப் பதிலாக, அநுதாபப்படுவதும் என் மனசுக்கு சுத்தமாகப் பிடிக்கவில்லை.

என் மனசில் மாத்திரம் ஒரு சந்தேகம் இருந்து கொண்டே வதைக்கிறது. இறந்து போன என்னுடைய எஜமானருடைய விருப்பத்துக்கு மாறாக நான் இதுகாறும் எந்தக் காரியத்தையும்

செய்ததே இல்லை. இந்தக் கலியாணத்தை மாத்திரம் நான் அவர்களுடைய விருப்பத்துக்கு மாறாக, ஒரு வருஷம் முன்னாகவே நடத்த எத்தனிப்பது, அவர்களுக்கு இஷ்டமில்லா மையால், இப்படிப்பட்ட அபசகுனம் ஏற்பட்டதோ என்ற ஒரு சந்தேகம் என் மனசில் எழுந்து போராடுகிறது. நிற்க, எங்களுடைய சமஸ்தானத்துக் குழந்தைகளுடைய கலியாணம் எல்லாம் ஆதி காலந்தொட்டு மாரமங்கலத்தில் உள்ள பூர்வீகமான அரண்மனை யிலேதான் நடப்பது வழக்கம்; அதற்கு மாறாக, நாம் நிச்சய தாம்பூல முகூர்த்தத்தை இந்த ஊரில் வைத்துக் கொண்டிருப்பது பற்றி இப்படிப்பட்ட இடைஞ்சல் உண்டாகி இருக்கிறதோ என்ற எண்ணமும் என் மனசில் எழுந்து சங்கடப்படுத்துகிறது. ஆகையால், நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை, இன்றைய தினம் நடத்தாமல் ஒத்தி வைக்க நினைத்து விட்டேன்.

என்னுடைய உடம்பு சௌக்கியம் அடைந்தவுடனே, நாம் இருவரும் மறுபடி நேரில் சந்தித்துக் கலந்து பேசி, எது உசிதமான காரியமோ அதைச் செய்து கொள்ளுவோம். இந்தக் கலியாணத்தை இந்த வருஷத்தில் செய்யலாமா என்பதைப் பற்றி திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்து, அதன்படி நடந்து கொள்ளலாம் என்று நினைக்கிறேன்.

மதுரை ஜில்லாவில் உள்ள ராமலிங்கபுரம் சமஸ்தானத்து ஜெமீந்தாருடைய மூத்த குமாரருக்கு, துரைஸானியம்மாளைக் கொடுக்க வேண்டும் என்று அவர்கள் கடிதங்களின் மூலமாகவும் மனுஷ்யாள் மூலமாகவும் பிரஸ்தாபம் செய்கிறார்கள். ஜாதகப் பொருத்தம் நன்றாக இருக்கிறது; அந்த இடமும் நல்ல சிரேஷ்ட மான இடம்; மனிதர்களும் நற்குண நல்லொழுக்கமுடையவர்கள்; ஆகையால் துரைஸானியம்மாளுக்கு அந்த இடம் திகைந்த மாதிரியே வைத்துக் கொள்ளலாம். கோமளவல்லிக்கும் சில இடங் களிலிருந்து ஜாதகங்கள் வந்திருக்கின்றன. அவளுக்கும் ஏதாவது ஓர் இடம் குதிர்ப்பாடு ஆகலாம் என்று நம்பி இருக்கிறேன். ஆகையால், ஈசுவர கிருபையை முன்னிட்டு இந்த மூன்று முகூர்த் தங்களையும் ஒன்றாகவே, மாரமங்கலம் அரண்மனையில் அதிசீக்கிரத்தில் நடத்தி விடலாம் என்று பரிபூரணமாக நம்பி

இருக்கிறேன். ஆகையால் நீங்களும், குழந்தை கண்மணி யம்மாளும், நான் மேலே சொல்லியிருக்கும் காரணங்களைக் கருதி, என்மேல் ஆயாசப்படாமல் இருக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம்:

அன்புள்ள,

கல்யாணியம்மாள்.

—என்று எழுதப்பட்ட கடிதத்தை, மோகனரங்கன், ஒரு முறை படித்துக் காட்டி, கட்டிலண்டை வந்து அம்மாளது கையெழுத்தை அடியில் பெற்றுக் கொண்டு மேஜைக்குச் சென்றான். அதன் மோகனரங்கன் அந்த கடிதத்தை மடித்து, ஓர் உறைக்குள் புகுத்தி, உறையின் வாயை ஒட்டி, அதன் மீது மேல்விலாசம் எழுதினான்.

அப்போது கல்யாணியம்மாள், அவனை நோக்கி, "மோகன ரங்கம்! இந்தக் கடிதம் மிகவும் முக்கியமானது. வேலைக்காரர் களிடம் கொடுத்தால், ஒருகால், அவர்கள் இதை உடனே கொண்டு போய் அங்கே சேர்க்கமாட்டார்கள். ஆகையால், நீயே இதை எடுத்துக் கொண்டு நேரில் அவர்களுடைய பங்களாவுக்குப் போய், மீனாக்ஷியம்மாளிடத்தில் கொடுத்துவிட்டு, அவர்கள் சொல்லும் மறுமொழியைக் கேட்டுக்கொண்டு வா; நான் எப்படி இருக்கிறேன் என்று அவர்கள் கேட்பார்களானால், கடுமையான ஜுரம், தலை நோவோடு படுத்திருப்பதாகச் சொல்; நான் சொல்லுவது தெரிகிறதா?" என்றாள்.

அதைக் கேட்ட மோகனரங்கன், அம்மாளது உத்தரவுப்படியே நடந்து கொள்வதாகச் சொல்லிவிட்டு, வாசலை நோக்கி இரண்டோரடி எடுத்து வைக்க, அதற்குள் எதையோ நினைத்துக் கொண்ட கல்யாணியம்மாள் அவனை அழைத்து, "அடே மோகனரங்கம்! நம்முடைய மைனர் தம்பி இங்கே இருந்து இப்போதுதான் வெளியில் போனார்; நான் இந்த நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை ஒத்தி வைப்பது அவருக்கு இஷ்டமில்லை; அவர் இந்தக் கடிதத்தைக் கண்டால், வாங்கி, ஒருவேளை கிழித்துப் போட்டாலும் போட்டு விடுவார். ஆகையால் நீ ஒரு காரியம் செய்; அவர் போன இந்த வாசல் வழியாக நீ போகவேண்டாம். இப்படி

பின்புறமாகப் போய், அவருடைய கண்ணில் படாமல் மறைந்து வெளியில் போய்விடு" என்றாள். அதைக் கேட்ட மோகனரங்கன், திரும்பி வந்து, கட்டிலிற்குப் பக்கத்திலிருந்த பின்புற வாசலை அடைந்து, உட்புறத்தில் தாளிடப்பட்டிருந்த கதவைத் திறந்து கொண்டு அப்புறம் போய், கதவை மறுபடியும் சாத்திவிட்டு, அப்பால் போய்விட்டான்.

கல்யாணியம்மாள் அந்தக் கதவை உட்புறத்தில் தாளிட வேண்டும் என்னும் எண்ணம் கொண்டவளாய், படுக்கையை விட்டுக் கீழே இறங்கி சந்தடி செய்யாமல் மெல்ல நடந்து, அந்தக் கதவண்டை வந்து அதன் தாளில் கையை வைக்கப் போன சமயத்தில், அதற்கு அப்புறத்தில் மனிதரது காலடி ஓசையும், ரகசியமாகப் பேசிய குரலோசையும் உண்டானதை உணர்ந்தவளாய், திடுக்கிட்டு, தனது வலது செவியை கதவின் மேல் வைத்து உற்றுக் கவனித்தாள்; ஓசை மாத்திரம் உண்டாயிற்றே ஒழிய அது இன்னதென்பது விளங்கவில்லை. அப்புறத்தில் இருந்த அறை, புஸ்தக பீரோக்கள் நிறைந்த விஸ்தாரமான ஒரு மகால்; மோகன ரங்கன் நடந்து போனதனால், அந்த ஓசை உண்டாயிருக்குமோ என்று கல்யாணியம்மாள் முதலில் சந்தேகித்தாள். ஆனால், மனிதர் கொச கொசவென்று பேசிய குரல் கேட்டது. தான் உடனே கதவைத் திறப்பதும் அவளுக்கு உசிதமாகப்படவில்லை. கதவில் இண்டு இடுக்குகள் ஏதேனும் இருக்குமோ என்று அவள் ஆராய்ந்து பார்த்தாள். எதுவும் காணப்படவில்லை. அந்தக் கதவிற்கு சிறிது தூரத்திற்கப்பால், ஒரு ஜன்னல் இருந்தது. அது விளாமிச்சம் வேர்த்தட்டியால் வெளிப்புறத்தில் மறைக்கப் பட்டிருந்தது. கல்யாணியம்மாள் ஓசை இல்லாமல் விரைவாக நடந்து, அந்த ஜன்னலை அடைந்து, விளாமிச்ச வேர்த் தட்டியின் ஒரு பக்கத்தைப் பிடித்து மெதுவாகச் சிறிது தூரம் தள்ளி, அதனால் உண்டான சிறிய இடைவெளியால், அப்புறத்தில் தனது பார்வையைச் செலுத்தினாள். இந்த அம்மாளது பார்வை, நேராகச் செல்லக் கூடாது போனமையால் அப்புறம் இருந்த மனிதரை அவள் பார்க்க முடியாமல் போய்விட்டது. ஆனால், கல்யாணியம்மாளது பார்வையானது, ஓசையுண்டான அறையின் வலது பக்கச்சுவரில் போய் விழுந்தது. அந்தச் சுவரில் பெரும்

பெரும் படங்களும், நிலைக்கண்ணாடிகளும் இருந்தன. அவளது கண்கள் தட்டியிடுக்கின் வழியாக ஒரு நிலைக்கண்ணாடியை நோக்கின. அப்போது அந்த நிலைக்கண்ணாடிக்குள், ஒரு விபரீதமான காட்சி தென்பட்டது; அந்த அக்கிரமக் காட்சியைக் கண்டவுடன், கல்யாணியம்மாளது தேகம் பதறிப் போய்விட்டது. கோவெனக் கூச்சலிட வேண்டும் என்ற ஓர் உணர்வு அவளது மனதில் உண்டாயிற்று; ஆனால் அவள் அதை அடக்கிக் கொண்டாள். அவளது மனதில் கரைகடந்த கோபமும், விசனமும் பொங்கி எழுந்தன. அப்படிப்பட்ட விபரீதமான காரியமும் நடக்குமோ என்ற ஓர் அவநம்பிக்கையில், அவள் தனது கண்களையே நம்பாமல் சிறிது நேரம் தத்தளித்தாள். அந்த அசங்கியமான காட்சியைப் பார்ப்பதற்கே, அவளது உடம்பு வெட்கிக் குன்றியதாயினும், அவள் அங்கே என்ன நடக்கிற தென்பதைக் கவனிக்க வேண்டியது கட்டாயமாகி விட்டது.

நிலைக்கண்ணாடி இருந்த சுவருக்கு எதிர்பக்கத்துச் சுவரின் ஓரமாகக் கிடந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்து, ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த துரைஸானியம்மாள், அந்த அறையின் வழியாகச் சென்ற மோகனரங்கனைப் பார்த்தவுடன், புஸ்தகத்தை நாற்காலியில் வைத்துவிட்டு எழுந்து நின்று, அவனைப் பார்த்து, "இங்கே வா போகலாம்; ஒரே நிமிஷம்" என்று ரகசியமாகப் பேசிக் கைஜாடை காட்டி வற்புறுத்தி அழைக்க, அவன் புன்னகை செய்து நாணிக் கோணி, பக்கத்து அறையில் கல்யாணியம்மாள் இருக்கிறாள் என்றும், தான் கடிதத்தை எடுத்துக் கொண்டு அவசரமாகப் போக வேண்டும் என்றும், தனது கை ஜாடையால் காட்டி, ஓங்கிப் பேச வேண்டாம் என்று, தனது கையால் வாயைப் பொத்திப் பொத்திக் காட்டிய வண்ணம், மிகுந்த அச்சத்தோடு கதவின் பக்கமாகத் திரும்பித் திரும்பிப் பார்த்த வண்ணம், தயங்கி நிற்க, துரைஸானியம்மாள், தனது மோக விகாரத்தைத் தாங்கமாட்டாமல், ஆவேசம் கொண்டவளைப் போலத் துடிதுடித்தவளாய், முன்னிலும் அதிகமாக வற்புறுத்தி, "அம்மாள் இருந்தால் இருக்கட்டும்; அம்மாளிடத்தில் எனக்கு பயமில்லை; வா போகலாம்" என்று மிகவும் தணிவான குரலில் அழைத்த வண்ணம் அவனை நோக்கி இரண்டோரடி எடுத்து

வைக்க அந்த யௌவனப் புருஷன், அவளது மோகனாஸ்திரங் களினால் தாக்கப்பட்டு உணர்வு கலங்கி மெய்ம்மறந்தவனாய், ஏதோ பிதற்ற, அவனது உடம்பு, காந்தத்தினிடம் செல்லும் இரும்பு போலத் தானாகவே அவளை நோக்கிச் சென்றது.

அடுத்த நொடியில் துரைஸானியம்மாள் ஒரே பாய்ச்சலாக அவன் மீது பாய்ந்து, தனது முழு ஆவலையும் புலப்படுத்தி, அவனைக் கட்டி ஆலிங்கனம் செய்து, அவனது முகத்தில் ஓயாமல் முத்தமிட்டு, "ஆகா! என்ன சுகம்! என்ன சுகம்! உன்னை விட்டுப் பிரியாமல், சதாகாலமும் உன்னோடு இப்படியே சுகமநு வித்திருக்கும் காலம் எப்போது வருமோ தெரியவில்லையே! என் கண்ணாளா! என் துரையே! ஏன் இப்படிப் பயப்படுகிறாய்! அம்மாள் கண்டு கொள்ளப் போகிறாள் என்று பயப்படுகிறாயோ? அவளைப்பற்றி நீ கொஞ்சமும் பயப்பட வேண்டாம். அதற்கு நான் இருக்கிறேன். நேற்று வந்ததைப் போல, இன்றைக்கும் நீ அவசியம் என்னுடைய அந்தப்புரத்துக்கு வரவேண்டும். வராமல் இருந்துவிடாதே; தெரிகிறதா? இந்தக் கடிதத்தில் நீ என்ன எழுதினாய் என்பதை நான் கேட்டுக் கொண்டிருந்தேன். எனக்கு எவனையோ பிடித்துக் கலியாணம் செய்து வைக்கப் போகிறார் களாம். அதற்குள் நாம் இருவரும் ரகசியமாகப் புறப்பட்டு எங்கே யாவது ஓடிப்போக வேண்டும். அந்த விஷயமாக இன்று பேசி முடிவு கட்டவேண்டும். ஆகையால் நீ அவசியம் வந்து சேர்" என்று மிகவும் உருக்கமாகக் கூறி, அவனைப் பிடித்துக்கட்டி உருட்டிக் கசக்கி மர்த்தனம் செய்ய, அவன் தேனில் வீழ்ந்த ஈயைப் போல மதிமயங்கிக் கிடந்து தவிக்க, அவ்வாறு ஐந்து நிமிஷ நேரம் கழிந்தது; அதன் பிறகு பையன் தனக்கு நேரமாகிற தென்பதை உணர்ந்து வற்புறுத்தி தன்னை விடுவித்துக் கொண்டு, அவ்விடத்தை விட்டு அப்பால் போய்விட்டான்.

அதன் பிறகு துரைஸானியம்மாள், முன் போல புஸ்தகமும் கையுமாக நாற்காலியில் உட்கார்ந்து, மிகவும் ஏங்கிய முகத்தோடு, மோகனரங்கன் போன திக்கையே நோக்கிய வண்ணம் உட்கார்ந் திருந்தாள்.

ஜன்னலுக்கு அப்பால் நின்று, விளாமிச்சம் வேர்த்தட்டியின் பக்கத்திலிருந்த இடைவெளியின் வாயிலாக, கல்யாணியம்மாள் சிறியோர் இருவரும் செய்த காரியங்களை எல்லாம், நிலைக் கண்ணாடியில் கண்ணாரக் கண்ட போது அவளது மனம் எப்பாடு பட்டிருக்கும் என்பதை யூகித்துக் கொள்ள வேண்டுமேயன்றி, அது சொல்லிலடங்காததாக இருந்தது. அவர்கள் செய்த அக்கிரமச் செய்கைகளை மாத்திரம் ஒன்று விடாமல் அவள் உணர்ந்தாளே அன்றி, அவர்கள் சம்பாஷித்த வார்த்தைகள் தெளிவாக அவளது செவிக்கு எட்டவில்லை என்றாலும், துரைஸானியம்மாள் மோகனரங்கனிடத்தில் கள்ள நட்பு வைத்துக் கொண்டிருக்கிறாள் என்ற விஷயம் சந்தேகமற நன்றாக ருஜூவாகி விட்டமையால், கல்யாணியம்மாளது தேகம் பதறியது; மனம் கட்டிலடங்காமல் கொதித்தது. கரைகடந்த கோபமும் துக்கமும் பொங்கி எழுந்தன. கண்ணீர் தானாக வழிகிறது. அந்த அம்மாள் அடியில் வருமாறு தனக்குத் தானே எண்ணமிடலானாள். "ஆகா என்ன ஆச்சரியம்! இது கனவா அல்லது உண்மையில் நடப்பதா! இவள் என்னுடைய மகள் துரைஸானிதானா! எப்படிப்பட்ட உயர்வான வமிசத்தில் உதித்த பெண்ணின் புத்தி இவ்வளவு கேவலத்தில் இருக்குமா! என் புருஷரையன்றி அயல் புருஷரை மனசாலும் நினைத்தறியாத நான் இப்படிப்பட்ட இழிகுணம் உடைய மகளையா பெற்றேன்! ஐயோ! பாழாய்ப்போன வயிறே! இப்படிப்பட்ட விபசாரி உன்னிடத்தில் பத்து மாசகாலம் இருக்க இடங்கொடுத்தாய் அல்லவா!" என்று கல்யாணியம்மாள் தனது வலக்கரத்தை ஓங்கி, அடிவயிற்றில் அறைந்து கொண்டு, "இவளுக்கு அதிசீக்கிரத்தில் தக்க இடத்தில் கலியாணம் செய்து வைக்க வேண்டும் என்று, நான் நினைத்ததென்ன! இதற்குள் இவள் இப்படிப்பட்ட துன்மார்க்கத்தில் இறங்கிவிட்டாளே! இவளுடைய துடுக்கான வார்த்தைகளில் இருந்தே நான் இவளைப் பற்றிப் பல தடவைகளில் கவலைப்பட்டது, நிஜமாக முடிந்து விட்டதே! பிள்ளைதான் அப்படித் தறுதலையாக போய்விட்டான் என்றால், பெண்களாவது நம்முடைய பெயரைக் கெடுக்காமல் இருக்கக்கூடாதா? இவள் இவ்வளவு தூரம் கெட்டு விடுவாள் என்று நான் கனவில்கூட சந்தேகிக்கவில்லையே! ஐயோ! நல்லவர்

வயிற்றிற் பிறந்த குழந்தை இப்படியா கெட வேண்டும். அந்தக் கோமளவல்லி எப்படிப்பட்ட காரியத்தில் இறங்கி இருக்கிறாளோ தெரியவில்லையே! இவள்தான் இப்படி அநியாயமாகக் கெட்டுப் போய் விட்டாள். கோமளவல்லியை யாவது நான் இனி மிகவும் ஜாக்கிரதையாக வைத்துக் காக்க வேண்டியதன்றி இருவரையும் அதிசீக்கிரத்தில் எவனுக்காகிலும் கட்டிக்கொடுத்து அவனிடம் ஒப்புவித்து விடுவதே உத்தமமான காரியம்; இவளிடத்தில் நான் இப்போது போய் என்னுடைய அதிகாரத்தையும் கோபத்தையும் காண்பித்தால், இவள் தாறுமாறாகப் பேசுவாள். இன்னமும் இருக்கும் சொற்ப மதிப்பும் போய்விடும். ஆகையால், நான் இந்த விஷயத்தை அறிந்து கொண்டதாகவே இவளிடத்தில் காட்டிக் கொள்ளாமல் இருந்தே, காரியத்தைச் சரிப்படுத்த வேண்டும்; முதலில் இந்த மோகன ரங்கனை வேலையைவிட்டு நீக்கி அனுப்பிவிட வேண்டும். அப்படி அனுப்புவதையும் சந்தேகத் துக்கு இடம் இல்லாமல் ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும். ஏனென்றால், இவள் மிகுந்த பிடிவாத குணம் உடையவள்; இவளும் இந்த வீட்டை விட்டு, அவனோடு கூடவே போய் விடுகிறேன் என்று சொன்னாலும் சொல்லுவாள்" என்று கல்யாணியம்மாள் தனக்குள் ஒருவித முடிவு செய்து, தனது கோபத்தை எல்லாம் அடக்கிக் கொண்டு, கரைகடந்த துயரக்கடலில் ஆழ்ந்தவளாய், ஜன்னலை விட்டு மெல்ல நடந்து கட்டிலை நோக்கி வந்தாள்.

பலவகையான விபத்துகளும், துன்பங்களும் தன்னை நான்கு பக்கங்களிலும் வளைத்துக் கொண்டு தான் தலை தூக்க முடியாமல் அடித்து ஓயாமல் சித்திரவதை செய்கின்றனவே என்ற நினை வினால் கல்யாணியம்மாள் நரக வேதனை அடைந்தவளாய், தனது கட்டிலின் மேல் ஏறி உட்கார்ந்து சிறிது நேரம் யோசனை செய்தபின், வெளியில் நின்ற வேலைக்காரியின் பெயரைச் சொல்லி அழைக்க, அவள் உள்ளே நுழைந்தாள். அவளைக் கண்ட கல்யாணியம்மாள், "அடீ; நீ போய் பொன்னியம்மாளை வரச்சொல்" என்றாள். உடனே அந்தப் பணிமகள் வெளியிற் செல்ல, அரைக்கால் நாழிகை நேரத்தில் பொன்னம்மாள் வந்து சேர்ந்தாள். கல்யாணியம்மாள் அவளை நோக்கி, "அடீ

பொன்னம்மா! ஒரு காரியம் செய்! நீ உடனே ஒரு குதிரை வண்டி அமர்த்திக் கொண்டு, வேகமாய்ப் போய், அம்பட்டக் கருப்பாயியை நான் அழைத்து வரச் சொன்னதாக உடனே அழைத்துக் கொண்டு வா; அவளை இங்கே இருக்கும் ஜனங்கள் எவரும் கவனிக்காதபடி தந்திரமாக ராத்திரி அழைத்து வா!" என்று கூறிய வண்ணம் எழுந்து, மேஜையண்டை போய், வண்டிச் செலவுக்காக இரண்டு ரூபாயை எடுத்து, அவளிடம் கொடுக்க, அவள் அதை வாங்கிக் கொண்டு வெளியில் போய்விட்டாள்.



17–வது அதிகாரம்

## பறவையும் கிராதனும்

துரையம்மாள் என்ற போலி வெள்ளைக்காரப் பெண்ணின் ஆக்ஞையை நிறைவேற்றும் பொருட்டு கோமளேசுவரன் பேட்டையை நோக்கிச் சென்ற துரைராஜா **சுந்தர விலாஸ்** என்று பெயர் கொண்ட ஜாகை எங்கே இருக்கிறது என்பதை தபால்காரனிடத்தில் விசாரித்து அறிந்து கொண்டு அங்கே போய்ச் சேர்ந்தான். அது நாகப்ப முதலி தெருவிலிருந்து ஒரு பெருத்த மெத்தை வீடு; துரைராஜா தான் வண்டியிற் சென்று அங்கே இறங்கினால் பிறர் தன்னை கவனிப்பார்கள் என்ற நினைவு கொண்டவனாய் கால் நடையாகவே நடந்து சென்று, சுந்தர விலாஸ் என்பது இன்னவீடு என்பதைக் கண்டு கொண்டான். அது அழகான உயர்ந்த வெளித்தோற்றத்தை உடைய ஒரு புதிய மெத்தை வீடாக இருந்தது. அதன் வெளிப்புறத்துக் கதவும் ஜன்னல் கதவுகளும் மேன்மாடத்தின் ஜன்னல் கதவுகளும் இறுக மூடி உட்புறத்தில் தாளிடப் பெற்றிருந்தன. அந்த வீட்டின் உட்புறத்தில் யார் யார் இருக்கிறார்கள் என்பதை முதலில் விசாரித்து அறிந்து கொள்ள வேண்டும் என்பது துரைராஜாவின் விருப்பம். அவன் தனது சட்டப் பைக்குள், ரிவால்வர் என்ற ஒரு கைத்துப்பாக்கியை மறைத்து வைத்துக் கொண்டிருந்தான். வேறே எவரும் இல்லாத இடத்தில் மதனகோபாலன் தனியாக அகப்பட்டுக் கொள்வானாகில் அவனை ரிவால்வரால் சுட்டுக் கீழே

தள்ளிவிட வேண்டும் என்பது அவனது கருத்து. காலைப் பார்த்துச் சுட்டுவிட்டால், அவன் அதனால் இறந்து போகாமல், இரண்டொரு மாதகாலம் வரையில் வைத்தியசாலையில் படுத்திருக்க நேரும் ஆதலால் அதனால், துரையம்மாளது விருப்பம் பூர்த்தியாகி விடும் என்று துரைராஜா எண்ணி வந்தான். ஆனால், அந்தத் தெருவில் ஜனங்களது நடமாட்டம் மிகுந் திருந்ததைக் காணவே, தான் தனது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள அந்த இடம் சரியானதல்ல என்று உணர்ந்து கொண்டான். என்றாலும் அந்த வீட்டிற்குள் யார் யார் இருக்கிறார்கள் என்பதை முதலில் உணர்ந்து கொள்ள வேண்டும் என்றும், அதன் பிறகு அதற்கு எதிர்ப்பக்கத்திலுள்ள ஒரு வீட்டில் தான் இருந்து மதனகோபாலன் புறப்பட்டு வெளியில் போகும்போது, தானும் பின்னால் தொடர்ந்து சென்று சமயம் பார்த்துச் சுட்டுவிட வேண்டும் என்றும் துரைராஜா தீர்மானித்துக் கொண்டவனாய், அந்த வீட்டின் எதிர்ப்பக்கத்திலுள்ள வீடுகளை கவனித்துக் கொண்டே இரண்டு முறை தெருக்கோடி வரையில் போய்த் திரும்பி வந்தான். அவனது அதிர்ஷ்டவசத்தினாலோ, அல்லது மதனகோபாலனது துரதிர்ஷ்டவசத்தினாலோ, துரைராஜா உட்கார்ந்து கொள்ள மிகவும் வசதியான ஒரு மெத்தை வீடு காலியாக இருந்தது. அது வாடகைக்கு விடப்படும் என்ற விளம்பரக் காகிதம் அதன் வாசலில் ஒட்டப்பட்டிருந்தது. அதன் வாசற்கதவு வெளியில் பூட்டப்பட்டிருந்தது. அந்த வீட்டின் சொந்தக்காரரது மேல் விலாசமும் அந்த விளம்பரக் காகிதத்தில் எழுதப்பட்டிருந்தது. அவர் மைலாப்பூரில் உள்ள ஒரு முதலியார் என்பதைக் கண்ட துரைராஜா தனக்குள் மகிழ்வடைந்து, விரைவாக அந்த வீட்டின் படிகளில் ஏறி, திண்ணையின் மீது உட்கார்ந்து கொண்டான். அந்த திண்ணைக்கு வெளியில் குறட்டின் ஓரத்தில் இரும்புக் கம்பிகளால் கிராதி வைக்கப் பட்டிருந்தமையால், அது துரைராஜாவுக்கு ஒரு வகையான மறைவாக அமைந்ததன்றி, அவன் கம்பிகளின் இடைவெளியில் பார்ப்பதற்கு நல்ல வசதி ஏற்பட்டிருந்தது. அவன் திண்ணையில் உட்கார்ந்த வண்ணம் கம்பிகளின் இடைவெளியின் வாயிலாக, சுந்தர விலாசத்தையும் பார்த்துக் கொண்டே இருந்தான்.

அவ்வாறு இரண்டு மூன்று நாழிகை நேரம் கழிந்தது; சுந்தர விலாசத்தின் வாசற்கதவாவது, ஜன்னல் கதவுகளாவது திறக்கப் படுமோ என்று அவன் ஆவலோடு எதிர்பார்த்ததெல்லாம் அவமாயிற்று. அந்த வீடே தூங்குவதைப் போல இருந்ததன்றி அதற்கு எவ்வித உயிரும் இருப்பதாகவே தோன்றவில்லை. துரைராஜாவின் கண்களும், பார்த்துப் பார்த்துப் பூத்துப் போயின. கழுத்தும் கைகால்களும் நோக ஆரம்பித்தன. அவன் திண்ணையை விட்டு எழுந்து கம்பிக்கும் திண்ணைக்கும் இடை வழியில், தெற்கு மேற்காக உலாவிய வண்ணம், சுந்தர விலாசத்தை கவனிக்கத் தொடங்கினான். அவ்வாறு, அவன் அந்த இடத்தில் நெடுநேரமாக இருப்பதையும், அவன் தக்க பெரிய மனிதருடைய வீட்டுப் பிள்ளையைப் போல இருந்ததையும் கண்ட பக்கத்து வீட்டுக்கார னொருவன், அங்கே வந்து துரைராஜாவை மிகவும் மரியாதையாக நோக்கி, "இந்த வீட்டை வாடகைக்கு எடுத்துக்கொள்ளப் போகிறீர் களோ?" என்று நயமாகக் கேட்க, உடனே துரைராஜா "ஆம்; ஆம்; மைலாப்பூரில் உள்ள இதன் சொந்தக்காரரிடத்தில் இருந்து இதன் திறவுகோலை வாங்கிக் கொண்டு வரும்படி, ஒரு மனிதரை அனுப்பி இருக்கிறேன். அவர் திரும்பி வந்த உடன் உள்ளே போய்ப் பார்க்க வேண்டும். உள்ளே இடம் சௌகரியமாக இருக்குமா? நீர் இந்த வீட்டுக்குள் எப்போதாவது போய்ப் பார்த்திருக்கிறீரா?" என்றான்.

அதைக் கேட்ட அண்டை வீட்டுக்காரன் மெல்ல நடந்து, குறட்டில் ஏறி, திண்ணைக்குச் சமீபத்தில் வந்து நின்று கொண்டு, "ஓ! பார்த்திருக்கிறேன். உள்ளே இடம் வசதியாக இருக்கிறது. இந்தத் தெருவுக்குள் இரண்டே இரண்டு மெத்தை வீடுகள் தான் இருக்கின்றன. இதுவொன்று; அதோ எதிரில் தெரிகிறதே சுந்தர விலாசம் அது ஒன்று. இது மெத்தை வீடு என்கிற ஏதுவை வைத்துக் கொண்டு இதன் சொந்தக்காரர் இதற்கு 95-ரூபாய் வாடகை ஏற்படுத்தி இருக்கிறார். அவ்வளவு ரூபாய்க்கு உள்ளே இடமில்லை. இதனுடைய சொந்தக்காரரான சமரபதி முதலியார் என்பவர் மகா பேராசை பிடித்தவர்; வாடகைத் தொகையை மூன்று மாசத்துக்கொரு தரம் அவர் ஏற்றிக்கொண்டே போகிறார். அப்படி இருந்தும் யாராவது பெரிய மனிதர்கள் வந்து விடுகிறார்கள்" என்றான்.

*துரைராஜா:-* அப்படியானால் அதோ இருக்கிற சுந்தர விலாசமும் இதே சமரபதி முதலியாருடைய வீடுதானோ?

*அண்டை வீட்டுக்காரன்:-* இல்லை, இல்லை. அது ஒரு செட்டியாருடையது; அவர் வெளியூரில் இருக்கிறார். ஆகையால் அதன் வாடகை இவ்வளவு அதிகமாக இல்லை.

*துரைராஜா:-* அதன் வாடகை எவ்வளவு?

*அண்டை வீட்டுக்காரன்:-* அறுபது ரூபாய்தான்; ஆனால் அது இதைவிட ஒன்றரை மடங்கு பெரியது.

*துரைராஜா:-* அப்படியானால், அந்த வீட்டிலிருப்பவர் அதிர்ஷ்டசாலிகள்தான்; அங்கே யாரிருக்கிறார்கள் தெரியுமா உமக்கு?

*அண்டை வீட்டுக்காரன்:-* (தணிவான குரலில்) சுமார் இருபது வயசிருக்கும் ஒரு பையன் இருக்கிறான். அவனுடைய பூர்வீகம் மைசூராம். அவன் வீணை வாசிப்பதில் மகா சாமர்த்தியசாலியாம்; அவன் இந்த ஊரில் அநேகம் பெரிய மனிதர்களுடைய வீடுகளில் போய் பாடம் கற்றுக் கொடுக்கிறானாம்; பெருத்த கச்சேரிக்கும் போகிறானாம்; அவன் மைசூர் ராஜா முதலிய பெரிய இடங்களில் இருந்து ஏராளமான தோடாக்களும் பிருதுகளும் வாங்கினவனாம். அவன் இந்த ஊரில் மாசம் ஒன்றுக்கு ஒரு சுமார் ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கிறானாம் — என்றான்.

*துரைராஜா:-* (அந்த விவரத்தைக் கேட்பதில் அவ்வளவாக சிரத்தை இல்லாதவன் போல நடித்து) அப்படியானால், அவன் மாத்திரமா அவ்வளவு பெரிய வீட்டில் இருக்கிறான்.

*அண்டை வீட்டுக்காரன்:-* (முன்னிலும் அதிக தணிவான குரலில் ரகசியமாகப் பேசத் தொடங்கி) சங்தி ரகசியமானது; அதனாலே தான் வாசற்கதவு, ஜன்னல் கதவுகள் எல்லாம் எப்போதும் சாத்தப் பட்டிருக்கின்றன — என்றான்.

*துரைராஜா:-* (மிகுந்த திகைப்பும், வியப்பும் அடைந்தவனாய் புன்சிரிப்போடு அந்த மனிதனை நோக்கி) என்ன ரகசியம் அது? தெரிந்திருந்தால் சொல்லுமேன். நானும் ரகசியமாகவே வைத்துக் கொள்ளுகிறேன் — என்று மிகவும் நயமாகக் கேட்டான்.

அண்டை வீட்டுக்காரன், "நான் கேள்வியுற்றவரையில் சொல்லுகிறேன். ஆனால் அது எவ்வளவு தூரம் நிஜமோ என்பது ஆண்டவனுக்குத் தான் தெரியும்; (மிகவும் தணிவான குரலில்) அவன் எங்கே இருந்தோ ஒரு பெண்ணைக் கொண்டு வந்து ரகசியமாக உள்ளே வைத்துக் கொண்டிருக்கிறானாம்; அந்தப் பெண்ணின் அழகுக்கு இந்த பூலோகத்திலேயே, இணை இருக்காதாம். அவள் ஏதோ ஒரு தேசத்து மகாராஜனுடைய மகளாம். அழகில் இவனும் சுந்தர புருஷன். இவன் வீணை சொல்லிக் கொடுக்கப் போன இடத்தில் அந்தப் பெண் இவன் மேல் மோகங்கொண்டு இவனோடு ஓடிவந்து விட்டாளாம். பெண் ரதியைப் போல இருக்கிறாளாம்; அவளுடைய உடம்பு மெருகு கொடுத்த பத்தரைமாற்றுத் தங்கம் போல இருக்கிறதாம். அவளும் இவனும் உடல் இரண்டும் உயிர் ஒன்றுமாக இருக்கிறார்களாம்" என்றான்.

அதைக் கேட்ட துரைராஜாவின் முகம் சடக்கென்று மாறுபட்டது. உலகிலுள்ள அழகான ஸ்திரீகளை எல்லாம் அனுபவித்தவன் தான் ஒருவனே என்று அவன் அதுகாறும் நினைத்திருந்தவன் ஆதலால், துரைராஜாவின் மனதில் பெருத்த பொறாமை உண்டாயிற்று. கேவலம் மேளம் வாசிக்கும் இழிதொழிலுடைய ஒருவனுக்கு அப்படிப்பட்ட அபாரமான பாக்கியம் வாய்க்கலாமா என்ற ஓர் ஆத்திரமும் அவனது மனதில் பொங்கி எழுந்தது. ஆனால் அவன் தனது மன உணர்ச்சிகளை எல்லாம் வெளியில் காட்டாமல் மறைத்துக் கொண்டவனாய், அந்த மனிதனை நோக்கி, "அவள் வெளியில் வருகிறதுண்டா?" என்று நயமாக வினவினான்.

அண்டை வீட்டுக்காரன், "அவள் பகல் வேளையில் வருகிற தில்லை. இராக்காலங்களில் தான் வருகிறாள். அப்படி வரும்போது கோஷாஸ்திரீயைப் போல கால் முதல் தலை வரையில் ஒருவித மூடியால் அவள் தன்னை மறைத்துக் கொண்டு வருகிறாள். கண்களுக்கு மாத்திரம் இரண்டு துளைகள் விடப்பட்டிருக்கின்றன. அவள் எப்போதும் மோட்டார் வண்டியிலே தான் போய் வருகிறாள். அந்த வண்டியும் பெட்டி வண்டியைப் போல மூடுவண்டியாக இருக்கிறது. அதனால் தான் அவளை

மகாராஜாவின் மக்ள் என்று ஜனங்கள் கண்டு கொண்டார்கள்" என்றான்.

துரைராஜா, "அப்படியானால், அவளுக்கு ஏராளமான வேலைக் காரர்கள் இருக்க வேண்டும்" என்றான்.

அண்டை வீட்டுக்காரன், "ஆகா! அவர்களில்லாமலா; ஒரு சுமார் ஐந்தாறு வேலைக்காரிகளும் இரண்டு மூன்று வேலைக் காரர்களும் இருக்கிறார்கள்" என்றான்.

துரைராஜா, "சரி, சரி; அதனாலே தான் கதவுகள் எப்போதும் மூடப்பட்டிருக்கின்றன. அதிருக்கட்டும்; அந்த வீணை வித்துவான் காலையிலும் சாயுங்காலத்திலும் வீணை கற்றுக்கொடுக்கப் போக வேண்டாமா?" என்றான்.

அண்டை வீட்டுக்காரன், "ஆம்; அவன் மாத்திரம் காலையிலும், சாயுங்காலத்திலும் போய்விட்டு வருவான். அவனை நான் அடிக்கடி பார்ப்பேன்; ஆனால் இந்த இரண்டு மூன்று நாளாக அவன் என்னுடைய கண்களில் படவில்லை; ஒருவேளை அவனுக்கு உடம்பு அசெளக்கியமாக இருக்கலாம்; இல்லா விட்டால், அவன் ஊரில் இல்லாமலும் இருக்கலாம்" என்றான்.

அந்த விவரங்களைக் கேட்டறிந்து கொண்ட துரைராஜா, அந்த விஷயத்தைப் பற்றி அதற்கு மேலும் பேசினால், அவன் ஒருகால் சந்தேகங் கொள்வான் என்று நினைத்து, சம்பாஷணையை வேறே விஷயத்தில் மாற்றிவிட நினைத்து அசிரத்தையாக "சரி; உலகம் பலவிதம்; அதிலும் இந்தப் பட்டணத்தில், வேறே எங்கும் காணாத எப்படிப்பட்ட விநோதத்தையும் காணலாம். திருடர்கள், முடுச்சுமாறிகள், மோசக்காரர்கள், விபசாரிகள், வேசைகள் முதலிய சகலமான புண்ணிய மூர்த்திகளுக்கும் இந்த ஊர் இருக்க இடங்கொடுக்கும்; அவர்கள் ஒருவர் இருவராய் இருந்தால், அது ஓர் அதிசயமாக இருக்கும்; இடறி விழுந்தால் அவர்களின் மேலே தான் விழவேண்டும்; அவர்கள் ஒவ்வொரு தெருவிலும் நிறைந்து கிடக்கிறார்கள். அது கிடக்கட்டும்; உம்முடைய பெயரென்ன?" என்றான்.

**அண்டை வீட்டுக்காரன்:-** என் பெயர் பொன்னுசாமி நாயகர்.

*துரைராஜா:-* அப்படியா! உமக்கு எங்கே வேலையோ?

*பொன்னுசாமி:-* நான் அச்சாபீசிலே கம்பாசிடர் வேலையிலே இருந்தேன்; இப்போது அந்த வேலை இல்லை. சும்மா இருக்கிறேன். என்னுடைய அண்ணாத்தைதான் சம்பாதிக்கிறார். எனக்குச் சாப்பிடுகிற வேலைதான் – என்றான்.

அதைக் கேட்ட துரைராஜா வேடிக்கையாக நகைத்து, "மனிதனுக்கு சாப்பிடுகிற வேலையைவிட முக்கியமான வேலை வேறே என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. நீர் நல்ல காரியம் செய்தீர்" என்று பரிகாசமாகப் பேசினான்.

அதன் பிறகு பொன்னுசாமி நாயகர் என்ற அந்த மனிதன் ஒரு நாழிகை நேரம் வரையில் துரைராஜாவோடிருந்து, லோகாபிராம மாகப் பேசிவிட்டு, தனக்கு நேரமாகிறதென்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு தனது வீட்டிற்குப் போய்விட்டான்.

துரைராஜா மாறி மாறி உலாவுவதும் திண்ணையில் உட்கார்ந்து கொள்ளுவதுமாக இருந்து, சுந்தர விலாசத்தில் வைத்த விழியை வாங்காமலே கவனித்துக் கொண்டிருந்தான். முன்பு மதன கோபாலனுக்குத் துன்பம் செய்ய வேண்டும் என்ற குரோத நினைவை மாத்திரம் அவன் கொண்டிருந்தான். அண்டை வீட்டுக்காரன் சொன்ன வரலாறுகளைக் கேட்ட பிறகு, அவனது மனதில் வேறு பலவகையான நினைவுகளும் உணர்ச்சிகளும் உண்டாயின. உலகத்திலேயே இணையற்றவளான அந்த அற்புத மங்கையை, தான் அடையக் கூடாவிட்டாலும், அவளை ஒரு முறையாவது கண்ணால் பார்த்தே தீரவேண்டும் என்ற ஒரு துராசை அவனது மனத்தில் எழுந்து உரமாக வதைக்கத் தொடங்கியது. மதனகோபாலன் தன்னைக் காட்டிலும் அதிகமான ஸ்திரீலோலன் என்றும், அவன் ஜெமீந்தார் வீட்டுப் பெண்களை எல்லாம் மயக்கிவிட்டான் என்றும், அவ்வாறு ஸ்திரீகளை மயக்க அதிகாரம் பெற்றவன் தான் ஒருவனே என்றும், மதனகோபாலன் இழிதொழில் செய்யும் ஏழை ஆதலால், அவனிடம் ஸ்திரீகள் மோகங்கொள்ள அவனுக்கு அவ்வளவு யோக்கியதை இல்லை என்றும் துரைராஜா பலவாறு நினைத்தவனாய், அவன்மீது முன்னிலும் ஆயிரம் மடங்கு

அதிகரித்த பகைமையும் ஆங்காரத்தையும் கொண்டு, அவன் எப்போது வெளியில் வருவான் என்று எதிர்பார்த்துத் துடிதுடித்து நின்று கொண்டிருந்தான். அவ்வாறு பகற்பொழுது கழிய, மாலைப் பொழுதும் வந்தது. மதனகோபாலன் வீட்டிற்குள் இருக்கிறானோ அல்லது வெளியில் போயிருக்கிறானோ என்ற சந்தேகம் அவனை வதைத்துக் கொண்டே இருந்தன. மதன கோபாலன் வீட்டிற்குள் இருந்தாலும், வெளியிலிருந்து திரும்பி வந்தாலும், அதற்கு மேல் இரவில் வெளியில் புறப்படுவானோ என்ற கவலையும், சந்தேகமும் எழுந்து அவனது மனத்தைப் புண்படுத்தின. தெருவில் போவோரும், வருவோரும் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டு போனதும், பூட்டப்பட்டிருந்த வீட்டின் வாசலில் நெடுநேரமாக தான் உட்கார்ந்திருந்தது பற்றி பிறர் சந்தேகிப் பார்களோ என்ற நினைவும் அவனை மிகுந்த சஞ்சலத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தன.

அவன் அவ்வாறு தீயின்மேற் புழுவெனத் தவித்திருந்த தருணத்தில், சுந்தர விலாசத்தின் வாசலில் ஒரு சாரட்டு வண்டி வந்து நின்றது. அப்போது மாலை ஆறுமணி சமயம் இருக்கலாம். சூரியன் மேற்றிசையில் மறைந்து போய்விட்டான் ஆனாலும், இருளும் வெளிச்சமுமாக இருந்ததன்றி, முனிசிபல் விளக்குகளும் கொளுத்தப்பட்டுப் போனமையால் வண்டியில் வந்திறங்கியது யார் என்பது நன்றாகத் தெரிந்தது. அதுகாறும் மனத்தளர்வடைந்து தனது பங்களாவிற்குத் திரும்பிப் போய்விடலாமா என்று எண்ணமிட்டுத் தடுமாறிக் கொண்டிருந்த துரைராஜாவின் மனதில், அந்த வண்டியைக் காணவே, ஒருவித நம்பிக்கை ஏற்பட்டது. மதனகோபாலன் வெளியில் வந்தாலும், வராவிட்டாலும், அன்று இரவு பத்துமணி வரையில் அங்கே இருந்து பார்த்துவிட்டுப் போக வேண்டும் என்று அவன் உடனே தீர்மானித்துக் கொண்டவனாய் சாரட்டில் வந்தது யாரென்பதை நன்றாகக் கவனிக்கத் தொடங்கினான். அந்த வண்டி வந்து நின்றவுடனே, பெருத்த தனிகரைப் போல உடைகள் அணிந்திருந்த ஒரு கிழவர் வண்டியில் இருந்து கீழே இறங்கினார். அவரது முகம் முற்றிலும் தாடி மீசைகளால் மூடப்பட்டிருந்தமையால், அவர் யார் என்பதை

துரைராஜா கண்டு கொள்ளக் கூடாமல் போய்விட்டது. இருந்தாலும், அவர் உள்ளே போனவுடனே, தான் அந்த சாரட்டு ஓட்டுகிறவனிடத்தில் நெருங்கி, அதில் வந்தவர் யார் என்பதை தந்திரமாக விசாரிக்க வேண்டும் என்று அவன் நினைத்தான். ஆனால் அந்தப் பெரிய மனிதர் கீழே இறங்கியவுடனே, வண்டியை அனுப்பிவிட்டு, அதன் பிறகே, அந்த வீட்டின் கதவைத் தட்டினார். ஆதலால் துரைராஜாவின் எண்ணம் பலியாமல் போய்விட்டது.

அவர் இரண்டு மூன்று தரம் இடிப்பதற்குள், கதவு திறக்கப் பட்டது. உடனே அவர் உள்ளே போய்விடவே, கதவு மறுபடியும் மூடி உட்புறத்தில் தாளிடப்பெற்றது. அண்டை வீட்டுக்காரனான பொன்னுசாமி நாயகர் என்பவன் தன்னோடு அவ்வளவு நேரம் விரிவாகப் பேசிக் கொண்டிருந்தும், இப்போது வந்த கிழவர் யார் என்பதைப்பற்றித் தெரிவிக்காது போய்விட்டமையால், அவர் யாராவது புதிய விருந்தாளியாக இருக்க வேண்டும் என்று துரைராஜா எண்ணமிட்டவனாக உட்கார்ந்திருந்தான்.

மதனகோபாலனது வீட்டிற்குள் நுழைந்தவர் சந்தனக்கட்டை வியாபாரியான பசவண்ண செட்டியார் என்று நமது வாசகர்கள் யூகித்துக் கொண்டிருக்கலாம். அவர் மைசூரிலிருந்து வந்தபின் மதனகோபாலனது வீட்டிலேயே இறங்கி இருந்தார். அவர் ஏதோ சில காரியங்களை முன்னிட்டு அன்றைய பகலில் வெளியிற் சென்றவர் அப்போதே திரும்பி வந்தார். அவர் உள்ளே நுழைந்த உடனே மதனகோபாலன் மிகுந்த வணக்கவொடுக்கம் பயபக்தியோடு அவரை வரவேற்று உள்ளே அழைத்துப் போக, அவர் கூடத்திற் சென்று தமது தலைப்பாகை, சட்டை முதலிய ஆடைகளைக் கழற்றி ஆணிகளில் மாட்டிவிட்டு, முற்றத்தில் இருந்த தண்ணீர்க் குழாயில் தமது கால்களைச் சுத்தி செய்து கொண்டு, கூடத்தில் இருந்த ஒரு சாய்மான நாற்காலியிற் சாய்ந்து கொண்டார். மதனகோபாலன், அவருக்குச் சிறிது தூரத்தில் நிரம்பவும் மரியாதையாக நிற்க, செட்டியார் மிகுந்த அன்போடு அவனை நோக்கி, "இன்றைக்கு நான் போன முக்கியமான காரியம் ஆகவில்லை. ஆனால் ஒரு சந்தோஷ சமாசாரம் தெரிந்து கொண்டு

வந்தேன். கண்மணியம்மாளுடைய நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை கல்யாணியம்மாள் ஒத்தி வைத்துவிட்டாளாம். அவளுக்கு உடம்பு நிரம்பவும் அசௌக்கியமாக இருக்கிறதாம். அந்த அம்மாளுடைய புருஷன் இஷ்டத்துக்கு மாறாக, இந்தக் கலியாணம் இப்போது நடக்கப் போவதைப்பற்றி, இந்த மாதிரி இடைஞ்சல் உண்டாகிறதோ என்று பயந்து, கலியாணத்தை கொஞ்ச காலம் கழித்து நடத்தலாம் என்று தீர்மானித்து விட்டார்களாம். அவர்கள் இந்த நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை இன்று நடத்தினால், கண்மணியம்மாள் கிணற்றில் குளத்தில் விழுந்து இறந்து போய்விடுவாளோ என்று, நாம் பயந்து கொண்டிருந்ததற்கு, இது ஒரு நல்ல சங்கதி அல்லவா?" என்றார்.

அதைக் கேட்ட மதனகோபாலன் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தவனாய், "அந்தக் குழந்தையைப் பற்றித்தான் நான் நிரம்பவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். இன்று வரும்படி என்னை அவள் கேட்டுக் கொண்டிருப்பதும், இந்த விஷயமாக என்னுடைய யோசனையைக் கேட்டு, அதன்படி நடந்து கொள்ளுவதற்காகத் தான் இருக்கலாம் என்று நான் நினைத்தேன். இன்று நான் அவளைச் சந்திக்காவிட்டால், இன்றைய ராத்திரியே தான் இறந்து போய்விடுவதாக எழுதி இருப்பதைப் பார்த்தால் அவள் என்னிடத்தில் அன்று சொன்ன உறுதியையே இன்னமும் கடைப்பிடித்துக் கொண்டிருக்கிறாள் என்பது நன்றாகத் தெரிகிறது" என்றான்.

***பசவண்ண:-*** இல்லாவிட்டால், அவள் இதற்குள் தன்னுடைய மனசை மாற்றிக் கொண்டா இருக்கப் போகிறாள். அந்தத் தறுதலைப் பையனிடத்தில் அந்தப் பெண்ணுக்கு ஒரு நாளும் பிரியம் உண்டாகாது. அவன் பாலாம்பாளை வைத்துக் கொண்டிருக்கிறதாகவும், அவள் இப்போது நாடகத்தையே விட்டுவிட்டாள் என்றும் நான் கேள்விப்பட்டேன். மாரமங்கலத்தாருடைய வீட்டில் சம்பந்தம் செய்தால், பெண் நல்ல செல்வத்திலிருந்து வாழும் என்பது மீனாக்ஷியம்மாளுடைய எண்ணம் போலிருக் கிறது. ஆனால் அந்தப் பையன் ஒரு பெருத்த சமஸ்தானத்து ஜெமீந்தாருக்குப் பிறக்கக் கூடியவனாகத் தோன்றவில்லை, அவன் அசல் பட்டணத்துச் சோம்பேறியைப் போல இருக்கிறான்.

இப்படிப்பட்ட அற்புதமான புத்திரனைப் பெற, கல்யாணியம்மாள் எவ்வளவு காலம் தவம் கிடந்தாளோ தெரியவில்லை. மார மங்கலத்தாருடைய குடும்பத்துக்கு அவனும், என்னுடைய குடும்பத்துக்கு துரைராஜாவும், குலத்தைக் கெடுக்க வந்த கோடாறிக் காம்புகளாக அமைந்திருக்கிறார்கள், கண்மணியம்மாள் மகா புத்திசாலி; நற்குண நல்லொழுக்கம் வாய்ந்தவள். இவர் களுடைய அயோக்கியத்தனம் எல்லாம் அவளுக்குப் பிடிக்க வில்லை. என்ன செய்கிறது – என்றார்.

***மதனகோபாலன்:-*** மெய்தான். இன்றைக்கு ஏற்பாடு செய்யப் பட்டிருந்த நிச்சயதாம்பூல முகூர்த்தத்திலிருந்து, தான் எப்படித் தப்பித்துக் கொள்வது என்பதைப்பற்றி என்னிடத்தில் கலந்து யோசனை செய்வதற்காகவே அவள் என்னை வரச்சொல்லி இருக்கலாம் என்று தாங்கள் அபிப்பிராயப்பட்டீர்களே; இப்போது தான் முகூர்த்தம் நின்று போய்விட்டதே; நான் போகாமல் இருந்தால் என்ன! அவள் சொல்வது போல அன்னியருடைய பங்களாவுக்குள் இருட்டு வேளையில் திருடனைப் போல நுழைவதற்கு என் மனம் இடங்கொடுக்கவில்லையே.

***பசவண்ணா:-*** மெய்தான். அவள் சொல்லுகிறபடி செய்வது சரியான காரியமல்ல; இருந்தாலும், இதில் இன்னொரு விஷயம் இருக்கிறது. அன்றைய தினம் நீ அவளோடு பேசிக் கொண்டிருந்த போது, தான் வேறே ஒரு புருஷனைக் கட்டிக்கொள்ள ஆசைப் படுவதாக அவள் சொன்னாள் என்றாயே. அதை ஒரு வேளை அவள் இன்றைய தினம் உன்னிடத்தில் வெளியிடலாம். இந்த சந்தர்ப்பத்தில் நீ அவளைக் காணாவிட்டால், அவளை நீ இனிமேல் எப்போதும் பார்க்கக்கூடிய சமயமே நேராது. அவள் இந்தச் நுட்பமான விஷயத்தை வேறே எவரிடத்திலும் வெளியிட வெட்கப்படுவாள். ஆகையால் இன்று நீ அவசியம் போய், அவள் யாரைக் கட்டிக்கொள்ள ஆசைப்படுகிறாள் என்பதை அறிந்து கொண்டு, அவளுக்கு தைரியம் சொல்லி தற்கொலை செய்து கொள்ளாமல் இருக்கும்படி அவளுடைய மனசை மாற்றிவிட்டு வந்து சேர்; அவளுடைய மனசைக் கவர்ந்திருக்கும் புருஷன் இன்னான் தான் என்ற ஒரு சந்தேகம் இப்போதே என் மனசில்

உண்டாகிறது. இருக்கட்டும்; எல்லாவற்றிற்கும் நீ போய் அவள் சொல்வதை அறிந்து கொண்டு வந்து சேர்; அதன் பிறகு ஆக வேண்டியதை நான் செய்கிறேன்.

*மதனகோபாலன்:-* சரி; அப்படியே செய்கிறேன். இப்போது மீனாக்ஷியம்மாள் தங்களைப் பார்த்தால் இன்னார் என்று அடையாளங் கண்டுகொள்ள முடியுமா முடியாதா?

*பசவண்ண:-* முடியாதென்றே நினைக்கிறேன்; நான் அவர் களைப் பார்த்துப் பதினைந்து வருஷ காலத்துக்கு மேலாகிறது. அவள் என்னைப் பார்த்த காலத்தில், நான் மீசை தாடி முதலியவை இல்லாமல் சிறு பையனாக இருந்தேன்; இப்போது கிழவனைப் போல இருக்கிறேன். நான் தான் அவளுடைய தமயன் என்பதை, அவள் சுலபத்தில் கண்டு கொள்ள முடியாது. நான் பசவண்ண செட்டியார் என்ற பெயரோடேயே இன்னம் சொற்ப காலம் இருந்து சில முக்கியமான காரியங்களை முடிக்க வேண்டி இருக்கிறது. நானே வெளியிடுகிற வரையில், நீ இந்த சங்கதியைப் பற்றி எவரிடத்திலாவது அஜாக்கிரதையாக வார்த்தையை விட்டு விடப் போகிறாய்; ஜாக்கிரதை; ஆனால் கண்மணியம்மாளிடத்தில் மாத்திரம் நீ ஒரு கோடி காட்டிவை; இந்த மாரமங்கலம் மைனரை அவள் கட்டிக் கொள்வதில் எனக்குப் பிரியம் இல்லை என்றும், அவளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து அவளை நல்ல உயர்ந்த பதவியில் வைக்க வேண்டும் என்று நான் எண்ணி இருப்பதாகவும், உனக்கு நான் கடிதம் எழுதியிருக்கிறேன் என்று நீ அவளிடத்தில் சொல்லி, அவள் அதைரியப்படாமல் இருக்கச் சொல்லிவிட்டு வா; தெரிகிறதா?

*மதனகோபாலன்:-* உத்தரவுப்படியே செய்கிறேன் - என்றான்.

அப்போது கடிகாரத்தில் மணி ஏழு அடித்தது. அதைக் கண்ட பசவண்ண செட்டியார், "சரி; மணி ஏழாகிவிட்டது; நீ புறப்பட்டுப் போ; எல்லாவற்றிற்கும் முன் எச்சரிக்கையாக, அவளுடைய கடிதத்தையும் சட்டைப்பையில் பத்திரமாக வைத்துக் கொண்டு போ; எனக்கும் அந்தப் பக்கத்தில் ஓர் அலுவல் இருக்கிறது. நான் இன்னம் அரைநாழிகை கழித்து இங்கே இருந்து புறப்பட்டுப் போய் என்னுடைய காரியத்தை முடித்துக் கொண்டு அந்த

பங்களாவின் பின் புறத்தில் உள்ள ராஜபாட்டைக்கு வந்து வண்டியை நிறுத்திக்கொண்டு இருக்கிறேன். நீ அவளிடத்தில் பேசி விட்டுவா; இருவரும் வண்டியில் இங்கே வந்துவிடலாம்" என்றார். (இவர், உண்மையில் கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாரானாலும், இவரது விருப்பப்படி இன்னம் சொற்ப காலம் வரையில் இவரை நாமும் பசவண்ண செட்டியார் என்றே குறித்து வருவோம்) பசவண்ண செட்டியார் கடைசியாகச் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட மதன கோபாலன், "அப்படியே ஆகட்டும்" என்று மிகுந்த பணிவோடு அவருக்கு மறுமொழி கூறிவிட்டு, அவரது விருப்பப்படி கண்மணி யம்மாளது கடிதத்தை எடுத்துத் தனது சட்டைப்பைக்குள் வைத்துக் கொண்டு அவரிடத்தில் வந்து தான் போய்விட்டு வருவதாகக் கூறி, செலவு பெற்றுக்கொண்டு வெளிப்பட்டான். ஒரு வேலைக்காரன் அவனை வெளியில் அனுப்பி வீட்டு வாசற் கதவை மூடி உட்புறத்தில் தாளிட்டுக் கொண்டான். வீட்டிற்குள் இருந்து வெளிப்பட்ட மதனகோபாலன் தேனாம்பேட்டையை நோக்கி நடக்கலானான்.

மதனகோபாலன் வீட்டிற்குள் இருக்கிறானோ அல்லது வெளியில் போயிருக்கிறானோ என்றும், அவன் அன்றிரவில் வீட்டை விட்டு வெளிப்படுவானோ என்றும் பலவாறு ஐயமுற்று நம்பிக்கை இழந்து மனத்தளர்வடைந்து இன்னமும் இருப்பதா போவதா என்பதைத் தீர்மானிக்க மாட்டாமல் தத்தளித்தவனாய் ஏங்கி எதிர்த்த வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த துரைராஜா திடீரென்று மதனகோபாலன் வெளிப்பட்டதைக் கண்டு பெருத்த வியப்பும், திகைப்பும், மகிழ்ச்சியும் கொண்டவனாய், அவன் வெளிப்பட்டது உண்மைதானோ அல்லது, தன் மனதின் பொய்த் தோற்றமோ என்று இரண்டொரு விநாடி நேரம் ஐயமுற்றான் ஆனாலும், அவன் வெளிப்பட்டது நிஜமான விஷயமே என்பதை உணர்ந்து திண்ணையை விட்டெழுந்து வாசலுக்கு வந்து, மெல்ல அவனைத் தொடர்ந்து செல்லலானான். மதனகோபாலன் பகல் நேரத்தில் வெளியில் வராமல் இரவில் வந்தது தனது எண்ணம் நிறைவேறுவதற்கு மிக்க அனுகூலமானதென்று நினைத்து துரை ராஜா தனது காரியம் ஜெயமாக முடிந்துவிட்டால், அது எப்படியும் மறுநாள் துரையம்மாளுக்குத் தெரிந்துவிடும் ஆதலால், தான்

அவளிடத்திலிருந்து அதிசீக்கிரத்தில் இன்னொரு கடிதத்தை எதிர்பார்க்கலாம் என்று துரைராஜா நினைத்து அளவளாவினான். அவனது மனதில் இன்னொரு யுக்தியும் தோன்றியது. தான் மதன கோபாலனைத் தொடர்ந்து சென்று, எவருக்கும் தெரியாமல் பின் புறமாக இருந்து, அவனது காலைப் பார்த்து சுட்டுவிட்டு ஓடிவிட வேண்டும் என்றும், சற்று நேரத்திற்குப் பிறகு தான் ஏதோ வேறு அலுவலை உத்தேசித்து அந்த வழியாகப் போகிறவன் போலத் திரும்பி வந்து அவனைத் தூக்கியெடுத்து, அவனது விஷயத்தில் இரக்கமும் அனுதாபமும் காட்டி அவனை ஒரு வண்டியில் வைத்து அவனது வீட்டிற்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும் என்றும் அவன் தீர்மானித்துக் கொண்டான். ஏனெனில், அதனால் தனக்கு இரண்டு விதமான அனுகூலம் ஏற்படும் என்று அவன் எண்ணினான். அவனைச் சுட்டு வீட்டில் படுக்க வைப்பதனால் துரையம்மாளது கோரிக்கை நிறைவேறுவது முதல் அனுகூலம். அவனுக்கு வேண்டியவன் போல அவனது ஆபத்து வேளையில் உதவி அவனது வீட்டிற்குள் மறைந்திருக்கும் ஒப்புயர்வற்ற சுந்தர ரூபியான அந்தப் பெண்ணை தான் காணவும், அவளோடு சிநேகம் செய்யவும் சந்தர்ப்பம் வாய்ப்பது இரண்டாவது அனுகூலம் என்று துரைராஜா தன் மனதில் நவரத்னக்கோட்டை கட்டிக் கொண்டு மதனகோபாலனைத் தொடர்ந்து பின்னாகவே சென்றான். அந்த இரவு இருளடர்ந்ததாக இருந்தாலும், முனிசிபல் மின்சார விளக்குகள் பாதைகளிலெல்லாம் நிறைந்து பகல் போலப் பிரகாசித்துக் கொண்டிருந்தன ஆதலாலும், ஜனங்களும் அதிகமாக நடமாடிக் கொண்டிருந்தமையாலும், அவன் மதனகோபாலனுக்கு சமீபமாக நெருங்காமல் சிறிது பின்னாகவே வந்து கொண்டிருந் தான். மதனகோபாலனது மனதிலோ கண்மணியம்மாளது அற்புத வடிவமே நிறைந்திருந்தது. தனக்குப் பின்னால் ஒரு பாதகன் தன்னை வதைக்க வருகிறான் என்பதை அவன் சிறிதும் சந்தேகி யாமல் கண்மணியம்மாளது உயிரைக் காப்பாற்றுவதான மகா புண்ணியமான காரியத்தை தான் செய்ய வேண்டும் என்றும், அவளுக்குப் பற்பல ஆறுதல்களைக் கூறி அவளை சந்தோஷிப் பிக்க வேண்டும் என்றும் நினைத்து, அந்த இன்பத்தில் ஆழ்ந்தவ னாகச் சென்று கொண்டிருந்தான். வேறு எந்தப் பெண்ணிடத்தி

லும் ஏற்படாத விலக்க இயலாத ஒரு பற்றும் கரைகடந்த பிரியமும் அவள் ஒருத்தியிடத்தில் மாத்திரம் தன் மனதில் ஏற்பட்டிருப்பதை அவன் அடிக்கடி உணர்ந்தான் ஆனாலும், தான் கேவலம் கீழ் நிலைமையில் உள்ள ஓர் ஏழை மனிதன் ஆகையால், தான் அவளது விஷயத்தில் சாதாரண நட்பைத் தவிர வேறு எவ்விதமான சம்பந்தத்தையும் எதிர்பார்ப்பது, முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவதைப் போன்றதென்று அவன் அடிக்கடி எண்ணித் தனது மனத்தைக் கண்டித்துக் கொள்ளுவான்; இணையற்ற வனப்பும் உலகத்திலுள்ள மற்ற எவருக்கும் ஓர் உதாரணமாக அமைந்துள்ள நற்குணமும் வாய்ந்த அந்த மடமங்கை தான் வேறொரு புருஷன் மீது காதலுற்றிருப்பதாகக் கூறிய நாள் முதல் அப்படிப்பட்ட ஒப்பற்ற நிதியான அந்தப் பெண்மாணிக்கத்தை அடையக் கொடுத்து வைத்துள்ள பாக்கியவான் யாவனோ என்று மதனகோபாலனது மனம் நினைத்து நினைத்து, அவனாக இருப்பானோ இவனாக இருப்பானோ என்று சிற்சில மனிதரை தனக்குத் தானே வரித்துக் கொண்டான்; ஆனால் அந்த விஷயத்தில் அவன் எவ்விதமான முடிவிற்கும் வரமாட்டாதவ னாய் அவளது வாயிலிருந்தே அந்த உண்மையை அறிந்துவிட வேண்டும் என்று பெரிதும் ஆவல் கொண்டிருந்தான்; ஏனெனில் அவளால் விரும்பப்பட்ட பூமான் யாவன் என்பதை தான் அறிந்து கொண்டால், அதை கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாரிடத்தில் தெரிவித்து, அவரது உதவியால் அவர்களது மணத்தை முடித்து அதிசீக்கிரத்தில் அவர்களை சந்தோஷ சாகரத்தில் ஆழ்த்திவிட வேண்டும் என்பதையே அவன் தனது முதற் கடமையாக மதித்திருந்தான்; ஆதலால் தான் அப்போது அந்த விஷயமாகச் சென்றது அவனுக்கு நிரம்பவும் உற்சாகமாக இருந்தது. அவன் அதே நினைவில் ஆழ்ந்தவனாய் அப்படி இப்படித் திரும்பாமலும், அப்போது அந்தப் பாதையில் வேறே யார் நடக்கிறார்கள் என்பதைக் கவனிக்காமலும் சென்று கொண்டே இருந்தான்.

அவன் மிகவும் சமீபமான ஏதேனும் ஓர் இடத்துக்குப் போய் விட்டுத் தனது ஜாகைக்குத் திரும்பி விடுவான் என்றும், அதற்குள் தான், எப்படியும், அவனைச் சுட்டுவிட துரைராஜா ஆரம்பத்தி

நினைத்திருந்தான். ஆனால் மதனகோபாலன், மவுண்டு ரோட்டின் வழியாக, நெடுந்தூரம் போய்க் கொண்டிருந்ததைக் காண, அவன் தேனாம்பேட்டைக்கே போகிறான் என்று துரைராஜா யூகித்துக் கொண்டவனாய், தனது எண்ணம் எப்படியும் நிறைவேறி விடும் என்று நினைத்து இன்புற்றவனாய்த் தொடர்ந்து சென்று கொண்டிருந்தான். மதனகோபாலன் கல்யாணியம்மாளிடத்திலும் வேறு சில பங்களாக்களிலும் தாறுமாறாக நடந்து கொண்டான் என்றும், அதனால் தேனாம்பேட்டையில் உள்ள பெரிய மனிதர் எல்லோரும் அவனை வேலையில் இருந்து விலக்கிவிட்டார்கள் என்றும், துரைராஜா அன்று காலையில் கேள்வியுற்றிருந்தான் ஆகையால், அந்த மாலையில் அவன் தேனாம்பேட்டையில் யாருடைய பங்களாவுக்குப் போகப் போகிறான் என்ற சந்தேகமும் துரைராஜாவின் மனதில் எழுந்து வதைத்துக் கொண்டிருந்தது.

அப்படிப்பட்ட மன நிலைமையோடு முன்னும் பின்னுமாக இருவரும் தேனாம்பேட்டைக்குள் போய்க் கொண்டிருக்க, அப்போது சுமார் ஏழரை மணி சமயமாயிற்று. மின்சார விளக்குக் கம்பங்கள் இருந்த இடங்களில் இருளடர்ந்திருந்தது. ஜனங்கள் மாத்திரம் போக்குவரத்தாகவே இருந்தனர். அந்தச் சமயத்தில் கிருஷ்ணாபுரம் சமஸ்தானத்து பங்களாவின் பின்புறம் வந்து சேர்ந்ததும், மதன கோபாலன் அவ்விடத்தில் நின்றான். அவன் நின்றதைக் கண்டு துரைராஜா தனக்கருகில் இருந்த ஒரு மரத்தின் மறைவில் சடக்கென்று மறைந்து தனது சிரத்தை மாத்திரம் நீட்டி மதனகோபாலன் என்ன செய்கிறான் என்பதைக் கவனித்தான். மதனகோபாலன் அப்புறம் இப்புறம் திரும்பிப் பார்த்து ஜனங்கள் எவரும் வரவில்லை என்பதை உறுதி செய்து கொண்டு, வேலியின் ஓரமாகச் சென்று, கண்மணியம்மாளால் குறிக்கப்பட்ட படல் எங்கே இருக்கிறதென்பதை ஆராயத் தொடங்கி, இரண்டு நிமிஷத்தில், அந்தப் படல் இருந்த இடத்தை எளிதில் கண்டு கொண்டான். எப்படியெனில், அன்று மாலையில் கண்மணியம்மாள் தனக்குத் தலைவலியாக இருக்கிறதென்று சொல்லிவிட்டுத் தோட்டத்திற்குள் உலாவ வந்தவள், அந்தப் படலின் கட்டை அவிழ்த்து, அதைச் சிறிதளவு திறந்து வைத்துவிட்டுப் போயிருந்

தாள் ஆதலால், அந்தப் படலைக் கண்டுபிடிப்பது அவனுக்குச் சுலபமாக இருந்தது.

உடனே மதனகோபாலன் அந்தப் படலைத் தள்ளித் திறந்து கொண்டு, மெல்ல உள்ளே நுழைந்து, கண்மணியம்மாளது கடிதத்தில் குறிக்கப்பட்ட ஆலமரத்தை நோக்கி விரைவாக நடந்தான். அது மரங்கள் அடர்ந்த பூஞ்சோலை ஆதலால், அதற்குள் இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. அப்படியிருந்தும், அவன் அதற்கு முன் இரண்டொரு முறை அந்தச் சோலைக்குள் சென்று சுற்றிப் பார்த்திருந்தவன் ஆதலால், அவன் அதிகமாகத் துன்பப்படவில்லை.

அவ்வாறு அவன் தங்களது பங்களாவிற்குள்ளேயே திருட்டு வழியால் நுழைந்ததைக் கண்ட துரைராஜா மிகுந்த வியப்பும் திகைப்பும் அடைந்தவனாய், இரண்டொரு விநாடி நேரம் சென்று ஒன்றுந் தோன்றாதவனாய் அசைவற்று நின்று, மதனகோபாலன் அவ்வாறு தங்களது ஜாகைக்குள் நுழைந்த காரணம் என்ன என்பதைப் பற்றி யோசிக்கலானான். அவன் ஏதேனும் பொருளைத் திருடும் பொருட்டு வந்திருக்க மாட்டான் என்ற நினைவு உண்டாயிற்று. ஆகவே, அவன் திருட்டுத்தனமாகக் கண்மணியம்மாளைக் கண்டு, அவளை வஞ்சித்து அழைத்துக் கொண்டு போய்விட நினைத்தே, அவ்வாறு வந்திருக்கிறான் என்ற சந்தேகம் தோன்றியது. கோமளேசுவரன் பேட்டையில், பொன்னுசாமி நாயகர் கூறிய வரலாறும் அப்போது நினைவிற்கு வந்தது. மதனகோபாலன் வேறொரு பெண்ணைக் கொணர்ந்து ஒளித்து வைத்திருப்பதைப் போல, கண்மணியம்மாளையும் கொண்டு போய்க் கெடுத்துவிட எண்ணியே அவன் அவ்வாறு வந்திருக்கிறான் என்று துரைராஜா உறுதியாக நினைத்துக் கொண்டான். ஆகவே, அவன் மதனகோபாலன் மீது கொண்டிருந்த பகைமையும் ஆத்திரமும் முன்னிலும் பன்மடங்கு அதிகரித்தன. அவனது மோசத்திற்குத் தக்கபடி அவனைத் தண்டிக்க வேண்டியது அவசியமானதென்றும், அதற்கு நல்ல சந்தர்ப்பம் வாய்த்ததென்றும் நினைத்துக் கொண்ட துரைராஜா உடனே ஒருவிதமான தீர்மானம் செய்து கொண்டான். தங்களது

தோட்டத்திற்குள்ளேயே நான் அவனைச் சுட்டுவிட்டால், அதனால், தனக்கு ஏதேனும் தீங்கு நேரலாம் என்று நினைத்த வனாய், அந்த இடத்திற்கு அரை பர்லாங்கு தூரத்திலிருந்த போலீஸ் ஸ்டேஷனுக்கு தான் சென்று, தோட்டத்திற்குள் திருடன் நுழைந்திருப்பதாகக் கூறி சில ஜெவான்களையும் உதவிக்கு அழைத்துக் கொண்டு தோட்டத்திற்குள் நுழைந்து, எப்படியாகிலும், தந்திரம் செய்து, அவனைச் சுட்டு விடலாம் என்று நினைத்தவனாய், உடனே விரைவாக போலீஸ் ஸ்டேஷனை நோக்கி ஓடினான். தன்னைத் தொடர்ந்து வரும் பெருத்த விபத்தைப் பற்றி சிறிதும் சந்தேகியாத மதனகோபாலன், கண்மணியம்மாளைச் சந்திப்பதால் தனக்கு ஏற்படப் போகும் ஆனந்தத்தையே எதிர்பார்த்து, அதிலேயே தனது முழு மனதையும் செலுத்தியவனாய் நடந்து ஆலமரத்தை அடைந்தான். அடைந்தவன், தனது முகத்தை நாற்புறங்களிலும் திருப்பி கண்மணியம்மாள் வந்திருக்கிறாளோ என்று பார்க்க, அவள் காணப்படவில்லை. உடனே அவனது மனதில் ஒருவகையான கலக்கம் தோன்றியது. அவள் வரக்கூடாமல், மீனாக்ஷியம்மாள் ஏதேனும் இடையூறு செய்துவிட்டாளோ, அல்லது அவள், ஒருகால் சிறிது நேரத்திற்குப் பிறகு வருவாளோ என்று மதனகோபாலன் பலவாறு ஐயமுற்றவனாகத் தயங்கி நிற்க, அவ்வாறு கால் நாழிகை நேரம் சென்றது. சிறிது தூரத்திற்கப்பால், இருளில், ஒரு வடிவம் வந்து கொண்டிருப்பதாகத் தென்பட்டது. அதைக் கண்டவுடன், மதனகோபாலனது இருதயம் தடதட வென்று அடித்துக் கொண்டது. அவனது மனதில் இன்பமோ துன்பமோ என்று பகுத்தறியக் கூடாத பலவகைப்பட்ட உணர்ச்சிகள் பொங்கி எழுந்து, அவனை சஞ்சலத்தில் ஆழ்த்தின. வந்தது அவள் தானோ, அல்லது வேறு மனிதரோ என்ற ஓர் அச்சமும் எழுந்து வருத்தியது. அவ்வாறு அவன் தவித்திருந்த சமயத்தில் கண்மணியம்மாள் ஒரு கருப்புத் துணியால் தனது கழுத்து முதல் கால் வரையில் மூடிக் கொண்டு அங்கே வந்து சேர்ந்தாள். தான் செய்தது பெருத்த தவறு என்ற எண்ணத்தினால், அவளது மனமே அவளை மிகவும் வதைத்தமையால் அவளது தேகமும் அச்சத்தையும் நடுக்கத்தையும் காட்டியது; அவளது மனமும் சஞ்சலப்பட்டுத் தவித்தது. ஆனால் தனது சொற்படி

மதனகோபாலன் அங்கே வந்திருப்பானோ மாட்டானோ என்று அவள் சந்தேகமுற்றவளாய், அங்கே வந்தவள் ஆதலால், அவன் காலந்தவறாமல் வந்திருந்ததைக் காண, அவளது மனம் சந்தோஷத்தினால் பொங்கியது; தேகம் பூரித்தது. என்றாலும், தான் தனிமையில் அங்கே வந்ததை மீனாக்ஷியம்மாளாகிலும், பிறராகிலும் கண்டு கொள்வார்களோ என்ற பெருத்த பீதியானது அவளது மேனியை அடிக்கடி நடுக்குவித்தது. அவளது சொற்களும் திக்கிப் போயின. அவளைப் போலவே மதன கோபாலனும் இன்பத்தினாலும் பீதியினாலும் தவித்து வாய் திறந்து பேசமாட்டாமல் தயங்கி நின்றான். அவ்வாறு இரண்டு நிமிஷ நேரம் மௌனத்தில் கழிய, கண்மணியம்மாள்தான் சீக்கிரத்தில் தனது மாடத்திற்குப் போய்விட வேண்டும் என்கிற கவலையினால் தூண்டப்பட்டவளாய், கோகிலத்வனி போன்ற தனது குரலை மெதுவாக எடுத்து அவனிடத்தில் ரகசியமாகப் பேச ஆரம்பித்து, ‘உங்கள் விஷயத்தில் நான் நிரம்பவும் அபராதியாகி விட்டேன்; மன்னிக்க வேண்டும். இந்த இருளில், இப்படி வரும்படி, நான் உங்களை அழைத்தது பெருத்த குற்றம். இந்தக் காரியத்துக்கு நீங்கள் இணங்கி இங்கே வரவே மாட்டீர்கள் என்று நான் நினைத்தேன். நீங்கள் வந்திருப்பதைக் காண, இதிலிருந்து உங்களுக்கு என்னிடத்தில் எவ்வளவு ஆழ்ந்த அபிமானம் இருக்கிறதென்பது நன்றாகத் தெரிகிறது. என் விஷயத்தில் இவ்வளவு அன்பை வைத்திருக்கும் உங்களுக்கு நான் இந்த இழிவை உண்டாக்கி வைத்தது என் மனதையே அறுக்கிறது. அந்த விஷயத்தில் நான் செய்த பெரும் பிழையை நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்’ என்று சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்தலைப் போல மிக அழகாகவும் பணிவாகவும் பேசி, மரியாதையாக அடங்கி வொடுங்கி நெடுந்தூரத்திற்கப்பால் நின்றாள்.

அவளது குணத்தழகையும் சொல்லழகையும் கண்டு பூரித்துப் புளகாங்கிதமடைந்த மதனகோபாலன், "குழந்தாய்! ஆபத்துக்குப் பாவமில்லை என்று நீ தான் உன்னுடைய கடிதத்திலேயே எழுதி இருக்கிறாயே; அப்படி இருக்க, இதைப்பற்றி நீ மேன்மேலும்

எனக்கு உபசார வார்த்தை சொல்ல வேண்டுமா? ஏதோ பெருத்த சங்கடமான நிலைமையில் நீ இருப்பது பற்றியே என்னை இப்படி வருவித்தாய் என்பது தெரியவில்லையா? நீ என்னை இப்படி அழைத்ததைப் பற்றி நான் கொஞ்சமும் வித்தியாசமாக நினைக்கவுமில்லை; இப்படிப்பட்ட தகாத காரியத்தில் இறங்கு கிறோமே என்றும் நான் நினைக்கவில்லை. ஆனால் உனக்கு எவ்விதமான துன்பம் நேர்ந்ததோ என்ற ஒரே கவலையும், அது என்னால் விலக்கக்கூடியதோ விலக்கக்கூடாததோ என்ற சஞ்சலத்தையும் அந்த நேரம் முதல் இன்னமும் கொண்டவனாக இருக்கிறேன்; நீ அதிக நேரம் இந்த இடத்தில் என்னோடு நிற்பது சரியல்ல. ஆகையால் நீ விஷயத்தை உடனே சொல்லலாம்" என்று அன்பொழுக நிரம்பவும் உருக்கமாக மொழிந்தான்.

அதைக் கேட்ட கண்மணியம்மாள், "ஆம்; நீங்கள் சொல்வது போல நான் சீக்கிரமாகத் திரும்பிப் போக வேண்டியவள்தான்; அதே கவலையினால், என் வாய் குழறிப் போகிறதாகையால் விஷயத்தை எப்படிச் சொல்லுகிறது என்று மலைப்பாக இருக்கிறது. என்னை மாரமங்கலத்தார் வீட்டில் கட்டிக் கொடுக்க வேண்டும் என்று இவர்கள் ஏற்பாடு செய்திருக்கிறதாக நான் முன்னமேயே உங்களிடத்தில் சொல்லி இருக்கிறேன் அல்லவா! சில நாள்களுக்கு முன் இவர்களுடைய எண்ணம் எப்படி இருந்த தென்றால் மைனருடைய தகப்பனார் மரணாந்த சாசனத்தில் இந்தக் கலியாணத்தை மைனருக்கு வயசு வந்த பிறகு செய்ய வேண்டும் என்று எழுதி வைத்துவிட்டு இறந்து போனாராம்; அதன் பிரகாரம் இந்தக் கலியாணம் அடுத்த வருஷத்தில் நடக்க வேண்டியதாக இருந்தது. கல்யாணியம்மாள் அவர்களும் அதன்படியே தான் நடத்த வேண்டும் என்று இதுவரையில் சொல்லி வந்தார்கள்; ஆனால் அவர்கள் சில நாட்களுக்கு முன் இங்கே வந்து அத்தை யம்மாளிடம் பேசிக் கொண்டிருந்தபோது மைனர் துன்மார்க்கத்தில் இறங்கி அழிந்து போய்விடுவார் என்று தாம் அஞ்சுவதால், இந்தக் கலியாணத்தை இப்போதே முடித்துவிட வேண்டும் என்று தீர்மானித்தார்கள். அதற்கு அத்தையம்மாளும் இணங்க, அப்போதே இருவரும் போய் ஊரில் உள்ள ஜனங்களை எல்லாம்

நிச்சயதாம்பூல முகூர்த்தத்துக்கு அழைத்துவிட்டு வந்தார்கள்; ஆனால் கல்யாணியம்மாள் அவர்கள் அன்றிரவு யாரோ சிலரை அழைக்கும் பொருட்டு ஆலந்தூருக்குப் போய்த் திரும்புகையில் திருடர்கள் வழிமறித்து அவர்களை அடித்து சொத்துகளைக் கொண்டு போய் விட்டார்களாம்; அதன் சம்பந்தமாக அன்றிரவு முழுதும் போலீஸ் ஸ்டேஷன் முதலிய இடங்களுக்குப் போய் அலைந்து திரிந்துவிட்டு மறுநாள் காலையில் தமது ஜாகைக்கு வந்தார்கள். அதனால் ஏற்பட்ட தேக அசௌக்கியத்தினால் அவர்கள் அந்த நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை மாற்றி இன்றைய இரவுக்கு வைத்துக் கொண்டார்கள். ஆனால் இன்னமும் அவர்களுடைய உடம்பு அசௌக்கியமாக இருப்பதால் இன்றைக்கும் அது நிறைவேறாமல் வைக்கப்பட்டிருக்கிறது. அவர் களுடைய பெண்களுக்கும் சேர்த்து மூன்று கலியாணங்களையும் அதிசீக்கிரத்தில் மாரமங்கலம் அரண்மனையில் நடத்த வேண்டும் என்று அவர்கள் உத்தேசிப்பதாக இன்று அத்தையம்மாளுக்குக் கடிதம் வந்ததாம்; இந்த விஷயத்தில் என்னுடைய அபிப்பிராயம் இன்னதென்பதை நான் உங்களிடத்தில் முன்னமேயே தெரிவித்தேன் அல்லவா; அதையே உறுதியாக வைத்துக் கொண்டிருக்கிறேன். என்னை அவர்கள் நிச்சயதாம்பூல முகூர்த்தத் துக்காக அலங்காரம் செய்து அழைத்துக் கொண்டு போகும் முன் நான் மாடியிலிருந்து கீழே விழுந்து என்னுடைய உயிரை விட்டு விடத் தீர்மானித்து விட்டேன். அன்றைய தினம் இந்த முகூர்த்தம் ஒத்தி வைக்கப்படாமல் இருந்தால் நான் இந்நேரம் போன இடத்தில் புல்முளைத்துப் போயிருக்கும்; இன்று காலையில் அவர்களுடைய கடிதம் வருகிற வரையில் நான் இன்றிரவு உயிரை விட்டுவிட வேண்டும் என்ற முடிவையே உறுதியாக வைத்திருந்தேன். இப்போதும் நான் அந்த உறுதியை மாற்றிவிடவில்லை. ஆனால் அவர்கள் முகூர்த்தத்தை ஒத்தி வைத்திருப்பதைப் போல, நானும் என்னுடைய மரணத்தை சில நாள்கள் ஒத்தி வைத்திருக்கிறேன். அந்த விஷயத்தில் நான் உங்களுக்கு எவ்வித சிரமமும் கொடுக்க நினைக்கவில்லை. நான் எப்படியும் என்னுடைய உயிரை விடுவதே அத்தியாவசியமானதாக ஆகிவிட்டதாகையால், என்னை அந்த அகால மரணத்திலிருந்து தப்பவைக்கக் கூடிய மனிதர்

எனக்கு எவருமில்லை; என்னுடைய மனசு ஒரு முக்கியமான விஷயத்தினால் புண்பட்டு தீராத வேதனையை அடைந்து கொண்டிருக்கிறது; அது எதனால் என்றால், நான் என்னுடைய உயிருக்குயிராக மதித்து அபரிமிதமான மதிப்பு வைத்திருந்த என்னுடைய உபாத்தியாயர் ஓரிடத்தில் தகாத காரியத்தைச் செய்ய எத்தனித்ததாக நான் கேள்விப்பட்டேன். அது முதல் நான் சரியான படி உண்ணவுமில்லை; உறங்கவுமில்லை. அந்த அவதூறு உண்மையாக இருக்குமா என்ற நினைவும் விசனமுமே என் மனசை ஓயாமல் அறுத்துக் கொண்டிருக்கின்றன. இந்த மனக் குறையோடு நான் உயிரை விட்டால் என்னுடைய மனசு ஒரு நாளும் வேகாது; ஏழேழு தலைமுறைக்கும் என் மனம் தவித்துக் கொண்டே இருக்கும். ஆகையால் இந்த விஷயத்தில் உண்மை யாக என்ன நடந்ததென்பதைக் கேட்டறிந்து என் மனசைத் திருப்தி செய்து கொண்டு உயிரை விட்டுவிட வேண்டும் என்பது என்னுடைய விருப்பம். அதைக் கருதியே இன்று நான் உங்களை இப்போது இந்த இடத்துக்கு வரச்சொன்னது; ஏனென்றால் இன்றைய முகூர்த்தம் ஒத்தி வைக்கப்படாதிருந்தால் நான் இன்னம் ஒரு மணிக்குள் உயிரைவிட வேண்டியவனல்லவா; அதனாலே தான் ஆபத்துக்குப் பாவமில்லை என்று நான் உங்களுக்கு எழுதினேன். ஆனால், இன்று காலையில், கல்யாணியம்மாள் அவர்களிடத்திலிருந்து கடிதம் வந்தவுடனே, நான் மறுபடியும் உங்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன்; இன்றைக்கு வரவேண்டாம் என்றும், நாம் பேச வேண்டுவதை பிறகு பேசிக் கொள்ளலாம் என்றும், இன்னம் வேறு சில சங்கதிகளைக் குறித்தும் நான் அந்தக் கடிதத்தில் எழுதினேன். ஆனால் அதைக் கொடுத்தனுப்ப, சரியான வேலைக்காரி அகப்படவில்லை. என்னிடத்தில் அந்தரங்கமாக நடந்து கொள்ளும் வேலைக்காரி, இன்றைய தினம் வேலைக்கு வராமல் இருந்து விட்டாள்; அந்தக் கடிதம் கூட இதோ இருக்கிறது; பாருங்கள்!" என்று கூறிய வண்ணம் தனது மடியிலிருந்த ஒரு கடிதத்தைக் எடுத்து நீட்ட, மதனகோபாலன் கரைகடந்த விசனத்தில் ஆழ்ந்தவனாய், அந்தக் கடிதத்தைத் தனது கையில் வாங்கிக் கொண்ட வண்ணம், "குழந்தாய்! எனக்கு அவமானம் ஏற்பட்டதைப் பற்றி நான் படும் விசனத்தைவிட, நீ உயிரை

விடுவதாகச் சொல்லும் வார்த்தைகள், பழுக்கக் காய்ந்த சலாகைகள் போல என்னுடைய காதுகளையும் மனதையும் துளைத்துப் புண் படுத்திவிட்டன. நீ நல்ல விவேகியாக இருந்தும், இப்படி அதைரியப்படலாமா? மனிதன் தன்னுடைய இஷ்டப்படி உயிரை விடுவது சுலபமான காரியமாக இருந்தால், பிறந்த முதல் தரித்திரத்திலும், துயரத்திலும், துன்பங்களிலும் இருந்துழலும் எத்தனையோ கோடி ஜனங்கள், தங்களுடைய கஷ்டங்களைச் சுலபமாக நிவர்த்தித்துக் கொண்டிருப்பார்களே! அது எளிய காரியமல்ல. மனிதன் தனக்குத் தானே அந்தக் காரியத்தை முடிப்பது ஒருநாளும் பலியாத காரியம். ஆகையால் அந்த நினைவை விட்டுவிடு; நான் அன்றைய தினம் சொன்னபடி, அடுத்த நிமிஷத்தில் என்ன நடக்கும் என்பது நமக்குத் தெரியாது; இந்த நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை நடத்துவதற்கு இவர்கள் இரண்டு நாட்கள் குறித்தார்களே; அது நிறைவேறியதா பார்த்தாயா? இதிலிருந்தே கடவுள் உன்னுடைய பட்சத்தில் இருக்கிறார் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. உன்னை மீளாத் துன்பத்தில் ஆழ்த்தக்கூடிய இந்தக் கலியாணத்தை கடவுள் ஒரு நாளும் நிறைவேற்றி வைக்க மாட்டார். உன்னுடைய பெரிய தகப்பனாரான கிருஷ்ணாபுரம் ஜெமீந்தாரை நான் சமீபகாலத்தில் கண்டேன்; அந்த மைனருக்கு உன்னைக் கட்டிக்கொடுப்பது அவருக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை. நீ வேறு ஒருவரைக் கலியாணம் செய்து கொள்ள ஆசைப்படுவதாகச் சொன்னாய் அல்லவா? அந்த மனிதர் யார் என்பதை அறிந்து கொண்டு வந்தால், அந்தப்படி கலியாணத்தை தாம் நிறைவேற்றி வைக்க ஏற்பாடு செய்வதாக 'அவர்கள் உன்னிடம் தெரிவிக்கச் சொன்ன தன்றி, இந்த விஷயத்தில் நீ அதைரியப்படாமல் இருக்கும்படியும் கேட்டுக்கொள்ளச் சொன்னார்கள்" என்று மிகுந்த அன்போடு கூறினான்.

அதைக் கேட்ட கண்மணியம்மாள் மிகுந்த வியப்பும் சஞ்சலமும் அடைந்தவளாய், "அப்படியா! அவர்கள் எங்களை எல்லாம் கவனிக்க மாட்டார்கள் என்றல்லவா நான் நினைத்திருந்தேன். இந்த விவரம் எல்லாம் அவர்கள் வரையில் எட்டியிருக்கிறதா! இது ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றாள்.

மதனகோபாலன், "அவர்கள் உன் விஷயத்தில் சதாகாலமும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்; உன்னை உனக்கு விருப்பமான இடத்தில் கட்டிக்கொடுத்து, பெருத்த செல்வத்தோடு அமோகமாக உன்னை வைக்க வேண்டும் என்று அவர் உறுதியாக எண்ணிக் கொண்டிருக்கிறார்; நீ இனிமேல், உன்னுடைய கலியாண விஷயத்தைப் பற்றி கொஞ்சமும் கவலைப்படவும் வேண்டாம்; உயிரை விடவேண்டும் என்று நினைக்கவும் வேண்டாம்" என்றான்.

அதைக் கேட்ட கண்மணியம்மாள் சலிப்பாகப் பேசத்தொடங்கி, "நான் மகா துரதிர்ஷ்டசாலி என்பதை நான் பிறந்த காலத்திலிருந்தே தெரிந்து கொண்டிருக்கிறேன். யார் மனசு வைப்பதானாலும், என்னுடைய தலைவிதி மனசு வைக்க வேண்டாமா? எது எப்படி நடந்தாலும் சரி; நான் என்னைப்பற்றி அவ்வளவாக கவலைப்பட வில்லை; சாகத் துணிந்தவனுக்கு சமுத்திரம் முழங்கால் அளவு என்பார்கள். என் தலைவிதிப்படி முடியட்டும். அது போகட்டும்; நேரமாகிறது; நான் குறித்த முக்கியமான விஷயத்தில் எது உண்மை என்பதை மாத்திரம் நீங்கள் சொல்லிவிடுங்கள்; நான் அவ்வள வோடு திருப்தி அடைந்து போய்விடுகிறேன்" என்றாள்.

அதைக் கேட்ட மதனகோபாலன் மிகுந்த கவலையோடு, "குழந்தாய்! நான் ஓரிடத்தில் தகாத காரியத்தைச் செய்ய எத்தனித்த தாக உன்னிடத்தில் சொன்னது யார்?" என்று கேட்க, கண்மணி யம்மாள், "நீங்கள் எவர்களிடத்தில் அப்படி நடந்து கொண்டீர்க ளாமோ, அவர்களே நேரில் வந்து அத்தையம்மாளிடத்தில் சொன்னார்கள்" என்றாள்.

மதனகோபாலன், "குழந்தாய்! இவ்வளவு காலமாக நான் உன்னோடு பழகுவதிலிருந்து, நீ என்னுடைய நடத்தையைப் பற்றியும், குணத்தைப் பற்றியும் கொஞ்சமாவது அறிந்து கொண்டிருப்பாய். நான் அப்படிப்பட்ட தவறான காரியத்தைச் செய்யக்கூடியவன் என்று உன் மனசு நினைக்குமா?" என்றான்.

கண்மணியம்மாள் துணிவும் மகிழ்ச்சியும் அடைந்து, "சரி; இப்போது என் மனம் உண்மையில் பூரிக்கிறது. என் மனசிலிருந்த சந்தேகமெல்லாம் விலகியது. இது என் காதில் விழுந்த போது, இது

சுத்தப் பொய்யாகத்தான் இருக்க வேண்டும் என்று என் மனசு உறுதியாக நினைத்ததாயினும், அவர்கள் சொன்ன உறுதியில் இருந்து ஒருவகையான சந்தேகம் மாத்திரம் இருந்தது. இப்போது என் மனம் முழுதும் திருப்தி அடைந்துவிட்டது. இருந்தாலும், நீங்கள் இப்படிப்பட்ட அவதூறுக்கு ஆளான விவரம் என்ன என்பதைச் சொல்லலாமானால், அதையும் தெரிந்து கொள்ளு கிறேன்" என்றாள்.

மதனகோபாலன் சிறிது தயங்கி, கல்யாணியம்மாள், தன் விஷயத்தில் அபாண்டமான அவதூறை வெளியிட்டிருந்தாலும், தான் அவளைக் காட்டிக் கொடுக்கக் கூடாதென்ற தயாளமான எண்ணங் கொண்டவனாய், "எனக்கு இந்த அவதூறு ஏற்பட்டது என்னுடைய முன் ஜென்ம கர்மத்தினால் என்றே நினைக்கிறேன்; அவர்கள் மேலும் குற்றமில்லை. அன்றைய தினம் இங்கே எனக்கு ஏற்பட்ட அவமானத்தினால் என் மனசு சரியான நிலையில் இல்லாது போனபடியால், நான் அன்று முழுதும் பைத்தியம் பிடித்தவனைப் போல புத்தி மாறாட்டம் அடைந்திருந்தேன். அந்த நிலைமையில், நான் அவர்களுடைய பங்களாவுக்குப் போய் பாடம் சொல்லிக் கொடுத்துவிட்டு வெளியில் வரும் போது நான் இதே நினைவாக வந்தேன் ஆகையால் ஏதோ மறதியால், வழி தவறிப் போய்விட்டது. தற்செயலாக நான் கல்யாணியம்மாள் அவர்களுடைய அந்தப்புரத்துக்குள் நுழைந்து விட்டேன். அவர்கள் தலை நோவென்று அதற்கு முன்னாகவே போய் கட்டிலில் படுத்திருந்தார்கள். அவர்களைக் கண்டவுடன், நான் என்னுடைய தவறை உணர்ந்து, உடனே அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு திரும்பி வெளியில் போக முயன்றேன். என் மனசின் சங்கடமான நிலைமை அவர்களுக்குத் தெரியாதல்லவா? அதனால் அவர்கள், என் வார்த்தையை அவ்வளவாக நம்பாமல், தமக்கருகில் வரும்படி அழைத்தார்கள்; நான் அப்படியே போய், எனக்கு உடம்பு அசௌக்கியமாக இருப்பதால், மனம் குழம்பிப் போய் அங்கே வந்துவிட்டதாகவும், நான் உடனே வீட்டுக்குப் போய்ப் படுத்துக்கொள்ள வேண்டும் என்றும் சொன்னேன். அவர்கள் என் விஷயத்தில், அபாரமான

அன்பு வைத்திருப்பவர்கள் ஆதலால், என் விஷயத்தில் மிகவும் இரக்கங் கொண்டு, ஒரு சோபாவில் உட்கார்ந்து கொள்ளச் சொன்னார்கள். காப்பி வரவழைத்துத் தருவதாகவும், வண்டியில் அனுப்புவதாகவும், அவர்கள் எனக்கு உபசரணை புரிந்ததன்றி, அங்கே அரை நாழிகை நேரமாவது இருந்து சிரம பரிகாரம் செய்து கொண்டு போகலாம் என்று சொன்னார்கள். எனக்கு அங்கே ஏற்பட்ட அவமானத்தினால், நான் பைத்தியம் பிடித்தவனைப் போல இருந்தேன் ஆகையால், அவர்களுடைய உபசரணைகள் என் மனசில் படவே இல்லை. அதோடு, எனக்கு இங்கே நேர்ந்த விபத்தைப் போல அங்கேயும் ஏதேனும் பெருந்துன்பம் சம்பவிக்கப் போகிறதே என்ற பெரும்பீதி என்னைத் தூண்டிக் கொண்டிருந்தது ஆகையால், நான் அவர்கள் சொன்னபடி செய்ய மறுத்து பிடிவாதம் பிடித்து, அங்கே இருந்து நான் வெளியில் வர முயன்றேன். அவர்கள் என்னை ஒரு குழந்தையைப் போல மதித்து கரைகடந்த அன்போடு என்னைக் கடிந்து, ஒருவித உரிமை பாராட்டி, போக வேண்டாம் என்று என்னைத் தடுத்தார்கள். நான் அதைக் கேளாமல் வாசலை நோக்கி வர, அவர்கள் நிற்கும்படி சொல்லிக் கொண்டே பின்னால் துரத்திக் கொண்டு வந்தார்கள். அப்போது இன்னொரு வாசலின் வழியாக யாரோ சிலர் அந்த அந்தப்புரத்துக்குள் வந்தார்கள். அநேகமாக அவர்கள் அவர்களு டைய பெண்களாகத் தான் இருக்க வேண்டும். நான் அதற்குள் வெளியில் வந்துவிட்டேன். உள்ளே வந்த பெண்கள் தம்மைப் பார்த்து ஏதேனும் கெடுதலாக நினைக்கப் போகிறார்களே என்ற எண்ணத்தினால், அவர்கள் என்மேல் இப்படிப்பட்ட அவதூறைக் கட்டுப்பாடாகச் சொல்லியிருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன். அதற்கு நானே காரணமானவன். என்மேல் அளவற்ற அபிமானத்தோடு, அவர்கள் உபசரணை புரிந்ததை மறுத்து நான் ஓடி அவர்களைப் பற்றி பிறர் சந்தேகிக்கும்படியான நிலைமைக்கு அவர்களைக் கொண்டு வந்தவன் நானே. ஆகையால், இந்த விஷயத்தில், நான் அவர்களிடத்தில், மனப்பூர்வ மாக எவ்வித துராசையும் கொள்ளவில்லை என்பது சத்தியமான சங்கதியானாலும், அவர்களுடைய கற்பைப்பற்றி அயலார் சந்தே

க்கும் படியான நிலைமையில் அவர்கள் இருந்தது என்னுடைய தவறினாலேயே அன்றி வேறல்ல. அவர்கள் கற்புநிலை தவறாத உத்தம ஜாதி ஸ்திரீ என்பதைப் பற்றி கொஞ்சமும் சந்தேகமே இல்லை. பிறர் தமது கற்பைப்பற்றி சந்தேகங்கூடக் கொள்ளக் கூடாது என்று, அவ்வளவு அதிக ஜாக்கிரதையாக நடந்து கொள்வது மேலான குணமல்லவா? நான் அன்றைய தினம் உன்னிடத்தில் பேசிய பிறகு, நான் அவர்களைப் பற்றி அவ்வளவாக நல்ல அபிப்பிராயம் கொள்ளாதிருந்தேன், அதன் பிறகு நடந்த சங்கதிகளிலிருந்து நான் அந்த அபிப்பிராயத்தை முற்றிலும் மாற்றிக் கொண்டேன். அவர்கள் என்னைப் பற்றிச் சொன்ன அவதூறினால், என்னை எல்லோரும் வேலையில் இருந்து விலக்கிவிட்டதன்றி, நான் அயோக்கியன் என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அவைகளைப் பற்றி நான் கொஞ்சமும் கவலைப்படவில்லை. நான் வேறே எந்த ஊருக்காவது போனால், இதைவிட அதிகமாகச் சம்பாதித்து விடுவேன். இந்த அவதூறும் மறைந்து போகும். ஆனால், ஓர் உத்தம ஜாதி ஸ்திரீயின் கற்பைப்பற்றிப் பிறர் நிந்தனை சொல்லாமல், காப்பாற்றும் பொருட்டு, நான் இந்த சொற்ப நஷ்டத்தையும் ஏளனத்தையும் ஏற்றுக்கொள்வது ஓர் அபாரமான காரியமாகுமா? இதைப்பற்றி நான் நிரம்பவும் சந்தோஷமடைவதன்றி, இதனால், எனக்குப் பெருத்த புண்ணியமும் பலிதமானதாக எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆகையால், இந்தச் சம்பவத்தில் அவர்களின் மேல் கொஞ்சமும் தவறில்லை; ஆனால் நான் அவர்களை பெற்ற தாயைப் போலவே நினைத்திருப்பவன் ஆகையால், நான் சொப்பனத்தில்கூட அவர்களைப் பற்றி வித்தியாசமான எண்ணம் நினைத்திருக்க வில்லை ஆனாலும், நான் அவர்களிடத்தில் அவநம்பிக்கை கொண்டு ஓடியது மாத்திரம் என்மேல் பெருத்த குற்றந்தான். ஆனதுபற்றி, எனக்கு உடனே கைமேல் தண்டனை பலித்துவிட்டது" என்று சிறிதும் கபடமில்லாமல், மனப்பூர்வமான இரக்கத்தோடும் அனுதாபத்தோடும் கூற, கண்மணியம்மாள் அவனால் சொல்லப்பட்ட ஒவ்வொரு வார்த்தையையும் வேத வாக்கியமாக அப்படியே ஏற்றுக் கொண்டதன்றி, அவனது

மேலான குணத்தையும் தயாள நினைவையும் கண்டு, கரைகடந்த சந்தோஷ சாகரத்தில் ஆழ்ந்தவளாய் மெய்ம்மறந்து, இரண்டொரு விநாடி நேரம் நின்ற பிறகு, "சரி; இப்போதே என் மனம் குளிர்ந்தது; இனி நான் இறந்தாலும், என் ஜீவன் சாந்தி அடைந்துவிடும். எனக்கு நேரமாகிறது, நான் போய்விட்டு வருகிறேன்" என்றாள்.

அதைக் கேட்ட மதனகோபாலன், "குழந்தாய்! உன்னுடைய பெரிய தகப்பனார் அறிந்து கொண்டுவரச் சொன்ன ஒரு விஷயம் மிகுதி இருக்கிறது. அதை மாத்திரம் நீ சொல்வாயானால், நான் போய்விட்டு வருகிறேன்" என்றான்.

அவன் அவ்வாறு பேசிய சமயத்தில் சிறிது தூரத்தில், ஒரு விதமான ஓசை உண்டானதாகத் தோன்றியது; அதைக் கேட்ட கண்மணியம்மாளும், மதனகோபாலனும் மருண்டு திரும்பி நாற் புறங்களையும் உற்று நோக்கினர். ஆனால், அது இன்னதென்பது விளங்கவில்லை. மதனகோபாலன் மிகுந்த பதைப்போடு, "நாம் இனி இங்கே நிற்பது சரியல்ல; நீ யாரோ ஒரு புருஷரைக் கலியாணம் செய்து கொள்ள ஆசைப்படுகிறதாகச் சொன்னாயே; அவர் யார் என்பதை மாத்திரம் ஒரு குறிப்பாகச் சொல்லிவிட்டு, நீ போ!" என்றான்.

அந்தச் சமயத்தில், அவர்கள் இருந்த இடத்திற்குச் சிறிது தூரத்திற்கு அப்பால் மனித உருவங்கள் வந்ததாகத் தோன்றிய தன்றி, அவர்கள் நடந்ததால் உண்டான ஓசையும் கேட்டது. அதை உணர்ந்த இருவரும் பெரும்பீதி அடைந்தவர்களாய், அதற்கு மேல் ஒருவருக்கொருவர் வாய்திறந்து பேசமாட்டாமல் திகைத்து, அவர்கள் யாவரோ என்ற ஐயமும் அச்சமும் கொண்டனர். உடனே மதனகோபாலன், "குழந்தாய்! நீ நிற்க வேண்டாம்; விசையாகப் போய்விடு!" என்று பதைபதைப்போடு கூற, கண்மணியம்மாள் ஓட்டமாக ஓடி மரங்களின் இடையில் புகுந்து பங்களாவை நோக்கிச் சென்று மறைந்து போனாள்; அங்கே வந்தவர்கள் ஒருகால் திருடர்களாக இருப்பரோ என்று ஐயமுற்ற மதனகோபாலன், தான் என்ன செய்வதென்பதை அறிய மாட்டாமல், இரண்டொரு விநாடி நேரம் நின்ற பிறகு, அந்த ஆலமரத்தின் அடிக்கட்டைக்கு அப்புறத்தில் தான் மறைந்து

கொண்டால், அவர்கள் போன பிறகு, தான் வெளியில் போய் விடலாம் என்று நினைத்தவனாய் விசையாகப் பாய்ந்து, ஆலமரத்தின் அப்பால் போய் மறைய, அதற்குள் "திருடன்! திருடன்! ஓடுகிறான்! மறைகிறான்! விடாதே! பிடி பிடி" என்ற கூக்குரல் நிரம்பவும் சமீபத்தில் கேட்டது. நாலைந்து மனிதர் பல திக்குகளிலும் வளைத்துக் கொள்ளும் எண்ணத்தோடு பிரிந்து மூலைக்கொருவராக ஓடினர்; "இதோ ஓடுகிறான்; அதோ ஓடுகிறான்; சீக்கிரமாக வாருங்கள்; சீக்கிரமாக வாருங்கள்" என்று சொல்லிக் கொண்டே ஆலமரத்திற்கு அப்பால் ஓடிவந்த துரை ராஜா கையில் பிடித்திருந்த ரிவால்வரின் விசையை அழுத்தி, மதன கோபாலனது காலைப் பார்த்து சுட்டுவிட்டான்; ரிவால்வரின் ஓசை உண்டாகும் முன் மதனகோபாலன், "அப்பாடா!" என்று வீரிட்ட கதறலோடு படேரென்று கீழே விழுந்தான். யாரோ ஒருவன் வீழ்ந்தான் என்பதை உணர்ந்தவுடனே போலீஸ் ஜெவான்கள் நால்வரும் அந்த இடத்திற்கு வந்து மரத்தைச் சூழ்ந்து கொண்டனர்.

★ ★ ★

18—வது அதிகாரம்

## விபரீதக் காட்சி

அன்று காலையில் துரைஸானியம்மாள், மோகனரங்கனிடத்தில் நடந்து கொண்டதான விபரீதக் காட்சியைக் கண்ட பிறகு, கல்யாணியம்மாளுக்கு உண்மையிலேயே ஜுரம் ஏற்பட்டு விட்டது. தான் எழுந்து போஜனம் செய்ய வேண்டும் என்ற நினைவையும் கொள்ளாதவளாய், கல்யாணியம்மாள் கரைகடந்த துயரக்கடலில் ஆழ்ந்து கிடந்தாள். மைனர் பாலாம்பாளுக்கு எழுதிக் கொடுத்திருந்த பத்திரத்தை தான் ரஜிஸ்டர் செய்து கொடுத்து விடுவதாக பயமுறுத்திப் போன விஷயம் அப்போது கல்யாணியம்மாளுக்கு அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை. மதனகோபாலனால் தனக்கு ஏற்பட்டுள்ள விபத்தைக் காட்டிலும், துரைஸானியம்மாளது விஷயமே மகா பயங்கரமானதாக இருந்தது. தான் மனப்பூர்வமாகக் கெட்ட வழியில் செல்பவளன்று

ஆதலால், தனக்கு நேர்ந்துள்ள விபத்து தற்செயலாக ஏற்பட்ட தென்றும், துரைஸானியம்மாள் வேண்டும் என்றே துன்மார்க் கத்தில் இறங்கியிருப்பதால், அவளை ஆரம்பத்திலேயே சீர் திருத்தாவிட்டால் அவள் தனது ஆயுட்காலம் வரையில் கெட்டுப் போவதுமன்றி, அதனால் தங்களது குடும்பத்திற்கு என்றென் றைக்கும் நீங்காத இழிவும் நிந்தனையும் உண்டாகும் என்று நினைத்த கல்யாணியம்மாள், அவளை நல்வழிப்படுத்ததான் என்ன தந்திரம் செய்யலாம் என்று சிந்தனை செய்தவளாகப் படுத்திருந்தாள். இடையில், வேலைக்காரிகள் வற்புறுத்தியதைக் கருதி ஏதோ சொற்பமான பத்திய ஆகாரம் உட்கொண்டு ததேவத்தியானமாகப் படுத்திருந்தாள்.

அவ்வாறு பிற்பகல் மூன்று மணி சமயம் வரையில் சயனித் திருந்த அந்த அம்மாள் ஏதோ ஒருவகையான முடிவு செய்து கொண்டு, தனது சயனத்தை விட்டெழுந்து சிறிது நேரம் உலாவ விட்டு பக்கத்தில் கிடந்த மேஜைக்கருகில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து, ஒரு காகிதத்தை எடுத்து அதில் அடியில் வருமாறு எழுதலானாள்:-

படித்தவுடன் கிழித்து விடவும்

மகா-௱-௱-ஸ்ரீ, மகாகனம் பொருந்திய முதலியார் அவர்களுக்கு கல்யாணியம்மாள் நமஸ்காரம் செய்து எழுதும் விக்ஞாபனம்; நேற்று நீங்கள் சொன்ன யோசனைப்படியே, நான் இன்று காலையில் மீனாக்ஷியம்மாள் அவர்களுக்குக் கடிதம் எழுதி அனுப்பி விட்டேன். அவர்கள் அதைப்பற்றி ஆயாசப்படாமல், அதற்கு இணங்கிவிட்டார்கள். நாம் நம்முடைய இரண்டு பெண் குழந்தைகளின் கலியாணத்தை அதிக துரிதமாக முடிவுகட்டிவிட வேண்டியது முதல் காரியமாக இருக்கிறது. பையனுடைய விஷயத்தையும் நாம் நேற்று யோசித்தபடியே செய்துவிடத் தீர்மானித்து, அதற்குத் தகுந்த மனிஷ்யாளுக்கு ஆள் அனுப்பி இருக்கிறேன். அந்த மனுஷ்யாள் இன்று ராத்திரி வந்து சேருவார்கள். அவர்களைக் கொண்டு அந்த வில்லங்கத்தையும் முடிவாகத் தீர்த்துக்கொண்டால், என்னுடைய கவலைகளிலும்

துன்பங்களிலும் முக்காலே அரைக்கால் பாகம் நிவர்த்தியாகிவிடும். அதன் பிறகு நான், இந்தப் பீடைபிடித்த பட்டணத்தின் முகத்தி லேயே விழிக்காமல், மாரமங்கலம் போய்ச் சேர்ந்து, அதிசீக்கிரத் தில் மூன்று கலியாணங்களையும் நடத்தி வைத்துவிட வேண்டும் என்று பரிபூரணமான நம்பிக்கை கொண்டிருக்கிறேன். அதற்கு ஈசன் அருளும், என் எஜமானருடைய ஆசீர்வாதமும் ஏற்பட வேண்டுமாய் நான் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன். நான் இத்தனை வருஷ காலம் எவ்விதத் துன்பமுமின்றி இருந்து வந்து விட்டேன். இப்போது சில மாசகாலமாக, நான் நரக வேதனை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். நான் காலை வைத்த இடத்தில் எல்லாம், புதிய விபத்துகளும் விபரீதங்களும் கிளம்பி என்னை எதிர்க்கின்றன. இவைகள் எல்லாம், சூரியன் முன் இருளென நீங்கும் காலம் வருமோ வராதோ என்ற ஏக்கமே என்னுடைய உயிரைக் குடித்துக் கொண்டிருக்கிறது.

நிற்க, இன்னொரு முக்கியமான விஷயம். நீங்கள், அநாதைப் பையன் என்ற இரக்கங்கொண்டு, நமது பங்களாவில் குமாஸ்தா வேலையில் கொண்டு வந்து வைத்த மோகனரங்கன் என்னும் பையன், பெண் பிள்ளையைப் போல வசீகரமான தோற்றத்தைக் கொண்டிருப்பதால், அவன் விஷயத்தில், துரைஸானியம்மா ளுடைய மனசு ஒரு மாதிரி பேதித்திருப்பதாக நான் சந்தேகப்படக் கூடிய சில சூசனைகள் என் கண்ணில் பட்டன. நம்முடைய குழந்தை நல்ல பருவத்துப் பெண்ணாகவும் அறியாத குழந்தை யாகவும் இருப்பதாலும், இப்படிப்பட்ட மனிதர்கள் அவளுடைய கண்ணில் படாமல், இன்னம் சொற்ப காலம் வரையில் நாம் காப்பாற்றி அவளை ஒருவரிடம் கட்டிக்கொடுத்து விட்டால், அதோடு நம்முடைய பொறுப்பும் தீர்ந்து போகும். ஆகையால், அந்தப் பையனிடத்திலேயே, நான் இந்தக் கடிதத்தைக் கொடுத்து, அவனை உங்களிடம் அனுப்பி இருக்கிறேன். அவன் இனி இந்த பங்களாவுக்கே திரும்பி வராதபடி, அவனை நீங்கள் வேறே எவ்விடத்திலாவது வேலைக்கு அமர்த்திவிட வேண்டும்; ஆனால் இவர்களைப் பற்றி நாம் சந்தேகிக்கிறோம் என்பதை இவனாவது, நம்முடைய குழந்தை துரைஸானியம்மாளாவது கண்டுகொள்ளாத படி பக்குவமாக, நீங்கள் எனக்கு இந்த உதவியை அவசியம்

செய்ய வேண்டும். நான் விதவை; உலக அனுபவம் இல்லாத ஸ்திரீ ஜென்மம். இந்த மூன்று குழந்தைகளையும் நல்ல வழியில் நடத்தும் பொறுப்பையும் இவ்வளவு பெரிய சமஸ்தானத்தை வைத்தாளும் அபாரமான சுமையையும் என் தலையின் மேல் வைத்துவிட்டு என்னுடைய பிராணபதி அவர்கள் போய்விட்டார் கள். நான் இவைகளினால் படும் துன்பமும் துயரமும் ஈசுவரனுக்கே தெரிய வேண்டும். நான் உங்களை என்னுடைய சொந்த சகோதரரைப் போல மதித்திருக்கிறேன்; தலை இல்லாத இந்தப் பரிதாபகரமான குடும்பத்தைக் காப்பாற்றி நிலைநிறுத்துவது உங்களைச் சேர்ந்த கடமை. இந்தப் பையன் விஷயத்தில் நீங்கள் என்ன ஏற்பாடு செய்கிறீர்கள் என்பதை எழுதி வேறோர் ஆள் மூலமாக அனுப்பும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

*இப்படிக்கு, நன்றிமறவாத*
***கல்யாணியம்மாள்.***

—என்று அந்த அம்மாள் சிவஞான முதலியாருக்கு ஒரு கடிதம் எழுதி, அதை ஓர் உரைக்குள் போட்டு, அதன் வாயை ஒட்டிய பின், மேல்விலாசம் எழுதி, அதற்கு இரண்டு மூன்றிடங்களில் அரக்கு முத்திரை வைத்து, அந்தக் கடிதத்தைத் தனது கையில் வைத்துக் கொண்டவளாய் எழுந்து, சிறிது நேரம் உலாவியபின், தனது கட்டிலில் ஏறி உட்கார்ந்து சால்வையால் தன்னைப் போர்த்திக் கொண்டபின், வேலைக்காரியை அழைக்க, வாசற் படியில் எப்போதும் ஆயத்தமாக நின்று கொண்டிருந்த தாதி உள்ளே நுழைந்தாள். அவளைக் கண்ட கல்யாணியம்மாள், "அடி! நம்முடைய ஆபீஸ் மண்டபத்துக்குப் போய் குமாஸ்தா மோகன ரங்கனை அழைத்துவா" என்றாள். தாதி அதன்படி செய்ய வெளியில் போய்விட்டாள். ஆபீஸ் மண்டபம் என்பது அந்த பங்களாவின் கட்டிடங்களுக்கு நடுவில் ஒரு பக்கத்தில் இருந்தது; அங்கே, நாலைந்து குமாஸ்தாக்கள் எப்போதும் இருந்து குடும்ப வரவு செலவு கணக்குகளை எழுதுதல், கடிதப் போக்குவரத்து நடத்துதல், மாரமங்கலத்தில் இருந்த சமஸ்தானத்தின் முக்கிய மானேஜரிடத்திலிருந்து கல்யாணியம்மாளுக்கு வரும் அறிக்கை களுக்கு அந்தச் சீமாட்டியாரது உத்தரவுகளைப் பெற்றனுப்புதல் முதலிய காரியங்களைப் பார்த்து வந்தனர். அவர்களுள் மோகன

ரங்கனும் ஒருவன்; அவர்கள் எல்லோருக்கும் சாப்பாடு படுக்கை முதலிய யாவும் அந்த பங்களாவிலேயே நடைபெற்றன. அவர்களும் மற்ற எல்லாச் சிப்பந்திகளும், அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த உறவினர் போல போஷிக்கப்பட்டு வந்தனர். கல்யாணி யம்மாளால் அனுப்பப்பட்ட தாதி கச்சேரி மண்டபத்துக்குப் போய்ப் பார்க்க, மோகனரங்கன் காணப்படவில்லை. தாதி மற்ற குமாஸ்தாக்களை நோக்கி, மோகனரங்கனை எஜமானியம்மாள் அழைப்பதாகச் சொல்ல, அவர்கள், அவன் ஒரு நாழிகையாக கச்சேரியில் இல்லை என்றும், அவனது மேல்வஸ்திரம் அவனது நாற்காலியில் கிடந்ததென்றும் மறுமொழி கூற, அந்தத் தாதி உடனே திரும்பி வந்து அந்த விவரத்தைக் கல்யாணியம்மாளிடத் தில் தெரிவித்தாள். அதைக் கேட்ட கல்யாணியம்மாள், "சரி; நீ போய் கச்சேரி மண்டபத் தண்டையில் இருந்து, அவன் வந்த வுடனே இங்கே அழைத்துக் கொண்டுவா! எங்கேயாவது தாகத்துக்குச் சாப்பிடப் போயிருப்பான். சீக்கிரம் வந்துவிடுவான்" என்று சந்தேகத்திற்கு இடமின்றிக் கூறி அவளை அனுப்பிவிட்டு, தனது கட்டிலை விட்டுக் கீழே இறங்கி உலாவத் தொடங்கினாள். அவ்வாறு அரை நாழிகை நேரமாயிற்று; அப்போதும் மோகன ரங்கன் வராதிருந்தது அவளுக்கு வியப்பாகவும் சம்சயத்திற்கு இடமாகவும் இருந்தது. அவள் தனது மனதில் ஏதோக யோசனை செய்து கொண்டு, மெல்ல நடந்து, கட்டிலிற்குப் பக்கத்திலிருந்த பின் வாசலைத் திறந்து கொண்டு, புஸ்தகங்கள் இருந்த மகாலுக்குள் மெல்ல நுழைந்தாள். அங்கே கோமளவல்லியம்மாள் மாத்திரம் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து, ஏதோ ஒரு புஸ்தகத்தை வைத்துப் படித்துக் கொண்டு தனியாக இருந்தாள். தனது பெண்கள் இருவரும் எப்போதும் இணை பிரியாமல் இருக்கும் வழக்கம் உடையவர்கள் ஆகையால், கோமளவல்லியம்மாள் மாத்திரம் தனியாக இருந்தது கல்யாணியம்மாளுக்குப் பெருத்த சந்தேகத்தை உண்டு பண்ணியது. அவள் அதைப்பற்றி ஏதோ கவலைப்பட்டுக் கேட்பவளைப் போல, கோமளவல்லியை நோக்கி, "கண்ணு! நீ மாத்திரம் தனியாக இருக்கிறாயே; அக்காள் எங்கே காணோம்?" என்று அந்தரங்கமான வாத்சல்யத்தோடு கேட்க, தனது அம்மாளைக் கண்டு பயபக்தி மரியாதையோடு

எழுந்து நின்ற அந்த நற்குணவதி, "அக்காளுக்கு அதிக வெயிலினால் நிரம்பவும் கடுமையான தலைநோவாக இருக்கிற தாம். ஜன்னல்களை எல்லாம் மூடிக்கொண்டு, எவ்வித ஓசையும் காதில் படாமல், தன்னுடைய படுக்கை அறையில் படுத்துக் கொண்டிருக்கப் போவதாகச் சொல்லிவிட்டுப் போனாள்; அவள் போய் ஒரு நாழிகை நேரம் இருக்கலாம்" என்றாள்.

அந்த வார்த்தைகள் கல்யாணியம்மாளது மனதில் சுருக்கென்று தைத்தது. "சரி; காரியம் விபரீதத்துக்கு வந்துவிட்டது. அவளுக்கும் மோகனரங்கனுக்கும் சமீபகாலத்திலேயே நட்பு ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும், இன்னமும் அவளுடைய தேக பரிசுத்தத் துக்கு ஹானி நேர்ந்திருக்காதென்றும், அப்படிப்பட்ட விபரீதம் நடப்பதற்குள் அவனைப் பிரித்துவிட வேண்டும் என்றும், நான் நினைத்தது தவறாகப் போய்விட்டது! இப்போது அவர்கள் இருவரும் அவளுடைய படுக்கையறையிலே தான் இருக்க வேண்டும்" என்று கல்யாணியம்மாள் தனக்குத் தானே நினைத்துக் கொண்டாள். அவளது மனமும் தேகமும் கட்டிலடங்காமல் பதறின. என்றாலும், அவைகளை எல்லாம் கோமளவல்லிக் கெதிரில் காட்டிக்கொள்ளாமல், அடக்கிக் கொண்டவளாய், "அடடா! இந்தச் சங்கதியை அப்போதே என்னிடத்தில் சொல்லி இருக்கக்கூடாதா? இதற்கு என்னிடத்தில் நல்ல மருந்து இருக்கிறதே; இந்நேரம் தலைநோவெல்லாம் பறந்து போயிருக் குமே; கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு இப்படியும் நெய்க்கழுவார்களா? சரி; நீ இங்கேயே படுத்துக் கொண்டிரு; நான் போய் அக்காளைப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சந்தேகப் படாவிதமாக அவளிடம் பேசிவிட்டு, கல்யாணியம்மாள் சந்தடி யில்லாமல் நடந்து போய், துரைஸானியம்மாளது அந்தப்புரத்தை அடைந்தாள். அதன் வாசற்கதவும், ஜன்னல்களின் கதவுகளும் மூடி உட்புறத்தில் தாளிடப்பட்டிருந்தன.

கல்யாணியம்மாள் வாசற்கதவில் தனது கையை வைத்து உள்ளே தள்ளிப் பார்க்க, அது திறக்கக் கூடாமல் இருந்தது. ஆனால், உள்ளே இருந்த துரைஸானியம்மாள், "யார் அங்கே?" என்று கேட்டாள். உடனே கல்யாணியம்மாள், "நான் தான்;

உனக்குத் தலைநோவென்று கோமளவல்லியம்மாள் சொல்லக் கேள்விப்பட்டேன்; மருந்து கொண்டுவந்திருக்கிறேன்" என்றாள். அதைக் கேட்ட துரைஸானி, "என்னுடைய தலைநோவு இப்போது நின்று போய்விட்டது. வேறே மருந்து வேண்டாம். கொஞ்ச நேரம் நிம்மதியாகப் படுத்திருப்பதே போதும்; இப்போது எழுந்து வந்து என்னால் கதவைத் திறக்க முடியவில்லை" என்று முக்கி முணகி மறுமொழி கூறினாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள், "சரி; அப்படியே செய்; நான் போகிறேன்" என்று கூறிவிட்டு, அவ்விடத்தை விட்டுப் போய் சிறிது தூரத்திற்கப்பால் இருந்த ஒரு பெருத்த பூத்தொட்டியின் மறைவில் இருந்து, அந்த வாசலைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அதன் பிறகு கால் நாழிகை நேரம் சென்றது; துரைஸானியம்மாள் தனது முகத்தை மாத்திரம் வெளியில் நீட்டி மிகவும் அஞ்சிய பார்வையாக அப்புறம் இப்புறம் திரும்பிப் பார்த்து விட்டு, தனது சிரத்தை உள்ளே இழுத்துக் கொள்ள, அந்த நொடியில் மோகன ரங்கன் அந்த விடுதிக்குள் இருந்து வெளியில் வந்து, விசையாக நடந்து அப்பால் போய்விட்டான்.

கல்யாணியம்மாளது மனதில் சிறிதளவு இருந்த சந்தேகமும் விலகியது. தனது மூத்த புத்திரியின் கற்பும் தேக பரிசுத்தமும் அழிந்து போய்விட்டன என்பதை சந்தேகமற உணர்ந்த மகா துர்ப்பாக்கியவதியான அந்த அம்மாளது மனக்கொதிப்பையும், தேகத்தின் பதைப்பையும் என்னவென்று சொல்வது! அளவிட அரிய கோபத்தினாலும், துயரத்தினாலும், ஏமாற்றத்தினாலும் கல்யாணியம்மாள் என்ன செய்வதென்பதை உணராமல், இரண்டொரு விநாடி நேரம் அப்படியே அசைவற்று நின்றபின் ஏதோ ஒரு நினைவைக் கொண்டவளாய், அவ்விடத்தை விட்டு நடந்து தனது புத்திரியின் அந்தப்புரத்திற்குள் நுழைந்தாள். அப்போது ஒரு கட்டிலிற்கருகில் நின்று, சீர்குலைந்து தாறுமாறாகக் கிடந்த தனது அளகபாரத்தையும், சேலை முதலிய ஆடைகளையும் ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்த துரைஸானியம்மாள், திடீரென்று உள்ளே நுழைந்த தனது தாயைக் காணவே திடுக்கிட்டு அச்சமும் நடுக்கமும் கொண்டு மிகுந்த கிலேசமடைந்து, தனது முகத்தை வேறு பக்கம்

திருப்பிக் கொண்டு விரைவாகத் தனது ஆடைகளைச் சரிப்படுத்திக் கொண்டாள். தான் செய்த காரியத்தைத் தனது தாய் கண்டு கொண்டாள் என்ற நினைவும், பெரும் பீதியும், கோழைத்தனமும் எழுந்து அவளது உற்சாகத்தையும் துணிவையும் துடுக்கையும் அடக்கித் தரைமட்டமாக்கின. அவள் கோமளவல்லியிடத்தில் தனது தாயின் நடத்தையைப் பற்றி எவ்வளவு தான் தூற்றி, அவளைப்பற்றி அவமதிப்பாகப் பேசியிருந்தாலும், அவளிடத்தில் நேருக்கு நேர் அவ்வளவு அதிக அவமரியாதையாக நடந்து பழகின வளன்று ஆதலால், அவள் இரண்டொரு நிமிஷ நேரம் கலகலத்துப் போய் நின்று விட்டாள். கற்பை இழப்பதே, பெண்மக்கள் செய்யக் கூடிய பிழைகளில் எல்லாம் கொடிதினும் கொடிதான குற்றம் ஆதலால், அதை, கையுமெய்யுமாகப் பிறர் கண்டு கொள்வதென்றால், அப்படிப்பட்ட பெண்மக்கள் எவராயிருந் தாலும் நடுக்கமும் கலக்கமும் கொள்வது இயற்கை ஆதலால், அப்போதே முதன் முதலாக அந்தப் பெருத்த குற்றத்தைச் செய்த துரைஸானியம்மாள், அதை நேரில் பார்த்துவிட்ட தனது தாயைக் கண்டு, எவ்வளவு தூரம் அஞ்சி நடுங்கி ஒடுங்கிப் போவாள் என்பது கூறாமலேயே விளங்கும்.

அவளுக்கருகில் மிகவும் விரைவாக வந்த கல்யாணியம்மாள், தனது இரண்டு கைகளையும் கொடுத்து, கீழே கவிழ்ந்திருந்த துரை ஸானியம்மாளது முகத்தை நிமிர்த்தி இறுகப் பிடித்துக் கொண்டு, கோபமும் அன்பும் விசனமும் இரக்கமும் தோன்றிய பார்வையாக அவளைப் பார்த்து, "குழந்தாய்! நீ இதுவரையில் என்னோடு எதிர்த்துப் பேசி ஆத்திரமுண்டாக்கிய காலங்களில் எல்லாம், 'நாம் பெற்ற குழந்தைதானே பேசுகிறது. அது குழந்தையாக இருக்கையில், வேடிக்கையாக நம்மைத் திட்டிய போது, அதைக் கேட்டு ஆனந்தப்படவில்லையா; இப்போது மாத்திரம் நாம் ஏன் ஆத்திரப்பட வேண்டும்' என்று நான் என் மனசையே கண்டித்து, உன்னுடைய குற்றங்களை எல்லாம் பாராட்டாமல், நான் வைத்த வாத்சல்யத்தைக் குறைக்காமலேயே இருந்து வந்தேன். ஆனால், நீ இப்போது செய்த காரியத்தைக் கண்டும், நான் உன்னைக் கண்டிக்காமல், இதைப்பற்றி சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்க முடியாது. நான் வேறே எதைப் பொறுத்தாலும் பொறுப்பேன்;

இப்படிப்பட்ட துர்நடத்தைக்கு மாத்திரம் நான் இடங்கொடுக்க மாட்டேன். நம்முடைய ஜாதியென்ன! குலமென்ன! நம்முடைய முன்னோருடைய பெருமையென்ன! எத்தனை லட்சம் ஜனங்கள் அதிபதியாக மதித்து வணங்கிக் கொண்டாடத்தக்க தாய் தந்தைக ளுடைய வயிற்றில் பிறந்த நீ என்ன காரியம் செய்யத் துணிந்தாய்! இதனால் உனக்கும், எங்களுக்கும், இந்தக் குடும்பத்தாருக்கும் எப்படிப்பட்ட ஏச்சும், என்றைக்கும் மாறாத இழிவும், துன்பங் களும் நேரும் என்பதை நீ கொஞ்சமாவது எண்ணிப் பார்த்தாயா? இந்தச் சங்கதி வெளியில் தெரிந்தால், உம்முடைய வீட்டில் கேவலம் ஒரு நாய் தண்ணீர் குடிக்குமா? உன்னையும், கோமள வல்லியையும் கலியாணம் செய்து கொள்ள எவராவது சம்மதிப் பார்களா? குழந்தாய்! இப்போது எனக்கிருக்கும் ஆத்திரத்தில், உன்னை அப்படியே கம்பத்தில் கட்டிவைத்து, கரண்டிக் காம்பைப் பழுக்கக் காயவைத்து, உன்னுடைய இரண்டு துடைகளிலும் சூடுபோட்டு விடவும் நான் பின்வாங்க மாட்டேன். உன்னுடைய முகத்தழகைப் பார்க்க, என்னுடைய உள்ளம் இரக்கத்தினால் பாகாய்க் கரைந்து போகிறது; நான் அதிசீக்கிரத்தில் உனக்குக் கலியாணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று ஏற்பாடு செய்து கொண்டிருப்பது உனக்கு நன்றாகத் தெரியும்; அப்படி இருந்தும், இதற்குள் உனக்கு இவ்வளவு ஆத்திரமா? எல்லா விஷயத்திலும், நீ, எங்களை எல்லாம் மீறி அதிக புத்திசாலித் தனமாகப் பேசுகிறவள் அல்லவா; அதனால் உன்னுடைய புத்தி, உனக்குச் சரிசமானமாக ஒரு ஜெமீந்தார் வீட்டுப் பிள்ளையை நாடாமல், கேவலம் கூலிக்கு வேலை செய்யும் அநாதைப் பையனான ஒருவனை நாடியதா? இப்படிப்பட்ட இழிவான ஸ்தானத்தை நாடி அப்படியாவது சுகமடைவதைவிட, உன்னுடைய பாழும் சரீரத்தைக் கேவலம் நெருப்பில் போட்டுக் கொளுத்தி விடலாமே! ஆகா! என் வயிறு பற்றி எறிகிறதே; இப்படிப்பட்ட விபசார புத்தியுடைய பெண் என் வயிற்றிலா வந்து பிறக்க வேண்டும்! இந்தச் சமயத்தில், எவரேனும் வந்து, "இவள் உன்னுடைய மகள்தானா?" என்று கேட்டால், "இவள் என்னுடைய மகளல்ல" என்று நான் பிரமாணம் செய்து மறுத்து விடுவேன். துரைஸானீ! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்!

உன் முகத்தைப் பார்க்க, என் கண்கள் கூசுகின்றன. முகத்தைப் பார்; கண்களைப் பார்; அழகென்ன வேண்டியிருக்கிறது; அழகு! நடத்தை அழகில்லாதவளுக்கு உடம்பழகு இருப்பது ஆபத்தில் தான் கொண்டு போய்விடும் என்று சொல்லுவார்கள். அது நிஜமாகப் போய்விட்டது. குழந்தாய்! இந்தா! எங்கே என் முகத்தைப் பார்த்துப் பேசு; அந்தப் பையனிடத்தில் பேச்சோடு நிற்கிறாயா? அல்லது, உன் ஜென்மத்தை அடியோடு பாழாக்கிக் கொண்டாயா? நிஜத்தைச் சொல்லிவிடு; நீ உன்னுடைய தேகத்தை இன்னமும் கெடுத்துக் கொள்ளவில்லை என்பதை மாத்திரம் நீ எனக்கு உறுதிப்படுத்திக் கொடுப்பாயானால், ஆகா! உனக்கு, என்ன வேண்டுமானாலும் நான் கொடுக்கத் தயாராக இருக்கிறேன். இந்த மாசத்துக்குள் நல்ல அழகான புருஷனாகப் பார்த்து உனக்குக் கலியாணம் செய்து வைக்கிறேன்; உன்னுடைய உச்சி முதல் உள்ளங்கால் வரையில் ஆபரணங்களால் நிறைத்து, ஒரு வண்டி நிறைந்த பணத்தோடு உன்னை உன் புருஷனுடைய வீட்டுக்கு அனுப்புகிறேன்; எங்கே பொய் பேசாமல் முகத்தைப் பார்த்துச் சொல், கண்ணு!" என்று அன்பாகக் கடிந்து கூறினாள்.

முதலில் தனது தாயைக் கண்டவுடனே, அவள் தன்னை தண்டிப்பாளோ என்ற ஒரு பீதியினால், துரைஸானியம்மாள் ஆரம்பத்தில் சிறிது தளர்வடைந்து ஒடுங்கி நின்றாள். ஆனால் தனது தாய் தன்னிடத்தில் மிகவும் அன்பாகப் பேசி, நியாயம் எடுத்துச் சொல்லுவதைக் காணவே, துரைஸானியம்மாளது மனதில் அவளது இயற்கையான துணிவும் மூர்க்க குணமும் தலை எடுக்கத் தொடங்கின. அவள் முறுக்காக நிமிர்ந்து தனது தாயைப் பார்த்து, "என்னை ஏன் இப்படித் தொந்தரவு செய்ய வேண்டும்? நீங்கள் எல்லோரும் செய்யாத எந்தப் பெருத்த குற்றத்தை நான் மாத்திரம் செய்துவிட்டேன். நான் இதுவரையில் என்னுடைய ஆசையை எல்லாம் அடக்கிக் கொண்டு ஒழுங்காகத் தான் நடந்து வந்தேன். அன்றைக்கு நீங்கள் மதனகோபாலனிடத்தில் நடந்து கொண்டதைப் பார்த்தவுடனே, எனக்கும் இப்படிச் செய்ய வேண்டும் போல இருந்தது; செய்துவிட்டேன். ஆனால், அவன் வீணை வாசிக்கிற மேளக்காரன், இவன் குமாஸ்தா, அவனைவிட இவன் மேலானவன் தானே!" என்று கூசாமல் மறுமொழி கூறினாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் இடியோசையைக் கேட்ட நாகம் போல நடுநடுங்கி ஸ்தம்பித்து பேச்சுமூச்சுற்று இரண்டொரு நிமிஷம் அப்படியே அசைவற்று நின்றவளாய், "என்ன சொன்னாய்! மதனகோபாலன் என்னிடத்தில் அயோக்கியத் தனமாக நடந்து கொண்டானோ? நான் அவனிடத்தில் தவறுதலாக நடந்து கொண்டேனோ? ஏதேது வர வர உன்னுடைய புத்தி விபரீதமாக ஆகிவிட்டதே! அறியாத குழந்தை என்று உன்னை நினைக்கிறதா அல்லது எதற்கும் துணிந்த அயோக்கிய சிகாமணி என்று நினைக்கிறதா என்பது தெரியவில்லையே" என்றாள்.

அதைக் கேட்ட துரைஸானியம்மாள், "எப்படி வேண்டுமா னாலும் நினைத்துக் கொள்ளலாம்; நீங்களும் பசவண்ண செட்டி யாரும் பேசிக் கொண்டிருந்ததையும் நாங்கள் கேட்டுக் கொண்டிருந்தோம். அதிலிருந்து, நீங்கள் தான் மதனகோபால னைப் பிடித்திழுத்தீர்கள் என்று எங்களுடைய மனசு நம்பி விட்டது. அதன் மேல் இந்தக் காரியத்தைச் செய்துவிட்டேன். அதை இனி மறைப்பதில் உபயோகம் என்ன? அண்ணனுக்கு நீங்கள் ஒரு தேவடியாளை அமர்த்திக் கொடுத்து, அவளுக்குப் பத்திரமும் எழுதி ஒழுங்குபடுத்தி வைத்தீர்களே; அதைப் போல எனக்கும் இந்தக் காரியத்தை ஒழுங்குபடுத்தி வைத்துவிடுங்கள். எனக்கு வேறே கலியாணம் வேண்டாம்" என்றாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் திக்பிரமை கொண்டு, அது கனவோ நினைவோ என்று சந்தேகித்து, தனது வயிற்றில் பிறந்த பெண் அப்படியும் துணிந்து பேசுவாளா என்ற வியப்பை அடைந்ததன்றி, அவளும், கோமளவல்லியும் ஒளிந்திருந்து தனது அந்தப்புரத்தில் நடந்த விஷயங்களை எல்லாம் கவனித்துக் கொண்டிருக்கிறார்களே என்ற ஆத்திரமும் அடைந்தாள். மிகுந்த நற்குணமும் பயபக்தியும் நிறைந்தவளான கோமளவல்லியையும் அவள் கெடுத்துவிட்டாளோ என்ற கவலையும் வருத்தத் தொடங்கியது. அவள் மகா இறுமாப்பாகவும் குறும்பாகவும் போக்கிரித்தனமாகவும் பேசுவதைக் காணவே, கல்யாணியம் மாளுக்கு அவளோடு மேன்மேலும் வாக்குவாதம் செய்வது பிடிக்கவில்லை. அன்பாகவும் நியாயமாகவும் பேசி அவளது மனதை மாற்ற வேண்டும் என்று தான் எண்ணியதும் பலிக்க

வில்லை என்பதைக் கல்யாணியம்மாள் கண்டுகொண்டாள். இருந்தாலும் தனது மூத்த பெண்குழந்தையைக் கொடுமையாக நடத்த அவளது இளகிய மனம் இடந்தரவில்லை. ஆகவே, அந்த அம்மாள் கம்பீரமாக நிமிர்ந்து துரைஸானியைப் பார்த்து, "இந்தா! துரைஸானீ! நீ இன்னமும் எனக்கு அடங்கி நடக்க வேண்டிய நிலைமையிலேயே இருக்கிறாய்; அப்படி இருந்தும், அதை உணராமல், சக்களத்தி இடத்தில் போராடுவதைப் போல, நீ என்னிடத்தில் பேச ஆரம்பிக்கிறாய். அவைகளுக்கெல்லாம் சரியானபடி பதில் சொல்லிக் கொண்டிருக்க எனக்கு இஷ்டமில்லை; இப்போது நான் முடிவாக ஒரு வார்த்தை சொல்லி விடுகிறேன். நீ அந்தப்படி செய்தே தீரவேண்டும். ஏதோ நீ குழந்தைப் புத்தியால் இந்தத் தவறைச் செய்து விட்டாய்; இதோடு உன்னை அடியோடு கெடுத்துவிட எனக்கு மனமில்லை. இவ்வளவோடு அந்தப் பையனுடைய நினைவை விட்டுவிட்டு, இன்னம் கொஞ்ச காலத்துக்கு ஒழுங்காக இரு. வெகு சீக்கிரத்தில் உன்னை எவனிடத்திலாவது ஒப்புவித்து விடுகிறேன். அதன் பிறகு நீ எப்படியாவது செய்து, சீரழிந்து போ; தெரிகிறதா? இனி நீ இங்கே இருக்கிற வரையில், இந்த மாதிரியான துன்மார்க்கத்தில் இறங்கினால், நான் உன்னை மிகவும் கொடுமையாக தண்டிப் பேன்" என்றாள்.

அதைக் கேட்ட துரைஸானியம்மாள், "இந்த மோகனரங்கனைத் தவிர, வேறே எந்த மன்மதன் வந்தாலும், அவனை நான் என் கையாலும் தொடமாட்டேன். என் உயிர் போனாலும் நான் இவனை விட்டுப் பிரிந்திருக்கவே மாட்டேன்" என்று முறுக்காகக் கூறினாள். அதைக் கேட்ட கல்யாணியம்மாள் கரைகடந்த கோபங்கொண்டு, "என்ன சொன்னாய்! உனக்கு அவ்வளவு துணிவு வந்து விட்டதா! வீணாக நல்ல உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே" என்று அதட்டிக் கூறினாள்.

அதைக் கேட்ட துரைஸானி, "இந்த உருட்டலுக்கெல்லாம் நான் பயப்படமாட்டேன். இன்று ராத்திரி நான் இந்த வீட்டை விட்டுப் போகத் தீர்மானித்துவிட்டேன்; எனக்கு உங்களுடைய கலியாணமும் வேண்டாம்; நகைகளும் வேண்டாம்; பணமும் வேண்டாம்" என்றாள்.

அவள் கூறிய சொற்கள் கல்யாணியம்மாள் பொறுக்கக்கூடிய வரம்பை மீறியனவாகப் போய்விட்டன. அவளது தேகம் மண்ணி லிருந்ததோ விண்ணிலிருந்ததோ என்பது தெரியாமல் தத்தளித்தது கண்களில் தீப்பொறி பறந்தது. கால்களும் கைகளும் வெடவெட வென்று ஆடத் தொடங்கின. அவள் உடனே துரைஸானியம் மாளை நோக்கி, "ஓகோ! நீ இவ்வளவு தூரத்துக்கு வந்துவிட்டாயா! இருக்கட்டும். நீ பெரியவளா அல்லது நான் பெரியவளா என்பதையும் பார்த்துவிடுவோம்" என்று கூறியவண்ணம் மிகவும் முறுக்காக நடந்து வெளியில் போய்விட்டாள்.

உடனே துரைஸானியம்மாள் தனது கட்டிலின் மேல் ஏறிப் படுத்துக் கொண்டு அப்போது நிகழ்ந்த விஷயங்களைப் பற்றி தனக்குத் தானே எண்ணமிடலானாள்.

அவ்வாறு ஐந்து நிமிஷ நேரம் கழிந்தது; கல்யாணியம்மாள் மிகுந்த பதைபதைப்போடு திரும்பி வந்து, துரைஸானியம்மாளது அந்தப்புரத்தின் வாசற்கதவை இழுத்து விரைவாக மூடி சங்கிலியை மாட்டி, தனது கையில் வைத்திருந்த ஒரு பெருத்த பூட்டினால் அதைப்பூட்டி, திறவுகோலை ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டு, பக்கத்திலிருந்த ஜன்னலண்டையில் வந்து, "துரைஸானீ! உன்னுடைய கலியாணம் ஆகிற வரையில் நீ இந்த அறைக்குள் ளேயே அடைபட்டிரு; உன்னுடைய சாப்பாடு முதலிய சகலமான காரியங்களையும் இதற்குள்ளாகவே நடத்திக் கொண்டிரு" என்று சொல்லிவிட்டு, அடக்க ஒண்ணாத ரௌத்திராகாரமான கோபத் தோடு தத்ரூபம் நரசிம்மாவதாரம் போல கர்ச்சித்தவளாய், தனது அந்தப்புரத்தை அடைந்து கட்டிலின்மேல் ஏறி உட்கார்ந்து பெரு மூச்செறியத் தொடங்கினாள்.

அந்தச் சமயத்தில் வேலைக்காரி பதுங்கி ஒதுங்கி உள்ளே நுழைந்து, "அம்மணீ! மோகனரங்கன் குளத்தங்கரைக்குப் போயிருந்தானாம்; இப்போது தான் வந்தான்; உத்தரவுப்படி அவனை இதோ அழைத்துக் கொண்டு வந்திருக்கிறேன்" என்றாள்.

அதே நொடியில் அந்தப் பையனும் உள்ளே நுழைந்து சிறிது தூரத்திற்கப்பால் வந்து நின்றான்.

★ ★ ★

19–வது அதிகாரம்

## பொறியிலகப்பட்ட எலி

அவ்வாறு வந்து நின்ற மோகனரங்கனது நிலைமை மிகவும் துன்பகரமாக இருந்தது; தனக்கும் துரைஸானியம்மாளுக்கும் கள்ள நட்பு ஏற்பட்டிருந்ததையும், தான் சிறிது நேரத்திற்கு முன் அந்த மடந்தையின் அந்தப்புரத்தில் தனியாக இருந்து வந்ததை யும், பிறர் எவரும் உணரவில்லை என்று அவன் உறுதியாக நினைத்து ஒருவாறு துணிவடைந்து, கல்யாணியம்மாளுக் கெதிரில் தோன்றி நின்றான் ஆனாலும், அவன் உண்மையில் பெருத்த குற்றம் புரிந்தவன் ஆதலால், அவனது மனம் அளவற்ற அச்சத்தினாலும் ஆவலினாலும் கலக்கமுற்றுப் படபடத்து நின்றது; அவனது கைகால்கள் எல்லாம் கட்டிலடங்காமல் நடுநடுங்கின. வாய் திறந்து பேசுவதற்கும் துணிவின்றி மோகனரங்கன் உள்ளொன்றும் புறமொன்றுமாக இருந்த தனது நிலைமையைக் கண்டு கல்யாணியம்மாள் தங்களது ரகசியத்தை உணர்ந்து கொள்வாளோ என்ற பீதியினால் வதைக்கப்பட்டவனாகத் தத்தளித்து நின்றான். அவனைக் கண்ட கல்யாணியம்மாளது நிலைமையும் அவ்வாறே உள்ளொன்றும் புறமொன்றுமாக இருந்தது. தனது மூத்த புதல்வியின் கற்பை அழித்த துஷ்டனான மோகனரங்கனை உடனே பிடித்து கம்பத்தோடு சேர்த்து இறுக்கிக் கட்டி நன்றாக அடித்து அவனது இரண்டகத்திற்குத் தகுந்தபடி அவனைத் தண்டித்து, பங்களாவை விட்டு ஓட்டிவிட வேண்டும் என்ற ஒரே கொடிய நினைவும் ஆத்திரமும் கல்யாணியம்மாளது மனதில் பொங்கி எழுந்து வீராவேசம் உண்டாக்கின ஆனாலும், பணிப்பெண்களும் பிறரும் அந்த வெட்கக்கேட்டை உணர்வ தால், தங்களுக்கு இழிவு ஏற்படுமே என்ற நினைவினால், அந்த அம்மாள் பெரிதும் முயன்று தனது கோபாவேசத்தை எல்லாம் அடக்கித் தனது முகக்குறிப்புகளையும் மாற்றி மறைத்துக் கொண்டவளாய், அவர்களது ரகசியச் செய்கைகளைப் பற்றி தான் சிறிதும் சந்தேகங் கொள்ளாதவளைப் போல நடித்து, அதற்கு முன் அவனை எப்படி அன்போடு அழைப்பாளோ அப்படியே அழைத்து அவனிடத்தில் வசனிக்கத் தொடங்கினாள். அவர்களது

அக்கிரமச் செய்கை வெளியாகாமல், எப்படியாகிலும், அவனை பங்களாவை விட்டு அனுப்பு, அவன் மறுபடியும் தங்களிடத்திற்கு வராமல் செய்துவிட்டால் அதுவே போதுமானதென்று தீர்மானித்துக் கொண்ட அந்தச் சீமாட்டி மோகனரங்கனை அன்பாக நோக்கி, "ஏ! மோகனரங்கம்! நீ ஒரு காரியம் செய்; இதோ இருக்கும் இந்தக் கடிதம் மிகவும் அவசரமானது. இதை எடுத்துக் கொண்டு, உடனே புறப்பட்டு சீக்கிரமாகப் மைலாப் பூருக்குப் போய் நம்முடைய வக்கீல் ஐயாவிடத்தில் கொடுத்து விட்டு, அவர்கள் பதில் கடிதம் எழுதிக் கொடுத்தால் வாங்கிக் கொண்டு வா; இது ஒரு பெருத்த வியாஜ்ஜிய சம்பந்தமான கடிதம்; ஆகையால், இன்னம் ஒரு மணி நேரத்துக்குள் இது அவர்களிடத்தில் போய்ச் சேர வேண்டும்; தெரிகிறதா?" என்றாள். அதைக் கேட்ட மோகனரங்கன் ஒருவாறு துணிவடைந்தான். அந்த அம்மாள் சொல்லப் போகும் விஷயம் தனக்குச் சம்பந்த மானதாக இருக்குமோ என்று அவன் அதுகாறும் கவலையும் கலக்கமும் கொண்டிருந்தவன் அதலால், தனக்கு சந்பந்தமற்ற அந்த வார்த்தைகளைக் கேட்கவே, அவன் தைரியமாகவும் உற்சாகத்தோடும் நிமிர்ந்து நின்று, சுமுகமாக அந்தச் சீமாட்டியை நோக்கி, "உத்தரவுப்படியே போய்விட்டு வருகிறேன். கடிதத்தைக் கொடுங்கள்" என்று மிகுந்த பரபரப்போடு கேட்க, உடனே கல்யாணியம்மாள் தனது திண்டினடியில் மறைத்து வைத்திருந்த கடிதத்தை எடுத்து, அண்டையில் நின்ற தாதியிடத்தில் கொடுக்க, அவள் அதை மோகனரங்கனிடத்தில் நீட்டினாள். அதைப் பெற்றுக் கொண்ட மோகனரங்கன், "சரி; போகலாமா?" என்று கேட்க, கல்யாணியம்மாள் தனது சிரத்தை அசைக்க, உடனே அந்த அழகிய யௌவனப் புருஷன், நிரம்ப விசையாக நடந்து அந்த அந்தப் புரத்தை விட்டு வெளியில் வந்தான். வந்தவன், நேராகக் கச்சேரி மண்டபத்திற்குப் போய், வேறு உடைகள் அணிந்து கொண்டு, தான் சிவஞான முதலியாரது வீட்டிற்குப் போய்விட்டு வர வேண்டும் என்று இதர குமாஸ்தாக்களிடத்தில் சொல்லி விட்டு, மிகவும் குதூகலமாக அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு மைலாப்பூரை நோக்கி விரைவாக நடக்கலானான். அந்தப் பங்களாவிற்கும், சிவஞான முதலியாரது ஜாகைக்கும்

உள்ள தூரம் ஒரு மயிலுக்குள்ளாகவே இருந்ததாகையால், தான் ஓட்டமாக நடந்து அங்கே போய்த் தனது காரியத்தை முடித்துக் கொண்டு, அரை மணி நேரத்திற்குள் திரும்பி வந்துவிட வேண்டும் என்னும் ஆவல் கொண்டவனாய், அவன் மிகவும் துரிதமாக நடந்து சென்றான். சிற்றின்பத்தின் சுவையை அப்போதே முதன்முதலாகப் பருகி உணர்ந்தவன் ஆதலால், அவன் அப்போதும் சுவர்க்கலோகத்தில் இருப்பவன் போலத் தோன்றி, மெய்ம்மறந்து மோக வெறி கொண்டு, முற்றிலும் புதிய மனிதனாகக் காணப்பட்டான். துரைஸானியம்மாள் அவனிடத்தில் கொண்ட கரைகடந்த காதலினால் கொஞ்சிக் குலாவி ரதிகேளிவிலாச இன்ப சாகரத்தில் ஆழ்த்தி அவனது ஐம்புலன்களும் நிறைய அமிர்த வெள்ளம் பொழிந்து, அவனை ஒப்புயர்வற்ற ஆனந்த சுகத்தில் ஆழ்த்தியதான ஒவ்வொரு காட்சியும், அப்போதே நிகழ்வது போல, அவனது உணர்வில் அப்போதும் புலப்பட்டுக் கொண்டிருந்தமையால், அவன் இந்த மண்ணுலகத்தையே மறந்து ஏதோ ஒரு புதிய இன்ப உலகில் பறந்து செல்பவன் போல நடந்து கொண்டிருந்தான். துரைஸானியம்மாளது கனிமொழிகள் அப்போதும் அவனது செவிகளுக்கருகில், புல்லாங்குழலின் இன்னொலி போலவும் கந்தருவ கானம் போலவும் கணீர்கணீர் என்று ஒலித்துக் கொண்டிருந்தன. திவ்ய தேஜோமயமான அவளது யெளவன ரூபம் அவனது மனம் முழுதிலும் நிறைந்திருந்ததுமன்றி, அவனது தேகத்தை அப்போதும் ஆலிங்கனம் செய்த வண்ணம் அவன் பார்க்கும் இடமெல்லாம் நின்று, அவனது மனதை மயக்கி, அறிவைக் கலக்கி, அவனது உள்ளம் உருகி நெகிழும்படி செய்தது. அவனது மனமாகிய உலகத்தில், அதுகாறும் திறக்கப் படாத ஒரு புதிய தெய்வ லோகத்தின் கதவு படீரென்று திறக்கப் பெற்றவன் போலத் தனது மனதில் எழுகடல் வெள்ளம் போலப் பொங்கி எழுந்து. தன்னை ஆழ்த்திய பேரின்ப வாரிதியில் மிதந்தவனாய், அவன் சென்று கொண்டிருந்தான்; தன்னை அப்படிப்பட்ட இணையற்ற சாயுஜ்ய பதவியில் ஒரு நொடிக்குள் ஆழ்த்திவிட்ட பெண்ணரசி யான துரைஸானியம்மாளது தாய் ஏவிய பணியைத் தான் நிறைவேற்றப் போவது பற்றி, அவன் கரை கடந்த உற்சாகமும், குதூகலமும், மகிழ்ச்சியும் அடைந்தவனாய் ஓடோடியும் சென்றான்.

அன்றைய பகலில் துரைஸானியம்மாளது அந்தப்புரத்தில் அவன் அவளோடு தனியாக இருந்த காலத்தில், அவர்கள் ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்து யோசித்து ஒருவாறு முடிவு செய்திருந்தனர். அன்று காலை வரையில் துரைஸானியம்மாள் தனது தாய் தனக்கு அவ்வளவு சமீப காலத்தில் கலியாணம் செய்து வைக்கமாட்டாள் என்றும், தான் பங்களாவில் இருந்த படியே மோகனரங்கனிடத்தில் நட்பாக இருந்து வரலாம் என்றும் நினைத்திருந்தாள். ஆனால் அன்று காலையில், கல்யாணியம்மாள் மீனாக்ஷியம்மாளுக்கு எழுதியனுப்பிய கடிதத்தின் விஷயங்களை உணர்ந்த பிறகு, அவளது எண்ணம் மாறிப்போய்விட்டது. அன்றைக்கே, மோகனரங்கனை அனுப்பி, சென்னையில் ஜனங்கள் அடர்ந்ததும், எவராகிலும் எளிதில் கண்டு கொள்ளக் கூடாததுமான ரகசியமான ஓர் இடத்தில், ஒரு தனி வீட்டை அமர்த்திக் கொண்டு வரச் செய்ய வேண்டும் என்றும், மறுநாள் இரவில் மோகனரங்கன் வாடகைப் பெட்டிவண்டி ஒன்றைக் கொணர்ந்து பங்களாவிற்கு சற்று தூரத்திற் கப்பால் நிறுத்தி வைப்ப தென்றும், அவள் நடுஇரவில் எவருக்கும் தெரியாதபடி எழுந்து வெளிப்பட்டு வண்டிக்குப் போய்விடுவதென்றும், அவள் போகும் போது சுமார் இரண்டு லட்சம் ரூபாய் பெறும்படியான உயர்ந்த ஆபரணங்களை அபகரித்துக் கொண்டு போய் வண்டியி லேறி, புதிய வீட்டிற்குப் போய்விடுவதென்றும் அவள் அவனிடத்தில் பிரரேபிக்க, அவன் அதை அப்படியே ஆமோதித்து ஒப்புக் கொண்டான் தாங்கள் இருவரும் ஒருவரையொருவர் கலியாணம் செய்து கொள்வது கூடாத காரியம் ஆதலால், இருவரும் உண்மையான கணவனையும் மனைவியையும் போலத் தங்களது ஆயுட்காலம் வரையில் கூடிக்கலந்து பிரியாமல் இருந்து கல்யாணியம் மாளது இடைஞ்சலின்றி எப்போதும் சுகித்திருக்க வேண்டும் என்று இருவரும் ஒருவருக்கொருவர் பிரமாணத்தின் மூலமாக உறுதி செய்து கொடுத்து விட்டனர். ஆகவே, மோகனரங்கன் அந்தப் பெண்மாணிக்கும் இனி தனக்கே உரியவள் என்றும், அவளால் தான் தேவேந்திர போகம் அனுபவிக்கப் போவதாகவும் எண்ணி இன்பக் கனவு கண்டு கொண்டிருந்த நிலைமையில், அவன் அந்த அணங்கை விட்டுப்

பிரிந்து வந்தவன் ஆதலால், அதே எண்ணங்கள் எழுந்தெழுந்து அவனது மனத்தை வளைத்துக் கொண்டிருந்தன. தான் வெகு சீக்கிரத்தில் மைலாப்பூரை அடைந்து, கடிதத்தைக் கொடுத்து மறுமொழி பெற்றுக்கொண்டு போய், கல்யாணியம்மாளிடத்தில் கொடுத்துவிட்டு, தனது மனதைக் கொள்ளை கொண்ட அதிசுந்தர ரதிதேவியான துரைஸானி என்னும் பொற்கொடியை இன்னொரு முறை காண்பதான பேரானந்த சுகத்தை அள்ளிப் பருகித் தனது காதல் விடாயை ஒரு சிறிது தணித்துக் கொண்டு அடையாற்றிற் கருகில் இருந்த தனது அக்காளைப் பார்க்கப் போவதாகக் கல்யாணியம் மாளிடத்தில் கூறி அனுமதி பெற்றுக்கொண்டு, தனது அக்காளிடத்திற்குப் போய் அவளது உதவியைக் கொண்டு, ரகசியமான ஒரு ஜாகையை அமர்த்திக் கொடுக்கச் செய்து, அதன் திறவுகோலை வாங்கிக் கொண்டு வந்துவிட வேண்டும் என்று எண்ணமிட்டவனாய் மோகனரங்கன் சென்று கொண்டிருந்தான். திடீரென்று பெருத்த நிதிக்குவியலைக் கண்ட யாசகனைப் போல, அவன் தனக்கு அவ்வளவு பெருத்த பாக்கியம் திடீரென்று கிட்டியது மெய்யோ பொய்யோ என்று அடிக்கடி ஐயமுற்றவனாகச் சென்று, கால்மணி நேரத்தில் சிவஞான முதலியாரது வீட்டையடைந்து, தான் கல்யாணி யம்மாளிடத்தில் இருந்து அவசரமான ஒரு கடிதம் கொணர்ந் திருப்பதாக வெளியில் இருந்த ஒரு வேலைக்காரனிடத்தில் சொல்லி அனுப்ப, அவன், மேன்மாடத்தில் தனிமையில் இருந்து, ஒரு முக்கியமான வழக்கு சம்பந்தமான தஸ்தாவேஜிகளை ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த சிவஞான முதலியாரிடம் போய், விஷயத்தைத் தெரிவிக்க, அவர் பையனை உடனே மேலே அனுப்பிவிட்டு வெளியிலேயே இருக்கும்படி அந்த வேலைக்காரனைக் கீழே அனுப்பினார்.

அவன் அவ்வாறே கீழே இறங்க, அடுத்த நிமிஷத்தில் மோகன ரங்கன் மிகுந்த சந்தோஷத்தினால் பூரித்து உற்சாகத்தைக் காட்டிய தேகத்தோடும், புன்னகையால் மலர்ந்த முகத்தோடும், அவருக் கெதிரில் வந்து நின்று, கடிதத்தை மேஜையின் மீது வைத்தான். அவனது உற்சாகத் தோற்றமும் சந்தோஷப் பார்வையும் வழக்கத் திற்கு மாறான புதிய சின்னங்களாக இருந்தமையால், அதை அதி சுலபத்தில் உணர்ந்து கொண்ட முதலியார் மிகுந்த வியப்பும்

திகைப்பும் அடைந்தார். அந்த உலகத்தில் வேறு எவ்விதப் புகலுமற்று சுத்த அநாதையாக இருந்த அவனை, தாம் அவ்வளவு தூரம் வளர்த்து, உத்தியோகத்தில் அமர்த்தியதைக் கருதி, அவன் அதற்கு முன் அவரைக் காணும் போதெல்லாம், பெருத்த தெய்வத்தைக் காண்பதைப் போன்ற பயபக்தி விசுவாசத்தோடு அடங்கி யொடுங்கி நிற்பவனாதலால், அன்று காணப்பட்ட மாறுதல், ஏதோ புதிய சம்பவத்தைக் குறித்தது. அவர் மிகுந்த கபடகுணம் உள்ளவர் ஆதலால், தமது வியப்பையும், சந்கேத்தை யும் வெளிப்படுத்தாமல் அடக்கிக் கொண்டு, அவனால் மேஜையின் மேல் வைக்கப்பட்ட கடிதத்தை எடுத்து, மிகவும் நிதானமாக அதன் மேல்விலாசத்தைப் படித்துப் பார்த்து, அதன் உறையின் ஒரு பக்கத்தைக் கிழித்து, உள்ளே இருந்த கடிதத்தை வெளியில் இழுத்துப் பிரித்து, அதன் எழுத்துகள் அவனது கண்களில் படாமல் அதை ஓர் அட்டையின் மேல் வைத்துக் கொண்டு மனதிற்குள்ளாகவே படிக்கத் தொடங்கினார். அந்தக் கடிதத்தின் முதல் பாகத்தைப் படித்த போது அவரது முகத்தில் எவ்விதமான மாறுபாடும் தோன்றவில்லை; அதன் பிற்பகுதியைப் படிக்க ஆரம்பித்த போது, அவரது முகம் சடக்கென்று மாறியது. ஆனால் அவர் அடுத்த நொடியில் தமது இயற்கை நிலைமையை அடைந்து எவ்விதமான சலனமும் தோன்றாத முகத்தோடு கடிதத்தைப் படித்து முடித்தார். முடிக்கவே, ஆரம்பத்தில் அவரது மனதில் தோன்றிய ஐயம் உடனே நீங்கிவிட்டது; பையன் துரைஸானியம்மாளிடத்தில் கள்ள நட்புக் கொண்டிருப்பத னாலோ, அல்லது, அதை எதிர்பார்த்தோ, அந்த மகிழ்ச்சியை அடக்கமாட்டாமல், அவ்வாறு புது மனிதனாகக் காணப்படுகிறான் என்பதை அவர் உடனே யூகித்துக் கொண்டார். கடிதத்தை இன்னொரு முறை அடியிலிருந்து படிப்பவரைப் போல நடித்தவராய், முதலியார் அவனது விஷயத்தில் தாம் எவ்விதமான ஏற்பாடு செய்யலாம் என்பதைப்பற்றி தமது மனதில் சிந்தித்து, இரண்டொரு நிமிஷ நேரம் பேசாமல் இருந்தபின் நிமிர்ந்து ஒன்றையும் அறியாத பைத்தியக்காரரைப் போல நடித்து அவனை அன்போடு பார்த்து, "மோகனரங்கம்! எஜமானியம்மாள் உன்னை சீக்கிரமாகத் திரும்பி பங்களாவுக்கு அனுப்பிவிடும்படி இந்தக்

கடிதத்தில் எழுதி இருக்கிறார்களே! அங்கே அவ்வளவு அவசரமான காரியம் என்ன இருக்கிறது?" என்றார்.

அதைக் கேட்ட மோகனரங்கன் அவரது கருத்தை உணராதவனாகச் சிறிது தயங்கி, "எங்கேயாவது கடிதம் கொண்டு போய்க் கொடுக்க வேண்டியிருக்கும். காலையில்கூட என்னை கிருஷ்ணாபுரத்தாருடைய பங்களாவுக்கு கடிதத்தோடு அனுப்பினார்கள். அதைப் போல இன்னம் ஏதாவது அவசரமான காரியமிருக்கும். நான் போகலாமா?" என்றான்.

அதைக் கேட்ட சிவஞான முதலியார் நிதானமாகப் பேசத் தொடங்கி, "இருக்கட்டும்; போகலாம்; கொஞ்சம் பொறு; உன்னை உடனே இங்கே அழைத்து வரும்படி, இப்போது நானே அந்த பங்களாவுக்கு ஓர் ஆளை அனுப்ப எண்ணி இருந்தேன். தெய்வச் செயலாக நீயே வந்து சேர்ந்தாய்; நல்லதாயிற்று; கீழே இருக்கும் வேலைக்காரனைக் கூப்பிடு" என்றார்.

மோகனரங்கன் ஒருவாறு திகைப்படைந்தவனாகக் கீழே இறங்கி, முதலில் வந்த வேலைக்காரனை அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தான். சிவஞான முதலியார் அந்த வேலைக்காரனை நோக்கி, "அடே வேலாயுதம்! இப்போது அவசரமாக மாரமங்கலத்தாருடைய பங்களாவுக்கு அனுப்ப ஓர் ஆள் வேண்டும். உன்னுடைய வீட்டுக்குப் போய் உன் மகனை அழைத்துக் கொண்டுவா!" என்றார். வேலாயுதம் என்ற அந்த வேலைக்காரன் அப்படியே செய்வதாகச் சொல்லிவிட்டு வெளியில் போய் விட்டான். உடனே முதலியார் மோகனரங்கனைப் பார்த்து, "அப்பா மோகனரங்கம்! நான் மாரமங்கலத்தாருக்குச் சொல்லி அனுப்ப வேண்டிய பதிலை அந்தப் பையன் மூலமாகச் சொல்லி அனுப்புகிறேன். உன்னை நான் இப்போது அவசரமாக ஓரிடத்துக்கு அனுப்ப வேண்டும். நீ இரு கடிதம் எழுதித் தருகிறேன்" என்று கூறிய வண்ணம் இறகை எடுத்துக் கொண்டு கடிதங்கள் எழுத ஆரம்பித்தார். அவர் அவ்வாறு எழுதிய போது மோகனரங்கனது மனம் திகைப்பும் சஞ்சலமும் கொள்ளத் தொடங்கியது. சிறிது நேரத்தில் ஆகக்கூடிய காரியத்திற்காக அவர் தன்னை வரவழைக்கக் கூடியவரல்ல ஆதலால், அவர் சில நாட்கள்

வரையில் தாமதமாகக்கூடிய ஓர் அலுவலின் மேல் தன்னை எங்கேயாகிலும் அனுப்பிவிடுவாரோ என்ற கவலையும், தான் துரைஸானியம்மாளை விட்டுப் பிரியும்படி நேருமோ என்ற அச்சமும் ஏக்கமும் எழுந்து அவனைப் பலவாறு உலப்பத் தொடங்கின. மறுநாளைக்குள், தானும் துரைஸானியம்மாளும் தனியான ஜாகைக்குப் போக வேண்டும் எனச் செய்துள்ள தீர்மானம் பலியாமற் போய்விடுமோ என்ற பெருத்த கவலையும் தோன்றி அவனை சஞ்சலப்படுத்தியது. அவர் என்ன சொல்லப் போகிறாரோ என்றும், தன்னை எந்த இடத்திற்கு அனுப்பப் போகிறாரோ என்றும் அவன் நினைத்து வருந்தி நின்ற தருணத்தில், வேலாயுதம் தனது மகனான சுமார் பதினைந்து வயதுள்ள ஒரு சிறுவனை அழைத்துக் கொண்டு அங்கே வந்து சேர்ந்தான். அதற்குள் சிவஞான முதலியாரும் கடிதங்களை எழுதி முடித்து விட்டமையால், அவர் ஒரு கடிதத்தை எடுத்து வேலாயுதத்தின் மகனை நோக்கி, "அடே குப்பா! இந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு, உடனே தேனாம்பேட்டைக்குப் போய் மாரமங்கலத்து பங்களாவில் எஜமானியம்மாளிடத்தில் நேரிலேயே இதைக் கொடுத்துவிட்டு வா; வேறு எவரிடத்திலும் கொடுக்க வேண்டாம்; தெரிகிறதா?" என்றார். அதைக் கேட்ட குப்பன் அப்படியே செய்வதாகச் சொல்லிவிட்டு, கடிதத்தைப் பெற்றுக் கொண்டு வெளியில் போய்விட்டான். உடனே சிவஞான முதலியார் வேலைக்காரனைப் பார்த்து, "அடே வேலாயுதம்! இப்போது உடனே எழும்பூருக்குப் போக வேண்டும். பெட்டி வண்டி வாசலில் தயாராக நிற்கட்டும்" என்றார். வேலாயுதம் உடனே கீழே போய்விட்டான்.

அப்போது சிவஞான முதலியார் தமக்கெதிரில் ஸ்தம்பித்து நின்ற வடிவழகனை நோக்கி, "அப்பா மோகனரங்கம்! செங்கல்பட்டில் என்னுடைய தம்பி சோணாசல முதலியார் வக்கீலாக இருக்கிறது உனக்குத் தெரிந்த சங்கதி; செங்கல்பட்டிலுள்ள எங்களுடைய ஜெமீன் கிராமங்களையும் அவரே பார்த்து வருகிறார் என்பதும் உனக்குத் தெரியும். இப்போது நிலங்களின் மாசூல் அறுவடை காலம். அந்த அறுவடை முதலிய காரியங்களைச் செய்ய, நாங்கள்

இரண்டு குமாஸ்தாக்களை வைத்திருக்கிறோம். அங்கிருக்கும் வேலை இரண்டு பேரால் பார்த்து முடியாததாக இருப்பதால், யோக்கியனும் சாமர்த்தியசாலியுமான இன்னொரு குமாஸ்தா வேண்டுமென்றும், உடனே அனுப்பும்படியாகவும் என்னுடைய தம்பி எழுதியிருக்கிறார். நீ மிகவும் நாணயமும் யோக்கியதையும் உள்ளவன் ஆகையால் உன்னைத்தான் அங்கே அனுப்ப வேண்டும் என்பது என்னுடைய விருப்பம். இங்கே மாரமங்கலத்தார் உனக்கு சாப்பாடு போட்டு பதினைந்து ரூபாய் சம்பளம் கொடுக்கிறார்கள். அங்கே உனக்கு சாப்பாடு முதலிய செலவுகளுக்காக 15-ரூபாயும், சம்பளம் 25-ரூபாயும், ஆகமொத்தம் நாற்பது ரூபாய் கொடுக்கும்படி எழுதி இருக்கிறேன். அங்கே நீ இரண்டு மாசகாலம் இருக்கும்படி நேரிடும்; அதன் பிறகு உன்னை இவ்விடத்துக்கே நான் அழைத்துக் கொள்ளுகிறேன். உடனே அனுப்பும்படி அவர் கடிதமெழுதி இருக்கிறார் ஆகையால், நீ அடுத்த ரயிலிலேயே புறப்பட்டுப் போய்ச்சேர்; உனக்கு வேண்டிய வஸ்திரங்களை எல்லாம் அவ்விடத்தில் உடனே வாங்கிக் கொடுக்கும்படி எழுதியிருக்கிறேன். இப்போது எனக்கு எழும்பூரில் கொஞ்சம் அலுவல் இருக்கிறது. என்னுடைய பெட்டி வண்டியிலேயே உன்னை உட்கார வைத்துக் கொண்டு போய், உன்னை ரயிலில் ஏற்றிவிட்டுப் போகிறேன். நீ அங்கே போய் ஒழுங்காகவும் பணிவாகவும் நடந்து கொள்வாய் என்று நான் நிச்சயமாக நம்பி இருக்கிறேன்" என்று கூறிய வண்ணம் எழுந்து, தமது உடைகளை எடுத்து அணிந்து கொள்ள ஆரம்பித்தார். அவரது சொற்களைக் கேட்ட மோகனரங்கன் கலகலத்துப் போய் பரமசங்கடத்தில் ஆழ்ந்தவனாய், என்ன மறுமொழி சொல்வதென் பதை உணராதவனாய், பட்ட மரம் போல அசைவற்று அப்படியே நின்றான்; துரைஸானியம்மாளது விஷயத்தில் தான் கட்டியிருந்த மானஸீகமான நவரத்னக் கோட்டை ஒரே கொடியில் இடிந்து தரைமட்டமானதையும், தான் அவளை மறுநாளைக்குள் அழைத்துக் கொண்டு போய்விடலாம் என்று எண்ணி இருந்த எண்ணத்தில் கடவுள் மண்ணைப் போட்டுவிட்டதையும் கண்டு மோகனரங்கன் மகா வேதனையான நிலைமையிலிருந்தான்;

அநாதைகளான தன்னையும், தனது அக்காளையும் குழந்தைப் பருவத்திலிருந்து காப்பாற்றிக் கல்வி பயற்றி, இருவரையும் இரண்டு விதமான தொழிலில் அமர்த்தி, பிழைப்பதற்கு வழி செய்து வைத்த மகா உபகாரியமான சிவஞான முதலியாரது சொல்லை மீறவும் அவனது மனம் துணிவடையவில்லை. அவன் துணிந்து, அவரது ஏவலைச் செய்ய மறுப்பதனாலும், அவர் தன்னை மாரமங்கலத்தாரது பங்களாவின் குமாஸ்தா வேலையில் இருந்து நீக்கிவிட்டால் அப்போதும், தான் துரைஸானியம் மாளைப் பார்க்கும் சந்தர்ப்பம் தனக்கு இல்லாமல் போய்விடும் ஆதலால், அவன் இருதலைக்கொள்ளி எறும்பு போல எந்த வழியிலும் செல்லமாட்டாதவனாய், திருடனைப் போல விழித்துக் கொண்டு நின்றான். அவ்வாறு அவன் முற்றிலும் குழப்பமும் சஞ்சலமும் அடைந்து நின்றதைக் கவனிக்காதவர் போலவும், வேறு எதையோ கவனிப்பவர் போலவும் நடித்த சிவஞான முதலியார் உடைகளை அணிந்து கொண்டவராய், தமது தம்பிக்கு எழுதப்பட்ட கடிதத்தையும் நாலைந்து ரூபாய் பணத்தையும் எடுத்துத் தமது சட்டைப்பைக்குள் வைத்துக் கொண்டு, "வா; போகலாம்" என்று அன்பான குரலில் அவனை அழைத்தவராய் மெத்தைப் படிக்கட்டை நோக்கி நடக்கலானார். மோகனரங்கனோ தனது மனநிலைமையையும் தனது அந்தரங்க விஷயங்களையும் வெளியிட மாட்டாதவனாய், முற்றிலும் சோர்ந்து தளர்ந்தவனாய், அவருக்குப் பின்னாக மெல்ல நடக்கத் தொடங்கினான். அவனது நினைவு முற்றிலும், கட்டழகியான துரைஸானியம்மாளது கோமளாகர வடிவத்திலேயே சென்று லயித்துப் போயிருந்தது; அவனது மூளையோ கிருகிரென்று சுழன்று கொண்டிருந்தது; அவனது மனமோ பெருங் குழப்பத்தில் ஆழ்ந்து கிடந்தது; கைகால்கள் எல்லாம் தள்ளாடி நிலைதடுமாறிப் போயின. அவனது தோற்றமோ, மரண தண்டனையை ஏற்றுக் கொள்ளச் செல்லும் குற்றவாளியின் தோற்றத்தைப் போல மகா பரிதாபகரமாக இருந்தது. அந்த நிலைமையில் இருந்த மோகனரங்கன் பின்னும், சிவஞான முதலியார் முன்னுமாகச் சென்று, படிகளை விட்டிறங்கி வாசலை அடைந்தான். அவ்விடத்தில் வேலாயுதம் பெட்டி வண்டி

யோடு ஆயத்தமாக நின்று கொண்டிருந்தான். சிவஞான முதலியார் வண்டியின் கதவைத் திறந்து, அதற்குள் ஏறி உட்கார்ந்து கொண்டு மோகனரங்கனை நோக்கி, "வா; உள்ளே உட்கார்ந்து கொள்" என்றார். அவருக்கெதிரில் அவன் தனது முகக் குறிகளை எல்லாம் அடக்கிக் கொண்டவனாய், மறுமொழி கூறாமல் பெட்டி வண்டிக்குள் ஏறி முதலியாருக்கெதிர்ப் பக்கத்தி லிருந்த ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டான். உடனே வண்டியின் கதவு மூடித் தாளிடப்பட்டது. "எழும்பூர் ரயில் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோ" என்று ஆக்ஞாபித்தார் சிவஞான முதலியார். வண்டி உடனே புறப்பட்டு, விசையாகச் சென்று ஒரு நாழிகை நேரத்தில் எழும்பூர் ரயிலடியண்டை வந்து நின்றது. முதலியாரும் மோகனரங்கனும் கீழே இறங்கி டிக்கெட்டு வாங்கும் இடத்திற்குப் போனார்கள். உடனே சிவஞான முதலியார் பணங் கொடுத்து செங்கல்பட்டு ஸ்டேஷனுக்கு ஒரு டிக்கெட்டு வாங்கினார். அப்போது பிற்பகல் $5_{1/2}$-மணியாகி யிருந்தது. 5-50-க்கு அங்கே இருந்த ஒரு வண்டி போவது வழக்கம் ஆதலால், அந்த வண்டி அப்போது உட்புறத்தில் ஆயத்தமாக நின்று கொண்டிருந்தது. அந்த வண்டி தவறாமல் அதிலேயே அவனை அனுப்பிவிட வேண்டும் என்று உறுதி செய்து கொண்டிருந்தார் ஆதலால், சிவஞான முதலியார் தமது பெட்டி வண்டியிலேயே அவனையும் வைத்துக் கொண்டு, தாமும் அவனோடு கூடவே வந்து டிக்கெட்டையும் தாமே வாங்கினதன்றி, அவனை அழைத்துக் கொண்டு உள்ளே சென்று ரயில் வண்டியில் அவனை ஏறி உட்காரச் செய்தார். உடனே அவர் தமது கையில் இருந்த டிக்கெட்டையும், சட்டைப் பைக்குள்ளிருந்த கடிதத்தையும், அவனது சொந்தச் செலவுக்காக ஒரு ரூபாய் பணத்தையும் எடுத்து அவனிடத்தில் கொடுத்து, அந்தக் கடிதத்தைத் தமது தம்பியிடத்தில் கொடுக்கும்படியாகவும், அவருக்குக் கீழ்ப்படிந்து நடந்து கொள்ளும்படியாகவும், அவனது க்ஷேமத்தைப் பற்றி அடிக்கடி கடிதம் எழுதும்படிக்கும் அவனிடத்தில் அன்போடு கூற, அவன் அப்படியே செய்வதாகத் தனது தலையின் அசைப்பினால் சைகை செய்தானேயன்றி, வாயைத் திறந்து ஒரு வார்த்தையாகிலும் பேசவில்லை. அவன் தனது

மனதிற்குள்ளாகவே மிகுந்த துன்பமுறுகிறான் என்பதை அவர் அறிந்தும், அதை உணராதவர் போல, அவனை எப்போதும் நடத்துகிற வழக்கம் போலவே ஒரு வகையான அன்போடும் அதிகாரத்தோடும் அவனிடத்தில் மொழிந்து நின்றார். அதற்குள் வண்டி புறப்பட்டு நகர்ந்து விசையாக ஓடத் தொடங்கிவிட்டது. வண்டி நெடுந்தூரம் செல்லும் வரையில் சிவஞான முதலியார் அந்தப் பக்கத்திலேயே திரும்பி நின்று மோகனரங்கனையே பார்த்துக் கொண்டிருந்து வண்டி மறைந்தவுடனே அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுத் தமது பெட்டி வண்டிக்குப் போய்ச் சேர்ந்தார்.

★ ★ ★

20—வது அதிகாரம்

## காணக் கிடைக்காத கட்டழகி

பதினேழாவது அதிகாரத்தின் முடிவில் மதனகோபாலன் துரை ராஜாவினால் சுடப்பட்டுக் கீழே வீழ்ந்தான் என்றும், உடனே போலீஸ் ஜெவான்கள் வந்து சூழ்ந்து கொண்டார்கள் என்றும் சொன்னோம் அல்லவா! அவர்கள் அவ்வாறு நெருங்கியவுடனே, தங்களது சட்டைப்பைக்குள் மறைத்து வைத்திருந்த லாந்தர்களை வெளியில் எடுத்துக் கைகளில் பிடித்துக் கொண்டு அங்கே வீழ்ந்த மதனகோபாலனை உற்று நோக்கினர். அவன் மூர்ச்சித்து அசை வற்றுப் பிணம் போலக் கிடந்தான். ரிவால்வரிலிருந்து வெளிப் பட்ட குண்டு அவனது வலது காலின் ஆடுசதையைச் சிறிதளவு செதுக்கிக் கொண்டு போயிருந்ததாகையால், அந்த இடத்திலிருந்து வெளிப்பட்ட இரத்தம் தரையில் நெடுந்தூரம் வரையில் குளமாகத் தேங்கியிருந்ததன்றி காயத்திலிருந்து அப்போதும் உதிரம் பெருகிக் கொண்டிருந்தது. அவன் முரட்டுத் தோற்றமுள்ள திருடனைப் போலக் காணப்படாமல், யாரோ பெரிய மனிதரது வீட்டுப் பிள்ளை போல, நல்ல முகக்களையும் யௌவனமும் அழகும் வாய்ந்த மன்மத புருஷனாக இருந்ததைக் கண்ட போலீஸ் ஜெவான்கள், தாங்கள் அவனைத் திருடன் என்று எண்ணியது பெருத்த தவறென்பதை உடனே கண்டு கொண்டவர்களாய்,

பெரிதும் திகைப்பும் வியப்பும் அச்சமும் கலக்கமும் அடைந்து தாங்கள் என்ன செய்வதென்பதை உணராதவர்களாய் நிற்க, அப்போது அருகில் நெருங்கி வந்த துரைராஜா அப்போதே கீழே பார்ப்பவன் போல மதனகோபாலனை உற்று நோக்கி, "அடாடா! இவனா இங்கே வந்தவன்! ஐயோ! பாவம்! இவனை அநியாய மாகச் சுட்டுவிட்டோமே!" என்று கூறி நிரம்பவும் பரிதவிப்பவன் போல நடலம் புரிந்தான். அதைக் கேட்ட போலீசாரது மனம் இன்னமும் அதிகமாகக் கலங்கியது. அவர்களுள் ஒருவன், "இந்த மனிதர் யார்?" என்று துரைராஜாவை நோக்கிக் கேட்க, அவன் பெரிதும் விசனித்தவன் போலக் காண்பித்துக் கொண்டு, "இவன் ஒரு வீணை வித்துவான்; பெரிய இடங்களுக்கெல்லாம் போய் வீணை வாசிக்கக் கற்றுக் கொடுக்கிறவன். இவன் எங்களுடைய பங்களாவுக்குக்கூட வந்து பாடம் சொல்லிக் கொடுத்து வந்தான்; சில நாட்களாக, நாங்கள் இவனை வேண்டாம் என்று நிறுத்தி விட்டோம். அது முதல் இவன் இந்த பங்களாவுக்குள்ளேயே வந்த தில்லை. இன்றைக்கு இப்படித் திருட்டுத் தனமாக ஏன் வந்தான் என்பது தெரியவில்லை. இவன் ஒருநாளும் திருடும் குணமுடைய வனல்லவே! இங்கே ஏன் வந்தான் என்பது தெரியவில்லையே! ஐயோ பாவம்! உயிர் இருக்கிறதோ இறந்து போய்விட்டானோ பாருங்கள்" என்று மிகுந்த அனுதாபத்தோடு கூற, அதற்குள் ஒரு ஜெவான், மதனகோபாலனது அங்கவஸ்திரத்தை எடுத்து, அவனது காயத்தின் மீது நன்றாகக் கட்டி, மேன்மேலும் இரத்தம் வெளியில் வராமல் தடுத்தான். இன்னொரு ஜெவான், அவனது மார்பையும், கை நாடியையும் தொட்டுப் பார்த்து அவன் இன்னமும் உயிரோடிருப்பதாகக் கூற, உடனே துரைராஜா, "சரி; நாம் இப்போது ஒரு காரியம் செய்வோம். இவனைத் தூக்கிக் கொண்டு போய் போலீஸ் ஸ்டேஷனில் வைத்து, ஒரு டாக்டரை அழைத்து வந்து, இவனுக்கு ஆகவேண்டிய சிகிச்சைகளைச் செய்வோம். அதற்குள் இவனுடைய மூர்ச்சை தெளியும். உடனே நாம், இவன் இங்கே எதற்காக வந்தான் என்பதைக் கேட்டறிந்து, உடனே தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வோம்" என்று கூறினான்.

அதைக் கேட்ட போலீஸ் ஜெவான்கள் அப்படியே செய்வோம் என்று ஒப்புக்கொள்ள, உடனே அவர்களுள் மூவர் முறையே

மதனகோபாலனது தலை, உடம்பு, கால்கள் முதலியவற்றைப் பிடித்துக் தூக்க, ஒருவன் லாந்தரை முன்னால் பிடித்து அவர்களுக்கு வழிகாட்ட, ஐவரும் வந்த வழியாகவே நடந்து வேலிப்படலை அடைந்து, திறந்திருந்த வாசலின் வழியாக ராஜபாட்டைக்குப் போய்ச் சேர்ந்து போலீஸ் ஸ்டேஷனிருந்த திசையில் திரும்பினர். அதே காலத்தில் அந்த ராஜபாட்டையில் அவர்களுக்கு எதிர் திசையிலிருந்து ஒரு ஸாரட்டு வண்டி வந்தது. அதன் இரு பக்கங்களிலும், பிரகாசமான பெரிய இரண்டு லாந்தர்கள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் வெளிச்சமும் முனிசிபல் லாந்தர்களின் வெளிச்சமும் ஒன்று கூடியதால் அந்த இடம் இருளின்றி, ஒருவரையொருவர் அறிந்து கொள்ளக்கூடியதாக இருந்தது. அந்த ஸாரட்டில், சாரதியைத் தவிர, இன்னமும் ஒரே ஒரு மனிதர் அதன் முக்கிய ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார். கிருஷ்ணாபுரம் சமஸ்தானத்தாரது பங்களாத் தோட்டத்திற்குள் இருந்து ஒரு மனிதனைத் தூக்கிக் கொண்டு சில போலீசார் வந்ததைக் கண்ட அந்த ஸாரட்டின் சொந்தக்காரர், தமது வண்டியை உடனே அவ்விடத்தில் நிறுத்தச் செய்து கீழே இறங்கி, அந்த மனிதர்களை நோக்கி, "என்ன ஐயா அது? என்ன விசேஷம்?" என்று கேட்ட வண்ணம் அருகில் நெருங்கி, அவர்களது தோள்மீது பிணம் போலத் துவண்டு கிடந்த மனிதனது அடையாளத்தைக் கண்டு கொண்டவரைப் போலத் திடுக்கிட்டுத் திகைத்து வருந்தலானார். அவரது முகம் சடக்கென்று மாறுதல் அடைந்து சகிக்க இயலாத துயரத்தைக் காண்பித்தது. தேகம் பதறியது. அந்தச் சமயத்தில் ஜெவான்களுள் ஒருவன், "இவன் ரிவால்வரினால் காயப்பட்டு மூர்ச்சித்திருக்கிறான். போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகிறோம்" என்றான்.

அதைக் கேட்ட அந்த மனிதர் மிகுந்த சஞ்சலமடைந்தவராய், "சரி; நீங்கள் தூக்கி சிரமப்பட வேண்டாம்; இந்த வண்டியில் வையுங்கள்; நாங்கள் வண்டியை போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓட்டுகிறோம்" என்று கூறிய வண்ணம், வண்டியைத் திருப்பும்படி சாரதிக்கு உத்தரவு கொடுக்க, அவன் இமைப்பொழுதில் அதைத் திருப்பி நிறுத்த, அதுவும் நல்ல யோசனைதான் என்று எண்ணிக் கொண்ட ஜெவான்கள் மதனகோபாலனைக் கொணர்ந்து வண்டி

யில் உட்காரும் ஸ்தானத்திலிருந்த மெத்தையின் மேல் சாத்தி வைத்தனர். அவன் ஸ்மரணை இல்லாதிருப்பதால் நழுவிக் கீழே வீழ்ந்து விடுவான் ஆதலால், இருவர் வண்டியின் மேலே இருந்து, அவனைப் பிடித்துக் கொள்ளும்படி அந்த வண்டியின் எஜமானர் கூற, அவ்வாறே, இருவர் உட்கார்ந்து பிடித்துக் கொள்ள, வண்டி போலீஸ் ஸ்டேஷனை நோக்கி மெதுவாகச் செல்ல ஆரம்பித்தது; துரைராஜாவும் வண்டியின் பின்புறத்திலிருந்த பலகையில் ஏறி உட்கார்ந்து கொண்டான். அதன் பின்னால், இரண்டு ஜெவான் களும், வண்டியின் சொந்தக்காரரும் நடந்து சென்றனர். அந்தப் போலீஸ் ஸ்டேஷன் மிக்க அருகிலிருந்தமையால், வண்டி அதிசீக் கிரத்தில் ஸ்டேஷனுக்குப் போய்ச் சேர்ந்தது. மதனகோபாலனும் எடுத்துக் கொண்டு போய் உட்புறத்தில் விடப்பட்டான். அங்கே இருந்த போலீஸ் சப் இன்ஸ்பெக்டரும் மிகுதியிருந்த ஜெவான் களும் வியப்போடும் ஆவலோடும் மதனகோபாலனுக்கருகில் வந்து அவனை உற்று நோக்கி, மிகுந்த சஞ்சலமுமடைந்தனர். திருடன் தோட்டத்திற்குள் நுழைந்திருப்பதாகக் கூறி, உடனே ஜெவான்களை அனுப்ப வேண்டும் என்று துரைராஜா வந்து கேட்டுக் கொண்டது, சப் இன்ஸ்பெக்டர் முதலியோருக்குத் தெரிந்த விஷயம் ஆதலால், அதில் சம்பந்தப்பட்ட மனிதனே அவ்வாறு காயமடைந்து வந்திருக்கிறான் என்பதை அவர்கள் யூகித்துக் கொண்டனர் ஆனாலும், அதன் வரலாற்றை அறியப் பெரிதும் ஆவல் கொண்டனர். உடனே சப் இன்ஸ்பெக்டர் ஒரு ஜெவானை ஏவி தண்ணீரை எடுத்து மூர்ச்சித்துக் கிடப்பவனது முகத்தில் தடவி விசிறியால் வீசும்படி உத்தரவு கொடுக்க, அவன் அவ்வாறே செய்து மூர்ச்சையைத் தெளிவிக்கத் தேவையான முயற்சிகளைச் செய்தான்.

மதனகோபாலனது காலின் காயத்தில் கட்டப்பட்டிருந்த அங்க வஸ்திரம் முழுதும் இரத்தத்தினால் நனைந்து போனதன்றி, அதிலிருந்து இன்னமும் உதிரம் கசிந்து கொண்டிருந்ததைக் கண்ட சப் இன்ஸ்பெக்டர் உடனே வேறொரு ஜெவானை அழைத்து சமீபத்திலிருந்த ஒரு டாக்டரை அழைத்து வரும்படி கூறி, பைசைகிலில் போகும்படி அவனை அனுப்ப, அவன் அவ்வாறே விசையாகச் சென்றான்.

அதற்குள், வண்டிக்குப் பின்னால் நடந்து வந்த இரண்டு ஜெவான்களும், ஸாரட்டின் சொந்தக்காரரும் அங்கே வந்து சேர்ந்தனர். அவ்விடத்திலிருந்த சப் இன்ஸ்பெக்டர் முதலியோரான எல்லோரது பார்வையும், அந்த ஸாரட்டின் சொந்தக்காரரின் மீது சென்றது. துரைராஜா அவரை அதற்கு முன் நன்றாகப் பார்க்க வில்லை ஆதலால், அப்போது அவனும் அவரை உற்று நோக்க, அவனது முகம் சடக்கென்று மாறுதலடைந்தது. அன்று சாயுங் காலம் கோமளேசுவரன் பேட்டையில் மதனகோபாலனது வீட்டின் வாசலில் ஸாரட்டில் வந்திறங்கி உள்ளே போன மனிதரே அங்கேயும் வந்திருந்ததைக் காண, அவன் ஒருவாறு நடுநடுங்கிக் குழப்பமடைந்தான். தான் மதனகோபாலனைப் பின்பற்றி வந்த போது கோமளேசுவரன் பேட்டையில் அவனது வீட்டிற்குள் இருந்த மனிதர், அதற்குள் எங்கேயோ போய்விட்டு, தனது பங்களாவண்டையில் எப்படி வந்திருக்கக் கூடும் என்ற வியப்பும் ஐயமும் தோன்றின. மதனகோபாலன் இந்த இடத்திற்கு வந்திருக் கிறான் என்பதை ஒருகால் அவரும் உணர்ந்தவராக இருப்பாரோ என்றும், அவர் ஒருகால், அவனை மாத்திரமாவது, அல்லது, அவனோடு தனது தங்கையையும் சேர்த்தாவது ஸாரட்டில் வைத்து அழைத்துக் கொண்டு போக அங்கே வந்தவராக இருக்குமோ என்றும் பலவாறு எண்ணமிட்டு மௌனமாக நின்று கொண்டிருந்தான். அப்போது சப் இன்ஸ்பெக்டர் ஜெவான்களுள் ஒருவனை நோக்கி, அதன் வரலாறென்ன என்று கேட்க, அவன் சப் இன்ஸ்பெக்டரை நோக்கி, "யாரோ ஒரு திருடன் தங்களுடைய தோட்டத்துக்குள் நுழைந்து போவதாக இவர் சொன்னதின்மேல் நாங்கள் போனோமல்லவா? நாங்கள் அங்கே போன போது, ஒரு படல் திறந்து வைக்கப்பட்டிருந்தது. நாங்கள் எங்களுடைய லாந்தர்களை சட்டைப்பைக்குள் வைத்து மறைத்துக் கொண்டு சந்தடி செய்யாமல் மெல்ல உள்ளே போனோம். தோட்டத்தின் நடுவில் ஓர் ஆலமரம் இருக்கிறது. நாங்கள் கொஞ்ச தூரத்திலிருந்து, அங்கே பார்த்த போது யாரோ இரண்டு மனிதர்கள் நிற்பதைப் போல இருந்தது. அவர்கள் தணிந்த குரலில் பேசிக் கொண்டது போலவும் தோன்றியது. நாங்கள் பதுங்கிப் பதுங்கி அந்த ஆலமரத் துக்கு சமீபத்தில் போய் நெருங்க, அதற்குள் அவர்களுள் ஒருவன்

எங்கேயோ ஒடிப் போய்விட்டான். மிகுதியாக நின்ற இந்த மனிதன் எங்களைக் கண்டவுடனே மரங்களில் மறைந்து மறைந்து ஓட ஆரம்பித்தான்; நாங்கள் இருவரையும் பிடிக்க வேண்டும் என்று நாலு பக்கங்களிலும் பிரிந்து போய் வளைத்துக் கொண்டோம். இவன் அப்போது தப்பியோடினான். இவன் பிடிபடாமல் இருளில் தப்பி ஓடிவிடுவானோ என்ற நினைவினால் துரைராஜா ரிவால்வரினால் சுட்டுவிட்டார். அது இவனுடைய காலில் பட்டதனால் இவன் உடனே விழுந்துவிட்டான். இன்னொருவன் காணப்படவில்லை. ஆகையால் இவனை மாத்திரம் தூக்கிக் கொண்டு வந்தோம்" என்றான். உடனே துரைராஜா சப் இன்ஸ்பெக்டரை நோக்கி, "இவனை வெளிச்சத்தில் பார்த்த பிறகு இவன் திருடனல்ல என்பது தெரிகிறது" என்றான்.

*சப் இன்ஸ்:-* அப்படியானால் இவன் யார்?

*துரைராஜா:-* இவன் ஒரு வீணை வித்துவான். இவன் எங்களுடைய பங்களாவிலும் வீணை கற்றுக்கொடுக்க வந்து கொண்டிருந்தான். சில நாள்களுக்கு முன் நாங்கள் இவனை நிறுத்தி விட்டோம். அதுமுதல் இவன் எங்கள் பங்களாவுக்கே வந்த தில்லை. இன்றைக்கு மாத்திரம் ஏன் உள்ளே வந்தான் என்பது தெரியவில்லை.

*சப் இன்ஸ்:-* அது தெரிகிறவரையில் நாம் இவனைத் திருடன் என்று தான் பாவித்து மேல் நடவடிக்கைகள் நடத்த வேண்டும் — என்றார்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார், சப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "ஐயா! இவர் என்னுடைய நண்பர்; மிகவும் யோக்கிய மான மனிதர். இன்று சாயுங்காலம்கூட, நான் இவருடைய ஜாகைக்குப் போய், இவரிடத்தில் பேசிக் கொண்டிருந்தேன். இவர் அப்போது என்னிடத்தில் தெரிவித்ததென்ன என்றால், இன்றிரவு ஏழரை மணிக்கு மேல் எட்டுக்குள் தாம் இந்த பங்களாவில் உள்ள ஒரு மனிதரைப் பார்த்து அவருடைய உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று இவர் சொன்னதோடு, அதன் சம்பந்தமாக தமக்கு ஏதோ ஒரு கடிதம் வந்திருப்பதாகவும் சொன்னார். ஆகையால் நான் இவருடைய காரியத்துக்கு இடைஞ்சலாக

இருக்கக் கூடாதென்று அங்கே இருந்து புறப்பட்டு வந்து விட்டேன். எனக்கும் வேறொரு பங்களாவில் அலுவலிருந்த தாகையால், அங்கே போய்விட்டு நான் திரும்பி வந்தபோது, இந்த விபரீதக் காட்சியைக் கண்டேன். நீங்கள் தயவு செய்து ஒரு காரியம் செய்யுங்கள்; இவருடைய சட்டைப்பையில் ஏதாவது கடிதம் இருக்கிறதா என்று பாருங்கள்; கடிதமிருந்தால், அதைக் கொண்டு உண்மை இன்னதென்பதை நீங்கள் நிச்சயித்துக் கொள்ளலாம்" என்றார்.

அதைக் கேட்ட சப் இன்ஸ்பெக்டர், "சரி; அதுவும் நல்ல யோசனைதான்" என்று கூறிய வண்ணம், மதனகோபாலனது சட்டைப்பைகளில் ஒன்றனுள் தமது கையை நுழைத்துப் பார்க்க, அதற்குள் கிடந்த ஒரு காகிதம் கையில் தட்டுப்பட்டது. அதை சப்இன்ஸ்பெக்டர் வெளியில் எடுத்து, அதன் மேல் விலாசத்தைப் படித்தார். அந்த எழுத்து ஒரு ஸ்திரீயினால் எழுதப்பட்ட எழுத்தைப் போலக் காணப்பட்டது. அதன் மேலிருந்த தபால் முத்திரைகளை சப் இன்ஸ்பெக்டர் கவனித்துப் பார்த்தார். அந்தக் கடிதம் தோனாம்பேட்டையிலிருந்து கோமளேசுவரன் பேட்டைக்குத் தபால் மூலமாக அனுப்பப்பட்ட கடிதமென்பது நிச்சயமாகத் தெரிந்தது. அவ்வாறு ஆராய்ச்சி செய்த சப் இன்ஸ்பெக்டர் பசவண்ண செட்டியாரை நோக்கி, "இவருடைய மேல்விலாசமா இது?" என்றார். பசவண்ண செட்டியார், "ஆம்; இவருடையதுதான்" என்றார். அப்போது துரைராஜா சப் இன்ஸ்பெக்டருக்கருகில் நெருங்கி வந்து அந்த எழுத்து யாருடையதென்பதை உற்று நோக்கி, அது தனது தங்கையான கண்மணியம்மாளது எழுத்தென்பதை உணரவே, அவனது முகம் வெட்கத்தினாலும் கவலையினாலும் மாறுபட்டது. அந்தக் கடிதத்திற்குள் எழுதப்பட்டிருப்பது, காதல் சம்பந்தமான விஷயமாக இருந்தால், அது வெளியாவதனால் தனக்கும் தனது குடும்பத்தாருக்கும் இழிவும் மானஹானியும் வந்து நேருமே என்று நினைத்த துரைராஜா பெரிதும் கவலை கொண்டு தத்தளித்தவனாக நின்றான்; அப்போது சப் இன்ஸ்பெக்டர் பசவண்ண செட்டியாரைப் பார்த்து, "இதைப் பிரித்துப் படிக்கலாம் அல்லவா? இதில் ஏதேனும் ரகசியமான சங்கதி இருக்குமோ என்னவோ?" என்றார்.

உடனே துரைராஜா குறுக்கிட்டு, "ஆம்; நீங்கள் சொல்வது நிஜந் தான். இவன் திருட வந்தவனல்ல என்பது நன்றாகத் தெரிந்து விட்டது. ஆகையால், நீங்கள் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வேண்டாம். கடிதத்தை இருந்த இடத்திலேயே வைத்து விடுங்கள். டாக்டர் வந்து சிகிச்சை செய்தவுடனே இவனை வண்டியில் வைத்து நாங்களே கொண்டு போய் இவனுடைய ஜாகையில் விட்டு வந்துவிடுகிறோம்" என்றான்.

அதற்குள் பசவண்ண செட்டியார் சப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "இந்தக் கடிதத்தின் உண்மையை எல்லாம் நான் உள்ள படி தெரிவிக்கிறேன். ஆனால், இவர்கள் யார் என்பது எனக்குத் தெரியவில்லை; தயவு செய்து தெரிவிக்க வேண்டும்" என்று துரை ராஜாவைச் சுட்டிக் காட்டினார். சப் இன்ஸ்பெக்டர், "இவர்க ளுடைய பெயர் துரைராஜா என்பார்கள்; கிருஷ்ணாபுரம் ஜெமீந் தாருடைய தம்பி குமாரர்; இந்த வீணை வித்துவான் நுழைந்த பங்களா இவர்களுக்குச் சொந்தமானது" என்றார்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் நிரம்பவும் சந்தோஷ மடைந்தவர் போல நடித்து துரைராஜாவைப் பார்த்துப் புன்னகை செய்த வண்ணம், "ஓகோ! அப்படியா! தாங்கள் தானா துரைராஜா என்பவர்கள்! நான் இன்னான் என்பது தங்களுக்குத் தெரிந்திருக் காது, நான் இருப்பது மைசூர்; என்னை பசவண்ண செட்டியார் என்று சொல்லுவார்கள். தங்களுடைய பெரிய தகப்பனார் செய்யும் சந்தனக்கட்டை வர்த்தகத்தில், நான் அவருடைய கூட்டாளியாக இருந்து வருகிறேன். நான் இந்த ஊரிலேயே இருந்து வியாபாரத்தைப் பரவச் செய்யும் எண்ணத்தோடு இங்கே வந்து, இரண்டு தினமாகிறது. தங்களிடத்தில் கொடுக்கும்படியாக, தங்களுடைய பெரிய தகப்பனார் ஒரு கடிதம் கொடுத்தனுப்பி இருக்கிறார்கள். அதை எடுத்துக் கொண்டு நாளைய தினம் தங்களுடைய பங்களாவுக்கு நானே நேரில் வந்து தங்களைக் காணலாம் என்றிருந்தேன். அதற்குள் தெய்வச் செயலாக இப்போதே தங்களைக் காணும்படி நேர்ந்தது நிரம்பவும் சந்தோஷ மாயிற்று" என்று அன்பொழுகப் பேசினார்.

அதைக் கேட்ட துரைராஜா, ஒருவித எச்சரிக்கை அடைந்து மரியாதையாகவும் அன்போடும் பேசத் தொடங்கி, "அப்படியா!

நிரம்பவும் சந்தோஷம்!" என்றான். உடனே பசவண்ண செட்டியார் சப் இன்ஸ்பெக்டரை நோக்கி, "ஐயா! இந்தக் கடிதத்தில் எழுதப்பட்டுள்ள சங்கதி இவர்களுடைய குடும்ப சம்பந்தமான விஷயம்; ஆனால் துரைராஜா அவர்கள் சந்தேகிப்பதைப் போல, இதில் வித்தியாசமான விஷயம் எதுவுமில்லை. ஆகையால் கடிதத்தை நீங்கள் மாத்திரம் படித்துப் பார்த்துவிட்டு வைத்து விடுங்கள். உடனே உங்களுடைய மனசுக்கும் ஒருவிதமான திருப்தி ஏற்பட்டுவிடும்; இவர் குற்றமற்றவர் என்பது தெரிவ தோடு, கடிதத்தில் உள்ள விஷயம் வேறு எவ்விதமான கெட்ட விஷயமுமல்ல என்பதும் நன்றாக விளங்கும்" என்றார்.

அதைக் கேட்ட சப் இன்ஸ்பெக்டர் உடனே கடிதத்தைப் பிரித்துத் தமக்குள்ளாகவே படித்துப் பார்த்துவிட்டு, அதை மறுபடியும் மடித்து உறைக்குள் போட்டு, மதனகோபாலனது சட்டைப் பைக்குள் வைத்துவிட்டு துரைராஜாவை நோக்கிய வண்ணம், "சரி; விஷயம் செட்டியார் அவர்கள் சொன்னபடியே தான் இருக்கிறது. ஆகையால் இந்த விஷயத்தில், நாங்கள் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை" என்றார்.

அதைக் கேட்ட துரைராஜா ஒருவாறு திருப்தி அடைந்தானா கிலும், தனது தங்கை அந்த இரவில் அவனை எதற்காக வரவழைத்திருப்பாள் என்ற ஒரு பெருத்த சந்தேகமும், வியப்பும் அவனது மனதை வருத்த ஆரம்பித்தன; தான் அந்தக் கடிதத்தை அப்போது பார்க்காவிட்டாலும், பிறகாவது பசவண்ண செட்டியாரைக் கேட்டு அதை வாங்கிப் படித்துப் பார்க்க வேண்டும் என்று உறுதி செய்து கொண்டிருந்தான்.

அந்தச் சமயத்தில், ஸ்டேஷன் வாசலில், ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. ஒரு டாக்டரும், அவரது கம்பவுண்டரும் அதற்குள் இருந்து கீழே இறங்கினார்கள். அவர்களை அழைக்கச் சென்ற ஜெவானும் சைகிளில் வந்து சேர்ந்தான். மதன கோபாலனுக்குத் தேவையான மருந்துகளும் வண்டியில் வந்து சேர்ந்தன. அவர்கள் மூவரும் மருந்துகளும் உள்ளே வர, டாக்டர் மதனகோபாலனது நாடியைப் பார்த்து, அவனது மூர்ச்சை தெளிந்து கொண்டிருக்கிற

தென்பதை உணர்ந்து, ஈரத்துணியால் முகத்தில் நன்றாக ஒற்றடம் கொடுக்கும்படி சொல்லிவிட்டு, தமது கம்பவுண்டரைக் கொண்டு, அவனது காலிலிருந்த காயத்தை நன்றாக அலம்பி மருந்து வைத்துக் கட்டுகள் போடச் செய்தார்; அதற்குள் அரை நாழிகை நேரம் சென்றது. மதனகோபாலன் தனது உணர்வைப் பெற்று, "அப்பா! அம்மா!" என்று புலம்பிக் கொண்டு தனது கண்களைத் திறந்து பார்த்தான். அதற்குள் டாக்டர் ஆயத்தமாக வைத்திருந்த ஒரு மருந்தைக் கையில் எடுத்து மதனகோபாலனது வாயைத் திறக்கச் செய்து, அந்த மருந்தை, அவன் அருந்தச் செய்த பிறகு சப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "இனிமேல் கவலை இல்லை. இவர் இப்படியே இரவு முழுதும் தூங்கட்டும். நான் நாளைய தினம் காலையில் வந்து பார்க்கிறேன்" என்றார். அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் டாக்டரை நோக்கி, "ஐயா! இவருடைய ஜாகை கோமளேசுவரன் பேட்டையில் இருக்கிறது. இவரை வண்டியில் வைத்து அசையாமல் அந்த இடத்துக்குக் கொண்டு போவதனால் ஏதாகிலும் கெடுதல் நேருமோ?" என்றார்.

டாக்டர், "ஓ! கொண்டு போகலாம். அதனால் எவ்வித கெடுதலும் நேராது" என்றார். அதைக் கேட்ட பசவண்ண செட்டியார், "அப்படியானால் நாங்கள் இவரை இப்போது அங்கே எடுத்துக் கொண்டு போகிறோம். தங்களுடைய ஜாகைக்கு ஸாரட்டை அனுப்புகிறோம். தங்களுடைய விலாசம் இன்ன தென்பதைத் தெரிவித்தால், காலையில் தங்களுடைய ஜாகைக்கு ஸாரட்டை அனுப்புகிறோம். தாங்கள் அதில் வரலாம்; தங்களுக்குச் சேரவேண்டிய மரியாதையையும் இப்போதே செய்து விடுகிறோம்" என்று கூறிய வண்ணம் தமது சட்டைப் பைக்குள் இருந்த நோட்டுக் கட்டை வெளியில் எடுத்தார். நூறு ரூபாய் முதல் 5-ரூபாய் வரையில் உள்ள நோட்டுக் கற்றைகள் ஒவ்வொரு பையிலும் திண்டு திண்டாகக் கிடந்தன. அவற்றில் ஒன்றை எடுத்து, அதில் ஐம்பது ரூபாய் நோட்டு ஒன்றை மிகவும் அலட்சியமாக எடுத்து, டாக்டரிடத்தில் மரியாதையாக நீட்ட, அவர், "இதற்கென்ன அவசரம்? பின்னால் பார்த்துக் கொள்ள லாமே" என்று கூறிய வண்ணம், அந்த நோட்டை வாங்கித் தமது

சட்டைப் பைக்குள் சொருகிக் கொண்டு, தமது விலாசத்தையும் கொடுத்துவிட்டு, மிகுந்த மகிழ்ச்சியோடு அவ்விடத்தைவிட்டு வெளிப்பட்டு, குதிரை வண்டியில் தமது கம்பவுண்டரோடு ஏறிக் கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார்.

பசவண்ண செட்டியாரது உடம்பிலிருந்த விலையுயர்ந்த ஆடைகளையும், விரல்களிலிருந்த வைர மோதிரங்களையும், தங்கச் சங்கிலியுள்ள கடிகாரம், தங்க மூக்குக் கண்ணாடி முதலிய பெரிய மனித சின்னங்களையும், அவரது சட்டைப்பைக்குள் இருந்த திரவியக் குவியலையும் கண்ட சப் இன்ஸ்பெக்டர் முதலிய போலீசாரும் துரைராஜாவும் மிகவும் பிரமித்து, அவர் யாரோ பெருத்த பிரபுவென்று நினைத்து, அவரிடத்தில் மிகுந்த மரியாதையையும் மதிப்பையும் வைக்கத் தொடங்கினர். அப்படிப்பட்டவரது நட்பு தனக்கு ஏற்பட்டால் அதனால் தனக்குப் பெருத்த அனுகூலங்கள் ஏற்படும் என்று துரைராஜா எண்ணிக் கொண்டதன்றி, அப்போது அவரோடு கூடவே கோமளேசுவரன் பேட்டை சுந்தர விலாசத்திற்குப் போய், அங்கே மறைவாக வைக்கப்பட்டிருக்கும் ஸ்திரீ ரத்தினத்தைக் கண்ணாலா கிலும் பார்த்துவிட்டு வரவேண்டும் என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டான்.

அப்போது பசவண்ண செட்டியார் மதனகோபாலனை அவனது ஜாகைக்கு எடுத்துக் கொண்டு போவதற்கு சப் இன்ஸ் பெக்டரிடத்தில் அனுமதி பெற்றுக் கொண்டார். துரைராஜா, தானும் உதவிக்காக அவரோடுகூட கோமளேசுவரன் பேட்டை வரையில் வந்து விட்டுத் திரும்பி வருவதாகக் கூற, பசவண்ண செட்டியார் அதற்கு இணங்கினார். உடனே, சப் இன்ஸ்பெக்டரது உத்தரவின் மேல், சில ஜெவான்கள் மதனகோபாலனை மெதுவாகத் தூக்கிக் கொணர்ந்து ஸாரட்டில் பக்குவமாகச் சார்த்தி வைக்க, உடனே பசவண்ண செட்டியார், அவர்களது பிரயாசைக் காக பெருத்த பணத்தொகையைச் சன்மானம் செய்துவிட்டு வண்டியில் ஏறிக்கொண்டு துரைராஜாவையும் ஏறி உட்காரச் செய்து, வண்டியை ஆடாமல் மெல்ல ஓட்டும்படி ஆக்ஞாபித்தார். ஸாரட்டு வண்டி மெதுவாகச் செல்லத் தொடங்கியது; டாக்டரால் கொடுக்கப்பட்ட மருந்து, மதனகோபாலன் தனது காயத்தின்

வலியை உணராமல் இருக்கும் பொருட்டு, ஒரு வகையான போதையை உண்டாக்கியதாகையால், அவனது கைகளும், கால்களும், உடம்பும் நழுவி நழுவிச் சென்றன. ஆகவே, அவன் கீழே வீழ்ந்துவிடாமல், பசவண்ண செட்டியாரும், துரைராஜாவும் அவனது உடம்பை ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொண்டே இருந்தனர். வண்டியும் சென்று கொண்டே இருந்தது; முதலில் ஒரு மயில் தூரம் வரையில், அவர்கள் ஒருவருக்கொருவர் எவ்வித சம்பாஷணையும் செய்யாமல் மௌனமாகவே இருந்தனர். அதன்பிறகு துரைராஜா செட்டியாரை நோக்கி, "இந்த மனிதனுக்கு என்னால் அக்கிரமமாக இப்படிப்பட்ட துன்பம் ஏற்பட்டது எனக்கு நிரம்பவும் விசனமாக இருக்கிறது. இப்படிப்பட்ட இருட்டு வேளையில் இந்த மனிதன் தோட்டத்துக்குள் வந்திருப்பான் என்று, நான் சந்தேகிக்கவே இல்லை" என்றான். அதைக் கேட்ட செட்டியார் மிகுந்த விசனத்தோடு அவனை நோக்கி, "எல்லாம் வேளைப் பிசகினால் ஏற்படும் காரியமே யொழிய, என்னால் வந்தது, உன்னால் வந்தது என்று விசனப் படுவதில் என்ன உபயோகம்! நீங்கள்தான் என்ன செய்வீர்கள்? உங்கள் மேல் குற்றமே இல்லை. நீங்கள் செய்தது நியாயமான காரியம். இம்மாதிரி அன்னியர் வீட்டுத் தோட்டத்துக்குள் போகக்கூடா தென்று, இவனே சொன்னான்; இங்கே வருவதற்கு இவனுக்கு மனமே இல்லை; நான்தான் இவனை அனுப்பியவன். நியாயமாகப் பார்த்தால், என்னாலேதான் இந்த ஆபத்து இவனுக்கு ஏற்பட்ட தென்று சொல்ல வேண்டும்" என்றார்.

அதைக் கேட்ட துரைராஜா, "அந்தக் கடிதத்தின் எழுத்திலிருந்து, அதை என்னுடைய தங்கை தான் எழுதி இருப்பாள் என்று நான் யூகித்துக் கொண்டேன். அப்படியானால், எங்களைக் கண்டு ஓடியது அவளாகத்தான் இருக்க வேண்டும்" என்றான்.

பசவண்ண செட்டியார், "ஆம்; அந்தக் குழந்தையாகத்தான் இருக்கும்; நல்ல வேளையாக, அந்தக் குழந்தை தப்பித்துக் கொண்டாளே; அது தெய்வச் செயல் என்றுதான் மதிக்க வேண்டும்; அந்தப் பெண்ணையும் நீங்கள் திருடன் என்று எண்ணிச் சுட்டிருந்தால், இந்நேரம் சகிக்க முடியாத துக்கமும்

கொடூரமான மரணமும் ஏற்பட்டிருக்கும்; இதுவும் கடவுளின் திருவருள்தான்" என்றார்.

துரைராஜா, "ஆம்; தாங்கள் போலீஸ் ஸ்டேஷனில் சொன்ன உறுதியிலிருந்து, இவனும் என்னுடைய தங்கையும் எவ்வித வித்தியாசமான கருத்தோடும் சந்திக்கவில்லை என்பதை நான் நம்பி விட்டேன்; இருந்தாலும், இப்படிப்பட்ட இருட்டில், இவர்கள் சந்தித்துப் பேசும்படியான அவ்வளவு முக்கியமான விஷயம் என்னவாக இருக்கலாம் என்று நானும் நினைத்து நினைத்துப் பார்க்கிறேன். எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. இன்று இந்த மனிதன் ஓர் உயிரைக் காப்பாற்றுவதற்காக வந்ததாக நீங்களும் சொன்னீர்களே; அதுவும் விளங்கவில்லை" என்றான்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் உடனே மறுமொழி கூறாமல் சிறிது நேரம் மௌனமாக இருந்து, பிறகு மெதுவான குரலில் பேசத்தொடங்கி, "அந்த விஷயம் மிகவும் ரகசியமானது; இந்த நடுப்பாதையில் அதைப்பற்றி நாம் விரிவாகப் பேசினால், எவர் காதிலாகிலும் படும். பகலில் பக்கம் பார்த்துப் பேசு; இரவில் பேசவே பேசாதே என்ற வசனம் சொல்லுவார்கள் ஆகையால், அந்த விபரங்களை எல்லாம், நாளைய தினம் உங்களுடைய பங்களாவுக்கு நான் கடிதம் கொண்டு வரும்போது விரிவாகச் சொல்லுகிறேன். மதனகோபாலனுக்கு வந்த இந்தக் கடிதத்தையும் கொண்டு வந்து, உங்களிடத்தில் காட்டுகிறேன். அது வரையில் நீங்கள் சந்தேகமும் கொள்ளக்கூடாது. அதைப்பற்றி அந்தக் குழந்தையிடத்திலாவது உங்களுடைய அத்தையிடத்திலாவது வேறு இதராளிடத்திலாவது பிரஸ்தாபம் கூடச் செய்யக் கூடாது. நீங்கள் எனக்கு இந்த வாக்குறுதி செய்து கொடுத்தால், நான் நாளைய தினம் உங்களுடைய பங்களாவுக்கு வந்து, உங்களுடைய மனம் திருப்தியடையும்படி உண்மையெல்லாம் சொல்லுகிறேன்" என்றார். துரைராஜா, "அப்படியே ஆகட்டும். நாளைக்கு உங்களை எத்தனை மணிக்கு எதிர்பார்க்கலாம்?" என்றான்.

செட்டியார், "உங்களுடைய சௌகரியப்படி நான் வரக் காத்திருக்கிறேன். நீங்கள் பங்களாவில், எது முதல் எதுவரையில் இருப்பீர்கள்?" என்றார்.

துரைராஜா, "நான் எப்போதும் இருப்பேன்; ஆனால், நாளைய தினம், அருமையான சிநேகிதர்களுடைய பங்களாவுக்கு நான் வருகிறேன் என்று சொல்லி இருக்கிறேன்; அங்கே பிற்பகல் மூன்று மணிக்குப் போகும்படியாக இருக்கும்; அதற்கு முன், நீங்கள் எப்போது வந்தாலும், நான் ஆயத்தமாக இருப்பேன்" என்றான்.

செட்டியார், "சரி; அப்படியானால், நான் போஜனத்தை முடித்துக் கொண்டு பகல் ஒரு மணிக்கு அங்கே வந்து சேருகிறேன்" என்றார்.

துரைராஜா, "ஏன் போஜனத்துக்கே அங்கே வந்துவிடக் கூடாதா?" என்று புன்சிரிப்போடு நயமாகக் கேட்க செட்டியார், "போஜனத்துக்கென்ன? நான் சாப்பிடுவதெல்லாம் யாருடைய போஜனம்? எல்லாம் உங்களுடைய பெரிய தகப்பனாருடையது தானே! அவருடையதெல்லாம் உங்களுடையதல்லவா? நான் இந்த ஊரிலேயே வந்து தங்கப் போகிறேனே; அப்போது, நான் உங்களைத்தான் என்னுடைய முக்கிய நண்பராக வைத்துக் கொள்ளப்போகிறேன். அப்போது போடுங்களேன் போஜனத்தை எல்லாம்; நான் வயிற்றுப் போஜனத்தோடு திருப்தி அடைகிற வனல்ல. எனக்கு சங்கீதம் முதலிய சகலமான விஷயங்களிலும் ஆசை அதிகம். என்னிடத்தில் எடுக்க எடுக்க மாளாத அளவற்ற சொத்து இருக்கிறது, அதையெல்லாம் செலவழித்து பட்டணத்தில் உள்ள சுகங்களை எல்லாம் அனுபவித்துவிட வேண்டும். அதற்காகவே, நான் இங்கே தனியாக வியாபாரம் செய்வதாக உங்களுடைய பெரிய தகப்பனாரிடத்தில் அனுமதி பெற்றுக் கொண்டு வந்துவிட்டேன். நீங்கள்தான் எனக்கு எல்லா விஷயங் களுக்கும் வழிகாட்டியாக இருந்து, நீங்களும் என்னோடு சுகங்களை எல்லாம் அனுபவிக்க வேண்டும்" என்றார்.

எதிர்பாராத அந்த வார்த்தைகளைக் கேட்ட துரைராஜா கரை கடந்த சந்தோஷமடைந்தவனாய், நல்ல கறவைப் பசு தனது வலையில் வந்து வீழ்ந்து விட்டதென்று நினைத்தவனாய், அவரது பொருளைக் கொண்டு தான் சகலமான சுகபோகங் களையும் அனுபவித்துவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு, "சரி; நான் எந்த விஷயத்திலும் உங்களுடைய பிரியப்படி நடக்கத்

தயாராக இருக்கிறேன் என்பதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். நாளைக்கு சரியாக ஒரு மணிக்கு உங்களுடைய வருகையை எதிர் பார்த்திருப்பேன்" என்றான். செட்டியார், "அவசியம் வருகிறேன். தவறவே மாட்டேன்" என்று அழுத்தமாகக் கூறினார்.

அதற்குள் ஸாரட்டு வண்டி கோமளேசுவரன் பேட்டை சுந்தர விலாசத்தின் வாசலில் வந்து நின்றது. உடனே அவர்களது சம்பாஷணை முற்றுப்புள்ளி பெற்றது. செட்டியார் சாரதியை நோக்கி, "அடே! கதவைத் தட்டி, வேலைக்காரர்களில் நாலு பேரை அழைத்து ஒரு சாய்மான நாற்காலியையும் எடுத்துக் கொண்டுவா!" என்றார். அந்த மனிதன் விரைவாக வாசற்படியில் ஏறிக் கதவைத் தட்ட, ஒரு வேலைக்காரன் வந்து கதவைத் திறந்தான். உடனே சாரதி விஷயத்தை இரண்டொரு வார்த்தையில் அவனிடத்தில் தெரிவிக்க, அவன் பெருத்த திகைப்பும் திகிலும் கொண்டவனாய் உள்ளே ஓடி, இன்னமும் மூன்று வேலைக்காரர் களையும் அழைத்துக் கொண்டு, சாய்மான நாற்காலியோடு வண்டிக்கருகில் வந்து சேர்ந்தான். உடனே மதனகோபாலன், மெதுவாகத் தூக்கி நாற்காலியில் சார்த்தப்பட்டான். நான்கு வேலைக்காரர்கள் அவனை நாற்காலியோடு தூக்கி மெல்ல வீட்டிற்குள் கொண்டு போயினர். செட்டியார், துரைராஜாவைப் பார்த்து, "சரி; உங்களுக்கு நான் நிரம்பவும் சிரமம் கொடுத்து விட்டேன். இந்த ஸாரட்டையே திரும்பவும் உங்களுடைய பங்களாவுக்கு இப்போது அனுப்புகிறேன். நீங்கள் இதிலேயே போங்கள் வேறு வாடகை வண்டி அமர்த்த நேரமில்லை" என்றார்.

உடனே துரைராஜா நன்றியறிதலினால் மலர்ந்து புன்னகை செய்த வதனத்தினனாய், "சரி; நிரம்ப சந்தோஷம். அப்படியே ஆகட்டும்; இந்த மனிதனை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்; அந்த டாக்டரையே இரண்டு வேளைகளிலும் வரச் செய்து மருந்து போடச் சொல்லுங்கள். இவ்வளவு துன்பங்களும் என்னால் ஏற்பட்டன. மதனகோபாலனை நாற்காலியிலிருந்து எடுத்துப் படுக்கையில் விடப் போகிறார்கள் அல்லவா?" என்றான்.

செட்டியார், "ஆம்; படுக்கையிலே தான் விட்டு வைக்க வேண்டும்" என்றார்.

துரைராஜா, "அது தான் சரி; மதனகோபாலன் போலீஸ் ஸ்டேஷனில் கண்ணைத் திறந்த பிறகு இன்னமும் கண்ணைத் திறந்தே பார்க்கவில்லை. இப்போது நீங்கள் நாற்காலியிலிருந்து படுக்கையில் விடும் போது ஒருவேளை அவன் கண்ணைத் திறந் தாலும் திறக்கலாம். அவனிடத்தில் என்னை மன்னித்துக் கொள்ளும்படியாக ஒரே ஒரு வார்த்தையைச் சொல்லி விட்டு, நான் போகிறேன்" என்றான்.

அதைக்கேட்ட செட்டியார், 'இப்போது கொடுக்கப்பட்டிருப்பது போதை மருந்து; அவன் கண்ணைத் திறப்பான் என்பதே சந்தேகம்; இருந்தாலும் பாதகமில்லை. உள்ளே வாருங்கள்' என்று கூறி முன்னால் நடக்க, துரைராஜா பின் தொடர்ந்து வீட்டிற்குள் சென்றான். வண்டிக்காரன் மாத்திரம் வெளியில் நின்றான். மற்ற எல்லோரும் உள்ளே சென்றவுடன் வாசற் கதவு சாத்தி உட்புறத்தில் தாளிடப்பட்டது. செட்டியாரும் துரை ராஜாவும் பின்னால் சிறிது நின்று உள்ளே நுழைந்தார்கள் ஆதலால், முன்னாகவே நாற்காலியைத் தாங்கிச் சென்ற வேலைக் காரர்கள் அந்தக் கூடத்தின் ஒரு பக்கத்தில் கிடந்த கட்டிலின் மேல், மெத்தையைப் பிரித்துவிட்டு, மதனகோபாலனை மெதுவாகத் தூக்கி அதன்மேல் படுக்கவைத்தனர். அப்போதும் அவன் கண்ணைத் திறக்காமலே துவண்டு சவம் போலக் கிடந்ததைக் கண்ட செட்டியார், 'சரி; உங்களுடைய எண்ணம் பலிக்க போகிற தில்லை' என்றார். அதைக் கேட்ட துரைராஜா அதற்கு மேல் பேச்சை வளர்க்க மாட்டாதவனாய், 'சரி; நான் உத்தரவு வாங்கிக் கொள்ளுகிறேன். நாளைக்கு ஒரு மணிக்கு வரவேண்டியதை மறந்துவிட வேண்டாம்' என்றான். 'இல்லை இல்லை; அதை மறப்பேனோ!' என்று கூறிய வண்ணம் செட்டியார் திரும்பவும் வாசலை நோக்கி நடக்க, துரைராஜா அவருக்குப் பின்னால் தொடர்ந்து வந்தான்; அதற்குள் அந்த வீட்டிற்குள்ளிருந்த ஆண் பெண்பாலார் யாவரும் மதனகோபாலனுக்கு ஏதோ பெருத்த விபத்து நேர்ந்துவிட்டதென்று யூகித்துக் கொண்டு தங்களது விசனத்தை அடக்க மாட்டாமல், கோவென வாய்விட்டு அழத் தொடங்கினர். அப்போது மேன்மாடிப் படியில், 'ஐயோ! தெய்வமே! இப்படியும் சதி செய்தாயா!' என்று ஒரு கூக்குரல்

கேட்டது. அந்தக் குரல் தெய்வ கானத்தைத் தோற்கச் செய்வ தாகவும், கவலையும் கரையச் செய்யும் கனிவை உடையதாகவும் இருந்தது. அடுத்த நிமிஷத்தில், மின்னற் கொடியோ ஜெகஜ் ஜோதியோ என்று சந்தேகிக்க அற்புதமான வனப்பைத் தாங்கிய ஜெகன் மோகன மடமங்கை ஒருத்தி மெத்தைப் படிகளில் இருந்து ஓட்டமாகக் கீழே இறங்கி, 'ஐயோ! என் கண்ணே! உனக்கு என்ன கதி நேர்ந்ததோ!' என்ற புலம்பலோடு கட்டிலண்டை பாய்ந்து, மதனகோபாலனது உடம்பை அணைத்துக் கொண்டாள். அந்த ஆரவாரத்தைக் கேட்டு திடுக்கிட்டுத் திகைப்படைந்த துரைராஜா பின் பக்கம் திரும்பி அந்த அணங்கை நோக்க, அவன் திகைத்து திக்பிரமை கொண்டு, மோகித்து, ஸ்தம்பித்து, அசைவற்று அப்படியே நின்று விட்டான். அதைக் கண்ட செட்டியார், அவனது வலது கரத்தைப் பிடித்து, 'வாருங்கள்; இவர்கள் பெருத்த அமர்க்களம் செய்து, ஊர் ஜனங்கள் வந்து கூடும்படி செய்து விடுவார்கள். நான் உங்களை வண்டியில் ஏற்றிவிட்டுத் திரும்பி வந்து இவர்களைச் சமாதானப்படுத்த வேண்டும்' என்று கூறி, அவனை இழுக்க, அவன் பின்புறம் பார்த்தபடியே வெளியிற் சென்றான்.

செட்டியார் வாசற்கதவைத் திறந்து துரைராஜாவை ஸாரட்டில் உட்கார வைத்து அனுப்பிவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே போய்ச் சேர்ந்தார்.

ஸாரட்டில் சென்ற துரைராஜா அப்படியே உருகி ஓய்ந்து போய், "ஆகா! எவர் கண்ணிலும் படாமல், நீ இங்கேயா இருக்கிறாய்! ஊரில் உள்ள ஜனங்கள் எல்லோரும், உன் மேல் மையல் கொண்டு, மோகனாங்கி! மோகனாங்கி! என்று சித்தப்பிரமை கொண்டு மூலை முடுக்குகளிலெல்லாம் தேடியலை கிறார்கள். நீ இந்த வீட்டிலா ஒளிந்து கொண்டிருக்கிறாய்! ஆகா! எவருக்கும் காணக் கிடைக்காத கட்டழகியான மோகனாங்கியை நான் பார்க்கும்படி நேர்ந்ததும் தெய்வத்தின் அருள்தான், மன்மத ஸ்வரூபன மதனகோபாலனை வைத்துக் கொண்டிருப்பதனாலே தான், நீ வேறு எவரையும் ஒரு பொருட்டாக மதிக்க மாட்டேன் என்கிறாய். சரி! இருக்கட்டும்! இந்த உலகத்தில் துரைராஜாவுக்கு

இணங்காத பதிவிரதையும் உண்டா? இந்தச் சந்தர்ப்பத்தில் எனக்கு இந்த பசவண்ண செட்டியாருடைய சிநேகம் ஏற்பட்டதும், என்னுடைய நல்ல அதிர்ஷ்டத்தையே காட்டுகிறதென்பதற்குச் சந்தேகமே இல்லை. நாளைக்கு இவர் வரட்டும் பேசிக்கொள் கிறேன்" என்று தனக்குள்ளாகவே பலவாறு நினைத்து மனக் கோட்டை கட்டிக்கொண்டு பங்களாவிற்குப் போய்ச் சேர்ந்தான்.

★ ★ ★

21–வது அதிகாரம்

## காதற்கிளியின் கடித விநோதம்

கல்யாணியம்மாள் மோகனரங்கனிடத்தில் கடிதத்தைக் கொடுத்து மைலாப்பூருக்கு அனுப்பிய பிறகு, தனது வேலைக் காரியை வெளியில் போயிருக்கச் சொல்லிவிட்டு ஒய்ந்து, "அப்பாடா" என்று தனது தலையணைகளில் சாய்ந்து சயனித்துக் கொண்டாள். அவளது மனதும் தேகமும் அவளைப் பெரிதும் வதைத்துக் கொண்டே இருந்தன. அவளுக்கு ஏற்பட்ட அத்தனை துன்பங்களுக்கும் இடையில் அவளது மனதில் இன்னொரு புதிய கவலையே யாவற்றிலும் வலுவாக எழுந்து அவளை வருத்தத் தொடங்கியது; தனது மூத்த குமாரி, எல்லா விஷயங்களையும், இளைய குமாரியான கோமளவல்லியிடத்தில் வெளியிட்டிருப் பதைப் போல, அவளுக்கும் மோகனரங்கனுக்கும் ஏற்பட்டுள்ள திருட்டு நட்பைப்பற்றியும், அவள் தங்கையிடத்தில் வெளியிட் டிருப்பாளாகில், மகா பரிசுத்தமான நடத்தையும், உயர்வான குணமும் வாய்ந்தவளான கோமளவல்லியும் ஒருகால் துன்மார்க் கத்தில் இறங்கி அக்காளைப் போலக் கெட்டுப் போய்விடுவாளோ என்ற கவலையே பெருத்த கவலையாக எழுந்து கல்யாணியம் மாளை வதைக்கத் தொடங்கியது. பெண்கள் இருவரையும் தனியான அந்தப்புரங்களில் வைத்து, இடைவிடாமல் தனது நாட்டத்தை அவர்களின் மேல் செலுத்தாமல் இருந்ததனால், அப்படிப்பட்ட துன்பம் ஏற்பட்டதென்று நினைத்த கல்யாணி யம்மாள், இனிமேல் அவர்களை அதிசீக்கிரத்தில் கலியாணம் செய்து கொடுக்கும் வரையில், அவர்களையும் தனது அந்தப்

புரத்திற்குள்ளேயே இருக்கும்படி செய்து, தான் சதாகாலமும் அவர்களோடு கூடவே இருந்தாலன்றி, ஏதேனும் விபரீதமும் அவமானமும் இழிவும் ஏற்படுவது நிச்சயம் என்று நினைத்தாள்.

அவ்வாறு நினைத்ததன்றி, அந்த அம்மாள் இன்னமும் பல வகைப்பட்ட சிந்தனையிலும் உலப்பப்பட்டிருந்தாள். துரைஸானி யம்மாள் ஓடிப்போய் விடுவாளோ என்னும் அச்சத்தினால், அந்த அம்மாள், துரைஸானியம்மாளை. அவளது அந்தப்புரத்திற்குள் வைத்து வெளிக்கதவைப் பூட்டிக் கொண்டு வந்ததும் கவலைக் கிடமாக இருந்தது. துரைஸானியம்மாள் அவ்வாறு சிறை வைக்கப்பட்டிருக்கிறாள் என்ற விஷயம் வேலைக்காரர்களுக்கும் தாதிகளுக்கும் அதிசீக்கிரத்தில் எட்டிவிடும் ஆதலால், அவர்கள் அவளது நடத்தையைப் பற்றி பலவாறு யூகங்களும் புரளிகளும் செய்ய இடம் கொடுக்கக் கூடியதாக இருந்தது; நிற்க, அந்த விஷயம் கோமளவல்லியின் செவிக்கு எட்டாமலிருப்பதே உசிதமாகவும் தோன்றியது. துரைஸானியம்மாள் தலைநோவினால் வருந்துவதால், எவரும் உட்புறத்தில் போய் தொந்தரவு செய்யாமல் இருப்பதற்காக, கதவு வெளியில் பூட்டப்பட்டிருக் கிறதென்ற ஒரு பொய் முகாந்தரத்தை வெளியிடுவதானாலும், அந்தத் தந்திரம் இரண்டொரு நாளைக்குப் பலிக்குமேயன்றி, அவளுக்குக் கலியாணம் ஆகும் வரையில் அவ்வாறு செய்வது அசம்பாவிதமாகவும் நம்பத்தகாததாகவும் இருந்தது. நிற்க, துரை ஸானியம்மாள் இருந்த அந்தப்புரத்தின் ஜன்னல்கள் திறந்திருந் தமையால், அவள் ஜன்னல்களினண்டையில் நின்று தாதிகளிடத் தில் தனது தாயைப் பற்றி எவ்விதமான அவதூறை வெளியிடு வாளோ என்ற அச்சமும் உண்டாயிற்று. அதுவும் தவிர, அவள் மோகனரங்கன் மேல் கடுமோகம் கொண்டிருப்பவள் ஆதலால், அவள் அவன் விஷயத்தில் செய்த இழிசெயலை மிகவும் பெருமையாக நினைத்து, வெளியிட்டாலும் வெளியிடலாம் என்ற ஐயமும் தோன்றியது. ஆகவே, கல்யாணியம்மாள் தனது மூத்த குமாரியை என்ன செய்வது என்பதைப் பற்றியும் பலவாறு சிந்தனை செய்து செய்து, எவ்வித முடிவிற்கும் வரமாட்டாமல் மெய்ம்மறந்து படுத்திருந்த சமயத்தில், வேலைக்காரி, "அம்மணீ! அம்மணீ! மைலாப்பூர் வக்கீலையா இடத்திலிருந்து குப்பன் ஒரு

கடிதம் கொண்டு வந்திருக்கிறான். அதை நேரிலே தங்களிடத்தில் கொடுக்கும்படி அனுப்பினார்களாம். குப்பன் வெளியில் நிற்கிறான்" என்றாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் சடக்கென்று எழுந்து உட்கார்ந்து, "சரி; அவனை உள்ளே அனுப்பிவிட்டு, நீ வாசலில் இரு!" என்றாள். வேலைக்காரி அவ்வாறே வெளியில் சென்று, குப்பன் என்னும் பையனை உள்ளே அனுப்ப, அவன் பயபக்தி யோடு உள்ளே வந்து தூரத்தில் நின்றபடி மரியாதையாக ஒரு கடிதத்தை நீட்டினான்; அதை வாங்கிய கல்யாணியம்மாள் அவனை நோக்கி, "குப்பா! இதை உன்னிடத்தில் வக்கீல் ஐயாவே நேரில் கொடுத்தார்களா?" என்றாள்.

**குப்பன்:-** ஆமாங்க.

**கல்யாணி:-** வேறே ஏதாவது சங்கதி சொன்னார்களா?

**குப்பன்:-** இல்லீங்க; கடுதாசியெ ஒங்க கிட்ட நேருலேயே குடுத்துப்புட்டு வந்துவிடச் சொன்னாங்க – என்றான்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் மிகுந்த பதைபதைப்போடு கடிதத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

*மாரமங்கலம் சமஸ்தானத்து மகாராணியம்மாளான ம-ா-ா-ஸ்ரீ மகாகனம் தங்கிய கல்யாணியம்மாள் அவர்கள் சமூகத்துக்கு, வக்கீல் சிவஞானம் மிகுந்த வணக்கமாக எழுதிக் கொள்ளும் விக்ஞாபனம். உபயக்ஷேமம். அவ்விடத்திலிருந்து அனுப்பப் பட்ட கடிதம் வரப்பெற்றேன். அரண்மனைக் குழந்தைகளின் கலியாண சம்பந்தமாக எழுதப்பட்டுள்ள சங்கதிகளைத் தெரிந்து கொண்டேன். நாளைய தினம் காலையில் நான் அங்கே வந்து தங்களுக்கு ஆகவேண்டிய காரியங்களை எல்லாம் ஒழுங்குப் படுத்திவிட்டு மறுவேலை பார்க்கிறேன். மற்ற எல்லா விவரங் களைப் பற்றியும் நாம் அப்போது நேரில் பேசிக் கொள்ளலாம்.*

நிற்க, இன்னொரு முக்கியமான விஷயத்தில் தங்களுடைய அனுமதி இல்லாமலேயே நான் ஒரு காரியம் செய்கிறேன். அதைப் பற்றி தாங்கள் ஆயாசப்பட மாட்டீர்கள் என்று நம்பியே அப்படிச்

செய்கிறேன். இப்போது செங்கல்பட்டில் என்னுடைய நிலங்களின் மாசூல் அறுவடையாகும் காலம். அதற்காக அங்கே இன்னொரு குமாஸ்தாவை உடனே அனுப்ப வேண்டும் என்று, என்னுடைய தம்பியிடத்திலிருந்து இன்று கடிதம் வந்தது. நம்முடைய மோகனரங்கனை இரண்டு மாச காலத்துக்கு அங்கே அனுப்பி வைக்க வேண்டும் என்பது என்னுடைய விருப்பம். அவனை அனுப்பும்படி தங்களுக்கு நானே ஒரு கடிதம் எழுதலாம் என்று எண்ணிக்கொண்டிருந்த சமயத்தில், தெய்வச் செயலாக அவனே தங்களுடைய கடிதத்தை எடுத்துக் கொண்டு வந்தான். ஆகையால், அவனை இங்கேயே நிறுத்திக் கொண்டு, இந்த மறுமொழியை குப்பன் மூலமாக அனுப்பி இருக்கிறேன். எனக்கும் எழும்பூரில் அவசரமான அலுவலிருக்கிறது; மோகனரங்கனையும் என்னோடு கூடவே அழைத்துக் கொண்டு போய், 5.50 மணிக்குப் போகும் ரயில் வண்டியில் அவனை செங்கல்பட்டுக்கு அவசியம் அனுப்பப் போகிறேன். அவனை அனுப்பிவிட்டதாகவே தாங்கள் எண்ணிக்கொள்ளலாம்; இந்த விஷயத்தில், தாங்கள் என்மேல் வருத்தப்படமாட்டீர்கள் என்று உறுதியாக நம்பி இருக்கிறேன். எல்லா விவரங்களையும் நேரில் வந்து தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்குத் தங்கள் விதேயன்,
சிவஞானம்

—என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்த கல்யாணியம்மாளது முகமானது மகிழ்ச்சியினால் இரண்டொரு நிமிஷ நேரம் மலர்ந்தது. அவளது கண்கள் சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரத்தை நோக்கின. மணி ஆறு ஆயிருந்தது. "சரி; இந்நேரம் பையன் ரயிலில் போய்க் கொண்டிருப்பான்; இனி கவலை இல்லை" என்று அந்த அம்மாள் தனக்குள்ளாகவே நினைத்துக் கொண்டு, சிறிது தூரத்தில் நின்ற குப்பனை நோக்கி, "சரி; போகலாம்" என்றாள். அவன் உடனே குனிந்து அம்மாளுக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு வெளியில் போய்விட்டான்.

கல்யாணியம்மாள் திரும்பவும் தனது சயனத்தில் சாய்ந்து கொண்டாள். நரகவேதனை படுவோனது வாயில் ஒரு துளி தேன்

வீழ்வது போல, அத்தனை துன்பங்களினிடையில், மோகனரங் கனை சிவஞான முதலியார் மிகவும் தந்திரமாக செங்கல்பட்டிற்கு அனுப்பிவிட்டார் என்ற செய்தியானது கல்யாணியம்மாளுக்கு மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கியது. ஏனெனில், துரைஸானி யம்மாளை இனி சுயேச்சையாக விடுத்தாலும், அவள் வீட்டை விட்டு ஓடிப் போவதற்கு சந்தர்ப்பம் ஏற்படாதென்ற நினை வினால் கல்யாணியம்மாளுக்கு ஒருவித மனோதைரியம் ஏற்பட்டது; ஆகவே, அந்த அம்மாள் ஒருவகையான ஊக்கங் கொண்டவளாய், ஒரு நாழிகை நேரம் ஏதோ விஷயத்தைக் குறித்துச் சிந்தனை செய்த வண்ணம் படுத்திருந்த பின்னர் எழுந்து, கட்டிலை விட்டுக் கீழே இறங்கி, மேஜைக்கருகில் இருந்த நாற்காலியின் மேல் உட்கார்ந்து, பக்கத்திலிருந்த காகிதத்தை எடுத்து நேராக வைத்துக் கொண்டு; அடியில் வருமாறு ஒரு கடிதம் எழுதத் தொடங்கினாள்:-

*கடிதம்*

*மகா-௱-௱-ஸ்ரீ மகாகனம் தங்கிய ராமலிங்கபுரம் சமஸ்தானாதிபதி திவ்விய சமுகத்துக்கு, மாரமங்கலம் கல்யாணியம்மாள் வணக்கமாக எழுதிக் கொள்ளும் விக்ஞாபனம். உபயக்ஷேமம்.*

*தாங்கள் பல கடிதங்கள் மூலமாகவும் மனுஷ்யாள் மூலமாகவும் பிரஸ்தாபித்த விஷயத்தில், நாங்கள் நன்றாக யோசனை செய்து பார்த்தோம். ஜாதகங்களின் பொருத்தம் நிரம்பவும் திருப்திகரமாக இருக்கிறது. மற்ற எல்லா அம்சங்களும் எங்களுடைய மனசுக்குப் பிடித்தமாகவே இருக்கின்றன. எங்களுடைய குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்ள வேண்டும் என்று தாங்களும் தங்களுடைய தேவியாரும் நிரம்பவும் பிரியப்படுவதாகத் தாங்கள் பல சமயங்களில் எழுதியிருக்கிற விஷயத்தைக் கருதியும், நான் தங்களுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வதைத் தவிர, வேறு எவ்விதமான தகாத மறுமொழியையும் எழுத என் மனம் இணங்க வில்லை. ஆகவே நான் என்னுடைய மூத்த குழந்தையைத் தங்களுடைய ஜேஷ்ட புத்திரருக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுக்கும் விஷயத்தில் பரிபூரணமான சம்மதியுள்ளவளாக இருக்கிறேன்; கடவுளின் கிருபையால், நம்முடைய கோரிக்கை*

அதிசீக்கிரத்தில் மங்களகரமாக நிறைவேறிவிடும் என்று நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். அவ்விடத்திலிருந்து பொறுப்பாளி யான மனிதர் ஒருவரை அதிசீக்கிரத்தில் அனுப்பினால், முகூர்த்தப் பத்திரிகை தயாரித்து, அவரிடத்தில் கொடுத்து அனுப்பி வைக்கிறேன். மற்ற விஷயங்கள், தங்களுடைய கடிதம் பார்த்து.

இங்ஙனம், பணிவுள்ள,

கல்யாணியம்மாள்.

—என்று, ஒரு கடிதம் எழுதி முடித்த ஜெமீந்தாரிணியம்மாள், ஓர் உறையிலும் மேல்விலாசம் எழுதி வைத்துவிட்டு, வெளியில் நின்ற தாதியை அழைக்க, அவள் உடனே உள்ளே வந்து அருகில் நின்றாள். அவளிடத்தில் அந்த உறையையும், கடிதத்தையும் கொடுத்து, அவைகளின் மூலைகளில் மஞ்சள் குறிகள் வைத்துக் கொண்டு கச்சேரி மண்டபத்திற்குப் போய் அரையணாத் தபால் தலை ஒன்று எடுத்துக் கொண்டு வரும்படி கல்யாணியம்மாள் கூற, வேலைக்காரி கடிதத்தையும் உறையையும் எடுத்துக் கொண்டு, அந்த அந்தப்புரத்தை விட்டு வெளியிற் சென்று எஜமானியம்மாளது உத்தரவுப்படி கடிதத்தின் மூலைகளில் மஞ்சள் குறி வைத்துக் கொண்டு தபால் தலை வாங்கும் பொருட்டு கச்சேரி மண்டபத்திற்குப் போக, அங்கே குமாஸ்தாக்களின் தலைமை குமாஸ்தா மாத்திரம் இருந்தார். வேலைக்காரி அவரிடத்திற்குப் போய், "எஜமானியம்மாளுக்கு அரையணாத் தபால் தலை ஒன்று வேண்டும்" என்று கேட்க, அவர் அவளது கையில் இருந்த மஞ்சள்குறி வைத்த கடிதத்தை வாங்கி, அவளுக்கெதிரில் உரக்கப் படித்துப் பார்த்தார். துரை ஸானியம்மாளுக்குக் கலியாணம் நிச்சயமாகி இருக்கிறதென்பதைக் காணவே, அவர்கள் இருவரும் பெரிதும் சந்தோஷம் அடைந்த வர்களாய், அதைப்பற்றிச் சிறிது பேசிக் கொண்டிருந்தனர்; பிறகு குமாஸ்தா அரையணாத் தபால் தலை ஒன்று கொடுக்க, அதை வாங்கிக் கொண்டு வேலைக்காரி திரும்பி வருகையில் அந்த பங்களாவில் உள்ள ஆண் பெண்பாலாரான ஏராளமான சிப்பந்திகள் வந்து அவளை வளைத்துக் கொண்டு, "என்ன சங்கதி என்ன சங்கதி" என்று கேட்போரும், கடிதத்தை அவளது கையிலிருந்து பிடுங்கிப் படிப்போருமாக அவளைத் தடுக்க,

அவள், "எஜமான கோபித்துக் கொள்வார்கள்; நேரமாகிறது; நான் போக வேண்டும்" என்று வற்புறுத்திக் கூறி, அவர்களை எல்லாம் திருப்தி செய்துவிட்டு, அங்கிருந்து புறப்பட்டாள். அதற்குள் அரை நாழிகை நேரம் கழிந்து விட்டது. அவள் கல்யாணியம்மாளது அந்தப்புரத்தை அடைந்த போது, அதன் வெளிக்கதவு சாத்தப் பட்டு, உட்புறத்தில் தாளிடப்பெற்றிருந்தது. அதைக் கண்ட வுடனே வேலைக்காரிக்குப் பெரிதும் வியப்பும் அச்சமும் உண்டாயின. தான் வருவதற்குத் தாமதமாயிற்றென்று, எஜமானியம்மாள் கோபித்துக் கொள்வாளோ என்ற சந்தேகமும் கவலையும் வருத்த ஆரம்பித்தன. தான் கச்சேரி மண்டபத்திற்குப் போய்விட்டு வருவதற்குள், கல்யாணியம்மாளிடத்தில் ரகசிய மாகப் பேசுவதற்கு யார் வந்திருக்கக்கூடும் என்று அவள் யோசித்து யோசித்துப் பார்த்தாள். அம்மாளுக்குத் தன் மீது கோபமோ அல்லது, வேறு எவரோடாகிலும் தனிமையில் பேசிக் கொண்டிருக்கிறார்களோ என்பதை அறிந்துவிட வேண்டும் என்ற ஒருவித ஆவல் அவளது மனத்திலெழுந்து அவளைத் தூண்டியது. ஆகவே, அவள் விரைவாக அந்த அந்தப்புரத்தைச் சுற்றிக் கொண்டு போய், அதன் பின்புற வாசற்கருகில் இருந்த ஒரு ஜன்னலண்டையில் நின்று, உற்றுக் கவனிக்கத் தொடங்கினாள். அந்த ஜன்னல், கல்யாணியம்மாளது கட்டிலிற்கு மிக அருகில் இருந்தமையால், அங்கே பேசப்பட்ட சொற்களெல்லாம் நன்றாகக் கேட்டன. அம்மாள் யாரிடத்திலோ மெதுவாக சம்பாஷித்துக் கொண்டிருந்தது தெரிந்தது. முதலில் பொன்னம் மாளது குரல் கேட்டது. பிறகு வேறொருத்தியின் குரல் உண்டாயிற்று. இடையிடையே கல்யாணியம்மாளும் பேசிய வார்த்தைகள் கேட்டன். பிறகு கல்யாணியம்மாள் இரும்புப் பெட்டியைத் திறந்து பணம் எடுத்துக் கொடுத்த ஓசை கேட்டதோடு, அந்த அம்மாள், "இப்போது நான் கொடுப்பது பெரிதல்ல; நாளைய ராத்திரிக்குள் அந்தப் பத்திரத்தை எடுத்துக் கொணர்ந்து என்னிடத்தில் கொடுத்து விடும் பட்சத்தில், இன்னம் பதினாயிரம் ரூபாய் உடனே உனக்குத் தருகிறேன். இந்தக் காரியத்தை நீயே செய்தாலும் செய்; அல்லது கட்டையன் குறவனைக் கொண்டு செய்தாலும் எனக்குச் சம்மதந்தான். ஆனால், அவன் போவதாய்

இருந்தால், நம்முடைய பையனுக்கு அவன் எவ்விதமான கெடுதலும் செய்யாமல் எச்சரித்து வை. பாலாம்பாளை இப்போது மைலாப்பூரில் உள்ள ஒரு பங்களாவில் குடி வைத்திருக்கிறானாம். அதை விசாரித்துத் தெரிந்து கொள்" என்றான். அதைக் கேட்ட அம்பட்டக் கருப்பாயி, "சரி; ஒங்கிளுக்கென்ன! பத்தரந்தானே ஒணும். நாளெ ராத்திரி சரியா பன்னண்டு மணிக்கு நான் பத்தரத்தோடே இஞ்சே வாறேன்; நீங்க ரோசனை பண்ணாதீங்க, நானாச்சும் போறேன். கட்டையனை யாச்சும் அனுப்பிக் காரியத்தே முடிச்சுட்டு மறுசோலி பார்க்கறேன். நான் போகலாமல்ல" என்றாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள், "சரி; யாராவது உன்னைப் பார்த்தாலும் பார்ப்பார்கள்; நீ போய்விட்டு வா!" என்றாள். அதைக் கேட்ட வேலைக்காரி, அதற்குமேல் தான் ஒளிந்திருந்து கேட்பது பிசகென்று நினைத்து, அவ்விடத்தை விட்டு விசையாகச் சென்று, அந்தப்புரத்தைச் சுற்றிக் கொண்டு அதன் முன் வாசலண்டையில் வர, அதற்குள் பொன்னம்மாள் அந்தக் கதவைத் திறந்து வைத்துவிட்டு, அம்பட்டக் கருப்பாயியை அழைத்துக் கொண்டு பின் வாசலின் வழியாக வெளியில் போய்விட்டாள் ஆதலால், கல்யாணியம்மாள் மாத்திரம் தனியாகப் படுத்திருந்தாள். வேலைக்காரி மெல்ல உள்ளே போய், மஞ்சள் குறிகள் வைத்த கடிதத்தோடு எதிரில் நிற்க, அவளைக் கண்ட கல்யாணியம்மாள், "சரி; கடிதத்தை உறைக்குள் போட்டு, வாயைமூடி, தலையை ஒட்டவை" என்றாள். வேலைக்காரி அதையும் செய்து முடித்தாள். கல்யாணியம்மாள் அவளை நோக்கி, "அடீ! இந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு போய், நம்முடைய பங்களாவின் வாசலிலிருக்கும் தபால் பெட்டியில் போட்டுவிட்டு வந்து, நம்முடைய குழந்தை துரைஸானியம்மாளுடைய அந்தப்புரத் துக்குப் போ; அந்தக் குழந்தைக்கு இன்று பகல் முழுதும் தலைநோவாக இருந்தது. எவரும் உள்ளே போய் தொந்தரவு செய்யாமல், கதவைச் சாத்தி வெளிப்பக்கத்தில் பூட்டிக்கொண்டு வந்திருக்கிறேன். அந்தத் திறவுகோல் இதோ இருக்கிறது. இதையும் எடுத்துக் கொண்டு போய் கதவைத் திறந்து உள்ளே போய், இன்று ராத்திரி முழுதும் அவள் அந்த இடத்தைவிட்டு வெளியில்

வரவேண்டாம் என்று நான் சொன்னதாகச் சொல்லி, அவளுக்கு என்ன ஆகாரம் வேண்டுமோ, அதை அறிந்து கொண்டு சமையல் காரியிடத்துக்குப் போய் அந்த ஆகாரத்தை வாங்கிக் கொண்டு வந்து, குழந்தை இருக்கும் இடத்திலேயே போட்டு சாப்பாடு செய்து வைத்துவிட்டு, பேசாமல் படுத்துக் கொண்டிருக்கச் சொல்லிவிட்டு, வெளிக் கதவை முன் போல மூடிப் பூட்டிக்கொண்டு இங்கே வா; அவள் வெளியில் வரவேண்டும் என்றால் என்னுடைய உத்தரவை கேட்டுக் கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டுப் பூட்டிக்கொண்டு வந்து சேர்; தெரிகிறதா?" என்று கூறினாள்.

சின்னம்மாள் என்ற அந்த வேலைக்காரி, "உத்தரவுப்படியே செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு, திறவுகோலை எடுத்துக் கொண்டு, வெளியில் போய், பங்களாவின் வாசலிலிருந்த தபாற் பெட்டியில் கலியாணக்கடிதத்தைப் போட்டுவிட்டுத் திரும்பி உள்ளே வந்து, துரைஸானியம்மாள் அடைபட்டிருந்த அந்தப் புரத்து வாசலையடைந்து, பூட்டைத் திறந்து விலக்கிவிட்டு, கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தாள். உட்புறம் முழுதும் இருள் சூழ்ந்து கிடந்தது. உடனே சின்னம்மாள் சுவரில் உள்ள விசையைப் பிடித்து அழுத்தி, மின்சார விளக்குகளில் ஒன்றை ஏற்றவே, அந்த இடம் முழுதும் பளிச்சென்ற பிரகாசம் நிறைந்தது. துரைஸானியம்மாள் நோய் கொண்டவள் போலத் துவண்டு ஏக்கமுற்றுக் கட்டிலின் மீது படுத்திருந்தாள். தான் எதிர்பாராவிதத்தில் கதவு திறக்கப்பட்டதையும் விளக்கு ஏற்றப் பட்டதையும் கண்டு வியப்புற்று, அப்படிச் செய்தது தனது தாயோ அல்லது வேலைக்காரியோ என்று அறிந்து கொள்ளும் பொருட்டு, தனது அழகிய சிரத்தை மெதுவாக நிமிர்த்திப் பார்த்து, வேலைக்காரியான சின்னம்மாள் வந்திருந்ததை உணர்ந்து அவள் எவ்விதமான செய்தி கொணர்ந்திருப்பாளோ என்று அறிய ஆவல் கொண்டவளாய், துரைஸானியம்மாள் தனது சயனத்தில் சிறிதளவு நிமிர்ந்து திண்டில் சாய்ந்து கொண்டாள். தனது தாய் தன்னை உள்ளே வைத்துப் பூட்டியதிலிருந்து, சிப்பந்திகள் தனது ரகசியத்தை உணர்ந்து கொண்டிருப்பார்களோ என்றும், அப்படி உணர்ந்து கொண்டிருந்தால், அவர்கள் தன்னைப்பற்றிப் புரளி செய்வார்களே என்றும் ஒருவகையான அச்சமும் வெட்கமும்

அவளது மனத்திலிருந்ததன்றி, தன்னைக் கண்டு பிறர் இழிவாகப் பேசும்படியான நிலைமையில் தன்னை வைத்த தனது தாய் மீது பெருத்த பகைமையும் கோபமும் மூண்டு கொதித்துக் கொண்டிருந்தன. ஆகவே, அந்த மடந்தை அந்த வேலைக்காரியின் முகத்தில் தான் எப்படி விழிக்கிறது என்று கிலேசமடைந்தவளாய் முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டிருந்தாள்.

உள்ளே வந்த வேலைக்காரியோ சிறிதும் கபடமறியாதவள்; எந்த விஷயத்திலும் உள்ளொன்றும் புறமொன்றும் இல்லாமல், உள்ளதை உள்ளபடியே பேசக்கூடிய திறப்பான மனதையுடையவள். கல்யாணியம்மாள் சொல்லும் வார்த்தைகளை எல்லாம் அவள் எப்போதும் வேத வாக்கியம் என்று நம்புகிறவள் ஆதலால், அவள் துரைஸானிக்குத் தலைநோவென்று சொன்ன கட்டுக் கதையை உண்மை என்று நம்பி வந்தவளாதலால், அவள் தலை நோவினால் வருந்தும்போது தான் மின்சார விளக்கைக் கொளுத்தி வைத்ததைப் பற்றி, அவள் தன்மேல் கோபங் கொள்வாளோ என்று பெரிதும் அஞ்சி திகில் கொண்டவளாய் அடிமேலடி வைத்து மெல்ல நடந்து கட்டிலண்டை வந்து நின்று, "அம்மா!" என்று மெதுவாகக் கூப்பிட்டாள். அதைக் கேட்ட துரைஸானி, "என்னடி சின்னீ! எங்கே வந்தாய்!" என்றாள்.

சின்னம்மாள் மிகவும் வணக்கமாக, "உங்களுடைய தலைநோவு எப்படி இருக்கிறதென்று எஜமான் பார்க்கச் சொன்னார்கள். உங்களுக்கு என்ன ஆகாரம் வேண்டுமோ அதைக் கொண்டு வந்து இங்கேயே கொடுக்கச் சொன்னார்கள். இன்று ராத்திரி முழுதும் வெளியில் வராமல் நீங்கள் இங்கேயே படுத்திருந்தால், குணமுண்டாகுமாம். யாரும் உளடளே வந்து தொந்தரவு செய்யாதிருப்பதற்காக, கதவை வெளியில் பூட்டி வைத்தார்களாம். இப்போது சாப்பாடு போட்டு உங்களைப் படுக்க வைத்துவிட்டு, கதவைப் பூட்டிக் கொண்டு வரச் சொன்னார்கள். இப்போது தலைநோவு எப்படி இருக்கிறது?" என்றாள்.

உடனே துரைஸானியம்மாள் உண்மையை யூகித்துக் கொண்டாள்; தன்னைப் பற்றிப் பிறர் இழிவாக நினைக்காமல் இருக்கும் பொருட்டு, தனது தாய், தலைவலியாய் இருக்கையில்

எவரும் உள்ளே வரக்கூடாதென்று, பூட்டுப் போட்டிருப்பதாகப் போக்குக் காட்டியிருக்கிறாள் என்பதை உணர்ந்து கொண்டாள். இருந்தாலும், பல நாட்கள் வரையில் அந்தப் பொய் முகாந்தரத் தைத் தனது தாய் சொல்லிக் கொண்டிருக்க முடியாதாகையால், அவள் தன்னை எப்படியும் மறுநாள் காலையில் வெளியில் விட்டுவிடுவாள் என்பதை உறுதியாக எண்ணிக் கொண்டாள் ஆதலால், தனது தாய் சொன்ன கட்டுக்கதைக்கிணங்க, தானும் வெளியில் வராமல் அன்றிரவு முழுதும் அவ்விடத்திலேயே இருந்து விட்டால், சிப்பந்திகள் எவ்வித சந்தேகமும் கொள்ள இடமில்லாமல் போகும் என்று தீர்மானித்துக் கொண்டாள். ஆனால் தனது தாய் தன்னை அறைக்குள் வைத்துப் பூட்டி விட்டுப் போனபிறகு, அவள் தனது கோபத்தால் மோகன ரங்கனுக்கு எவ்விதமான தீங்கிழைப்பாளோ என்ற ஒரே கவலை கொண்டவளாய், தான் எப்படியும் அவனோடு ஓடிப்போக வேண்டும் என்று உறுதி செய்து கொண்டு படுத்திருந்தாள் ஆதலால், தனது தாயின் அந்தப்புரத்தில் நடந்த விவரங்களை எல்லாம் அறிந்து கொள்ள விருப்பம் கொண்டவளாய் அவளை நோக்கி, "சின்னீ! எஜமானியம்மாளுடைய அந்தப்புரத்தில் இன்றைக்கு இருக்க வேண்டிய முறை யாருடையது?" என்றாள்.

**சின்னம்மாள்:-** என்னுடைய முறைதான்.

**துரைஸானி:-** அப்படியானால், இன்று வைக்கப்பட்டிருந்த நிச்சயதாம்பூல முகூர்த்தத்தை ஒத்தி வைத்திருப்பதாக எஜமானி யம்மாள் இன்று காலையில் கடிதம் எழுதி மீனாக்ஷியம்மாளுக்கு அனுப்பினார்களே; அதை யாரிடத்தில் கொடுத்தனுப்பினார்கள்?

**சின்னம்மாள்:-** சின்ன குமாஸ்தா மோகனரங்கனிடத்தில் கொடுத்தனுப்பினார்கள்.

**துரைஸானி:-** அது காலையில் நடந்ததல்லவா; பிற்பகலில், எஜமானியம்மாள், மறுபடியும் அவனை அழைத்தார்கள் போலிருக்கிறதே! அவனை மறுபடியும் எங்கே அனுப்பினார்கள் என்பது உனக்குத் தெரியுமா?

**சின்னம்மாள்:-** பிற்பகல் மூன்று மணி இருக்கும், எஜமானி யம்மாள் மைலாப்பூர் வக்கீல் ஐயாவுக்கு ஒரு கடிதம் எழுதி

வைத்துக் கொண்டு, குமாஸ்தா மோகனரங்களை அழைத்துக் கொண்டு வரும்படி என்னைக் கச்சேரி மண்டபத்துக்கு அனுப்பினார்கள். நான் போய்ப் பார்த்தேன். அவன் அங்கே இல்லை. நான் உடனே வந்து அந்தச் சங்கதியைத் தெரிவித்தேன். கச்சேரியண்டையிலிருந்து அவன் வந்தவுடனே அழைத்துக் கொண்டு வரச் சொன்னார்கள். நான் போயிருந்தேன். அவர் சுமார் 4½ மணிக்கு வந்தான்; நான் உடனே அவனை அழைத்துக் கொண்டு போய் அம்மாளிடத்தில் விட்டேன். அவர்கள் ஒரு கடிதத்தை அவனிடத்தில் கொடுத்து வக்கீலையாவிடத்தில் கொடுத்துவிட்டு, அவர் பதில் கொடுத்தால், வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்கள். அவன் உடனே போய்விட்டான்.

***துரைஸானி:-*** அவன் திரும்பி வந்துவிட்டானா?

***சின்னம்மாள்:-*** அவன் வரவில்லை. வக்கீல் ஐயா அவனை ஏதோ அலுவலின் மேல் நிறுத்திக் கொண்டார்கள் போலிருக்கிறது; வேறொரு ஆளிடத்தில் பதில் கொடுத்து அனுப்பினார்கள்.

***துரைஸானி:-*** அப்படியானால் அவன் இன்னமும் திரும்பியே வரவில்லையா?

***சின்னம்மாள்:-*** இன்னமும் அவன் வரவில்லை. நான் இப்போதுகூட கச்சேரி மண்டபத்துக்குப் போயிருந்தேன். பெரிய குமாஸ்தா மாத்திரமே இருந்தார்.

***துரைஸானி:-*** அப்படியா! நீ இப்போது கச்சேரிக்கு என்ன காரியமாகப் போனாய்?

***சின்னம்மாள்:-*** எல்லாம் உங்களுடைய காரியந்தான்.

***துரைஸானி:-*** (திடுக்கிட்டு) அதென்னடீ! என்னுடைய காரியம்.

***சின்னம்மாள்:-*** எஜமானியம்மாள் ராமலிங்கபுரம் சமஸ்தானத்து மூத்த பிள்ளைக்கு உங்களைச் கட்டிக்கொடுக்க சம்மதிக்கிறதாகவும், உடனே மனுஷ்யாளை அனுப்பி முகூர்த்தப் பத்திரிகை வாங்கிக் கொண்டு போகும்படிக்கும் எழுதி அனுப்பிவிட்டார்கள். அந்தக் கடிதத்துக்கு மஞ்சள்குறி வைத்துக்கொண்டு, தபால் தலை ஒன்று கச்சேரியிலிருந்து வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்கள். தபால்

தலை வாங்க நான் கச்சேரி மண்டபத்துக்குப் போனேன்; அப்போது தான் பார்த்தேன்.

*துரைஸானி:-* (முன்னிலும் அதிக வியப்பும் கலக்கமும் அடைந்து) அந்தக் கடிதம் இப்போது எங்கே இருக்கிறது?

*சின்னம்மாள்:-* அதை நான் தபால் பெட்டியில் போட்டுவிட்டு தான் இப்போது நேராக இங்கே வந்தேன் - என்றாள்.

அந்த விபரத்தைக் கேட்டவுடனே துரைஸானியம்மாளது சந்திர வதனம் சஞ்சலமாகிய மேகத்தினால் களங்கமடைந்து மாறு பட்டது. அந்த மடந்தை விவரிக்க ஒண்ணாத பெருத்த வேதனையிலாழ்ந்தவளாய் சிறிது நேரம் ஏதோ சிந்தனை செய்த பிறகு மறுபடியும் வேலைக்காரியை நோக்கி, "இந்தக் கலியாணக் கடிதத்தை எழுதியது யார்?" என்றாள்.

*சின்னம்மாள்:-* எஜமானியம்மாளே எழுதினார்கள் போலிருக் கிறது. நான் அதைக்½ கவனிக்கவில்லை.

*துரைஸானி:-* இந்த மாதிரி கலியாணக் கடிதம் போகிறதென்பது குமாஸ்தாக்களுக்கெல்லாம் தெரியுமோ?

*சின்னம்மாள்:-* அந்தக் கூத்தை என்னவென்று சொல்லுவேன். நான் கடிதத்துக்கு மஞ்சள் குறிகள் வைத்து எடுத்துக் கொண்டு கச்சேரி மண்டபத்துக்குப் போனால், அங்கே இருந்த பெரிய குமாஸ்தா கடிதத்தை வாங்கிப் படித்துப் பார்த்துவிட்டார். அங்கே இருந்து நான் திரும்பி வரும்போது, நம்முடைய ஆள்மாகாணங்கள் எல்லோரும் வந்து என்னை வளைத்துக் கொண்டு, என்னுடைய கையில் இருந்த கடிதத்தைப் பிடுங்கி, ஒவ்வொருவராக எல்லோரும் படித்த பிறகு தான் அதைக் கொடுத்தார்கள். அதற்குள் அரை நாழிகை தாமசம் ஆய்விட்டது. எஜமானியம்மாள் கோபித்துக் கொள்ளுவார்களோ என்று நான் பயந்து கொண்டு ஓடினேன்; ஆனால் நல்ல வேளையாக, அதற்குள், வேறே யாரோ வந்து கதவைச் சாத்திக்கொண்டு அம்மாளிடத்தில் பேசிக் கொண் டிருந்தார்கள். அவர்கள் போனவுடனே நான் உள்ளே ஓடினேன்; எஜமானியம்மாள் கோபித்துக் கொள்ளவில்லை.

***துரைஸானி:-*** யார் வந்து எஜமானியம்மாளிடத்தில் பேசிக் கொண்டிருந்தது. நீ பார்க்கவில்லையோ?

***சின்னம்மாள்:-*** நான் பார்க்கக்கூடவில்லை. நம்முடைய பொன்னம்மாளுடைய குரல் கேட்டது. இன்னொருத்தி யாரோ வந்திருந்தாள்.

***துரைஸானி:-*** அவர்களிடத்தில் பேசிக் கொண்டிருந்ததும் என்னுடைய கலியாண சங்கதி தானோ?

***சின்னம்மாள்:-*** இல்லை இல்லை. அது வேறு சங்கதி?

***துரைஸானி:-*** அது என்ன சங்கதி?

***சின்னம்மாள்:-*** அதை நான் முழுதும் கேட்கவில்லை. ஏதோ சில வார்த்தைகள் தற்செயலாக என்னுடைய காதில் பட்டன. எஜமானியம்மாள் இரும்புப் பெட்டியைத் திறந்து பணம் எடுத்துக் கொடுத்தது தெரிந்தது. பாலாம்பாள் என்ற பெயர் காதில் கேட்டது. நம்முடைய மைனரை உபத்திரவிக்காமல், ஏதோ ஒரு பத்திரத்தை நாளைக்குள் கொண்டு வந்து கொடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். யாரோ கட்டையன் குறவன் என்று ஒருவன் இருக்கிறானாம். அவனாவது, இங்கே வந்திருந்தவளாவது போய் பத்திரத்தைக் கொண்டுவர வேண்டும் என்று சொன்னார்கள். அவ்வளவுதான் என் காதில் விழுந்தது. அது என்ன சங்கதி என்பது எனக்கு விளங்கவில்லை. நான் அதைக் கேட்டுக் கொண் டிருந்தேன் என்பது எஜமானியம்மாளுக்குத் தெரிந்தால், என்னைக் கொன்று போட்டு விடுவார்கள்.

***துரைஸானி:-*** இந்தச் சங்கதி எப்படி உன் காதில் எட்டியது.

***சின்னம்மாள்:-*** நான் வந்தபோது வெளிக்கதவு சாத்தி உட்புறத்தில் தாளிடப்பட்டிருந்தது. அப்போது உட்புறத்தில் மனிதர் இருப்பார்கள் என்பதைப்பற்றி நான் சந்தேகிக்கவில்லை. ஒருவேளை எஜமானியம்மாள் இந்தக் கதவைத் தாளிட்டுக் கொண்டு புஸ்தக மகாலுக்குப் போயிருப்பார்களோ என்று நினைத்துக் கொண்டு, சுற்றிக் கொண்டு அந்தப் பக்கமாகப் போய்ப் பார்த்தேன். அந்தக் கதவும் உட்புறத்தில் தாளிடப்

பட்டிருந்தது. ஜன்னலினண்டையில் போய் கவனித்துப் பார்த்தேன். அப்போது தான் இந்த வார்த்தைகள் காதில் பட்டன.

*துரைஸானி:-* சரி; அம்மாள் சங்கதி ஆயிரமிருக்கும். நாம் அவைகளை எல்லாம் கவனிப்பது மரியாதைக் குறைவு; அது போகட்டும். எனக்கு இன்னமும் தலைநோவு இருந்து கொண் டிருக்கிறது; எனக்குப் பசியுமில்லை; நான் எஜமானியம்மாளுடைய உத்தரவுப்படியே இந்த இடத்திலேயே படுத்துக் கொண்டிருக் கிறேன். நீ வெளியில் பூட்டிவிட்டுத் திறவுகோலை அம்மாளிடத்தில் கொடுத்துவிடு; நீ இப்போது ஒரு காரியம் செய். என்னுடைய தாதி குப்பம்மாள் இன்று காலையில் ஏதோ அலுவலின்மேல் என்னிடத்தில் ரஜா வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போனாள். அவள் இப்போது திரும்பி வந்து சமையலறையில் இருப்பாள்; நீ கதவைப்பூட்டிக் கொண்டு போகும் போது சமையலறைக்குப் போய், அவளை ஜன்னலண்டையில் வரச்சொல்லிவிட்டு நீ போ — என்றாள்.

அதைக் கேட்ட சின்னம்மாள், "ஏன் கண்ணு! குப்பம்மாளும் உள்ளேயே இருக்கட்டுமே; உங்களுக்குத் தலையைப் பிடித்து விட வேண்டுமானால் அவள் செய்வாளல்லவா; அவளையும் இங்கே வைத்துப் பூட்டிக்கொண்டு போகிறேனே?" என்றாள்.

*துரைஸானி:-* வேண்டாம், வேண்டாம்; எஜமானியம்மாள் கோபித்துக் கொள்ளுவார்கள். வேறு யாராவது இங்கே இருந்தால் என்னிடத்தில் பேச்சுக் கொடுப்பார்கள் என்றும், அதனால் என்னுடைய தலைநோவு அதிகரிக்கும் என்றும் நினைத்து அம்மாள் பூட்டச்சொல்லி இருக்கிறார்களே. **விதைக்கோட்டையில் எலியை வைத்துக் கட்டியதைப் போல,** ஓர் ஆளை உள்ளே வைத்துப் பூட்டுவதில் என்ன பலன்? அவள் வெளியிலேயே இருக்கட்டும். அவள் இந்த ஜன்னலண்டையில் வந்து ஒரே ஒரு வார்த்தை கேட்டுக்கொண்டு போகட்டும்; அதற்குமேல் அதிகமாக அவள் பேசினாலும், நான் அவளிடத்தில் பேசப்போகிறதில்லை; அவளை இங்கே அனுப்பினதாகக் கூட நீ அம்மாளிடத்தில் சொல்ல வேண்டாம்" என்றாள். அதைக் கேட்ட சின்னம்மாள் என்னும் அந்த வேலைக்காரி தான் போய் குப்பம்மாளை உடனே

அனுப்புவதாகச் சொல்லிவிட்டு, விடை பெற்றுக் கொண்டு, வெளியே போய் கதவைச் சாத்திப் பூட்டிக்கொண்டு சமையலறையிலிருந்த குப்பம்மாளை உடனே அனுப்பிவிட்டு, கல்யாணியம்மாளின் அந்தப்புரத்திற்குப் போய் திறவுகோலைக் கொடுத்ததன்றி துரைஸானியம்மாளுக்கு இன்னம் தலை நோவிருப்பதாகவும் அவளுக்குப் பசியில்லாமையால், சாப்பாடு வேண்டாம் என்றும், கதவைப் பூட்டிக் கொண்டு போகும்படிக்கும் சொல்லித் தன்னை அனுப்பிவிட்டதாகச் சுருக்கமாகக் கூறினாள். குப்பம்மாளை வரச்சொன்னதையும், தான் துரைஸானி யம்மாளிடத்தில் சொன்ன மற்ற வரலாறுகளைப் பற்றியும் அவளை குறிக்காமலே விட்டு விட்டாள்.

துரைஸானியம்மாள் எவ்வித முரண்டலும் செய்யாமல் சாதுவாக நடந்து கொண்டதைக் கேட்ட கல்யாணியம்மாள் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தவளாய், அதிசீக்கிரத்தில் அவளுக்கு நல்ல புத்தி திரும்பி விடும் என்றும் நினைத்தவளாய், தனது போஜனத்திற்கு எழுந்தாள். அதுகாறும் தான் கோமளவல்லியை கவனிக்க நேரமில்லாது போனதை நினைத்துக் கொண்ட அந்தச் சீமாட்டி, தனது அந்தப்புரத்தை விட்டுப்புறப்பட்டு, கோமளவல்லி இருந்த அந்தப்புரத்தை நோக்கிச் செல்லத் தொடங்கினாள்.

நாம், அந்த அம்மாளை விடுத்து, துரைஸானியம்மாளது அந்தப் புரத்தில் என்ன நடந்ததென்பதைக் கவனிப்போம். சின்னம்மாள் சமையலறைக்குப் போய்ச் சொன்னவுடனே குப்பம்மாள் மிகவும் விரைவாகத் தனது எஜமாட்டியான துரைஸானியம்மாள் சிறை வைக்கப்பட்டிருந்த அந்தப்புரத்திற்கு வந்து சேர்ந்தாள். குப்பம்மாள் என்பவள் மகா புத்திசாலி; தனது எஜமாட்டியான துரைஸானியின் மனம்போல நடந்து, அவளிடத்திலிருந்து ஏராளமான சன்மானம் பெறுபவள். துரைஸானியம்மாளது ரகசியங்களையும் அவளுக்குத் தெரிந்திருந்தனவாயினும், தன்னை வெட்டிச் சித்திரவதை செய்வதானாலும், அவள் தனது எஜமாட்டிக்கு விரோதமான விஷயத்தை வெளியிடக் கூடியவ ளன்று; அவள் அன்று மாலையில் வந்தவுடன் அந்தப்புரத் தண்டை போய், ஜன்னலுக்கருகில் நின்று, துரைஸானியம்மாளை

அழைத்து, அவளிடத்திலிருந்து எல்லா விவரங்களையும் கேட்டறிந்து கொண்டு, ஒன்றையும் அறியாத பைத்தியக்காரியைப் போல சமையலறையில் போய் உட்கார்ந்திருந்தாள். கல்யாணியம் மாள் மோகனரங்கனை என்ன செய்கிறாள் அல்லது எங்கே அனுப்புகிறாள் என்னும் விஷயத்தை நன்றாக உணர்ந்து கொண்டு வரும்படி அவளிடத்தில் துரைஸானியம்மாள் உத்தரவு செய்திருந் தாள். பிறர் சந்தேகியா விதத்தில், அவள் அந்த வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தவள், சின்னம்மாளது சொல்லைக் கேட்டவுடனே பதுங்கிப் பதுங்கி ஜன்னலண்டை வந்து, மெதுவாக விரல்களைச் சொடுக்கி ஓசை செய்தாள். அந்தத் தந்தி சமாசாரத்தைக் கேட்ட துரைஸானியம்மாள் உள்ளே இருந்த விளக்கை அணைத்துவிட்டு, இருளில் ஜன்னலுக்கு அப்புறத்தில் வந்து நின்று, "அடி! குப்பீ! நீ உடனே நம்முடைய கச்சேரிக்குப் போய் எஜமானியம்மாள் கேட்பதாகச் சொல்லி இன்னொரு அரை யணாத் தலை வாங்கிக்கொண்டு, இன்னம் ஒரு நாழிகை நேரம் பொறுத்து இங்கே வா; அவசரமான ஒரு காரியம் இருக்கிறது. மைலாப்பூருக்குப் போன மோகனரங்கன் திரும்பிவராத காரணம் என்ன என்பதையும் தந்திரமாகப் பெரிய குமாஸ்தாவிடத்தில் விசாரித்தறிந்து வா; நிற்காதே; அம்மாள் வந்தாலும் வருவார்கள் போ!" என்றாள். குப்பம்மாள் உடனே போய்விட்டாள்.

துரைஸானியம்மாள் உடனே தனது அந்தப்புரத்தின் ஜன்னல் களின் கதவுகளை எல்லாம் உட்புறத்தில் மூடித் தாளிட்டுக் கொண்டாள். வெளிப்புறத்தில் பூட்டப்பட்டிருந்த வாசல் கதவையும் உட்புறத்தில் தாளிட்டுக் கொண்டாள்; மின்சார விளக்கைக் கொளுத்தி விட்டவளாய், கட்டிலிற்கருகில் கிடந்த ஒரு மேஜையண்டையிற் போய், அதன் பக்கத்தில் போடப்பட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்து, மேஜைக்குள்ளிருந்து காகிதம் மைக்கூடு இறகு முதலியவற்றை எடுத்து வைத்துக்கொண்டு இரண்டு கடிதங்கள் எழுதத் தொடங்கினாள்.

முதலாவது கடிதம் அடியில் வருமாறு எழுதப்பட்டது:-

மதுரை ஜில்லாவில் உள்ள ராமலிங்கபுரம் ஜெமீந்தார் அவர்கள் சமுகத்துக்கு.

மாரமங்கலம் ஜெமீந்தாருடைய மூத்த புத்திரியான துரைஸானி யம்மாள் என்ற பெண்ணை உங்களுடைய மூத்த குமாரருக்குக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் பிரஸ் தாபித்த விஷயத்தில் மாரமங்கலம் ஜெமீதாரிணியம்மாளிடத்தி லிருந்து இன்று உங்களுக்கு ஒரு கடிதம் வருகிறது. அவர்கள் இந்தக் கலியாணத்துக்கு இணங்கி விட்டதாகவும், முகூர்த்தப் பத்திரிகை வாங்கிக் கொண்டு போக மனிதரை அனுப்பும்படி யாகவும் எழுதி இருக்கிறார்கள்.

அந்த விஷயத்தில் ஒரு ரகசியமான சங்கதியை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டியது அதியவசியமாக இருக்கிறது. மாரமங்கலத் தாருடைய பங்களாவில் மோகனரங்கன் என்ற ஓர் அழகான யௌவனப் புருஷன் இருக்கிறான். துரைஸானியம்மாள் என்னும் அந்த பெண், அந்த வடிவழகனிடத்தில் அபாரமான மோகங் கொண்டு அதே பைத்தியமாக இருப்பதன்றி, அவனைத் தவிர, வேறு எவனையும் கலியாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று மறுத்துவிட்டாள். இன்று பகலில், அந்தப் பையனும் பெண்ணும், அவளுடைய அறையில் தனியாக இருந்த சமயத்தில், ஜெமீந்தாரி ணியம்மாள் அதை நேரில் கண்டு, பெண்ணைக் கண்டிக்க, பெண் வீட்டை விட்டே ஓடிப்போகிறேன் என்று சொல்ல, அதன்மேல் அந்த அம்மாள் பயந்துகொண்டு, பெண்ணை அறைக்குள் வைத்துப் பூட்டி பையனையும், அந்த பங்களாவை விட்டு எங்கேயோ அனுப்பிவிட்டார்கள். அந்தப் பெண் தன்னுடைய உயிர் போவதானாலும், அந்த மோகனரங்கனைத் தவிர, வேறொருவனைக் கலியாணம் செய்து கொள்ளக் கூடாதென்றும், வற்புறுத்தினால், ரகசியமாக ஓடிப்போவதற்கும் உறுதி செய்து கொண்டிருக்கிறாள். நீங்கள் நாளைய தினமே ஒரு மனுஷ்யனை ரகசியமாக அனுப்பிப் பார்த்தால், பெண்ணைச் சிறையில் வைத் திருப்பது தெரியும். பெண்ணினிடத்தில் பேசிப் பார்த்தாலும் அவள் உண்மையை வெளியிட்டு விடுவாள். ஆகையால் நீங்கள் உடனே மனுஷ்யாளை அனுப்பி விசாரித்துப் பார்த்துக் கொண்டு, உங்களுடைய முடிவைத் தெரிவியுங்கள். அவசரப்பட்டுக் காரியம் செய்வீர்களானால், உங்களுக்கு அவமானமும் பணச்செலவும்

ஏற்படுவதொன்று தான் நிச்சயமாக மிஞ்சும். பெண் கலியாணப் பந்தலுக்கே வரப்போகிறதில்லை.

இப்படிக்கு,
ஓர் எதிர்பாரா நண்பன்.

—என்று துரைஸானியம்மாள் ஒரு கடிதம் எழுதி முடித்து மடித்து, அந்த விலாசத்திற்கு ஓர் உறை தயாரித்து அதற்குள் திணித்து வாயை ஒட்டி வைத்துக் கொண்ட பிறகு, இன்னொரு கடிதம் அடியில் வருமாறு எழுதத் துவக்கினாள்:-

பிரியமுள்ள அண்ணன் அவர்களுக்கு துரைஸானியம்மாள் எழுதிக் கொள்வது.

இன்றைய தினம் காலையில் நீங்கள் அம்மாளிடத்தில் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போனவுடனே, அம்மாள் பொன்னியை ஆலந்தூருக்கு அனுப்பி, அங்கேயுள்ள அம்பட்டக் கருப்பாயியை அழைத்துக் கொண்டு வரச் சொன்னார்கள். அவள் அப்படியே போய் கருப்பாயியை அழைத்துக் கொண்டு இன்று சாயங்காலம் ஏழரை மணிக்கு வந்தாள். அம்மாளுடைய அந்தப்புரத்தில் அவர்கள் மூவரும் இருந்து ரகசியமாகப் பேசினார்கள். நீங்கள் பாலாம்பாளுக்கு எழுதிக் கொடுத்திருக்கும் பத்திரத்தை நாளைக் குள்ளாக அபகரித்துக் கொண்டு வந்து கொடுத்துவிட வேண்டும் என்று அம்மாள் கருப்பாயியிடத்தில் சொல்லி, ஏராளமான பணமும் கொடுத்தார்கள்; பத்திரம் வந்தவுடனே, இன்னமும் பணம் கொடுப்பதாகச் சொல்லி இருக்கிறார்கள். அவளாவது கட்டையன் குறவனாவது வந்து பத்திரத்தை எடுத்துக் கொண்டு வருகிறதென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. உங்கள் விஷயத் தில், அம்மாள், இப்படி இரண்டகமாக நடந்து கொள்வது என் மனசுக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் இதை உடனே தெரிவித் திருக்கிறேன். இதற்குத் தக்கபடி முன் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள். ஆனால் இந்தச் சங்கதியை நான் தெரிவித்தேன் என்பது மாத்திரம் அம்மாளுக்குத் தெரிய வேண்டாம். இந்தக் கடிதத்தைப் பார்த்தவுடனே கிழித்தெறிந்துவிட வேண்டியது.

இப்படிக்கு பிரியமுள்ள,
துரைஸானி.

—என்று எழுதப்பட்ட இரண்டாவது கடிதத்தையும் ஓர் உறைக்குள் புகுத்தி வாயை ஒட்டி மேல்விலாசம் எழுதி அதையும், முன்னால் எழுதப்பட்ட கடிதத்தையும் கையில் எடுத்துக் கொண்டு, எழுந்து மறுபடியும் மின்சார விளக்கை அவித்துவிட்டு, நடந்து முன் குறிக்கப்பட்ட ஜன்னலண்டையில் வந்து நின்றாள். அவள் அவ்வாறு அரைக்கால் நாழிகை நேரம் நிற்க, அவளது அந்தரங்கத் தாதியான குப்பம்மாள், எலி பிடிக்கப்போகும் பூனையைப் போல, சிறிதும் ஓசை செய்யாமல், வெண்ணெயில் காலடி வைத்து வருபவள்போல, நடந்து வந்து, ஜன்னலண்டை நின்று, "எஜமானி யம்மாளும், கோமளவல்லியம்மாளும் சாப்பிட்டுக் கொண்டிருக்கி றார்கள். மோகனரங்கனை வக்கீல் முதலியார் ஏதோ அவசர நிமித்தம் நிறுத்திக் கொண்டதாக பெரிய குமாஸ்தா சொல்லுகிறார். அதற்கு மேல் அதிகமான விவரமொன்றும் தெரியவில்லை. தபால் தலை இதோ இருக்கிறது" என்று கூறிய வண்ணம், தபால் தலையை ஜன்னலுக்குள் நீட்டினாள். அதை வாங்கிய துரைஸானி யம்மாள், ராமலிங்கபுரம் ஜெமீந்தாருக்கு எழுதப்பட்ட அநாம தேயக் கடிதத்தில் அதை ஒட்டி, குப்பமாளிடத்தில் கொடுத்து, "இப்போதே போய், இதைத் தபால் பெட்டியில் போட்டுவிடு; இதோ இன்னொரு கடிதமிருக்கிறது. இதை நாளைக் காலை வரையில் ஜாக்கிரதையாக மறைத்துக் கொண்டிரு. நம்முடைய அண்ணன் இப்போது மைலாப்பூரில் பாலாம்பாளுடைய பங்களாவில் இருக்கிறார். அதிகாலையில் நீ மைலாப்பூருக்குப் போய், அண்ணன் எந்த பங்களாவில் இருக்கிறார்கள் என்பதை விசாரித்து அங்கே போய், அவரிடத்தில் இதைக் கொடுத்து, அவர் படித்தவுடனே கிழித்தெறிந்து விடச் சொல்லிவிட்டு, நீ உடனே வக்கீல் ஐயா வீட்டுக்குப் போய் வண்டிக்கார வேலாயுதத்தைக் கண்டு, தந்திரமாகப் பேச்சுக் கொடுத்து, மோகனரங்கன் எங்கே இருக்கிறான் என்ற விவரங்களை எல்லாம் தெரிந்து கொண்டு, சௌகரியப்பட்டால், மோகனரங்கன் இருக்கும் இடத்துக்குப் போய், அவனுடைய சங்கதிகளை எல்லாம் அறிந்து கொண்டு வந்து சேர்" என்றாள். குப்பம்மாள் அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டு, கடிதங்கள் இரண்டையும் பெற்றுக் கொண்டு போகவே,

துரைஸானியம்மாள் உள்ளே போய் சயனித்துக் கொண்டாள். குப்பம்மாள், ராமலிங்கபுரம் ஜெமீந்தாருக்கு எழுதப்பட்ட கடிதத்தைத் தபால் பெட்டியில் போட்டுவிட்டு, இன்னொரு கடிதத்தை ஜாக்கிரதையாக மடியில் சொருகிக் கொண்டு, எப்போது பொழுது விடியும் என்று ஆவலோடு எதிர்பார்த்தவளாய் அன்றிரவைப் போக்கினாள். ஆனால் அவள் இரண்டு கடிதங் களையும் படித்துவிட்டாள்.

★ ★ ★

22–வது அதிகாரம்

## ராஜாயி அம்மாள்

எழும்பூரில் இருந்து புறப்பட்டு செங்கல்பட்டிற்குப் போய்க் கொண்டிருந்த ரயில் வண்டியில் உட்கார்ந்திருந்த மோகனரங்கனது மன நிலைமை சொல்லால் விவரிக்கக்கூடாத அவ்வளவு துன்பகர மானதாக இருந்தது. தான் கல்யாணியம்மாளது பங்களாவிலிருந்து மைலாப்பூருக்குச் சென்ற போது, கடிதத்தை வக்கீலிடத்தில் கொடுத்து விட்டு, அரை மணி நேரத்திற்குள் திரும்பி வந்து, தன் மனதையும் உயிரையும் கொள்ளை கொண்ட உயிர்த் தெய்வ மான துரைஸானியம்மாளைத் தரிசிப்பதான பரமசுகத்தை அடையலாம் என்று எண்ணிய எண்ணம் ஒரே நொடியில் சிதறுண்டு போனதும், தான் மறுபடியும் அந்த பங்களாவுக்கே போகக்கூடாமல் தடுக்கப்பட்டு பலவந்தமாக வேறு ஊருக்கு அனுப்பப்பட்டதான சகிக்க ஒண்ணாத ஏமாற்றமும், அந்த வடிவழகியும் தானும் மறுநாளைக்குள் தனியான ஓர் இடத்திற்குப் போய்ப் பிறரது இடைஞ்சலின்றித் தம்மனமாரச் சிற்றின்ப சுகத்தில் ஆழ்ந்திருக்கலாம் என்று நினைத்த நினைவு பாழாய்ப் போனதனால் உண்டான ஏக்கமும் ஒன்றுகூடி அரைமணி நேரம் வரையில் அவன் எவ்விதமான தெளிவான யோசனையும் செய்யும் திறனற்று சித்தப்பிரமை கொண்டவனைப் போல ஒய்ந்து உட்கார்ந்து, தனது மனதையும் பார்வையையும் ஒரே நிலையில் நிறுத்தி, வெறுவெளியை நோக்கிய வண்ணம் கலங்கி யிருந்தான். அநாதைகளான தன்னையும் தனது அக்காளையும் காப்பாற்றி,

வேலைகளில் அமர்த்திய பேருபகாரியான சிவஞான முதலியாரது சொற்படி நடக்க தான் கட்டுப்பட்டவன் என்ற எண்ணம் அடிக்கடி அவனது மனத்தில் எழுந்து அவனைக் கண்டித்ததாயினும், அவளது அகக்கண்ணிற்குள் சதாகாலமும் நின்று சிரித்துத் தாண்டவமாடிய துரைஸானியம்மாளது இங்கித வடிவத்திற்கு முன், வேறு எவ்வித உணர்ச்சியும் தலைகாட்டாமல் பறந்து போயிற்று. தான் சிவஞான முதலியாரது அபிமானத்தையும் நட்பையும் உதவிகளையும் இனி இழக்க நேருவதாயினும், அவனுக்கு அது ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. தன்னையே உயிராக மதித்துள்ள அரிய பெண்மணியான துரைஸானி யம்மாள் தனது பிரிவைச் சகிக்க மாட்டாதவளாய், அப்படியே உருகித் தனது உயிரைத் துறந்து விடுவாள் ஆதலால், தான் அந்த அணங்கை அப்படிப்பட்ட பெருத்த துன்பத்திற்கும் ஆளாக்கி விட்டு, தனது அற்ப உத்தியோகத்தை ஒரு பொருட்டாக மதித்து தான் செங்கல்பட்டிற்குப் போவது கூடாதென அவன் ஒரே நொடியில் தீர்மானித்துக் கொண்டான். ஆனால், அவன் சிறிதும் கபட நினைவற்ற சிறியோன் ஆதலால், தான் செங்கல்பட்டிற்கு அனுப்பப்பட்டது கல்யாணியம்மாளது தூண்டுதலினால் ஏற்பட்ட காரியம் என்று சிறிதும் சந்தேகம் கொள்ளாமல், சிவஞான முதலியார் சொன்ன கட்டுக்கதையை நிஜமானதென்றே எண்ணி இருந்தான். ஆகவே, அவன் அவரால் தமது தம்பிக்கு எழுதிக் கொடுக்கப்பட்ட கடிதத்தைப் பிரித்துப் பார்க்க வேண்டும் என்ற நினைவே கொள்ளாதவனாக இருந்தான். ஆனால், தான் அப்போது செங்கல்பட்டிற்குப் போக வேண்டியதான உத்தரவை மீறி நின்றுவிட்டால், தன்னை இனி மாரமங்கலத்தாரது பங்களா விலும் வேலைக்கு வைத்துக்கொள்ள மாட்டார்கள் என்பதும் அவனுக்குத் தெளிவாகப் பட்டது. அவ்வாறு தான் மாரமங்கலத் தாரது பங்களாவிற்குப் போகும் சந்தர்ப்பம் இல்லாமற் போனால், தான் அந்த அணங்கை எப்படிக் காண்கிறது, அவளை எப்படி அழைத்துக் கொள்கிறது என்ற பெருத்த சந்தேகமும் கவலையும் எழுந்து அவனை வதைக்கத் தொடங்கின. அவன் அவ்வாறு யோசனை செய்தவண்ணம் இருக்க, ரயில் வண்டி பல்லாவரம் என்னும் ஸ்டேஷனுக்குப் போய்விட்டது. சென்னையில் உள்ள

தனது உயிர்நிலையை விட்டு, தன்னை அந்தக் கொடிய ரயில் வண்டி பிரித்து மேன்மேலும் அப்பால் கொண்டு போகிறதே என்ற நினைவு அப்போதே அவனது மனதில் உறைத்தது. உடனே கீழே இறங்கி, தான் யோசிக்க வேண்டுவதை எல்லாம் அன்றிரவு முற்றிலும், அந்த ஸ்டேஷனில் இருந்து யோசித்து ஒருவிதமான தீர்மானம் செய்து கொண்டு அதன்படி நடக்கலாம் என்று நினைத்தவனாய், மோகனரங்கன் பல்லாவரம் என்னும் ஸ்டேஷனில் வண்டியிலிருந்து கீழே இறங்கிவிட்டான். இறங்கினவன், செங்கல்பட்டிற்கு வாங்கப்பட்டிருந்த தனது டிக்கெட்டை அதை வசூலிக்கும் சிப்பந்தி இடத்தில் கொடுத்து விட்டு, வெளியிற் போய் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் தங்கும் ஒரு மண்டபத்தில், வசதியான ஒரு மூலையை அடைந்து, அங்கவஸ்திரத்தால் தலை முதல் கால் வரையில் போர்த்திக் கொண்டு படுத்தான்.

அவ்வாறு படுத்தவன் அன்றிரவு முழுதும் தூக்கமே கொள்ளா மல் சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தான். மறுநாட் காலையில் அவன் அவ்விடத்தை விட்டு எழுந்த போது, தான் சென்னைக்குப் போகாமல், சைதாப்பேட்டைக்குப் போய், அவ்விடத்திலிருந்து மூன்று மைலுக்கப்பால் சமுத்திரக் கரையில் உள்ள அடையாறு என்னும் ஊரில் உள்ள தனது அக்காள் வீட்டிற்குப் போய் தனது ரகசியங்களை எல்லாம் அவளிடத்தில் வெளியிட்டு அவளது உதவியைக் கொண்டு, ஒரு தனியான இடம் அமர்த்தி துரைஸானியம்மாளை எவ்வாறாகிலும் தான் கொணர்ந்துவிட வேண்டும் என்று உறுதி செய்து கொண்டவனாய், எழுந்து தனது காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, பட்டணத்திற்கு வரும் அடுத்த ரயிலில் ஏறிவந்து சைதாப்பேட்டையில் இறங்கி, அவ்விடத்திற்கு மூன்று மயில் தூரத்திலிருந்த அடையாறு கிராமத்தை நோக்கி நடக்கலானான். அவன் ஒரு வருஷ காலத்திற்கு முன் அந்த ஊருக்குப் போய்த் தனது அக்காளைப் பார்த்தவனாதலால், அவள் அவ்விடத்திலேயே இருக்கிறாளோ, அல்லது, அவ்விடத்தை விட்டு வேறிடத்திற்குப் போய்விட்டாளோ என்ற சந்தேகம் உண்டாயிற்று; சிவஞான முதலியார் மோகன ரங்கனையும் அவனது அக்காளையும் பள்ளிக்கூடத்தில் வாத்திச்சி

வேலையிலும் அமர்த்தினார். சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன், அவளுக்கு வயது பதினெட்டாகி இருந்தது; அப்போது அவளுக்கும் சுந்தரம் பிள்ளை என்று பெயர் கொண்ட ஒரு போலீஸ் ஹெட்கான்ஸ்டேபிலுக்கும் பழக்கம் ஏற்பட்டு, அது சிநேகமாக முதிர, முடிவில் அவர்கள் கணவனும் மனைவியுமாக ஆகிவிட்டனர். ஆகவே, அவள் தனது பள்ளிக்கூட உத்தி யோகத்தை விலக்கிவிட்டு, சுந்தரம்பிள்ளையின் போஷணைக் குள்ளாக வந்து, அவரோடு அடையாறு என்ற ஊரில் இருந்து வந்தாள். அந்த சுந்தரம்பிள்ளை சைதாப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனில் வேலையாக இருந்தார். ஆனால், ஒரு வருஷ காலத்திற்கு முன் மோகனரங்கன் தனது அக்காளைப் பார்த்து விட்டு வரும் எண்ணத்தோடு அடையாற்றுக்குப் போயிருந்த காலத்தில், சுந்தரம் பிள்ளை ஏதோ தவறு செய்து விட்டதற்காக, அவரது உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்டுப் போய், அதைக் குறித்து மேலதிகாரிக்கு அப்பீல் செய்து அதன் முடிவை ஆவலோடு எதிர்பார்த்திருந்தார். ஆதலால், அப்போது அவர்கள் தங்களது ஜீவனத்திற்கு மிகவும் துன்பமுற்றிருந்தார்கள். அந்த நினைவு இப்போது மோகனரங்கனுக்கு உண்டாயிற்று; சுந்தரம் பிள்ளைக்கு மறுபடியும் உத்தியோகம் கிடைத்ததோ இல்லையோ என்றும், அவர்கள் வருமானம் இல்லாமையால் வருந்தும் காலத்தில் தானும் அவர்களுக்குப் பாரமாக அங்கே போய்ச் சேர்ந்தால், அவர்கள் இன்னமும் அதிகமாக வருந்துவார் களோ என்றும் அவன் பலவாறு எண்ணமிடத் தொடங்கினான். அவர்கள் தமது ஜீவனத்தை உத்தேசித்து, அவ்விடத்தை விட்டு, வேறு எங்கேயாகிலும் போயிருந்தால், தான் அந்த ஊர் வரையில் போய். வீணாக அலைந்து விட்டுத் திரும்பும்படியாக இருக்குமே என்ற நினைவும் தோன்றியது; ஆகையால், அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. தனது அத்தானான சுந்தரம் பிள்ளை என்பவர் சைதாப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனில் இருந்தமை யால், அந்த ஊரில் உள்ள போலீஸ் ஜெவான்களில் எவனாகிலும் ஒருவனைக் கண்டு, சுந்தரம் பிள்ளையைப் பற்றி விசாரித்தால், அவரும் தனது அக்காளும் எங்கே இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ளலாம் என்று நினைத்த மோகனரங்கன், ரயிலடியி லிருந்து தான் சென்ற

பாதைக்கருகில் இருந்த கடைகளுக்குப் பக்கத்தில், ஒரு ஜெவான் நிற்கக் கண்டு அவனிடத்தில் நெருங்கி, "ஐயா! இந்த ஊர் ஸ்டேஷனில், சுந்தரம் பிள்ளை என்று ஒரு ஹெட்கான்ஸ்டேபில் இருந்தாரே; அவர் இப்போது எங்கே இருக்கிறார் என்பது தெரியுமா?" என்று நயமாகக் கேட்க, அந்த ஜெவான் உடனே திரும்பி மோகனரங்கனை ஏற இறங்கப் பார்த்து, "நீ யாரையா? சுந்தரம் பிள்ளையைப் பற்றி நீர் ஏன் கேட்கிறீர்?" என்று மிகவும் கம்பீரமாக வினவ, அதைக் கேட்ட மோகனரங்கன், "நான் அவருடைய மைத்துனன். அவர் இந்த ஊர் ஸ்டேஷனில் இப்போது வேலையாக இருக்கிறாரா என்பதும், அவர் இன்னமும் அடையாற்றில் தான் இருக்கிறாரா என்பதும் தெரியவேண்டும். நான் அவருடைய இருப்பிடத்துக்குப் போக வேண்டும்" என்றான்.

உடனே அந்த ஜெவான், "அவருக்கு வேலை போய் ஒரு வருஷத்துக்கு மேலாகிவிட்டது. அவர் இப்போது எங்கே இருக்கிறார் என்பது யாருக்கும் தெரியாது" என்றான்.

மோகனரங்கன் சிறிது நேரம் யோசனை செய்து, "அவர் மேலதிகாரிக்கு அப்பீல் செய்தாரே; அது முடிவுக்கு வந்து விட்டதா?" என்றான்.

ஜெவான், "அதையெல்லாம் தள்ளிவிட்டார்கள்" என்றான்.

அதைக் கேட்ட மோகனரங்கனது முகம் மிகுந்த விசனத்தினால் மாறுபட்டது; அவன் சிறிது நேரம் தயங்கி நின்றவனாய், "சரி; அவர் எங்கே இருக்கிறார் என்பது அடையாற்றுக்குப் போனால் தான் தெரியும். போகிறேன்" என்று சொல்லிக் கொண்டே நடக்கலானான். அவனது மனதில், தன் சொந்த விசனத்தோடு தனது அக்காளின் விசனமும் ஒன்றுகூடி அவனை வருத்தத் தொடங்கியது. தனது அத்தானும் அக்காளும் வருமானம் இல்லாமல் துன்புற்றிருக்கும் சமயத்தில், தான் சம்பாத்தியம் செய்து அவர்களது கொடுமையை விலக்குவது விட்டு, தானும் அங்கே போய் அவர்களை அதிகரித்த சுமைக்கு ஆளாக்க நேரிட்டிருப்பதை நினைத்து நினைத்து, மிகுந்த கிலேசமும் துயரமும் அடைந்தவனாய், அவன் ராஜபாட்டையின் வழியாக

நடந்து கொண்டே அடையாற்றை நோக்கிச் சென்றான். அவன் சைதாப் பேட்டைக்கு அப்பால் சுமார் இரண்டு மயில் தூரம் போயிருப்பான்; அவனுக்கு எதிர்த்திக்கிலிருந்து மூன்று குதிரை வண்டிகள் விசையாக வந்து கொண்டிருந்தன. முதலில் வந்த வண்டியில் பெட்டிகள், படுக்கைகள், பாத்திரங்கள், கட்டில்கள், மேஜை நாற்காலிகள் முதலிய குடும்ப சாமான்கள் கூண்டு வரையில் திணக்கப்பட்டிருந்தன. பின்னால் வந்த மூன்றாவது வண்டியில், வண்டிக்காரனைத் தவிர வேறு இருவர் உட்கார்ந் திருந்தனர். அவர்கள் துருக்க ஜாதியைச் சேர்ந்தவராகவும் புருஷன் பெண் ஜாதிகளைப் போலவும் காணப்பட்டனர். அந்தப் புருஷனுக்கு சுமார் 30-வயதிருக்கும்; கைலி (லுங்கி), சட்டை தலைப்பாகை, பட்டு உருமாலை, தாடி, மீசை, கண்களில் மை, அவற்றின் மேல் மூக்குக் கண்ணாடி, வாயில் வெற்றிலை பாக்கு முதலிய சின்னங்களோடு ஒரு பெரிய தனிகரைப் போலக் காணப்பட்டார். அவருக்கு அருகில் உட்கார்ந்திருந்த பெண்பாவை சுமார் இருபது வயதான சிறுமி போலவும் உருட்சி திரட்சியான கைகால்கள் முதலிய அங்கங்களையும் சதைப்பிடிப்பான மேனியையும் பெற்றவள் போலவும் காணப்பட்டாள். ஆனால், அவள் உச்சி முதல் உள்ளங்கால் வரையில் ஒரு அங்கியால் அவளது தேகத்தை முற்றிலும் மறைத்துக் கொண்டு, முகத்தில் விடப்பட்ட இரண்டு துளைகளின் வழியாக வெளியில் பார்த்துக் கொண்டிருந்தமையால், அவளது அழகு, உடம்பின் நிறம் முதலிய மற்ற அம்சங்கள் விவரமாக அறியக்கூடாமல் இருந்தன. மேலே குறித்த வயது முதலிய விவரங்கள் ஓர் உத்தேசத்தின் மேல் யூகிக்கக்கூடியனவாக இருந்தன.

மோகனரங்கன் அந்த வண்டிகளைச் சந்தித்த இடம் நிருமானுஷ்யமானது; அவ்விடத்தில் வேறு மனிதராகிலும் வண்டிகளாகிலும் காணப்படவில்லை. முதலில் சாமான்கள் நிறைந்த வண்டிகளையும், பிறகு மனிதர் இருந்த வண்டியையும் கண்ட மோகனரங்கன் யாரோ துருக்கர்கள் தமது வீட்டைக் காலி செய்து கொண்டு, வேறிடத்திற்குப் போகிறார்கள் என்று நினைத்துக் கொண்டான். ஆனால், கடைசி வண்டி தனக்கருகில் வந்து தன்னைத் தாண்டிச்

சென்ற சமயத்தில், அந்த வண்டியில் இருப்பவர்கள் யார் என்று அவன் தற்செயலாகத் திரும்பிப் பார்த்து, அவர்கள் இஸ்லாமாண வர்களாக இருந்ததைக் கண்டு, தனது முகத்தை அப்புறம் திருப்பிக் கொண்டு, மேலே நடக்கத் தொடங்கினான். ஆனால், அந்தக் கடைசி வண்டி உடனே நின்றது. உட்புறத்தில் உட்கார்ந்திருந்த இஸ்லாமானவர், தமது கைகளைத் தட்டி, "ஐயா! ஐயா!" என்று கூப்பிட்டார். அதைக் கேட்டு திடுக்கிட்டுத் திகைப்பும் வியப்பும் அடைந்த மோகனரங்கன் நின்றபடியே திரும்பி, அந்த வண்டிக்குள் இருந்து அழைத்த மனிதரை நோக்க, அவர் இனிமையாகப் புன்னகை செய்த முகத்தோடு, "ஐயா! கொஞ்சம் இப்படி வாருங்கள்; ஒரு சங்கதி இருக்கிறது" என்றார்.

அதைக் கேட்ட மோகனரங்கன் தான் அதற்கு முன் பார்த்தறியாத அந்த மனிதர், தன்னிடத்தில் எந்தச் சங்கதியைப் பற்றிப் பேசுவார் என்று பெருத்த சந்தேகமும் திகிலும் அடைந்தவனாய் சிறிது தயங்கி நின்று, "என்னையா கூப்பிடுகிறீர்கள்?" என்று சந்தேக மாகக் கேட்க, அந்த மனிதர் நயமாக வற்புறுத்தி, "ஆம்; உம்மைத் தான் கூப்பிடுகிறேன். ஒரே ஒரு வார்த்தை" என்றார். அதைக் கேட்ட மோகனரங்கன், அவர் ஒருகால், சைதாப்பேட்டை எவ்வளவு தூரத்திலிருக்கிறதென்றாவது, அல்லது, ரயில் வண்டி வரும் மணிக்கணக்கு முதலிய ஏதாவது விவரத்தையாவது கேட்டறிந்து கொள்ளும் பொருட்டு தன்னை அழைக்கிறார் என்று ஒருவாறு உத்தேசித்துக் கொண்டு, மெல்ல நடந்து வண்டிக்குப் பின்னால் நின்றான். வண்டியில் கோஷாப் பெண்பிள்ளை இருப்பதைக் கருதி, அவன் அந்த ஸ்திரீ சாய்ந்திருந்த பக்கமாக மறைந்து அவளது கண்ணில் படாமல் ஒதுங்கி நின்று, "என்ன விசேஷம்?" என்றான்.

உடனே அந்த முஸல்மான் மோகனரங்கனை நோக்கி, "உம்மை எங்கேயோ பார்த்த மாதிரியாக இருக்கிறதே! நீர் எப்போதாவது அடையாற்றுக்கு வந்திருக்கிறீரா?" என்றார்.

உடனே மோகனரங்கன் அவரது முகத்தை உற்று நோக்க, அதுவும் பழக்கமான முகமாகத் தோன்றியது. அவன் அவரை

நோக்கி, "எனக்கும் அப்படித்தான் இருக்கிறது. நான் ஒரு வருஷத்துக்கு முன் அடையாற்றுக்கு வந்திருக்கிறேன்" என்றான்.

முஸல்மான், "யாருடைய வீட்டுக்கு வந்தீர்?" என்றார்.

மோகனரங்கன், "ஹெட்கான்ஸ்டேபில் சுந்தரம் பிள்ளையின் வீட்டுக்கு வந்திருக்கிறேன். நான் அவருடைய மைத்துனன்" என்றான்.

அதைக் கேட்ட முஸல்மான் மிகுந்த சந்தோஷத்தோடு, "ஓ! அப்படிச் சொல்லும்! நான் அந்த சுந்தரம் பிள்ளை இருந்த வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் இருந்தவனல்லவா? நான் அவருடைய வீட்டில் வந்து அடிக்கடி பேசிக் கொண்டிருப்பது வழக்கம். நீர் வந்திருந்த போது உம்மை நான் பல தடவைகளில் பார்த்துப் பேசி இருக்கிறேன். நீர் மறந்துவிட்டீர் போலிருக்கிறது" என்றார்.

உடனே மோகனரங்கன் சிறிது நினைத்துப் பார்த்து, "ஓகோ! அப்படியா! இருக்கலாம்; இருக்கலாம்; எனக்கு இன்னம் ஞாபகம் சரியாக ஏற்படவில்லை. என்னுடைய அக்காளும், அத்தானும் சௌக்கியமாக இருக்கிறார்களா? அவர்கள் இப்போதும் அதே வீட்டில்தானே இருக்கிறார்கள்? அவர்கள் செய்திருந்த அப்பீல் கூடத் தள்ளுபடி ஆகிவிட்டதென்று கேள்விப்பட்டேன். அவர்கள் இப்போது ஜீவனத்துக்கு என்ன செய்கிறார்கள்?" என்று பற்பல கேள்விகளைக் கேட்க, உடனே அந்த முஸல்மான் சிறிது விசனித்த முகத்தோடு அவனை நோக்கி, "ஓகோ! உமக்கு நெடுநாளைய விவரம் தெரியாது போலிருக்கிறது. ஆனால், இப்போது நீர் அவர்களுடைய வீட்டுக்குத்தான் போகிறீர் போலிருக்கிறது. நான் உம்மைக் கூப்பிட்டது நல்லதாகப் போய்விட்டது" என்றார்.

அந்தப் பீடிகையைக் கேட்ட உடனே மோகனரங்கனது அடிவயிற்றில் சுருக்கென்று கத்தி பாய்வது போன்ற ஒரு வேதனையும் சஞ்சலமும் உண்டாயின. அவர்களுக்கு இன்னமும் எவ்விதமான விபத்து நேரிட்டதோ என்றும், அவர்கள் எந்த ஊருக்குப் போய்விட்டார்களோ என்றும் நினைத்து விவரிக்க

மாட்டாத பெருத்த திகில் கொண்டவனாய், துயரமே வடிவாக ஏங்கி நிற்க, அந்தப் பரிதாபகரமான தோற்றத்தைக் கண்டு ஒருவாறு கலக்கமடைந்த இஸ்லாமானவர் அவனை நோக்கி, "ஐயா! உம்முடைய அத்தானும் அக்காளும் சௌக்கியமாகவே இருக்கிறார்கள். வேலை போய்விட்டதனால், அவர்களுடைய சாப்பாட்டுக்கு எவ்வித கஷ்டமும் உண்டாகவில்லை. சுந்தரம் பிள்ளை என்பவருக்கு பூர்வீகமாக சொத்து ஏராளமாக இருக்கிறது. அதை வைத்துக் கொண்டு அவர்கள் சௌக்கியமாக இருக்கிறார்கள். அவர்கள் இப்போது அடையாற்றில் இல்லை; சென்னைப் பட்டணத்தில், அங்கப்ப நாய்க்கன் தெருவில், ஒரு பெருத்த மாடி வீட்டில் இருக்கிறார்கள். அவர் தம்மிடத்தில் உள்ள சொத்தை வைத்துக் கொண்டு ஏதோ ஒரு வர்த்தகம் செய்வதாகத் தெரிகிறது. நான் இங்கே அடையாற்றில் குடியிருந்த வீட்டின் சொந்தக்காரன், ஏதோ அவசரமாகத் தனக்கு வீடு வேண்டும் என்றும் உடனே வீட்டைக் காலி செய்ய வேண்டும் என்றும் நோட்டீஸ் கொடுத்து விட்டான். நான் உடனே உம்முடைய அத்தானுக்கு எழுதி எனக்கும் அங்கேயே அவசரமாக ஓர் இடம் பார்க்கும்படி கேட்டுக் கொண்டேன்; அவர் சாமான்களோடு தம்முடைய வீட்டுக்கு வந்தால், உடனே ஓர் இடம் பார்த்து விடலாம் என்று எழுதினார். ஆகையால் நான் சாமான்களை எல்லாம் எடுத்துக் கொண்டு, பட்டணத்தில் உள்ள அவருடைய ஜாகைக்குத் தான் போகிறேன். நான் இஸ்லாமானவன், அவர் ஹிந்து. அப்படி இருந்தும் எங்களுக்குள் பேதமில்லை. ஒரு தாயின் வயிற்றில் பிறந்த அண்ணன் தம்பிகளைப் போல நாங்கள் பழகிவிட்டோம்; அவர் இந்த ஊரைவிட்டுப் போய் விட்டாலும் அவருடைய பழைய வாத்சல்யம் குறையவே இல்லை" என்றான்.

அந்த விவரங்களைக் கேட்ட மோகனரங்கன் கரைகடந்த மகிழ்ச்சி அடைந்தான்; தனது அத்தானுக்கு வேலையில்லாது போனாலும், அவர்கள் நல்ல நிலைமையில் இருப்பதைக் கேட்க, அவனது மனம் ஆனந்தமடைந்தது. அதோடு, அந்த இஸ்லாமானவர் தன்னை சந்தியாமல் போயிருந்தால், தான் அடையாறு வரையில் போய் அலைந்து, ஒரு விவரத்தையும் அறிந்து கொள்ள மாட்டாமல், தவித்துத் திண்டாடாமல், நல்ல சமயத்தில்தான்

அவரைச் சந்திக்க நேர்ந்ததும் ஓர் அதிர்ஷ்டம் என்று நினைத்து உவகை கொண்டான். அவ்வாறு அவன் இரட்டிப்பு சந்தோஷத் தினால் பூரித்து நின்றதைக் கண்ட இஸ்லாமானவர், "சரி; இனியும் கால தாமதம் செய்து கொண்டு ஏன் வீணில் நிற்க வேண்டும். நீரும் இந்த வண்டிகளில் ஏதாவது ஒன்றில் ஏறிக்கொண்டு எங்களோடு வாரும்; உம்மை உம்முடைய அத்தானிருக்கும் இடத்தில் கொண்டு போய்ச் சேர்க்கிறேன்" என்று கூறிய வண்ணம், முன்னால் சென்ற சாமான் வண்டிகளின் வண்டிக்காரர்களைக் கூவி அழைத்து வண்டிகளை நிறுத்தச் செய்தவராய்க் கீழே இறங்கினார். இறங்கினவர் அவ்வாறு நிறுத்தப்பட்ட சாமான் வண்டிகளிருந்த இடத்திற்குப் போய், அவைகளில் ஒன்றிலிருந்த சாமான்களில் பலவற்றை எடுத்து ராஜபாட்டையில் வைத்து, அந்த வண்டியின் பின்னால் அரைப்பாகம் வரையில் காலி செய்து விட்டு, உடனே தமது கோஷா மனைவி இருந்த வண்டிக்கு வந்து அவளை அந்த வண்டியில் இருந்து கீழே இறங்கச் செய்து, அழைத்துக் கொண்டு போய், காலி செய்யப் பட்ட சாமான் வண்டியின் பின்புறத்தில் அவளை ஏறி உட்காரச் செய்து, அவ்விடத்தில் தாம் செல்ல வேண்டிய விஷயங்களைச் சொல்லியபின் சாமான் வண்டிகளை விசையாக ஓட்டிக் கொண்டு முன்னால் செல்லும்படி வண்டிக்காரர்களிடத்தில் சொல்ல, அவ்வாறே அந்த இரண்டு வண்டிகளும் புறப்பட்டுப் போய் விட்டன. உடனே அந்த இஸ்லாமானவர், பின்னால் நின்ற வெற்று வண்டியை, சாமான்கள் கிடந்த இடத்திற்கு ஓட்டிக் கொண்டு வரும்படி கூப்பிட, வண்டிக்காரன் அந்த வண்டியை ஓட்டிக்கொண்டு போய், அந்த இடத்தில் நிறுத்த, சாயப்பு, கீழே கிடந்த சாமான்களை எல்லாம் எடுத்து அந்த வண்டியின் முன்புறத்தில் பாதி பாகத்திற்குள் அடக்கி வைத்த பின்னர், மோகரங்கனை அழைத்து, அதன் பின்புறத்தில் ஏறிக் கொள்ளும் படி கூற, அவன் அவ்வாறு ஏறி உட்கார்ந்து கொண்டான். சாயப்புவும் அந்த வண்டியிலேயே ஏறி, மோகனரங்கனுக்கருகில் உட்கார்ந்து கொண்டு, ஓட்டும்படி கூற, வண்டிக்காரன் உடனே ஓட்ட ஆரம்பித்தான். முதல் வண்டிகள் இரண்டும் நெடுந்தூரத் திற்கு முன்னால் போய் மறைந்துவிட்டன. மோகனரங்கனும் சாயப்புவும் இருந்த வண்டி அதி விசையாகப்

போகாமல், சாதாரணமாக ஓடிக் கொண்டிருந்தது. தனது விஷயத்தில், சாயப்பு எடுத்துக் கொண்ட பிரயாசையையும், காட்டிய அன்பையும் கண்ட மோகனரங்கன் நன்றியறிதலினால் இளகியவனாய், சாயப்புவை நோக்கி, "எனக்காக நீங்கள் சாமான்களை எல்லாம் இறக்கி ஏற்றி உங்களுடைய சம்சாரத்தையும் வேறே வண்டிக்கு அனுப்பி எவ்வளவு பிரயாசை எடுத்துக் கொண்டீர்கள்! அந்த சாமான் வண்டிகளில் ஏதாவது ஒன்றில், நான் தொற்றி உட்கார்ந்திருந்தாலும், அதுவே போதுமானதாயிற்றே" என்றான். அதைக் கேட்ட சாயப்பு, "அதுவா மரியாதை! உம்முடைய அத்தான், என்னைத் தம்முடைய வீட்டிலேயே வந்து தங்கும்படி அவ்வளவு பிரியமாக நடக்கும் போது, இந்த வண்டியில் உமக்கு உட்கார இடம் செய்து கொடுப்பது ஒரு பெரிய காரியமா?" என்றார். அதைக் கேட்ட மோகனரங்கன் அதற்குமேல் உபசார வார்த்தை சொல்லமாட்டாதவனாய் சிறிது மௌனமாக இருந்து, "உங்களுடைய பெயர் என்ன?" என்றான். சாயப்பு, "என்னுடைய பெயர் அப்துல்கணி ராவுத்தர் என்பார்கள்" என்றார். அதன் பிறகு அவர்கள் லோகாபிராமமாகப் பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே சென்றனர். அந்த விஷயங்கள் நமது கதைக்கு சம்பந்தப் படாதவையாதலால், அவைகளை விரிப்பது படிப்போருக்குத் துன்பகரமாக இருக்குமென விடுத்து, மேலே நிகழ்ந்தனவற்றைக் கூறுவோம். அவர்கள் ஏறிக்கொண்டு வந்த வண்டி அதன் பிறகு முன் வண்டிகளை எட்டிப் பிடிக்கவுமில்லை, அவைகளைக் காணவுமில்லை. அவர்களது வண்டி இரண்டு நாழிகை நேரம் ஓடிக் கடைசியில் அங்கப்ப நாய்க்கன் தெருவிற்குள் நுழைந்தது. அந்தத் தெரு ஹைகோர்ட்டுக் கெதிரில் இருந்து ஆரம்பித்து சுமார் ஒன்றரை மயில் தூரத்திற்கு நீண்டிருந்த தெற்கு வடக்கான பெருத்த தெரு; அந்தத் தெருவில் உள்ள வீடுகளில் சிற்சில வீடுகள் தவிர, அந்தத் தெரு முழுதிலும் சாயப்புமார்களே வசித்து வந்தனர். அநேகமாக எல்லா வீடுகளும் இரண்டு மூன்று மாடிகளையும் இரண்டு மூன்று கட்டுகளையும் உடையவனாய் மிக விஸ்தாரமான மாளிகைகளாக இருந்தன. அவற்றில் வசிப்பவரில் பெரும்பாலோரும் தனிகர்களும் வர்த்தகர்களுமாகவே

இருந்தனர். அந்தத் தெருவில் உள்ள சாயப்புமார்கள் எல்லோரும் மிகுந்த ஒற்றுமையும் கட்டுப்பாடும் உடையவர்களாக இருப்பது பற்றி, அது சுயராஜ்யம் பெற்ற ஒரு தனி நாட்டைப் போல அதிபல முடையதாகவும், திருடர் பயம் போலீஸார் பயம் முதலிய எவ்வித பயமுமற்றதாக இருக்கின்றது. அப்படிப்பட்ட தெருவை அடைந்த நமது அப்துல்கனி ராவுத்தரது குதிரை வண்டி நெடுந்தூரம் சென்று, அந்தத் தெருவின் நடுமத்தியி லிருந்த ஒரு பெருத்த மாடி வீட்டின் வாசலில் போய் நின்றது. உடனே அப்துல்கனி ராவுத்தரும் மோகனரங்கனும் கீழே இறங்கினார்கள். ராவுத்தர் வண்டிக்காரனுக்குச் சேர வேண்டிய வாடகைப் பணத்தைக் கொடுத்து, அவனை அனுப்பிவிட்டு, மோகனரங்கனையும் அழைத்துக் கொண்டு, அந்த வீட்டின் வாசற்படியில் ஏறி, மூடப்பட்டிருந்த கதவைத் தட்ட, அது உடனே திறக்கப்பட்டது. கதவைத் திறந்த ஒரு வேலைக்காரி நடையில் நின்று கொண்டிருந்தாள். ராவுத்தர் அவளை நோக்கி, "சுந்தரம்பிள்ளை எங்கே?" என்றார். உடனே அந்த வேலைக்காரி மிகவும் பணிவாக, "அவர்கள் உங்களுக்காக வீடு பார்க்க வெளியில் போயிருக் கிறார்கள். இந்த வீட்டின் கீழ்பாகம் காலி செய்யப்பட்டிருப்பதால் உங்களை கீழே இறக்கச் சொல்லி விட்டுப் போயிருக்கிறார்கள்; உங்களுடைய சாமான் எல்லாம் கூடத்தில் கொண்டு போய் வைக்கப்பட்டிருக்கிறது. உங்களுடைய சாமான் எல்லாம் கூடத்தில் கொண்டுபோய் வைக்கப்பட்டிருக்கிறது. உங்களுடைய சம்சாரமும் உள்ளே இருக்கிறார்கள். ஐயா இன்னமும் அரை நாழிகைக்குள் வந்து விடுவார்கள். அவர்களுடைய சம்சாரம் மேல் மாடியில் இருக்கிறார்கள். அவர்களுடைய தம்பியும் உங்களோடு வருவதாக, கோஷா அம்மாள் சொன்னார்கள். தம்பி வந்தால், அவரை மேன்மாடிக்கு அழைத்து வரும்படி, அவளுடைய தமக்கையார் சொன்னார்கள்" என்றாள். அதைக் கேட்ட ராவுத்தர் மிகுந்த மகிழ்ச்சியடைந்தவர் போல நடித்து, "அப்படியானால் சரி; இதோ நிற்கிறாரே இவர்தான் அந்த அம்மாளுடைய தம்பி; இவரை மேலே அழைத்துக்கொண்டு போ; நான் வாசல் கதவை மூடிக் கொண்டு உள்ளே போகிறேன்" என்று கூறிய வண்ணம், வாசற் கதவை மூடி உட்புறத்தில் தாளிட்டார். உடனே அந்த வேலைக்காரி

மோகனரங்கனை அழைத்துக் கொண்டு, நடையில் இருந்து மேலே சென்ற படிகளின் வழியாக ஏறி அடுத்த நிமிஷத்தில் மேன் மாடிக்குப் போய்ச் சேர்ந்தாள். அங்கே கூடத்தில் சில நாற்காலி களும் ஊஞ்சற் பலகையும் இருந்தன; அந்த ஊஞ்சற்பலகையின் மேல் உட்கார்ந்து ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த ஒரு யௌவன மாது மோகனரங்கனைக் கண்டவுடனே இனிமையும் புன்னகையும் சொரிந்த முகத்தினளாய் மிகுந்த ஆவலும் ஆசையும் தோன்ற எழுந்து, "வா; தம்பி! வா" என்று அன்பொழுக வரவேற்று, எதிர்கொண்டு போக, மிகுந்த செல்வமும் செழுமையும் அழகும் நிறைந்தவளாகத் தோன்றிய தனது அக்காளான ராஜாயி அம்மாளைக் கண்டவுடனே ஆனந்த பரவசம் அடைந்தவனாய், புன்னகையும், சந்தோஷமும் ஜ்வலித்த முகத்தோடு அவளிருந்த இடத்திற்கு நெருங்க, அப்போது ராஜாயியம்மாள் சற்று தூரத்தில் கிடந்த ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு, அதன்மேல் உட்கார்ந்து கொண்டான். உடனே ராஜாயியம்மாள் வேலைக்காரியை நோக்கி, "அடீ கண்ணியம்மா! தம்பி முதலில் காப்பி சாப்பிடட்டும். காலலம்ப ஒரு செம்பில் தண்ணீர் கொண்டு வந்து வைத்துவிட்டு, பலகாரத்தை யும் காப்பியையும் இங்கேயே கொண்டுவந்து வை" என்றாள். கன்னியம்மாள் அந்த உத்தரவை நிறைவேற்றும் பொருட்டு, அப்பாலிருந்த அறைகளுக்குள் போய்விட்டாள்; மோகனரங்கன் ஒரு வருஷ காலத்திற்கு முன்னர், தனது அக்காளைப் பார்த்தபோது அவள் அதிக சதைப் பிடிப்பும், அழகும் இல்லாமல் சாதாரண மனுஷியாக இருந்தாள் ஆதலால், இப்போது அவள் நல்ல உருட்சி திரட்சியும், உன்னத வனப்பும் பெற்று, ஒரு சக்கரவர்த்தினி போலவும் மிகுந்த சுகபோகங்களில் இருப்பவள் போலவும், உயர்ந்த பட்டாடைகள், வைர ஆபரணங்கள் முதலியவைகள் ஜ்வலிக்க நின்று கொண்டிருந்ததைக் கண்டு காட்சி மோகன ரங்கனுக்குக் கனவோ நினைவோ என்ற சந்தேகத்தை உண்டாக் கியது. தானும் தனது அக்காளும் மிகுந்த ஏழ்மை நிலைமையி லிருப்பவர்கள் என்றே அவன் அதுகாறும் நினைத்திருந்தவன் ஆதலால், மாரமங்கலத்து அரண்மனைப் பெண்களைக் காட்டிலும் அதிகப் பெருந்தன்மையும், செல்வச் செழுமையும் நிரம்ப நின்ற

தனது அக்காளைக் காணவே அவன் கரைகடந்த மகிழ்ச்சியும், பெருமையும் அடைந்தவனாய், இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்து என்ன பேசுவதென்பதை அறியாதவனாக இரண்டொரு நிமிஷம் இருந்தான்; அப்போது தனது தம்பியைக் கண்டு நாணி மரியாதை யாக நிற்பவள் போல சற்று தூரத்தில் நின்று கொண்டிருந்த ராஜாயி அம்மாள் என்ற அந்தக் கட்டழகி மோகனரங்கனை நோக்கி, "நீ எங்களைத் தேடிக் கொண்டு அடையாற்றுக்குப் போனதாகவும், வழியில் நம்முடைய ராவுத்தர் தெய்வச் செயலாக உன்னைச் சந்தித்து அழைத்து வருவதாகவும் கொஞ்ச நேரத்துக்கு முன் வந்து சேர்ந்த கோஷா அம்மாளிடத்தில் கேள்விப்பட்ட முதல் உன்னைப் பார்க்கப் போகிறோம் என்கிற சந்தோஷத்தினால் ஆகா! நான் நிமிஷத்துக்கு நிமிஷம் ஜன்னலண்டையில் வந்து வாசலைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். நீ வந்து சரியாக ஒரு வருஷ காலம் ஆகிறதல்லவா?" என்றாள்.

**மோகனரங்கன்:-** ஆம்; சரியாக ஒரு வருஷமாகிறது. நான் வந்து உங்களைப் பார்க்க வேண்டும் என்று எவ்வளவு ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன் தெரியுமா? வக்கீல் ஐயாவிடத்தில் நான் உத்தரவு கேட்கும் போதெல்லாம், "ஆகட்டும் போகலாம்" "ஆகட்டும் போகலாம்" என்று சொல்லிக் கொண்டே வந்தார். இப்போதும் அவராக என்னை அனுப்பவில்லை. நானே வந்தேன் – என்றான்.

**ராஜாயி:-** நீ அடையாற்றுக்கு வந்துவிட்டுப் போன பிறகு, உனக்கு நான் ஐந்து கடிதங்கள் எழுதியிருக்கிறேன். அவைகளுக்கு நீ ஒரு கடிதம்கூட பதில் எழுதாமல் பேசாதிருந்ததைப் பார்க்கப் பார்க்க எனக்கு நிரம்பவும் கவலையாக இருந்தது.

**மோகன:-** (திகைப்பும் வியப்பும் அடைந்து) என்ன! ஐந்து கடிதங்கள் எழுதினாயா? ஒன்றுகூட என்னிடத்தில் வந்து சேர வில்லையே! நீ எந்த மேல்விலாசத்துக்கு எழுதினாய்?

**ராஜாயி:-** வக்கீல் ஐயா மேல்விலாசம் பார்த்து உனக்குக் கொடுக்கும்படியாக எழுதினேன்.

**மோகன:-** சரி, சரி; அவர்கள் என்னிடத்தில் ஒரு கடிதங்கூடக் கொடுக்கவில்லை. நாம் ஒருவருக்கொருவர் க்ஷேம சமாசாரங்களை

அறிந்து கொள்ளக்கூடாது என்பது அவர்களுடைய எண்ணம் போலிருக்கிறது. நான் அடையாற்றுக்குப் போவதற்கும் அவர் இணங்கவில்லை; கடிதத்தையும் கொடுக்கவில்லை.

***ராஜாயி:-*** அவர்கள் ஏன் அப்படிச் செய்ய வேண்டும்? நாம் ஒருவருக்கொருவர் சகோதர பாத்தியம் கொண்டாடுவதைக் கூட அவர்கள் தடுக்க நியாயமில்லையே; அவர்களுக்குள் என்ன யோசனையோ. நம்முடைய பிறப்பு வளர்ப்பு முதலிய விவரங் களில் எதையும் நாம் அறியக்கூடாதென்று அவர்கள் மறைத்துக் கொண்டு வருகிறது முன்னமே தெரிந்த விஷயம். இனி நம் இருவரையும், ஒருவருக்கொருவர் அற்றுப் போகும்படி செய்ய நினைக்கிறார்கள் போலிருக்கிறது – என்றாள்.

அந்தச் சமயத்தில், கன்னியம்மாள் ஒரு செம்பில் தண்ணீர் கொண்டு வந்து நீட்ட, மோகனரங்கன் முதல் நாளிரவு முற்றிலும் பட்டினி கிடந்தவன் ஆதலால், எழுந்து காப்பி முதலியவற்றைப் பருகியபின், உட்கார்ந்து பேசலாம் என்ற எண்ணங் கொண்டு போய், சற்று தூரத்திலிருந்த ஒரு தாழ்வாரத்தில் கால் கைகளை எல்லாம் அலம்பி சுத்தம் செய்து கொண்டுவர, அதற்குள் வேலைக்காரி சிற்றுண்டிகள் காப்பி முதலியவற்றைக் கொணர்ந்து, ஊஞ்சல் பலகையின் மீது வைத்திருந்தாள். மோகனரங்கன் அவற்றை அருந்திய பிறகு வேலைக்காரியை அழைத்து, பாத்திரங்களை எல்லாம் எடுத்துக் கொண்டு போகும்படி செய்துவிட்டு, தனது கை வாய் முதலியவற்றை அலம்பிக் கொண்டு ஊஞ்சற் பலகையிலேயே உட்கார்ந்த வண்ணம் தனது அக்காளிடத்தில் மேலும் சம்பாஷிக்கத் தொடங்கினான்.

அதுகாறும், பக்கத்திலிருந்த ஓர் அறைக்குள் சென்று ஏதோ காரியம் செய்து கொண்டிருந்த ராஜாயி அம்மாள் திரும்பி வந்து, ஒரு பக்கமாகத் தரையில் உட்கார்ந்து கொண்டு மோகனரங்கனைப் பார்த்து, "அப்படியானால், நீ இப்போது என்ன உத்தியோகத்தில் இருக்கிறாய்?" என்றாள்.

**மோகன:-** மாரமங்கலம் ஜெமீந்தார் பங்களாவில் ஒரு குமாஸ்தா வேலையில் இருந்தேன்.

*ராஜாயி:-* இருந்தேன் என்கிறாயே. அப்படியானால் இப்போது அங்கே இல்லையா?

*மோகனா:-* நேற்று பகல் வரையில் அங்கே தான் இருந்தேன். அந்த சமஸ்தானத்து எஜமானியம்மாளான கல்யாணியம்மாள் நேற்று பகல் சுமார் நாலரை மணிக்கு என்னை அழைத்து, ஒரு கடிதத்தை கொடுத்து, அதை எடுத்துக் கொண்டு மைலாப்பூரில் உள்ள வக்கீல் ஐயாவிடத்தில் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வரும்படி சொன்னார்கள். அதை நான் உடனே எடுத்துக் கொண்டு மைலாப்பூருக்குப் போய், முதலியாரிடத்தில் கொடுத்தேன். அதைப் படித்துப் பார்த்த முதலியார் கல்யாணி யம்மாளுக்கு ஏதோ பதில் எழுதி அதை வேறோர் ஆளிடத்தில் கொடுத்தனுப்பி விட்டு, என்னைப் பார்த்து, அவர்களுக்கு செங்கல்பட்டிலுள்ள நிலங்களின் மாசூல் இப்போது அறுவடை யாகும் காலம் ஆதலால், அங்கே இருக்கும் இரண்டு குமாஸ்தாக் களுக்கு உதவியாக, இன்னொரு குமாஸ்தா வேண்டும் என்று அவர்களுடைய தம்பி கடிதம் எழுதியிருப்பதாகவும், என்னை உடனே அனுப்பப் போவதாகவும் சொன்னார்கள்; வேலைக் காரனை அழைத்து, பெட்டி வண்டியைப் பூட்டச் செய்து ஏதோ சில கடிதங்களை எழுதிக் கையிலெடுத்துக் கொண்டார்கள்; எனக்கு அது சம்மதமானதா இல்லையா என்பதைக் கூடக் கேட்டறிந்து கொள்ளாமல், என்னையும் வண்டியில் ஏறச் செய்து, எழும்பூர் ஸ்டேஷனுக்கு வந்தார்; அவரே பணத்தைக் கொடுத்து டிக்கெட்டு வாங்கினார்; என்னை அழைத்துக் கொண்டு வந்து ரயிலில் ஏறி உட்காரச் செய்து, டிக்கெட்டையும் ஒரு கடிதத்தையும் கொஞ்சம் பணத்தையும் கொடுத்துவிட்டு, வண்டி புறப்பட்டு ஓடின பிறகு, அவர் திரும்பி வெளியில் போனார். ஆகையால், நான் செங்கல்பட்டுக்கு மாற்றலாகப் போகிற சந்தர்ப்பத்தில், உங்களை எல்லாம் பார்க்க வேண்டும் என்ற தடுக்க முடியாத ஓர் ஆசையினால் இங்கே வந்தேன்.

*ராஜாயி:-* அப்படியானால் நீ சைதாப்பேட்டையில் இறங்கி, அடையாற்றுக்குப் போனாய் போலிருக்கிறது.

*மோகனா:-* இல்லை, இல்லை. வக்கீல் ஐயா என்னை திடீரென்று அனுப்பியதைப் பற்றி நான் நிரம்பவும் விசனப்பட்டுக் கொண்டு,

என்ன செய்வதென்பதை அறியாமல் பல்லாவரம் வரையில் போய் கேட்டேன். அதற்கு மேல் போக மனம் இசையாமையால், அந்த ஊரில் இறங்கி, ராத்திரி முழுதும் ஸ்டேஷனில் படுத்திருந்து, காலையில் பட்டணம் வரும் வண்டியில் சைதாப்பேட்டைக்கு வந்து, அங்கே இருந்து அடையாற்றுக்குப் போன போது, இந்த சாயப்புவை வழியில் சந்தித்தேன். நல்ல வேளையாக இவர் என்னுடைய அடையாளங் கண்டு கொண்டார். இல்லாவிட்டால், நான் உங்களுடைய இருப்பிடத்தை இவ்வளவு சுலபத்தில் கண்டிருக்க முடியாது.

*ராஜாயி:-* (சிறிது யோசனை செய்து) மாரமங்கலம் ஜெமீந்தாரிணி அம்மாள் அடிக்கடி உன்னிடத்தில் கடிதம் கொடுத்து வக்கீல் ஐயா வீட்டுக்கு அனுப்புகிற வழக்கம் உண்டோ?

*மோகன:-* இல்லை, இல்லை. நான் அங்கே வேலைக்குப் போய் சுமார் ஒரு வருஷ காலமாகிறது. அவர்கள் என்னிடத்தில் கடிதம் கொடுத்து வக்கீல் ஐயாவிடத்துக்கு அனுப்பியது இதுதான் முதல் தடவை.

*ராஜாயி:-* (முன்னிலும் அதிகம் ஆழ்ந்து யோசனை செய்து) அப்படியானால், இதில் ஏதோ சூது இருக்கிறது. வக்கீல் ஐயா நம்முடைய விஷயங்களை எல்லாம் இப்படித்தான் பூடகமாகச் செய்து வருகிறார். மாரமங்கலம் ஜெமீந்தாரிணியம்மாளுக்கு உன் மேல் ஏதாகிலும் கோபம் உண்டாகும்படி நடந்து கொண்டாயோ?

*மோகன:-* (சிறிது தயங்கி) அப்படி ஒன்றுமில்லை.

*ராஜாயி:-* வக்கீல் ஐயா அவர்களுடைய தம்பிக்கு எழுதிய கடிதம் எங்கே? அதை எடு பார்க்கலாம் - என்றாள்.

அதைக் கேட்ட மோகனரங்கன், தனது சட்டைப்பைக்குள் கிடந்த ஒரு கடிதத்தை எடுத்துத் தனது அக்காளிடத்தில் கொடுக்க, அவள் அதை வாங்கி, தண்ணீரை அதன் வாயில் தடவி ஊற வைத்து அதன் மூடியைத் திறந்து, உள்ளே இருந்த கடிதத்தை எடுத்துப் பிரித்து அதைப் படித்தாள். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

சிரஞ்சீவி சோணாசலத்துக்கு அனேக ஆசீர்வாதம்; உபய க்ஷேமம்.

இதைக் கொண்டு வரும் மோகனரங்கன் என்ற பையன், இது வரையில், மாரமங்கலத்தாரின் அரண்மனையில் குமாஸ்தாவாக இருந்தவன். அவன் இரண்டு மாசகாலம் வரையில் அங்கே இருந்து நம்முடைய குமாஸ்தாக்களுக்கு உதவியாக இருக்கட்டும். இவனுக்கு ஓட்டலில் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்து, இவன் இருப்பதற்கு, பிரத்தியேகமான ஓர் இடம் ஏற்படுத்திக் கொடு. இவன் நம்முடைய வீட்டில் உள்ள பெண்களோடு பழகும்படி விடவேண்டாம். இவனைப் பற்றி விரிவான ஒரு கடிதம் எழுதி இன்றைய தபாலில் போட்டிருக்கிறேன். அதைப் பார்த்து அதன்படி நடந்துகொள்.

இப்படிக்கு,
சிவஞானம்.

—என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்துக் காட்டிய ராஜாயி அம்மாள் உடனே மோகனரங்கனைப் பார்த்து, "சரி; என்னுடைய சந்தேகம் நிச்சயமாகிவிட்டது. அவர்களுடைய தம்பி, இன்னொரு குமாஸ்தா வேண்டும் என்று கேட்டதற்கு இது மறுமொழியாக எழுதப்பட்டதாகத் தோன்றவில்லை. கல்யாணியம்மாளுடைய கடிதத்தின் மேல், அவர்களே உன்னை அனுப்பி இருக்க வேண்டும் என்று நான் சந்தேகப்படுகிறேன். நீ உண்மையை மறைக்காமல் என்னிடத்தில் சொல்லிவிடு. நான் அக்காளாயிற்றே என்று வெட்கப்படாதே" என்று அன்போடு நயமாக வற்புறுத்திக் கேட்க, மோகனரங்கன் மிகுந்த லஜ்ஜை அடைந்தவனாக சிறிது நேரம் தயங்கி பின, "சரி; இப்போது இந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகு, எனக்கும் அதே சந்தேகம் உண்டாகிறது. இந்த மாரமங்கலம் ஜெமீந்தாரிணியம்மாளுக்கு துரைஸானியம்மாள் என்றும் கோமள வல்லியம்மாள் என்றும் இரண்டு அழகான பெண்கள் இருக்கிறார்கள். அவர்களில் மூத்தவளான துரைஸானியம்மாளுக்கு என்னிடத்தில் நிரம்பவும் பிரியம்; அவள் என்னைப் பார்த்த முதல் அடிக்கடி என்னைத் தனியாக அழைத்து வைத்துக் கொண்டு நம்முடைய குடும்ப விவரங்களை எல்லாம் கேட்பதுண்டு. சென்ற இரண்டு

நாளாக அவள் என்னை அடிக்கடி அழைத்துப் பிரியமாகப் பேசி, என்னையே கட்டிக்கொள்ள அவள் பிரியப்படுவதாகச் சொல்லி வந்தாள். நேற்று பகலில் அவள் என்னை அவளுடைய அந்தப் புரத்துக்கு வரச்சொன்னாள். நான் அங்கே போயிருந்தேன்; இங்கே தனியாக ஒரு வீடு பார்த்து வைக்க வேண்டும் என்றும், இன்று ராத்திரிக்குள் அவளும் நானும் ரகசியமாக பங்களாவை விட்டு, அந்த இடத்துக்குப் போய்விடுவதென்றும் முடிவு கட்டினாள். நான் அவள் சொன்னதை மீறமாட்டாமல், அதை ஒப்புக் கொண்டிருந்ததற்கு, ஒரு போக்காக, அவள் தனக்குத் தலை நோவாக இருப்பதால் கதவுகளைச் சாத்திவிட்டுத் தனியாக இருப்பதாக அவளுடைய தங்கையிடத்தில் சொல்லிவிட்டு வந்திருந்தாள். நாங்கள் இரண்டு பேரும் உள்ளே இருந்த காலத்தில், ஜெமீந்தாரிணியம்மாள் வெளியில் வந்து கதவைத் தட்டி, மருந்து போட வந்திருப்பதாகச் சொன்னார்கள். இவள் தனக்கு அநேகமாக குணமுண்டாய் விட்டதென்றும் தன்னால் எழுந்து வந்து கதவைத் திறக்கக்கூட வில்லை என்றும் சொல்ல, அவர்கள் போய் விட்டார்கள். அந்தப் பெண் உடனே என்னை வெளியில் அனுப்பி விட்டாள். நான் கச்சேரி மண்டபத்திற்குப் போனேன். அங்கே தயாராக நின்ற ஒரு வேலைக்காரி, என்னை எஜமானி யம்மாள் அழைப்பதாகக் கூற, நான் உடனே போய் ஜெமீந் தாரிணியம்மாளுக்கெதிரில் நின்றேன். அவர்கள் உடனே ஒரு கடிதத்தைக் கொடுத்து வக்கீல் ஐயா வீட்டுக்கு அனுப்பினார்கள்" என்றான்.

அந்த விவரத்தைக் கேட்ட ராஜாயி அம்மாள் மகிழ்ச்சியோடு புன்னகை செய்து, "சரி; இப்போது தான் உண்மை நன்றாக விளங்குகிறது. நீ துரைஸானியம்மாளிடத்தில் நட்பாக இருக்கிறாய் என்பதைக் கண்டுகொண்டே அந்த அம்மாள் உன்னை உடனே வேறு எங்கேயாவது அனுப்பிவிடும்படி கடிதம் எழுதி வக்கீல் ஐயாவுக்கு அனுப்பி இருக்கிறார்கள் என்பது நிச்சயமாகத் தெரி கிறது. அதிருக்கட்டும்; நான் முதலில் ஒரு கேள்வி கேட்கிறேன்; அதற்கு நீ வெட்கப்படாமல் உடனே பதில் சொல்ல வேண்டும். அவள் உன்னிடத்தில் மோகம் கொண்டிருக்கிறாள் என்பது நன்றாகத் தெரிகிறது; உனக்கும் அவளைக் கட்டிக்கொள்ளப்

பிரியந்தானா? அதை மாத்திரம் நீ சொல்லிவிடு" என்றாள். மோகன ரங்கன் நாணிக் கோணிக் கீழே குனிந்து ஐந்து நிமிஷநேரம் வரையில் மௌனம் சாதித்து, "எனக்கும் பிரியமாகத்தான் இருக்கிறது" என்றான். "அப்படியானால், நாளைய தினம் ராத்திரி சரியாக ஒன்பது மணிக்கு அந்தப் பெண் இங்கே வந்து சேருவாள்; உடனே உங்கள் இருவருக்கும் தாலிகட்டி வைக்கிறேன்; அதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். இனிமேல் நீ வேறு எவரிடத்திலும் வேலைக்கு போக வேண்டாம்" என்று யாரோ ஒரு மனிதர் மெத்தைப்படியில் நின்று கூறிய வண்ணம் அவர்கள் இருந்த கூடத்திற்கு வந்தார். அந்த மனிதர் தனது புருஷரான சுந்தரம் பிள்ளை என்று கண்டவுடனே, ராஜாயி அம்மாள் புன்னகை தவழ்ந்த முகத்தோடு எழுந்து நின்று, "நாங்கள் ரகசியமான சங்கதியைப் பேசிக் கொண்டிருக்கையில், உங்களை யார் இப்படி மறைந்திருந்து கேட்கச் சொன்னது?" என்று வேடிக்கை போலக் கொஞ்சலாகக் கேட்க, சுந்தரம் பிள்ளையும் மகிழ்ச்சியோடு புன்னகை செய்து, "நான் மெத்தைப் படியில் ஏறிய போது நீங்கள் பேசியதைக் கேட்டு சுவாரஸ்யமாக நீங்கள் பேசுவதை நான் வந்து தடுக்கக்கூடாதென்று அப்படியே நின்று கொண்டிருந்தேன். நீங்கள் பேசிய சங்கதிகள் எல்லாம் எனக்கும் தெரியவேண்டியவை ஆகையால் பாதகமில்லை. ஏனப்பா! மோகனரங்கம்! உன்னுடைய அக்காள் கோபித்துக் கொள்ளு கிறதைப் போல. நீயும் என் மேல் கோபித்துக் கொள்ளப் போகிறாயா?" என்று பரிகாசமாகப் பேசிய வண்ணம், மோகனரங்கனிருந்த இடத்திற்கருகில் வந்து, ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். திடீரென்று தனது அத்தான் தோன்றியதையும், அவர் தனது விஷயங்களை எல்லாம் அறிந்து கொண்டதையும் கண்ட மோகனரங்கன் பெரிதும் குழப்பம் அடைந்தவனாய், மகிழ்ச்சியும் கிலேசமும் ஒன்று கூடிய முகத் தோற்றத்தோடு அவரைப் பார்த்துப் புன்னகை செய்தான். உடனே சுந்தரம் பிள்ளை அவனை நோக்கி, "நான் கீழே வந்தவுடனே, நம்முடைய அப்துல்கணி ராவுத்தர் உன்னை அழைத்துக் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னார். அதைக் கேட்ட உடனே நான்

ஆனந்த பரவசம் அடைந்து, மேலே ஏறி வந்தேன். வந்தவன் மெத்தைப்படியில் நின்றே எல்லா விவரங் களையும் அறிந்தேன்" என்று கூறிய வண்ணம் "கன்னியம்மா! கன்னியம்மா!" என்று வேலைக்காரியை அழைத்து, தனது கைப் பெட்டியை எடுத்து வரும்படி கூற, அவள் அவ்வாறே ஒரு பெட்டியைக் கொணர்ந்து வைத்துச் சென்றாள். அவர் அதைத் திறந்து, அதற்குள்ளிருந்த காகிதம் மைக்கூடு இறகு முதலியவற்றை எடுத்து வெளியில் வைத்துக் கொண்டு ஏதோ ஒரு கடிதம் எழுதத் துவக்கினார்.

அப்போது, மோகனரங்கன் தனது கடைக்கண் பார்வையை சுந்தரம் பிள்ளையின் மீது செலுத்தினான். அவர் போலீஸ் ஹெட் கான்ஸ்டபில் வேலையில் இருந்ததைவிட, அப்போது மிகுந்த செழுமையும் மேனியும் அழகும் பெற்று, நல்ல ஸ்திதியில் இருக்கிறார் என்பது நன்றாகத் தெரிந்தது. அவருக்கு உண்மையில் சுமார் முப்பது வயதாயிருந்ததாயினும், அவர் மீசை இல்லாமல் இருந்தமையால், அவரது முகம் மிகுந்த இளமையைக் காட்டியது. ஆனால், அவருடைய குரல் மாத்திரம் அவனுக்கு அதிகப் பழக்க மானதாகத் தோன்றியது. தான் அவரை சமீப காலத்தில் எந்த இடத்திலும் பார்க்கவில்லையே. அப்படி இருக்க, அவரது குரல் அவ்வளவு பழக்கமானதாக இருக்கிறதே என்று அவன் நினைத்து நினைத்துப் பார்த்தான். அவரை ஒரு வருஷ காலத்திற்குள் தான் எவ்விடத்திலும் பார்த்ததாகத் தோன்றவில்லை. ஆனால், அவன் அன்று காலையில் சந்தித்த அப்துல்கணி ராவுத்தருடைய குரலுக்கும், சுந்தரம் பிள்ளையினுடைய குரலுக்கும் சிறிது ஒற்றுமை இருப்பதாக, அவனது மனதில் ஒரு நினைவு உண்டா யிற்று. அதனாலே தான் சுந்தரம் பிள்ளையின் குரல் தனக்குப் பழக்கமான குரலாக இருக்கிறதென்று மோகனரங்கன் நினைத்து ஒருவாறு திருப்தி அடைந்தவனாக இருக்க, அதற்குள் தமது கடிதத்தை எழுதி முடித்த சுந்தரம் பிள்ளை அதை மோகன ரங்கனிடத்தில் கொடுத்து, ராஜாயின் காதில் விழும்படி படிக்கச் சொல்ல மோகனரங்கன் அதைப் படித்தான். அந்தக் கடிதம் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

மாரமங்கலம் ஜெமீந்தாரிணியம்மாள் அவர்களுக்கு,

மோகனரங்கன் செங்கல்பட்டுக்குப் போகவில்லை. அவன் துரைஸானியம்மாளை எப்படியும் உங்களுடைய பங்களாவி லிருந்து அழைத்துப் போய், நாளைய தினம் இரவு ஒன்பது மணிக்குள் அவளுக்குத் தாலிகட்டத் தீர்மானித்து விட்டான். நீங்கள் எவ்விதமான பக்கபலத்தோடு இருந்தாலும், அவனுடைய எண்ணம் நிறைவேறாமல் தடுக்க அந்த ஈசுவரனாலும் முடியாது; நீங்களும் கூட இருந்து சந்தோஷமாக இந்தக் கலியாணத்தை முடித்து வைக்க விருப்பமா, அல்லது, உங்களுடைய தகவலின்றி இந்தக் காரியம் நடக்க விருப்பமா, என்பதை உடனே ஒரு கடிதத்தில் எழுதி, நாளை சாயுங்காலம் சரியாக ஆறு மணிக்கு உங்களுடைய பங்களாவில் வாசலில் உள்ள தபாற் பெட்டி யண்டையில் வந்து நிற்கும் மனிதரிடத்தில் கொடுத்தனுப்பினால், காரியம் அதன்படி நிறைவேறும். கடிதம் கொடுக்காவிட்டால், நீங்கள் கலியாணத்திற்கு வர விரும்பவில்லை என்று நினைத்துக் கொள்ளுவான்.

இப்படிக்கு தங்கள் விதேயன்,
நக்ஷத்திரத் தரகன்.

—என்று எழுதப்பட்ட கடிதத்தைப் படித்து முடித்த மோகனரங்கன் திகைப்பும் வியப்பும் அடைந்து தனது அத்தானுக்கு ஒருகால் புத்தி ஸ்வாதீனத்தில் இல்லையோ என்று நினைத்தவனாய், திக்பிரமை கொண்டு மௌனமாக நிற்க, அவனது கையிலிருந்த கடிதத்தை வாங்கிய ராஜாயி அம்மாள், அதை உறைக்குள் போட்டு, அரையணாத் தபால் தலை ஒட்டி, கன்னியம்மாளை அழைத்து, அதை உடனே கொண்டு போய் தபால் பெட்டியில் போட்டுவிட்டு வரும்படி கொடுத்தனுப்ப, அவள், அதை வாங்கிக் கொண்டு வாசலுக்குப் போய்விட்டாள். தனது அத்தான் தன்னிடத்தில் பரிகாசம் செய்கிறார் என்று அதுகாறும் நினைத்த மோகனரங்கன், தனது அக்காளும் அதற்கு அனுசரணையாக நடந்து அதை உண்மையிலேயே தபால் பெட்டியில் போடச் சொன்னதைக் கண்டு அப்படியே ஸ்தம்பித்து நின்றான்.

★ ★ ★

23–வது அதிகாரம்

## துன்ப மூட்டை

துரைராஜா மதனகோபாலனது வீட்டிலிருந்த மோகனாங்கியைக் கண்ட நிமிஷம் முதல் அன்றைய இரவு முழுதும் அவளைப் பற்றியே தியானம் செய்தவனாகத் தனது கண்ணிமைகளை மூடாமல் இரவு முழுதும் மிகுந்த வாதனையில் ஆழ்ந்து கிடந்தான். அந்த அதியற்புத சுந்தர மடந்தையின் ஜெகஜ்ஜோதி யான வடிவம் மின்னல் தோன்றி மறைவது போல, ஒரு நிமிஷ நேரம் அவனது சிருஷ்டியில் பட்டு மறைந்து போனது முதல், அந்த வடிவம் புகைப்படம் போல அவனது மனதில் பதிந்து போகவே, இளஞ் சூரியனைக் கண்ட கண்களுக்கு, கண்ட கண்ட இடத்திலெல்லாம் எண்ணிறந்த சூரிய வட்டங்களே நிறைந்து தோன்றுதல் போல, துரைராஜாவின் அகக்கண்ணில் மோகனாங்கியின் வசீகர ரூபமே நின்று, அவன் பார்த்த இடத்திலெல்லாம் நிறைந்து ஆனந்த நடனம் புரிந்தது. அவளது மையலில் ஆழ்ந்து மதிமயங்கி, அறிவிழந்து தன்னையும் உலகையும் மறந்து, ஏக்கமும் சோர்வும் அடைந்து, தத்தளித்துக் கிடந்த துரைராஜா, மறுநாட் பகலில் ஒரு மணிக்குத் தனது பங்களாவிற்கு வருவதாக வாக்களித்திருந்த பசவண்ண செட்டியாரிடத்தில் அவளது வரலாறுகளை எல்லாம் கேட்டறிந்து, எப்பாடு பட்டாயினும் தான் அவளது நட்பை அடைய வேண்டும் என்ற உறுதி செய்து கொண்டு, எப்போது பொழுது விடியும் என்றும், எப்போது பகல் வேளை வரும் என்றும் தியானம் செய்து விரக வேதனையால் உயிரழிந்து கிடந்தான். அன்றைய இரவுப் பொழுதும், அவனை வதைக்க வேண்டும் என்று நீளுவது போல, மிகவும் பெருகி வளர்ந்து கொண்டிருப்பதாகவே தோன்றியது; கடைசியில் பொழுது விடிந்தது. அவனது உடம்பு எழுந்திருக்க மாட்டாமல் மிகுந்த தளர்வடைந்திருந்த தானாலும், அதற்கு மேல், சயனத்தில் இருப்பது நெருப்பின் மேல் கிடப்பது போல இருந்த மையால், துரைராஜா எழுந்து தனது காலைக்கடன் களை எல்லாம் முடித்துக் கொண்டு, திரும்பவும் தனது சயனக் கிரகத்தை அடைந்து, ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான். பக்கத்திலிருந்த மேஜையின் மேலே கிடந்த நாவல் புஸ்தகங்களுள்

ஏதாகிலும் ஒன்றை எடுத்து வைத்துக் கொண்டு படித்தால், தனது நினைவு அந்த நாவலின் விஷயத்திற் செல்வதால், மோகனாங்கி யின் நினைவும் வாதனைகளும் சிறிது நேரமாகிலும் மறைந் திருக்குமோ என்ற எண்ணத்தினால் தூண்டப்பட்டவனாய், அந்த யௌவனப் புருஷன், ஒரு நாவலை எடுக்க முயல, அது விஷம் போலத் தோன்றியதாகையால், அவனது கையே அதை எடுக்க மாட்டாமல் பின் வாங்கியது.

அவன் அப்படிப்பட்ட பரிதாபகரமான நிலைமையிலிருக்க, காலையில் மணி ஏழரை ஆயிற்று. அப்போது ஒரு வேலைக்காரன் அங்கே வந்து, "எஜமானே! மாரமங்கலம் மைனர் துரை ஒரு கடிதத்தையும் ஒரு மூட்டையையும் ஒரு வேலைக்காரியினிடத் தில் கொடுத்து அனுப்பி இருக்கிறார். அவள் இதோ வாசலில் வந்து நிற்கிறாள். அவைகளை எல்லாம், அவளே நேரில் கொண்டு வந்து உங்களிடத்தில் கொடுக்க வேண்டுமாம்" என்றான். அதைக் கேட்ட துரைராஜா, குடிவெறியிலிருந்து தெளிவிக்கப்பட்டவன் போலவும், தூக்கத்திலிருந்து விழிப்பிக்கப்படுபவன் போலவும், மோகனாங்கியின் ஜெபத்தைவிட்டு, அவன் தனது நினைவை மாற்றி சேவகன் சொன்ன விஷயத்தில் அதைச் செலுத்தினான். மாரமங்கலம் மைனர் தனக்கு எவ்விதமான மூட்டையை அனுப்பி இருக்கப் போகிறான் என்ற வியப்பும், ஆவலும், பலவகையான யூகங்களும் உண்டாயின. அந்த வேலைக்காரியை உள்ளே அழைத்து வரும்படி அவன் வேலைக்காரனிடத்தில் உடனே உத்தரவு செய்ய, அவன் உடனே வெளியில் போய் இரண்டொரு நிமிஷத்தில் அந்த வேலைக்காரியும் அழைத்துக் கொண்டு உள்ளே வந்து துரைராஜாவின் எதிரில் நின்றான். அவனோடு வந்த வேலைக்காரி மிகுந்த வணக்க வொடுக்கத்தோடு துரை ராஜாவினண்டையில் நெருங்கி, தனது கையில் வைத்துக் கொண்டிருந்த ஒரு கடிதத்தையும், ஒரு சிறிய மூட்டையையும் மேஜையின் மீது வைத்துவிட்டு, சற்றுதூரத்தில் ஒதுங்கி மரியாதை யாக நின்றாள்.

அதைக் கண்ட துரைராஜா அவளை நோக்கி, "இவைகளை யார் கொடுத்தனுப்பியது" என்றான்.

வேலைக்காரி, "மாரமங்கலத்து மைனரு தொரெ குடுத்தாங்க" என்றாள்.

*துரைராஜா:-* அவர் இப்போது எங்கே இருக்கிறார்?

*வேலைக்காரி:-* மைலாப்பூருலே வாலாம்பா அம்மாளோடே வங்களாவுலே இருக்காங்க. அங்கனே யிருந்துதான், நான் இப்ப வாரது.

*துரைராஜா:-* (முன்னிலும் அதிகமான வியப்படைந்து) அப்படி யானால், நீ அந்த பாலாம்பாளுடைய வேலைக்காரியா!

*வேலைக்காரி:-* இல்லீங்க; நான் இங்ஙனே மாரமங்கலத்து வங்களாவுலே இருக்கிற வேலைக்காரி. தொரெஸானியம்மா என்னே ஒரு சோலியா மைனருக்கிட்ட அனுப்பிச்சாங்க; நான் இன்னெக்கிக் காத்தாலே தான் அங்கனெ போனேன். அவுங்க இதுங்களை எல்லாம் ஒங்ககிட்ட குடுத்துப்புட்டுப் போவச் சொல்லி என்னெ அனுப்பிச்சாங்க.

*துரைராஜா:-* இந்த முட்டையிலே என்ன இருக்கிறதென்பது உனக்குத் தெரியுமா?

*வேலைக்காரி:-* தெரியாதுங்க.

*துரைராஜா:-* உன்னுடைய பெயரென்ன?

*வேலைக்காரி:-* என்னொடெ பேரு குப்பம்மா.

*துரைராஜா:-* துரைஸானியம்மாள் உன்னை ஏதோ அலுவலாக, மைனரிடத்தில் அனுப்பினதாகச் சொன்னாயே; அது என்ன அலுவல்.

*வேலைக்காரி:-* அவுங்க ஒரு கடுதாசி குடுத்து அனுப்பிச்சாங்க, அது என்ன சங்கதீயின்னு தெரியாதுங்க - என்றாள்.

அதைக் கேட்ட துரைராஜா, அங்கே நின்ற வேலைக்காரனை உடனே வெளியில் அனுப்பிவிட்டு, மைனரால் எழுதப்பட்டிருந்த கடிதத்தை எடுத்துப் பிரித்துத் தன் மனதிற்குள்ளாகவே படித்துக் கொண்டான். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

என்னுடைய ஆருயிர் நண்பனான துரைராஜாவுக்கு, மாரமங் கலம் மைனர் – துரை எழுதுவது. உபய க்ஷேமம்.

என்னுடைய கண்மணியான பாலாம்பாள் போன்ற அரிய மாணிக்கத்தை நான் இதுவரையில் கண்டதே இல்லை; அழகிலும், குணத்திலும், புத்திசாலித் தனத்திலும், என் மனசுக் கியைந்தபடி நடந்து கொள்ளும் நாயக வாத்சல்யத்திலும், கனவிலும் பிறனை நினைக்காத பதிவிரதா குணத்திலும், அவளுக்கிணை வேறே பெண் இந்த ஈரேழு பதினான்கு லோகங்களிலும் இருக்க மாட்டாள் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை. என்னை விட்டு ஒரு நொடி நேரம் பிரிந்திருக்க அவளும் சகிக்கமாட்டாள்; எனக்கும் அவளை விட்டுப் பிரிந்து ஓர் இமைப் பொழுதும் இருக்க முடியவில்லை. இனி நான் வாழ்ந்தாலும் இவளை ஆசை நாயகியாக வைத்துக் கொண்டுதான் வாழ்வது; இறந்தாலும் இவளுடைய மடியின் மேல் தலையை வைத்தே உயிரை விடுவது. இவள் அவ்வளவு தூரம் என் ஆசையையும் உயிரையும் கொள்ளை கொண்டு விட்டாள்.

இது நிற்க, நேற்று காலையில் நான் இங்கே வருவதற்கு முன் என்னுடைய அம்மாளிடத்தில் பேசிக் கொண்டிருந்து பணம் வாங்கிக் கொண்டு வந்தேன்; நான் பாலாம்பாளுக்கு எழுதிக் கொடுத்திருக்கிற பத்திரத்தை அவளுக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டு, வந்துவிடவும், பாலாம்பாளுடைய நட்பை இவ்வள வோடு நிறுத்திக் கொள்ளவும், அவர்கள் என்னிடத்தில் சொன்னார் கள். நான் அதற்கு இணங்காமல் பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்து கொடுத்து விடுவேன் என்று பயமுறுத்தினேன். அவர்கள் உடனே படிமானத்துக்கு வந்ததன்றி பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்ய வேண்டாம் என்றும், என் மனம் திருப்தியாகும் வரையில் இப்போது இருப்பது போலவே அவளிடத்தில் நட்பாக இருந்து வரலாம் என்றும் சொன்னார்கள். அவர்கள் மனப்பூர்வமாக அப்படிச் சொன்னார்களா, அல்லது கபடமாக அப்படிச் சொன் னார்களா என்ற சந்தேகம் என் மனசில் இருந்து வந்தது; இன்று காலையில் எனக்குத் தேனாம்பேட்டையிலிருந்து செய்தி கிடைத் திருப்பதைப் பார்க்க, அவர்கள் கபட்டுத் தனமாகவே, அவ்வாறு

பேசினார்கள் என்பது நிச்சயமாகி விட்டது; நான்று நேற்று அங்கே இருந்து வந்தவுடனே அவர்கள் என்ன செய்தார்களாம்; உடனே அவர்களுடைய துர்மந்திரியான பொன்னம்மாளைப் பிடித்து ஆலந்தூருக்கு அனுப்பினார்களாம்; அம்பட்டக் கருப்பாயியை அழைத்துக் கொண்டு வரச் சொன்னார்களாம்; இன்றைய இரவுக் குள் அவளாவது கட்டையன் குறவனாவது வந்து பாலாம்பா ளுடைய பங்களாவுக்குள் நுழைந்து அந்தப் பத்திரத்தை அபகரித்துக் கொண்டு வந்து கொடுத்துவிட வேண்டும் என்று அவளிடத்தில் முடிவு கட்டி அதற்காக ஏராளமான பணம் கொடுத் திருக்கிறார்களாம். என்னுடைய தாயார் என் விஷயத்தில் இப்படிப் பட்ட இரண்டகம் செய்திருப்பதைக் கேட்க, என் மனம் பதறுகிறது; என் உடம்பு துடிக்கிறது; நல்ல வேளையாக, இந்த விஷயம் எனக்குச் சரியான காலத்தில் எட்டியது; அவர்கள் இந்தக் கட்டையன் குறவனேயன்றி அந்த ஈசுவரனையே அனுப்பி னாலும் அவர்களுடைய கெட்ட எண்ணம் நிறைவேறாதபடி தடுத்துவிட ஏற்பாடு செய்திருக்கிறேன். நான் அனுபவிக்கும் பரமானந்த சுகத்தைக் கெடுக்க எத்தனிக்கும் மனிதர் எவராக இருந்தாலும், அவர்கள் எனக்குத் தீராப் பகைவர்கள் தான்; அவர்களுக்கு நான் என்னாலான தீங்கைச் செய்தே தீருவேன்.

நேற்று காலையில் நான் என்னுடைய அம்மாளிடத்தில் பேசி விட்டு வரும் போது, தெய்வச் செயலாக இன்னொரு புதிய விஷயம் எனக்குத் தெரிந்தது. அந்த விஷயத்தைக் காண, அப்படியும் நடக்குமா என்ற வியப்பும் திகைப்பும் என் மனசில் குடிகொண்டன. பாலாம்பாளுக்கு, விலையுயர்ந்த நல்ல சேலை களும், ரவிக்கைகளும் கொணர்ந்து கொடுக்க வேண்டும் என்று இரண்டொரு நாளாக என் மனசில் ஆசை உண்டாயிற்று; ஒவ்வொன்றும் ஆயிரம், இரண்டாயிரம் ரூபாய் பெறக்கூடிய எண்ணிறந்த சேலைகள், அம்மாளுடைய உடுப்புப் பெட்டிகளில் இருக்கின்றன; அவைகளில் முதல் தரமானவைகளை எல்லாம் எடுத்துக் கொண்டு வந்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு நான் உடுப்புப் பெட்டிகளிருந்த அறைக்குள் நுழைந்து முன்னாகவே நான் தந்திரமாக அபகரித்து வைத்துக் கொண்டிருந்த திறவுகோல்களை எடுத்துப் பெட்டிகளை எல்லாம் திறந்து எனக்கு

வேண்டியவைகளை எல்லாம் எடுத்துக் கொண்டிருந்த போது, ஒரு பெட்டியினடியில் காகிதத்தால் மிகவும் ஜாக்கிரதையாகக் கட்டி வைக்கப்பட்டிருந்த ஒரு துணி மூட்டையைக் கண்ட வுடனே, அதைப் பிரித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் என் மனசில் உண்டாயிற்று. நான் அதை உடனே எடுத்துப் பிரித்துப் பார்க்கிறேன்! ஆகா! அதை என்னவென்று சொல்லுவேன்! நான் என்னுடைய கண்களையே நம்பவில்லை. அந்த மூட்டைக்குள் வெள்ளைக்கார துரைஸானி அணிந்து கொள்ளக்கூடிய உடைகள் ஒரு ஜோடிப்பு இருந்தன. நான் ஒவ்வொன்றாக எடுத்துப் பிரித்துப் பார்த்தேன். பார்க்கு பேர் (Park Fair) தினத்தன்று, ரகசியமாகவும், பெயரை மறைத்தும் உனக்குக் கடிதம் எழுதி, அதன்படி வந்து உன்னோடு பேசிக் கொண்டிருந்த அந்தப் பெண் அணிந்திருந்த உடைகள் எல்லாம் அப்படியே இருந்தன. அந்த உடைகள் எல்லாம் அம்மாளுடைய பெட்டிக்குள் இருக்க வேண்டிய காரணம் என்ன என்பதை நான் நேற்று முழுதும் யோசித்து யோசித்துப் பார்த்தேன். ஒன்றும் விளங்கவில்லை. ஆனால், அந்த விஷயத்தில் என்னுடைய அம்மாளும் எந்த விதத்திலோ சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. அவர்கள் என் விஷயத்தில் இதுவரையில் எவ்வளவோ கொடுமையாக நடந்திருந்தாலும், அவர்களைக் காட்டிக் கொடுக்கக்கூடாது என்ற தயாள நினைவினால், நான், அந்த உடைகளைக் கண்ட விவரத்தை எல்லாம் வேறே எவரிடத்திலும் சொல்லாமல் இதுவரையில் மறைத்து வைத்திருந்தேன். அவர்கள் பத்திர விஷயத்தில் செய்ய நினைத்திருக்கும் தீங்கைப் பற்றி இன்று காலையில் கேள்விப்பட்ட பிறகு, அவர்களுடைய எண்ணத்தில் மண்ணைப் போடுவதோடு, இன்னமும் என்னால் ஈன்ற தீங்கை அவர்களுக்கு நான் உடனே செய்து தீரவேண்டும் என்ற ஒரு கொதிப்பும் என் மனசில் உண்டாகி விட்டது. ஆகையால் நான் அந்த வெள்ளைக்கார உடைகளை எல்லாம் மூட்டையாகக் கட்டி, இந்த வேலைக்காரியிடம் கொடுத்து உன்னிடத்துக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன். உன் மனசை மயக்கிய போலி வெள்ளைக் காரி யார் எனபதை அறியமாட்டாமல் நீ தவித்திருப்பவன் ஆகையால், இந்த உடைகளின் உதவியாலும், உனக்கு வந்த

இரண்டு கடிதங்களைக் கொண்டும், இந்த உடைகள் எங்களுடைய பங்களாவில் இருந்ததென்ற விஷயத்தைக் கொண்டும், அந்த ஸ்திரீ யார் என்பதை அறிந்து கொள்ளலாம். இந்த விஷயத்தினால், என்னுடைய அம்மாளுக்கு எவ்வித இழிவும் அவமானமும் நேருவதானாலும், அது எனக்குச் சம்மதமானதே. இது சம்பந்தமாக நீ தக்க முயற்சி செய்து, என்னுடைய அம்மாளை நன்றாக அவமானப்படுத்தி, ஊரார் சிரிக்கும்படி செய்தால், என் மனம் நிரம்பவும் குளிரும்.

இது நிற்க, இன்னொரு சந்தோஷ சங்கதி என்னவென்றால், நான் உன்னைப் பற்றி பாலாம்பாளிடத்தில் மிகவும் புகழ்ச்சியாகப் பேசி இருக்கிறேன். நீ என்னுடைய ஆருயிர் நண்பன் என்றும், உன்னை மாத்திரம் நான் அடிக்கடி இந்த பங்களாவுக்கு அழைத்துக் கொண்டு வருவதற்கு அவள் ஆட்சேபனை சொல்லாமலிருக்க வேண்டும் என்றும் சொன்னேன்; அவள் அதற்கு முழுமனதோடு சம்மதித்து விட்டாள். ஆகையால் நீ எந்த நேரத்திலும், இங்கே வந்து எங்களோடு சந்தோஷமாக இருந்து விட்டுப் போகலாம். நான் இந்த இடத்தைவிட்டு, உன்னுடைய பங்களாவுக்கு முன் போல அடிக்கடி வர சௌகரியப்படாது. ஆகையால், நீ தான் வந்து போய்க் கொண்டிருக்க வேண்டும். மோகனாங்கி எங்கே இருக்கிறாள் என்ற விஷயத்தை நான் இப்போது பாலாம்பா ளிடத்தில் கேட்டால், இவள் என் மேல் ஏதாவது சந்தேகங் கொண்டு விடுவாளோ என்கிற பயம் என் மனசிலிருக்கிறதாகை யால், நான் இவளிடத்தில் அதைப்பற்றி கேட்கத் தயங்குகிறேன். நீ இங்கே வந்து இரண்டொரு நாள் பழகிய பிறகு அந்த விவரம் உனக்குத் தேவை என்று சொல்லி இவளிடத்தில் இருந்து உண்மையை சுலபத்தில் கிரகித்து விடலாம்; ஆகையால் அந்த விஷயத்தில் உனக்கு இனி எவ்விதமான கவலையும் வேண்டிய தில்லை.

வேறே விசேஷம் ஒன்றுமில்லை.

**இங்ஙனம்,**

**ஆருயிர் நண்பன்,**

***மாரமங்கலம்–துரை.***

—என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைத் தனக்குள்ளாகவே படித்துக் கொண்ட துரைராஜா மிகுந்த திகைப்பும் வியப்பும் கொண்டான் ஆனாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், எதிரில் நின்று கொண்டிருந்த குப்பம்மாளை நோக்கி, "சரி; நி போகலாம்" என்றான்.

உடனே குப்பம்மாள் வணங்கி உத்தரவு பெற்றுக் கொண்டவளாய் வெளியே போய்விட்டாள்.

உடனே துரைராஜா மேஜையின் மீதிருந்த காகித மூட்டையை எடுத்து அதன்மேல் கட்டப்பட்டிருந்த கயிறுகளையும், அரக்கு முத்திரைகளையும் விலக்கிவிட்டு, காகிதங்களை எல்லாம் பிரிக்கவே, உட்புறத்தில் வெள்ளைக்காரியின் உடைகள் தென் பட்டன; அவன் அவற்றை எல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துப் பிரித்துப் பார்க்க, அவைகள் துரையம்மாள் என்ற பொய்ப் பெயர் கொண்டு வந்து, பார்க் உத்தியான வனத்தில் தன்னோடு பேசி விட்டுப் போன பெண்ணினால் அணிந்து கொள்ளப்பட்டிருந்த உடைகளே என்பது சந்தேகமற நிச்சயமாக விளங்கியது. உடனே அவன் அவைகளை எல்லாம் முன்போலவே மடித்து வைத்து, காகிதங்களாலும் கயிற்றினாலும் மூட்டையாகக் கட்டி, அதை எடுத்து ஒரு பெட்டிக்குள் பத்திரமாக வைத்துப் பூட்டிய பின், முன் போல உட்கார்ந்து கொண்டான். கால் நாழிகை நேரம் வரையில், அவனது மனம் தெளிவுபடாமல் மிகவும் குழம்பி இருந்தமையால், அவன் ஸ்தம்பித்துப் போய் அப்படியே உட்கார்ந்திருந்தான். முதல் நாளைய இரவிலிருந்து அவனை வதைத்து வாட்டிக் கொண்டிருந்த மோகனாங்கியின் நினைவு முழுதும் சடக்கென்று மாறிப் போயிற்று; தன்னை பார்க் உத்தியான வனத்தில் சந்தித்தவள் யாராய் இருப்பாள் என்ற சந்தேகமே, மனதிலெழுந்து வருத்தத் தொடங்கியது, அவளால் எழுதப்பட்ட இரண்டு கடிதங்களிலிருந்த அற்புதமான விஷயங் களும், அவளது அபூர்வமான சம்பாஷணையும் அவனுக்கு மிகவும் புதுமையாகவும் எங்கும் நடக்காத அசம்பாவித சங்கதிகளாகவும் இருந்தன. அந்த உடைகள் மாரமங்கலம் கல்யாணியம்மாள் பெட்டிக்குள் இருந்த விஷயமே, அவனுக்கு அதிவிந்தையாக இருந்தது. வெள்ளைக்காரி போல வேஷந்தரித்து வந்த

பெண்ணிற்கும் வீணை வித்துவான் மதன கோபாலனுக்கு ஏதோ காரணம் பற்றி பகைமை இருந்ததனால், அதைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டே அந்தப் பெண் தனது உதவியை நாடினாள் என்ற விஷயம் அவனுக்கு ஒருவாறாகத் தெளிவாயிற்று; ஆனால், மாரமங்கலத்தாரது பங்களாவில், மதன கோபாலன் கல்யாணியம்மாளிடத்தில் விபரீதமாக நடந்து கொண்டான் என்ற விஷயமும், அதனால், பெரிய மனிதர்கள் எல்லோரும் அவனை விலக்கிவிட்டார்கள் என்ற விஷயமும் அவனுக்குத் தெரிந்தவை ஆதலால், அதற்கும் இதற்கும் சம்பந்தமிருக்குமோ என்ற சந்தேகம் எழுந்து மதனகோபாலன் கல்யாணியம்மாளிடத்தில் தாறுமாறாக நடந்து கொண்ட விஷயத்தில், அவனை, நேரான வழியில், தக்கபடி தண்டிப்பதற்கு நினைப்பதே மனித இயற்கை யன்றி, அவ்வாறு சுற்று வழியாகத் தண்டிக்க முயன்ற விஷயம் சந்தேகத்திற்கிடமான தெனத் தோன்றியது. ஆகவே, கல்யாணி யம்மாள் அந்த விஷயத்தில் சம்பந்தப்பட்டிருப்பாளோ என்ற பெருத்த சந்தேகம் அவனது மனதில் எழுந்தது; அதனால், அவன் ஒரு நாழிகை நேரம் வரையில் சிந்தனையில் ஆழ்ந்து கிடந்து அதன் பிறகு எதையோ நினைத்துக் கொண்டவன் போல சடக்கென்று எழுந்து, வெள்ளைக்கார உடைகளை வைத்த பெட்டியைத் திறந்து, அந்த மூட்டையை வெளியிலே எடுத்து அதைப் பிரித்து உடைகளை எல்லாம் ஒவ்வொன்றாக எடுத்து மிகவும் கூர்மையாக உற்று நோக்கினான். மார்பின் மீது அணிந்து கொள்ளும் கௌன் என்ற ஆடையில் கழுத்தைச் சுற்றிலுள்ள பாகத்தின் ஒரு மூலையில் அச்சியற்றப்பட்ட ஒரு துண்டுத் துணி வைத்து தைக்கப்பட்டிருக்கக் கண்டான்; அந்த உடைகள் மவுண்டு ரோட்டிலுள்ள ரென் பென்னெட் (Wrenn Bennet) கம்பெனியாரால் தைத்து விற்கப்பட்டதென்ற எழுத்துக்களும் 9769 என்ற இலக்கமும் அங்கே காணப்பட்டன; அந்த விவரத்தைக் காணவே, அவன் சிறிதளவு சந்தோஷமும், நம்பிக்கையும் அடைந்தவனாய், திரும்பவும் உடைகளை எல்லாம் காகிதத்தில் வைத்து வெளியில் தெரியாதபடி மூட்டை யாகக் கட்டி, வைத்துக்கொண்டு வேலைக்காரனை அழைத்து, ஸாரட்டு வண்டியைப் பூட்டத் தயாராக வைக்கும்படி உத்தரவு செய்து அவனை அனுப்பிவிட்டு, நல்ல உடைகளாக எடுத்து அணிந்து

கொண்டு, துரையம்மாளால் எழுதப்பட்ட இரண்டு கடிதங்களையும் அவளால் அனுப்பப்பட்ட வைரப் பதக்கத்தை யும், இப்போது மாரமங்கலம் மைனரால் எழுதப்பட்டிருந்த கடிதத்தையும் எடுத்து சட்டையின் உள்புறப் பையில் ஜாக்கிரதை யாக வைத்துக்கொண்டு காகித மூட்டையைக் கையில் பிடித்தவனாய் வெளியில் வந்தான். அதற்குள் பங்களாவின் வாசலில், அவனது ஸாரட்டு வண்டி ஆயத்தமாக நிறுத்தப் பட்டிருந்தது; அவன் உடனே அதற்குள் ஏறி உட்கார்ந்து கொண்டு, மவுண்டு ரோட்டில் உள்ள ரென் பென்னெட் என்ற வெள்ளைக்காரர் கம்பெனிக்கு ஓட்டும்படி சாரதியிடத்தில் கூற, அவன் அவ்வாறே ஓட்டத் தொடங்கினான். அரை நாழிகை நேரத்தில் வண்டி அந்தக் கம்பெனியின் வாசலில் வந்து நின்றது; துரைராஜா வண்டியை விட்டுக் கீழே இறங்கி, காகித மூட்டையை எடுத்துக் கொண்டு கம்பெனிக்குள் நுழைந்து, அதன் மானேஜரைக் கண்டு சலாம் செய்து, "ஐயா! நான் நேற்று ராத்திரி மவுண்டு ரோட்டின் வழியாக, தேனாம்பேட்டையில் உள்ள என்னுடைய பங்களாவுக்குப் போய்க் கொண்டிருந்த போது, இந்த மூட்டை வழியிலே கிடந்து அகப்பட்டது. இதை நான் எடுத்துக் கொண்டு போய் என்னுடைய பங்களாவில் பிரித்துப் பார்த்தேன். இதற்குள் வெள்ளைக்கார ஸ்திரீ தரித்துக் கொள்ளத் தேவையான ஒரு ஜோடிப்பு உடைகள் இருக்கின்றன. கௌன் என்ற உடையின் கழுத்துப் பக்கத்தில் உங்களுடைய கம்பெனியின் பெயரும், ஏதோ ஒரு இலக்கமும் இருக்கின்றன. ஆகையால், இவைகளை இங்கே கொண்டு வந்தால் கணக்கைப் பார்த்து, இவைகள் யாருக்கு விற்கப்பட்டன என்பதை அறிந்து கொண்டு, அவரிடத்துக்கு அனுப்பிவிடலாம் என்ற எண்ணத் தோடு நான் நேராக இங்கு வந்தேன். தங்களுக்கு சிரமம் கொடுக்க நேர்ந்ததைப் பற்றி வருந்துகிறேன்; விஷயம் பரோபகாரமானது ஆகையால் நீங்கள் என்மேல் ஆயாசப்பட மாட்டீர்கள் என்று நினைத்து உங்களைக் கேட்கத் துணிந்தேன். மன்னிக்க வேண்டும்" என்று நயமாகப் பேச, அதைக் கேட்ட மானேஜர் சந்தோஷமும் உற்சாகமும் அடைந்தவராய் ஒரு நாற்காலியைக் காட்டி, அதன்மேல் உட்கார்ந்து கொள்ளும்படி துரைராஜாவை மரியாதை யாக உபசரித்தபின் அவன் கொணர்ந்திருந்த காகித மூட்டையை வாங்கிப் பிரித்து, அதற்குள் இருந்த மார்பங்கியை எடுத்து, அதன்

கழுத்துப் பக்கத்தில் காணப்பட்ட விலாசத்தைக் கவனித்துப் பார்த்தவுடனே, சற்று தூரத்தில் உட்கார்ந்திருந்த ஒரு குமாஸ்தாவை அழைத்து, அவரிடத்தில் அந்த மார்பங்கியைக் கொடுத்து, அது யாருக்கு விற்கப்பட்டதென்ற விவரத்தை அறிந்து வரும்படி கூற, அவர் உடனே தமது மேஜைக்குப் போய், அங்கே வைக்கப் பட்டிருந்த கணக்குப் புஸ்தகங்களைப் பரிசோதனை செய்து வந்து, அந்த ஜோடிப்பு உடைகள் தேனாம்பேட்டையில் உள்ள மாரமங்கலம் ஜெமீந்தாரிணி அம்மாளுக்கு வேண்டும் என்று அந்த அம்மாளுடைய குமாஸ்தா ஒருவர் வந்து, அளவுகள் கொடுத்து, முந்திய வாரத்தில் வாங்கிக் கொண்டு போனதாகச் சொன்னார்; அதைக் கேட்ட துரைராஜா புன்னகையும், சந்தோஷமும் அரும்பிய முகத்தோடு, அந்த குமாஸ்தாவை நோக்கி, "ஓகோ! அப்படியா? அவர்கள் எங்களுடைய நெருங்கிய பந்துக்கள்தான்; நல்ல வேளையாக, இது என்னிடத்தில் அகப்பட்டதே; இதை வாங்கிக் கொண்டு போன குமாஸ்தாவின் பெயர் என்ன வென்பது தெரிகிறதா?" என்று நயமாகக் கேட்க, அந்த குமாஸ்தா, "தெரியவில்லை; அவர் எஜமானியம்மாளுடைய எழுத்து மூலமான உத்தரவைக் கொடுத்தார்; அவற்றின் விலை 200-ரூபாய் ஆகும் என்றோம்; அவர் உடனே பணத்தைக் கொடுத்து வாங்கிக் கொண்டு போனார். அவருடைய பெயரைக் கேட்க வேண்டிய சந்தர்ப்பமே ஏற்படவில்லை" என்றார்; அதைக் கேட்ட துரைராஜா, "சரி; பரவாயில்லை. அவர் யாராய் இருந்தால் என்ன; இவைகள் சொந்தக்காரரிடத்தில் சேர வேண்டியதொன்றே முக்கியமானது. மானேஜர்வாள்! நான் உத்தரவு வாங்கிக் கொள்ளுகிறேன். சிரமம் கொடுத்ததற்கு மன்னிக்க வேண்டும்; சலாம்" என்று நயமாகவும் நன்றியறிதலோடும் கூறிய வண்ணம் நாற்காலியை விட்டு எழுந்திருக்க, மானேஜரும் அவனுக்கு உபசார வார்த்தைகள் கூறி விடை கொடுத்தனுப்பினார்.

அங்கே இருந்து புறப்பட்ட துரைராஜா வெளியிலே வந்து, தனது ஸாரட்டின் மேலேறி உட்கார்ந்து கொண்டு, தேனாம்பேட் டையில் உள்ள மாரமங்கலத்தாரது பங்களாவிற்கு ஓட்டும்படி உத்தரவு செய்தான்; அவ்வாறே வண்டி அரை நாழிகை நேரத்தில் தேனாம்பேட்டைக்குப் போய், மாரமங்கலத்தாரது பங்களாவின் வாசலில் நின்றது; உடனே கீழே இறங்கிய துரைராஜா உடைகள்

இருந்த மூட்டையை சாரதி இடத்தில் கொடுத்து, தான் உள்ளே போய் விட்டு வருகிற வரையில் அதை வைத்துக் கொண்டிருக்கும் படி சொல்லி விட்டு உள்ளே நுழைந்தான்; அவன் அந்த பங்களா விற்கு அடிக்கடி வந்தவனன்று; ஆனால், அவன் மைனரது நண்பன் என்பது பற்றி, எப்போதாகிலும், இரண்டொருமாத காலத்திற்கு ஒரு முறை அவனோடு கூடவோ, அல்லது, அவனைப் பார்க்கும் பொருட்டோ வருவது வழக்கம். அவனது தங்கையான கண்மணியம்மாளை மைனர் மணந்து கொள்ளப் போகிறான் என்ற விஷயத்தை அந்த பங்களாவில் இருந்தோர் யாவரும் அறிந்து துரைராஜாவிடத்தில் மிகுந்த மரியாதை வைத்திருந்தவர் ஆதலால், அவனைக் கண்ட வேலைக்காரர்கள், கையெடுத்துக் கும்பிட்டு மிகவும் பிரியத்தோடு வணங்க, துரைராஜா புன்னகையாலும் மகிழ்ச்சியினாலும் மலர்ந்த முகத்தின னாய் அவர்களை நோக்கி, "எஜமானியம்மாளுடைய சமயம் எப்படி இருக்கிறது? நான் உள்ளே போகலாம் அல்லவா?" என்றான். அதைக் கேட்ட ஒரு வேலைக்காரி, "இன்றைய தபாலில் வந்த காகிதங்களை எல்லாம் தபால்காரன் இப்போது தான் கொடுத்து விட்டுப் போனான். அவைகளை எஜமானியம்மாளி டத்தில் கொடுத்துவிட்டு, நான் இப்போது தான் வருகிறேன்; அவர்கள் தபாலைப் படித்துக் கொண்டிருக்கிறார்கள். நான் போய் நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்று சொல்லட்டுமா?" என்று மிகுந்த குதூகலத்தோடு கேட்க, துரைராஜா அதற்கு அனுமதி கொடுக்க, அவள் உடனே ஓட்டமாக ஓடி, இரண்டொரு நிமிஷத்தில் திரும்பி வந்து, "நான் போய்ச் சொன்னேன். வந்த காகிதங்களில் அரைப் பங்கு தான் எஜமானியம்மாள் படித்தார்கள்; இன்னம் அரைப் பங்கு படிக்கப்படவில்லை; நான் சொன்னவுடனே அவர்கள் கொஞ்ச நேரம் யோசனை செய்து விட்டு, உடனே என்னைப் பார்த்து, உங்களை அழைத்தக் கொண்டு வரச் சொன்னார்கள்" என்றாள்.

அதைக் கேட்ட துரைராஜா மிகுந்த சந்தோஷம் அடைந்தான். ஏனெனில், கல்யாணியம்மாள் முன் எச்சரிக்கையாக நடக்க எண்ணி, தன்னைப் பார்க்க அப்போது சமயம் சரிப்படவில்லை என்று சொல்லிவிடுவாளோ என்ற அச்சம் அவனது மனத்தில் இருந்தது; தான் வந்திருப்பதை வேலைக்காரி சொல்ல உணர்ந்து

கொண்டு சிறிது நேரம் யோசனை செய்த பிறகே அழைத்து வரச் சொன்னாள் என்ற விஷயம், சந்தேக ஆஸ்பதமாக இருந்தது. இருந்தாலும், அவன் அதைக் காட்டிக் கொள்ளாமல், கல்யாணி யம்மாளது விசாலமான அழகிய அந்தப்புரத்திற்குள் நுழைந்து, அவளது முகத்தை நோக்கி தனது இயற்கைப்படி புன்னகையும் சந்தோஷமும் தோற்றுவிக்க, அந்த அம்மாள் உடைக்கப்படாமல் தனக்கருகில் கிடந்த சில தபாற் கடிதங்களை எல்லாம் எடுத்து ஒரு பக்கமாக வைத்துவிட்டு, சரியாக உட்கார்ந்து கொண்டு, "வா, தம்பீ! அப்படி நாற்காலியில் குந்து" என்று மிகுந்த அன்போடு கூறி, மிகவும் தூரத்தில் கிடந்த ஒரு நாற்காலியைச் சுட்டிக் காட்டினாள். துரைராஜா, "வருகிறேன்" என்று புன்னகையோடு மறுமொழி கூறிய வண்ணம், "தபால்களைப் படிக்கிற சமயம் போலிருக்கிறது; நான் அசந்தர்ப்ப வேளையில் வந்துவிட்டேன்" என்றான். அதற்கு முன் தன்னிடத்தில் மிகுந்த பயபக்தியோடு நடந்து கொள்பவனும், துணிந்து பேசுவதற்கும் அஞ்சுகிறவனுமான அவன் அவ்வளவு பழக்கமும் உரிமையும் பாராட்டி, அருகில் வந்து உட்கார்ந்து பேசத் தொடங்கியதைக் கண்ட கல்யாணியம்மாளது அழகிய முகம் சடக்கென்று மாறுபட்டது; அன்பினால் மலர்ந்த முகமும் ஆயாசத்தினால் சுருங்கியது; அவள் உடனே கம்பீரமாக நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு, "ஏது, தம்பி இவ்வளவு தூரம் வந்தது! ஏதாவது அவசரமான ஜோலி இல்லாமல் இப்படி வந்திருக்க மாட்டாய் என்றே நினைக்கிறேன்" என்று மிகுந்த வியப்போடு கூறிய வண்ணம், எழுந்து போய் சற்று தூரத்திலிருந்த வேறோர் ஆசனத்தின் மேல் அமர்ந்தாள். உடனே, துரைராஜா மிகவும் நயமான கொஞ்சிய குரலில் பேசத் தொடங்கி, "நான் இன்ன ஜோலி யாகத் தான் வந்திருப்பேன் என்று நானே சொல்ல வேண்டுமா? நீங்கள் ஏற்படுத்திய முதலாவது பரிட்சையில் நான் தேறிவிட்டேன் என்கிற சங்கதி உங்களுக்குத் தெரிந்திருக்குமோ இராதோ என்ற சந்தேகங் கொண்டு, நானே நேரில் வந்து அதைத் தெரிவித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆவலோடு ஓடிவந்தேன். உங்களுக்கு இடைஞ்சலாக இருந்த அந்தத் துஷ்டனுடைய காலைப் பார்த்து சுட்டு விட்டேன். அவன் இனிமேல் ஆறுமாச காலத்துக்கு வீட்டை விட்டு வெளியே வரமாட்டான். இந்த முதலாவது பரீட்சையில் நான் தேறினால் தான் நான் சரியான பிரியம்

வைத்திருக்கிறேன் என்பது தெரியும் என்று அன்றிரவு நீங்கள் சொன்னீர்கள் அல்லவா? நான் இந்த முதலாவது பரிட்சையில் தேறியதோடு இரண்டாவது பரிட்சையிலும் தேறிவிட்டேன். மிகவும் ரகசியமாக மறைந்திருந்து இவ்வளவு காரியம் செய்தது யார் என்பதையும், நான் உங்களுடைய தயவில்லாமலேயே தெரிந்து கொண்டு விட்டேன். நான் துரையம்மாளின் மேல் எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறேன் என்பது இதனால் இன்னமும் அதிகமாக விளங்குகிறதல்லவா? இதுவே இரண்டாவது பரிட்சையில் தேறியது. இன்றிரவு எனக்குக் கொடுப்பதாகச் சொன்ன சன்மானம் கிடைக்கும் அல்லவா? இனிமேலும் ஏதாவது ஆட்சேபனை உண்டா?" என்றான்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் கரைகடந்த வியப்பும் திகைப்பும் கொண்டவள் போல நடித்து நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்து, மிகவும் கொடூரமான பார்வையாக அவனைப் பார்த்து, "என்ன ஆச்சரியம் இது! நீ வந்த உடனே வழக்கத்துக்கு மாறாக, எனக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாய். இப்போது நீ பேசுகிற வார்த்தைகள் எல்லாம் ஒன்றும் விளங்காமல் தாறுமாறாக இருக்கின்றன! நேற்று ராத்திரி, நீ அந்த மதனகோ பாலனைச் சுட்டுக் கொன்று விட்டதாக என்னுடைய வேலைக் காரர்கள் எல்லோரும் வந்து சொன்னார்கள். அந்த பிரம்மஹத்தி தோஷத்தினால், உன்னுடைய புத்தி இப்படி மாறிப் போய் விட்டதா! என்னுடைய வேலைக்காரர்களைக் கூப்பிட்டு, உன்னை அழைத்துக் கொண்டு போய் பத்திரமாக ஜாகையில் சேர்க்கச் சொல்லுகிறேன்" என்று கூறிய வண்ணம், வேலைக் காரியை அழைக்கும் கருத்தோடு வாசல் பக்கத்தில் தனது முகத்தைத் திருப்பினாள். அதை உணர்ந்து கொண்ட துரைராஜா வும் கரைகடந்த வியப்பும் திகைப்பும் அடைந்தான் ஆனாலும், கல்யாணியம்மாளை நோக்கி, "நம்முடைய ரகசியங்களை எல்லாம் வேலைக்காரர்களும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை உங்களுக்கு இருக்குமானால், அவர்களைக் கூப்பிடலாம்; தடையில்லை. அவர்களிடத்தில், நான் எல்லா விஷயங்களையும் எடுத்துச் சொன்னால் என்னுடைய புத்தி மாறாட்டம் அடைந் திருப்பதாக அவர்கள் ஒருநாளும் நினைக்கவே மாட்டார்கள்" என்றான்.

உடனே கல்யாணியம்மாள் சிறிது தயங்கி தனது வேலைக்காரியைக் கூப்பிட வேண்டும் என்ற எண்ணத்தை விட்டவளாய் திரும்பவும் தனது ஆசனத்தில் உட்கார்ந்து அருவருப்பான பார்வையாக அவனை நோக்கி, "நீ சொல்வதெல்லாம் ஆச்சரியமாக இருக்கிறதே! முதல் பரிட்சை என்கிறாய்! இரண்டாவது பரிட்சை என்கிறாய்! சன்மானம் என்கிறாய்! இதெல்லாம் என்ன என்பது விளங்கவில்லையே! நீ இப்போது எங்கே இருந்து வருகிறாய்? நீ இப்படி மாறி இருக்கிறாய் என்பது மீனாக்ஷியம்மாளுக்குத் தெரியுமா?" என்றாள்.

அதைக் கேட்ட துரைராஜா அருவருப்போடு கலகலவென நகைத்து, "நானா மாறிப் போய் இருக்கின்றேன்! துரையம்மாள் தான் கல்யாணியம்மாளாக மாறிப்போய் விட்டாள். அவளுடைய கரைகடந்த காதலெல்லாம் கபடநாடக வேஷமாகவும், கனவில் கண்ட சுகம் போலவும் மாறிப் போயிருக்கிறது. துரையம்மாள் சொன்ன வார்த்தைகள் எல்லாம், நாடகத்தில் வந்து நடித்துப் பேசும் ஸ்திரீ வேஷக்காரியின் பேச்சுகளாக முடிந்து விட்டன. இன்னார் இவ்வளவு கேவலமாக நடந்து கொண்டார்கள் என்றால், அதை எவரும் நம்பவே மாட்டார்கள். என் மனசுக்கும் அந்த விஷயம், கனவோ நினைவோ என்றுதான் இன்னமும் இருக்கிறது" என்று குத்தலாகப் பேசினான். அதைக் கேட்ட கல்யாணியம்மாள் முன்னிலும் அதிகரித்த வியப்பும் அருவருப்பும் அடைந்தவள் போலக் காட்டி, அவனது விஷயத்தில் சிறிதளவு இரக்கங் கொண்டு பேசுபவள் போல நடித்து, "அடாடா! என்ன விபரீதம் இது! நீ இன்னம் இரண்டொரு நாள் வீட்டுக்குள்ளேயே படுத்திருந்து விட்டு, மனசு சரிப்பட்டவுடனே வெளியே வரக்கூடாதா! மீனாக்ஷியம்மாளும் உன்னை கவனிக்காமல் இப்படி விட்டுவிட்டார்களே! எனக்கு மிகவும் அவசரமான ஜோலிகள் எத்தனையோ இருக்கையில், உன்னோடு வீணாக வார்த்தையை வளர்க்க நேரம் இல்லை. உன்னை என்னுடைய பெட்டி வண்டியில் வைத்து உங்களுடைய ஜாகையில் கொண்டு போய் விடும்படி ஏற்பாடு செய்கிறேன். போய்ப் பேசாமல் படுத்துக் கொள். நேற்று ராத்திரி அந்த வீணை வித்துவானுக்கு உன்னால் ஏற்பட்ட விபத்தினாலேதான், உன்னுடைய புத்தி இப்படித் தடுமாறிப் போயிருக்கிறது" என்று கூறினாள்.

அதைக் கேட்ட துரைராஜா முன்னிலும் அதிகரித்த வியப்பும் அருவருப்பும் அடைந்து, "அப்படியா! அது என்னால் ஏற்பட்ட விபத்தா? உங்களால் ஏற்பட்டதல்லவா? எங்கே? நீங்கள் என்னுடைய முகத்தைப் பார்த்துப் பேசுங்கள். அவனுக்கு ஏற்பட்டதை நீங்கள் விபத்தாக எண்ணி வருத்தப்படுகிறீர்களா, அல்லது, அதைக் குறித்து சந்தோஷப்படுகிறீர்களா என்பதை கூசாமல் சொல்ல முடியுமா?" என்றான்.

கல்யாணியம்மாள், "ஒரு மனிதனை அக்கிரமமாகச் சுட்டு, அவனுடைய உயிருக்கு ஹானி தேடுவதைப் பற்றி, யாராவது சந்தோஷப்படுவார்களா? அந்தக் காரியத்தைச் செய்தவனாகிய நீ ஒருவன் மாத்திரம் அதைப்பற்றி சந்தோஷப்படுகிறாய் போலிருக் கிறது! நீ இப்படி எல்லாம் தாறுமாறாகப் பேசிக் கொண்டு திரிந்தால், போலீசார் உன்னைப் பிடித்து வீண் உபத்திரவங் களுக்கு ஆளாக்குவார்கள்" என்றாள்.

அதைக் கேட்ட துரைராஜா தனது சட்டைப் பைக்குள் கையை விட்டு, அதற்குள் கிடந்த வைரப் பதக்கத்தை எடுத்துக்காட்டிய வண்ணம், "என்னைப் போலீசார் பிடித்துக் கொள்வதிருக்கட்டும்; நான் தாறுமாறாகப் பேசுகிறேன் என்று சொல்லுகிறீர்களே; எங்கே, நீங்கள் தாறுமாறாகப் பேசாமல் ஒழுங்காகப் பேசுங்கள் பார்க்கலாம். இதோ இந்த வைரப்பதக்கம் இருக்கின்றதே. இதை நீங்கள் எப்போதாவது பார்த்ததுண்டா?" என்று புரளியாகக் கண் சிமிட்டிப் பேசினான். அவனது கையில் இருந்த வைரப் பதக்கத்தை அலட்சியமாகப் பார்த்த கல்யாணியம்மாளது முகம் கோபத்தினால் கருத்தது; கண்கள் சிவந்தன; அந்த அம்மாள் முறுக்காக நிமிர்ந்து அவனைப் பார்த்து, "என்ன இதெல்லாம்! எவ்வளவோ அவசரமான என்னுடைய ஜோலிகளைக் கெடுத்துக் கொண்டு, நான் இப்போது பேசுகிறேன் என்பதை உணராமல் நீ என்னோடு விளையாடுகிறாயே! ஏதோ ஒரு பதக்கத்தை வைத்துக் கொண்டு, அதை நான் பார்த்ததுண்டா என்று கேட்கிறாயே! ஊரில் உள்ள ஒவ்வொருவரும் என்னென்ன நகைகள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் போய்ப் பார்த்துவிட்டா வந்திருக்கிறேன்? இதை நான் பார்த்திருந்தால் என்ன? பார்க்காதிருந்தால் என்ன? இதென்ன கருட சேவையா?" என்று அதட்டிப் பேசினாள்.

அதைக் கேட்டு, சகிக்க மாட்டாத அருவருப்பும் கோபச் சிரிப்பும் கொண்ட துரைராஜா பதைபதைத்தவனாய், "ஏதேது! இது மலை முழுங்கி மஹாதேவ சாமியின் கதையாக இருக்கிறதே! இந்தப் பதக்கம் இருக்கட்டும். இதோ இந்த இரண்டு கடிதங் களையும் எழுதி எனக்கு அனுப்பியது யார் என்பதாவது நினைவுக்கு வருகிறதா? யோசித்துப் பாருங்கள்" என்று கூறிய வண்ணம், துரையம்மாளால் எழுதப்பட்ட இரண்டு கடிதங் களையும் எடுத்துப் பிரித்துக் காட்ட, அவைகளைக் கண்ட கல்யாணி யம்மாள், "கடிதங்களா! எங்கே! இப்படிக் கொடு; யார் எழுதின கடிதங்கள்?" என்று கேட்ட வண்ணம் தனது கையை நீட்டினாள்.

துரைராஜா அவைகளைக் கொடுக்காமல் பிரித்துத் தனது கையிலேயே வைத்துக் கொண்டு, "இவைகளைக் கொடுத்து விட்டால் திரும்பி என்னிடம் வருமா! எனக்கு இன்னம் அவ்வளவு தூரம் பைத்தியம் பிடிக்கவில்லை; இதோ நானே வைத்துக் கொண்டு காட்டுகிறேன்; பாருங்கள். இதோ இருக்கிறதே இதுதான் துரையம்மாள் பார்க் உத்தியாவனத்தில் வந்து தன்னைச் சந்திக்கும்படி எழுதியது. அதன் பிறகு, அன்றைய இரவில் அவள் வந்து என்னோடு உட்கார்ந்து பேசிவிட்டுப் போன பிறகு, வீணை வித்துவானுடைய பெயரையும் விலாசத்தையும் எழுதி அனுப்பிய கடிதம் இன்னொன்று; முதல் கடிதத்தோடு 500-ரூபாய் நோட்டொன்றும், இரண்டாவது கடிதத்தோடு 1000-ரூபாய் நோட்டொன்றும் இருந்தன. இப்போதாவது விஷயம் நினைவிற்கு வருகிறதா? என்ன; உதட்டைப் பிதுக்குகிறீர்களே! உண்மையாகவே தூங்குகிற ஒரு மனிதனை நாம் எப்படியாவது எழுப்பி விடலாம். தூங்குவதாகப் பாசாங்கு செய்கிறவனை எழுப்ப முடியாதல்லவா? இந்த விஷயத்தை ஒப்புக்கொள்ளக் கூடாதென்று நீங்கள் தீர்மானித்துக் கொண்டிருக்கையில் நான் எத்தனை ருஜுக்களைக் காட்டினாலும், உங்களுக்கு அந்த விஷயம் நினைவுக்கு வரப்போகிறதா!" என்று மிகவும் புரளியாகப் பேசினான். அதைக் கேட்ட கல்யாணியம்மாள் தனது முகத்தை மிகவும் கடுமையாகவும், அருவருப்புத் தோன்றவும் வைத்துக் கொண்டு, அவனது கையில் இருந்த இரண்டு கடிதங்களில் இருந்த சங்கதிகளை எல்லாம் விரைவாகப் படித்து உணர்ந்து கொண்ட பின்னர் மிகவும் கோபமாக, "சரி, சரி; இதெல்லாம் பைத்தியத்தின்

கோளாறுதான்; வேறொன்றுமில்லை; இந்தப் பத்து நிமிஷ நேரமாக, நான் மிகுந்த பொறுமையோடு, உன்னுடைய பிதற்றல்களை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தேன். வாயால் பிதற்றுவதற்கிணங்க, ஏதேதோ கடிதங்களையும் தயார் படுத்தி வைத்துக் கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது. இதுவும் ஒருவித நூதனமான பைத்தியம் போலிருக்கிறது! போதும், இவ்வளவோடு நிறுத்திக்கொள். என்னுடைய ஜோலி எல்லாம் கெடுகிறது" என்று அழுத்தமாகக் கூறினாள்.

உடனே துரைராஜா தனது சட்டைப் பைக்குள் கையை நுழைத்து இன்னொரு கடிதத்தை எடுத்து வைத்துக் கொண்டு, அதன் ஒரு பாகத்தை மாத்திரம் கல்யாணியம்மாளிற்கருகில் பிடித்த வண்ணம், "சரி; நான் சொன்ன சங்கதிகள் எல்லாம் உளற லாகவே இருக்கட்டும். நான் ஒரே ஒரு சந்தேகம் உங்களிடத்தில் கேட்கிறேன். அதை மாத்திரம் நீங்கள் சொல்லி விடுங்கள். அதற்கு மேல் நான் அதிகமாக உங்களைத் தொந்திரவுக்கு ஆளாக்குவ தில்லை. இந்தக் கடிதத்தின் எழுத்து யாருடையதென்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும். இதோ கீழே போடப்பட்டிருக்கும் கையெழுத்தைப் பாருங்கள். யாருடைய பெயர் இருக்கிறது?" என்று வினாவிய வண்ணம் கடிதத்தின் கடைசிப் பாகத்தைக் காட்டினான்.

அது இன்ன கடிதம் என்பதை உணராத கல்யாணியம்மாள், தனக்குள்ளாகவே பெரிதும் கவலையும் கலக்கமும் அடைந்தாள் ஆனாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், அந்தக் கடிதத்தின் கடைசியில், "இங்ஙனம் ஆருயிர் நண்பன், மாரமங் கலம்—துரை" என்று எழுதப்பட்டிருந்ததைக் கண்டு சிறிது தயங்கி, "ஏன்? இதில் என்ன சந்தேகம்? இதில் நம்முடைய மைனர் தம்பியின் கையெழுத்திருக்கிறது" என்றாள்.

அதைக் கேட்ட துரைராஜா மகிழ்ச்சி அடைந்தவனாய், "நல்ல வேளை தான்! அவ்வளவு தூரமாவது ஒப்புக் கொள்ளுகிறீர்களே! அதுவே போதுமானது. இந்தக் கடிதத்தின் வரிகளைப் பாருங்கள்; இது மைனரால் எழுதப்பட்டதல்லவா?" என்று கூறிய வண்ணம், அந்தக் கடிதத்தின் மேல் பாகத்திலிருந்த வரிகளைக் காட்ட, அதை உற்று நோக்கிய கல்யாணியம்மாள் அது தன்னை என்ன

விபரீதத்தில் கொண்டு போய்விடுமோ என்ற கலக்கமும் குழப்பமும் அடைந்தவளாய்ச் சிறிது நேரம் தயங்கி, "ஆம்; இது மைனருடைய எழுத்தைப் போலத்தான் இருக்கிறது. இந்தக் கடிதத்தில் என்ன விசேஷம் இருக்கிறது? இது யாருக்கு எழுதப் பட்டது?" என்று அலட்சியமாகக் கேட்டாள்.

உடனே துரைராஜா புன்னகை செய்து பரிகாசமாகப் பேசத் தொடங்கி, "அவசரமான பல ஜோலிகளை விட்டு, என்னோடு பேசிக் கொண்டிருக்கும் உங்களிடத்தில் நான் இதைக் காட்டத் துணிந்தால், இதில் ஏதாவது விசேஷம் இல்லாமல் இருக்குமா! அந்த விசேஷத்தை நான் வாயால் சொன்னால், அதை நீங்கள் நம்ப மாட்டீர்கள். அது ஆட்சேபனை சமாதானங்களுக்கெல்லாம் இடம் கொடுக்கும். ஆகையால் நான் இந்தக் கடிதத்தை அப்படியே பூர்த்தியாக வாசித்துக் காட்டி விடுகிறேன். நீங்கள் தான் விஷயத்தை என்னிடத்தில் வெளியிடக் கூடாதென்று மறைத் தாலும், நானும் அப்படிச் செய்ய மாட்டேன். இந்தக் கடிதத்தில் அநேகம் ரகசியங்கள் இருக்கின்றன; இருந்தாலும் பரவாயில்லை படிக்கிறேன்; கேளுங்கள். மைலாப்பூரில் பாலாம்பாளுடைய பங்களாவில் இருக்கும் மைனர், இந்தக் கடிதத்தை ஒரு பெண் பிள்ளையினிடத்தில் கொடுத்து எனக்கு அனுப்பினார். படிக்கி றேன்; தயவு செய்து கேட்க வேண்டும்" என்று கூறி, அன்று காலையில் குப்பம்மாளால் கொடுக்கப்பட்ட கடிதத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு அடியில் வருமாறு படிக்கத் தொடங்கினான்:-

என்னுடைய ஆருயிர் நண்பனான துரைராஜாவுக்கு, மாரமங்கலம் மைனர்-துரை எழுதுவது; உபயக்ஷேமம்.

என்னுடைய கண்மணியான பாலாம்பாள் போன்ற அரிய மாணிக்கத்தை நான் இதுவரையில் கண்டதே இல்லை. அழகிலும், குணத்திலும், புத்திசாலித்தனத்திலும், என் மனசுக் கியைந்தபடி நடந்து கொள்ளும் நாயக வாத்சல்யத்திலும், கனவிலும் பிறனை நினைக்காத பதிவிரதா குணத்திலும், அவளுக் கிணையான வேறே பெண் இந்த ஈரேழு பதினான்கு லோகங்களிலும் இருக்க மாட்டாள் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை. என்னை விட்டு ஒரு நொடி நேரம் பிரிந்திருக்க அவளும் சகிக்க மாட்டாள். எனக்கும்

அவளை விட்டுப் பிரிந்து ஓர் இமைப்பொழுதும் இருக்க முடிய வில்லை; இனி நான் வாழ்ந்தாலும் இவளை ஆசை நாயகியாக வைத்துக் கொண்டு தான் வாழ்வது. இறந்தாலும், இவளுடைய மடியின் மேல் தலையை வைத்தே உயிரை விடுவேன். இவள் அவ்வளவு தூரம் என் ஆசையையும் உயிரையும் கொள்ளை கொண்டு விட்டாள்.

இது நிற்க, நேற்று காலையில் நான் இங்கே வருவதற்கு முன் என்னுடைய அம்மாளிடத்தில் பேசிக் கொண்டிருந்து பணம் வாங்கிக் கொண்டு வந்தேன். நான் பாலாம்பாளுக்கு எழுதிக் கொடுத்திருக்கிற பத்திரத்தை அவளுக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டு வந்துவிடவும், பாலாம்பாளுடைய நட்பை இவ்வள வோடு நிறுத்திக் கொள்ளவும் அவர்கள் என்னிடத்தில் சொன்னார் கள். நான் அதற்கு இணங்காமல் பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்து கொடுத்து விடுவேன் என்று பயமுறுத்தினேன். அவர்கள் உடனே படிமானத்திற்கு வந்ததன்றி, பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்ய வேண்டாம் என்றும் என் மனம் திருப்தியடையும் வரையில் இப்போது இருப்பது போலவே அவளிடத்தில் நட்பாக இருந்து வரலாம் என்றும் சொன்னார்கள். அவர்கள் மனப்பூர்வமாக என்ற சந்தேகம் என் மனசில் இருந்து வந்தது. இன்று காலையில் எனக்குத் தேனாம்பேட்டையில் இருந்து கிடைத்திருப்பதைப் பார்க்க, அவர்கள் கபட்டுத்தனமாகவே அவ்வாறு பேசினார்கள் என்பது நிச்சயமாகிவிட்டது. நான் நேற்று அங்கே இருந்து வந்த உடனே அவர்கள் என்ன செய்தார்களாம்; அம்மாளுடைய துர்மந்திரியான பொன்னம்மாளை ஆலந்தூருக்கு அனுப்பினார்க ளாம்; அம்பட்டக் கருப்பாயியை அழைத்துக் கொண்டு வரச் சொன்னார்களாம்; இன்றைய இரவுக்குள், அவளாவது கட்டை யன் குறவனாவது வந்து பாலாம்பாளுடைய பங்களாவுக்குள் நுழைந்து, அந்தப் பத்திரத்தை அபகரித்துக் கொண்டு வந்து கொடுத்துவிட வேண்டும் என்று அவளிடத்தில் முடிவுகட்டி, அதற்காக ஏராளமான பணம் கொடுத்தார்களாம்; என்னுடைய தாயார் என் விஷயத்தில் இப்படிப்பட்ட இரண்டகம் செய்திருப் பதைக் கேட்க என் மனம் பதறுகிறது; என் உடம்பு துடிக்கிறது; நல்ல வேளையாக, இந்த விஷயம் சரியான காலத்தில் எனக்கு

எட்டியது; அவர்கள் இந்தக் கட்டையன் குறவனேயன்றி, அந்த ஈசுவரனையே அனுப்பினாலும், அவர்களுடைய கெட்ட எண்ணம் நிறைவேறாதபடி தடுத்துவிட ஏற்பாடு செய்திருக்கி றேன். நான் அனுபவிக்கும் பரமாநந்த சுகத்தைக் கெடுக்க எத்தனிக்கும் மனிதர் எவராக இருந்தாலும், அவர்கள் எனக்குத் தீராப் பகைவர்கள் தான்; அவர்களுக்கு நான் என்னாலான தீங்கைச் செய்தே தீருவேன்.

நேற்று காலையில் நான் என்னுடைய அம்மாளிடத்தில் பேசி விட்டு வரும் போது, தெய்வச் செயலாக இன்னொரு புதிய விஷயம் எனக்குத் தெரிந்தது; அந்த விஷயத்தைக் காண, அப்படி யும் நடக்குமா என்ற வியப்பும் திகைப்பும் குடிகொண்டன; பாலாம்பாளுக்கு விலையுயர்ந்த நல்ல சேலைகளும், ரவிக்கை களும் கொணர்ந்து கொடுக்க வேண்டும் என்று என் மனசில் ஆசை உண்டாயிற்று. ஒவ்வொன்று ஆயிரம் இரண்டாயிரம் ரூபாய் பெறக்கூடிய எண்ணிறந்த சேலைகள், அம்மாளுடைய உடுப்புப் பெட்டிகளில் இருக்கின்றன; அவைகளில் முதல்தரமானவைகளை எல்லாம் எடுத்துக் கொண்டு வந்துவிட வேண்டும் என்ற எண்ணத் தோடு, நான் உடுப்புப் பெட்டிகளிருந்த அறைக்குள் நுழைந்து முன்னாகவே நான் தந்திரமாக அபகரித்து வைத்துக் கொண்டிருந்த திறவுகோல்களை எடுத்து, பெட்டிகளை எல்லாம் திறந்து, எனக்கு வேண்டியவைகளை எல்லாம் எடுத்துக் கொண்டிருந்த போது, ஒரு பெட்டியினடியில் காகிதத்தால் மிகவும் ஜாக்கிரதையாகக் கட்டி வைக்கப்பட்டிருந்த ஒரு துணிமூட்டையைக் கண்ட உடனே, என் மனசில் அதைப் பிரித்துப் பார்க்க வேண்டும் என்று ஆவல் உண்டாயிற்று; நான் அதை உடனே எடுத்துப் பிரித்துப் பார்க்கிறேன்! ஆகா! அதை என்னவென்று சொல்லுவேன்! அப்போது நான் என்னுடைய கண்களையே நம்பவில்லை; அந்த மூட்டைக்குள் வெள்ளைக்கார துரைஸானி அணிந்து கொள்ளக் கூடிய உடைகள் ஒரு ஜோடிப்பு இருந்தன; நான் அவைகளை எல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துப் பிரித்துப் பார்த்தேன். பார்க்கு பேர் (Park Fair) தினத்தன்று, ரகசியமாகவும், பெயரை மறைத்தும் உனக்குக் கடிதம் எழுதி, அதன்படி வந்து உன்னோடு பேசிக் கொண்டிருந்த அந்தப் பெண் அணிந்திருந்த உடைகள் எல்லாம்

அப்படியே இருந்தன. அந்த உடைகள் எல்லாம் அம்மாளுடைய பெட்டிக்குள் இருக்க வேண்டிய காரணம் என்ன என்பதை நான் நேற்று முழுதும் யோசித்து யோசித்துப் பார்த்தேன். ஒன்றும் விளங்கவில்லை. ஆனால், அந்த விஷயத்தில் என்னுடைய அம்மாளும் எந்த விதத்திலோ சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. அவர்கள் என் விஷயத்தில் இது வரையில் எவ்வளவோ கொடுமையாக நடந்திருந்தாலும், அவர்களைக் காட்டிக் கொடுக்கக் கூடாது என்ற தயாள நினைவினால், நான், அந்த உடைகளைக் கண்ட விவரத்தை எல்லாம் வேறே எவரிடத் திலும் சொல்லாமல் மறைத்து வைத்திருந்தேன். அவர்கள் பத்திர விஷயத்தில் செய்ய நினைத்திருக்கும் தீங்கைப் பற்றி இன்று காலையில் கேள்விப்பட்ட பிறகு, அவர்களுடைய எண்ணத்தில் மண்ணைப் போடுவதோடு, இன்னமும் என்னால் ஏன்ற தீங்கை அவர்களுக்கு நான் உடனே செய்து தீரவேண்டும் என்ற ஒரு கொதிப்பும் என் மனசில் உண்டாகிவிட்டது. ஆகையால், நான் அந்த வெள்ளைக்கார உடைகளை எல்லாம் மூட்டையாகக் கட்டி, இந்த வேலைக்காரியிடம் கொடுத்து உன்னிடத்திற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன். உன் மனசை மயக்கிய போலி வெள்ளைக் காரி யார் என்பதை அறியமாட்டாமல், நீ தவித்திருப்பவன் ஆகையால், இந்த உடைகளின் உதவியாலும், உனக்கு வந்த இரண்டு கடிதங்களைக் கொண்டும், இந்த உடைகள் எங்களு டைய பங்களாவில் இருந்தன என்ற விஷயத்தைக் கொண்டும், அந்த ஸ்திரீ யார் என்பதை நீ அறிந்து கொள்ளலாம். இந்த விஷயத் தினால், என்னுடைய அம்மாளுக்கு எவ்விதமான இழிவும் அவமானமும் நேருவதானாலும், அது எனக்கு சம்மதமானதே; இது சம்பந்தமாக நீ தக்க முயற்சி செய்து, என்னுடைய அம்மாளை நன்றாக அவமானப்படுத்தி, ஊரார் சிரிக்கும்படி செய்தால், என் மனம் நிரம்பவும் குளிரும்.

இது நிற்க, இன்னொரு சந்தோஷ சங்கதி என்னவென்றால், நான் பாலாம்பாளிடத்தில் உன்னைப் பற்றி மிகவும் புகழ்ச்சியாகப் பேசி இருக்கிறேன்; நீ என்னுடைய ஆருயிர் நண்பன் என்றும், உன்னை மாத்திரம் நான் அடிக்கடி இந்த பங்களாவுக்கு அழைத்துக் கொண்டு வருவதற்கு அவள் ஆட்சேபனை சொல்லாமல் இருக்க வேண்டும்

என்றும் சொன்னேன். அவள் அதற்கு முழு மனதோடு சம்மதித்து விட்டாள். ஆகையால் நீ எந்த நேரத்திலும், இங்கே வந்து எங்களோடு சந்தோஷமாக இருந்து விட்டுப் போகலாம். நான் இந்த இடத்தைவிட்டு, உன்னுடைய பங்களாவுக்கு முன் போல அடிக்கடி வர சௌகரியப்படாது. ஆகையால் நீ தான் வந்து போய்க் கொண்டிருக்க வேண்டும். மோகனாங்கி எங்கே இருக்கிறாள் என்ற விஷயத்தை நான் இப்போது பாலாம்பாளிடத் தில் கேட்டால், இவள் என்மேல் ஏதாவது சந்தேகம் கொண்டு விடுவாளோ என்கிற பயம் என் மனதிலிருக்கிற தாகையால், நான் இவளிடத்தில் அதைப்பற்றிக் கேட்கத் தயங்குகிறேன். நீ இங்கே வந்து இரண்டொரு நாள் பழகிய பிறகு அந்த விபரம் உனக்குத் தேவை என்று சொல்லி, அவளிடத்திலிருந்து உண்மையை சுலபத்தில் கிரகித்துவிடலாம்; ஆகையால் அந்த விஷயத்தில் உனக்கு இனி எவ்விதமான கவலையும் வேண்டியதில்லை.

வேறே விசேஷம் ஒன்றுமில்லை.

இங்ஙனம் ஆருயிர் நண்பன்,
மாரமங்கலம்–துரை.

–என்று எழுதப்பட்டிருந்த நீண்ட கடிதத்தை, துரைராஜா மிகவும் தெளிவாக வாசித்துக் காட்டினான்.

கல்யாணியம்மாளோ அதுகாறும் மிகுந்த பொறுமையோடும், கரைகடந்த வியப்போடும், அதன் சங்கதிகளைக் கேட்டுக் கொண்டிருந்தவளாகத் தோன்றினாலும், அந்த அம்மாளது மனத்தை வதைத்த துன்பங்களும், உணர்ச்சிகளும், மாறுபாடு களும் விவரிக்க இயலாதனவாகவும், பரம சங்கடமானவைகளாக வும் இருந்தன. முதல் நாள் தான் பொன்னம்மாளை ஆலந்தூருக்கு அனுப்பியது முதல் கருப்பாயிக்குப் பணம் கொடுத்து, பத்திரத் தைக் கொண்டு வரச் சொன்னது வரையில் உள்ளவையும், மிகவும் ரகசியமாக நடத்தப்பட்டவையுமான காரியங்கள் எல்லாம் மைனருக்கு எட்டியிருந்ததைக் கேட்கவே, கல்யாணியம்மாளது சரீரம் கிடுகிடென்று ஆடிப் போய்விட்டது. மனம் என்ன செய்வ தென்பதை அறியமாட்டாமல் தத்தளித்தது. அந்த விஷயத்தை மைனரிடத்தில் யார் வெளியிட்டிருப்பார்கள் என்ற சந்தேகமே பெரிதாக எழுந்து வதைத்தது. ஒருகால் பொன்னம்மாளே தனக்கு

இரண்டகம் செய்திருப்பாளோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. ஆனால், அவளுக்கும் மைனருக்கும் ஜென்மப் பழியாக இருந்து வந்ததென்பது தெரிந்த விஷயம் ஆதலால், அவள் வெளியிட்டிருக்க மாட்டாள் என்று, அந்தச் சீமாட்டியின் மனது சமாதானம் செய்து கொண்டது. ஒருகால், கருப்பாயியாகிலும், கட்டையன் குறவனாகிலும், அவர்களோடு பழகும் வேறே மனிதராகிலும், மைனரிடத்தில் பெருத்த பணத்தொகையைப் பெறலாம் என்ற நினைவினால், ரகசியத்தை அவனிடத்தில் வெளியிட்டிருப்பார்களோ என்ற இன்னொரு சந்தேகமும் தீராமல் வருத்திக் கொண்டிருந்தது. அது நிற்க, தனது ஆள் மாகாணங்களில் யாராவது ஒளிந்திருந்து, தாம் பேசியதை எல்லாம் கேட்டு, தமக்கு விரோதமாக அதை உபயோகித்திருப்பார்களோ என்ற ஐயமும் கவலையும் எழுந்து உலப்பத் தொடங்கின. ரகசியம் எவரால் வெளியிடப்பட்டிருந்தாலும், அதன் பலனாக, தனது கருத்து நிறைவேறாமல் போனதோடு, மைனர் பலவகையில் தனக்குத் தீம்பும், அவமானமும் தேடி வைக்கும்படியான நிலைமைக்குத் தான் வந்து விட்டதைக் கண்டு, கால்மணி நேரம் வரையில் விசனக்கடலில் ஆழ்ந்து துன்புற்றுக் கிடக்க, அதன் பிறகு அவளது மனநிலைமை ஒருவாறு தெளிவுபட்டது. தனக்கெதிரில் துரைராஜா உட்கார்ந்திருக்கிறான் என்ற உணர்வும் உண்டாகவே, கல்யாணியம்மாள் உடனே கனைத்துக் கொண்டு நிமிர்ந்து துரைராஜாவை முன்னிலும் அதிகரித்த அருவருப்போடு கொடூரமாகவும் நோக்கி, "அப்பா தம்பீ! நீ இப்படிப்பட்ட கடிதத்தைப் படிக்கப் போகிறாய் என்பது முதலிலேயே தெரியாமல் போய்விட்டது. பெரியவர்கள் ஆயிற்றே, அவர்களிடத்தில் இன்ன விஷயங்களைத் தான் பேசலாம், இன்னதைப் பேசக்கூடாது என்ற கூச்சமும், பயமும் உங்கள் இரண்டு பேருக்கும் இல்லாமல் போய்விட்டன அல்லவா? எனக்கு ஒரு பிள்ளையும், மீனாக்ஷியம்மாளுக்கு ஒரு பிள்ளையும் நன்றாக வந்து வாய்த்தீர்கள்! அவனுக்கு பாலாம்பாளும் உனக்கு மோகனாங்கியும் அகப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் இருவரையும் நீங்கள் இரண்டு பராசக்திகளாக அல்லவா மதித்து, வெட்கம் மானம் லஜ்ஜை எல்லாவற்றையும் துறந்து, கடிதம் எழுதி அதைக் கொண்டு வந்து, பெரியவர்களிடத்தில் எல்லாம் படித்துக் காட்டிக் காட்டி மகா பெருமையடித்துக்

கொள்ளுகிறீர்கள்! மைனரை இது வரையில் பலவகைகளிலும் கெடுத்து வந்த நீ இப்போது அவனைக் கொண்டு போய் பாலாம்பாளுடைய வலையில் மீளாத படி மாட்டிவைத்து விட்டதுமன்றி, நாங்கள் அவனை அந்த ராக்ஷசி யிடத்திலிருந்து தப்பவைக்க வேண்டும் என்று ஏதோ ஏற்பாடு செய்து கொண்டிருந்தால், அதற்கும் இடையூறாக, நீ இப்படி எல்லாம் தில்லுமுல்லும் திரிசமனும் செய்து கொண்டா அலைகி றாய்! நாங்கள் பத்திரத்தை எடுத்துக் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம் என்பதை அறிந்து, நீங்கள் இருவரும் யோசனை செய்து, அவனை விட்டு இப்படியெல்லாம் கடிதம் எழுதிக் கொடுக்கச் சொல்லி வாங்கி வைத்துக் கொண்டு, இங்கே வந்து என்னை மிரட்டினால், நான் பயந்து பேசாமலிருந்து விடுவேன் என்று நினைத்துக் கொண்டாயா? ஏது! உன்னுடைய கைவரிசைகளை எல்லாம் நேருக்கு நேராக என்னிடத்திலேயே காட்டத் துணிந்து விட்டாயே! ஓகோ! அந்தப் பாச்சாவெல்லம் கல்யாணியம்மாளிடத்தில் பலியாது. யாரோ துரையம்மாள் கடிதம் எழுதினாள் என்கிறாய்! ஏதோ! வெள்ளைக்காரியின் உடைகள் என்னுடைய உடுப்புப் பெட்டியில் இருந்தன என்கிறாய்! விஷயங்களோ எனக்கு இன்னமும் தெளிவாக விளங்கவில்லை. அதை விளக்கிக் கொள்ளவும் எனக்கு நேரமில்லை. என்னுடைய பெட்டியிலிருந்து என்னென்ன சாமான்களை எடுத்துக் கொண்டு போயிருக்கிறான் என்பதும் தெரியவில்லை. அவன் என் குடியைக் கெடுக்க வந்த பெருத்த நமனாக இருக்கிறான். நீ அவனை உயிரோடு கொல்ல வந்த எமனாக இருக்கிறாய்! உங்கள் இருவருக்கும் இவ்வளவு துணிச்சலா! நான் உபயோகப்படுத்தும் உடுப்புகளுக்குள், யாரோ ஒரு வெள்ளைக்காரிச்சி உடைகளைக் கொண்டு வந்து வைத்திருக்கிறீர்களே! உங்களுடைய புத்தி இப்படியும் கெடுமா! அந்த வெள்ளைக்காரியின் உடைகளை எல்லாம் இன்னமும் என்னுடைய பெட்டியிலே தான் வைத்திருக்கிறீர்களா? அல்லது எடுத்துக் கொண்டு போய்விட்டீர் களா? என்னுடைய உடுப்புப் பெட்டிகளில் எல்லாம் நெருப்பை வைத்துக் கொளுத்தினாலும், இந்த அசுசி தீராது போலிருக்கிறதே!" என்று சரமாரியாக வார்த்தைகளை வாரி இறைக்கவே, அதைக் கேட்ட துரைராஜா, கால் நாழிகை நேரம் வரையில் ஸ்தம்பித்துப்

போய், என்ன மறுமொழி சொல்வதென்பதை அறியமாட்டாமல், அப்படியே உட்கார்ந்து விட்டான். இருந்தாலும், சற்று நேரத்தில் துணிவடைந்தவனாய், "அம்மணீ! அப்படியானால், துரையம்மா ளால் எழுதப்பட்டுள்ள இரண்டு கடிதங்களும் நாங்களே தயாரித் துக்கொண்ட பொய்க் கடிதங்கள் என்றும், வெள்ளைக்காரியின் உடைகளையும் நாங்களே கொண்டு வந்து பெட்டியில் வைத்த வர்கள் என்றும் சொல்லுகிறீர்கள் போலிருக்கிறது! அதுவும் நல்ல காரியங்களை எல்லாம் நடத்தத் துணிகிறவர்களுக்கு, அவற்றில் அகப்பட்டுக் கொள்ளாமல் தந்திரமாகத் தப்பித்துக் கொள்வது தானா ஒரு பெரிய காரியம்! இதெல்லாம் இருக்கட்டும். இந்த மாதிரி யான வெள்ளைக்கார உடுப்புகளை அனுப்பும்படி நீங்கள் கையெழுத்திட்டு ரென் பென்னெட் கம்பெனிக்குக் கடிதம் எழுதி ஒரு குமாஸ்தாவிடத்தில் கொடுத்தனுப்பி, அந்த உடைகளை வாங்கிக் கொண்டு வரச் செய்திருக்கிறீர்களே! அதுவும் நாங்கள் செய்த வேலைதானோ?" என்றான்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள், நாகப்பாம்பு படத்தை விரித்து நிமிர்வது போல நிமிர்ந்து பார்த்து மிகுந்த கோபத்தோடு, "அடாடா! என்னென்ன காரியங்களை எல்லாம் செய்திருக்கிறீர் கள்! கடைசியாக என்னுடைய கையெழுத்தைப் போல தப்புக் கையெழுத்து (Forgery) செய்து எனக்குப் பதிலாக நடவடிக்கை கள் நடத்தவும் ஆரம்பித்து விட்டீர்கள் போலிருக்கிறதே! ஏதேது! இது படுமோசமாக இருக்கிறதே! என்னுடைய கையெழுத்தைப் போட்டு நீங்கள் இன்னமும் என்னென்ன காரியங்களை எல்லாம் செய்திருக்கிறீர்களோ தெரியவில்லையே! சரி, சரி; இனிமேல் உங்களை நான் சும்மா விட்டிருந்தால், குடிகெட்டுப் போய் விடும். இப்போதே நான் அந்த ரென் பென்னெட் கம்பெனிக்கு எழுதி, அந்தக் கடிதத்தை வரவழைத்து போலீஸாரிடத்தில் கொடுத்து தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளச் செய்கிறேன். முதலில், நீ இங்கே வந்த போது, உனக்கு ஒரு வேளை புத்தி மாறாட்டம் ஏற்பட்டிருக் குமோ என்று சந்தேகப்பட்டேன். அப்படிப்பட்ட சந்தேகத்துக்கு இடமில்லை என்பது இப்போது தான் நிச்சயமாகத் தெரிகிறது. நீயும் மைனருமாகச் சேர்ந்து கொண்டு இந்தத் தேவடியாள் முண்டைகளின் சிநேகம் நிலைத்திருப்பதற்காக வேண்டி, ஏதேதோ

கற்பனைகளை எல்லாம் தீர்மானித்து அயோக்கியத் தனம் செய்து கொண்டு திரிகிறீர்கள்; அவைகளுக்கெல்லாம் நானா சளைக்கிறவள்; உங்களால் ஆனதைப் பாருங்கள். சரி; இவ்வளவு தானே சங்கதி; வேறே ஒன்றுமில்லையே? இனிமேலாவது நான் என்னுடைய ஜோலிகளைக் கவனிக்க விடுவாய் அல்லவா? இனி ஒரு விநாடி நேரம்கூட இந்த மாதிரியான வீண் விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்க எனக்கு இஷ்டமில்லை. நீ போகலாம்" என்று முறுக்காகவும் அதிகாரத்தோடும் கூறிக் கொண் டெழுந்தாள். அந்த வார்த்தைகளைக் கேட்ட துரைராஜாவும் மிகுந்த ஆத்திரத்தினால் படபடப்படைந்தவனாய் எழுந்து நின்று, "இந்த மாதிரி அதட்டி ஓங்கிப் பேசிவிட்டால் உங்களுடைய வார்த்தைகள் எல்லாம் உண்மையானவை என்று எல்லோரும் எண்ணி விடுவார்கள் என்றும், உங்களுடைய கட்சி ஜெயித்து விடும் என்றும் நினைக்கிறீர்கள் போலிருக்கிறது. இந்த உருட்டல்கள் எல்லாம் இந்த பங்களாவுக்குள்ளே மாத்திரந்தான் செல்லும். இந்த விஷயம் வெளிக்குப் போகுமானால், உங்கள் வார்த்தைகளுக்கு எவ்வளவு மதிப்பு ஏற்படுகிறதென்பது அப்போது தெரியும். வீணை வித்துவானான அந்த மதனகோ பாலன் உங்களிடத்தில் ஏதோ தகாதபடி நடந்து கொண்டான் என்று நீங்கள் வெளியிட்டு, ஊரில் உள்ள பங்களாக்களுக்கெல்லாம் போய் விளம்பரப் படுத்திக் கொண்டது, என் மனசில் அப்போதே ஒருவித சந்தேகத்தை உண்டாக்கியது. ஓர் ஆண் பிள்ளை, இந்த மாதிரி தவறாக நடந்திருந்தாலும், அவனால் பாதிக்கப்பட்ட பெண்பிள்ளை நல்ல பதிவிரதையாக இருந்தாலும், அந்த விஷயத்தை அவசிய மாக யார் அறிந்து கொள்ள வேண்டுமோ அவர்களிடத்தில் மாத்திரம் மிகுந்த கூச்சத்தோடு வெளியிடுவாளேயன்றி, இப்படி வீடுவீடாக நுழைந்து நுழைந்து, தனது கற்பைப் பற்றி பறைசாற்றிக் கொள்ள மாட்டார்கள். ஆகவே, அவன் மேல் குற்றம் இருக்காதென்பதும், அவனுடைய பிழப்பைக் கெடுத்து அவனை ஓட்டிவிட உறுதி செய்து கொண்டே அப்படிச் செய்தீர்கள் என்பதும், அப்போதே சிலருடைய மனசில் தோன்றின. வேறே தக்க ஆதாரம் இல்லாமல், அதை நிச்சயமாக நம்ப முடியாமல் இருந்தது; இப்போது கிடைத்துள்ள இத்தனை ருஜுக்களை வைத்துக் கொண்டு யோசிக்க யோசிக்க உங்களுடைய

அந்தரங்கமான கருத்து இன்னதென்பது தெளிவாக விளங்குகிறது. அவன் தன்னுடைய வழக்கப்படி எல்லா பங்களாவுக்கும் போவானாகில், அவனுடைய விஷயத்தில் நீங்கள் சொன்ன கட்டுக்கதை முழுதும் தவறானதென்று மறுத்து அவன் உண்மையை வெளியிட்டு விடுவானே என்ற பீதி உங்களுக்கு ஏற்பட்டுவிட்டது; அதற்காக என்ன செய்தீர்கள் என்றால், யாராவது ஒரு மனிதன் மூலமாக அவனை அடித்து, அவன் ஆறுமாச காலத்துக்கு வெளியில் வராதபடி செய்துவிடத் தீர்மானித்தீர்கள்; அதை உங்களுடைய வேலைக்காரர்களைக் கொண்டு செய்விக்க உங்களுக்குத் துணிவு ஏற்பட வில்லையோ, அல்லது அப்படிச் செய்தால், அவர்கள் உண்மையை உடனே யூகித்துக் கொண்டு, உங்களைப் பற்றி மிகவும் கேவலமான அபிப்பிராயம் கொண்டுவிடப் போகிறார்கள் என்ற பயத்தினாலோ, நீங்கள் இந்தக் காரியத்தை வேறொருவனைக் கொண்டு செய்யத் தீர்மானித்துக் கொண்டீர்கள்; அந்த மனிதன் உங்களை யார் என்று கண்டுகொள்ளாமல் இருக்கவும் வேண்டும், அவன் இந்தக் காரியத்தைத் தவறாமல் செய்யவும் வேண்டும் என்று நினைத்து, அதற்குத் தகுந்த மனிதன் யார் என்று பார்த்தீர்கள். பெண்கள் விஷயத்தில் மோகங் கொண்டலைகிற மனிதனே இதற்குத் தகுந்த கருவி என்று நினைத்து, அப்படி அலைகிறவனான துரைராஜாவே கழுவுக்கேற்ற கோமுட்டி என்று நினைத்து, மகா யூகமாகவும் தந்திரமாகவும் இந்த இரண்டு கடிதங்களையும் எழுதியதன்றி, நேரிலும் வந்து, கேவலம் தாசி போலத் தளுக்குகள் எல்லாம் காட்டி, மனிதனை மோக வலையில் வீழ்த்தி, நீங்கள் சொன்னபடி எல்லாம் தலைவிரித்தாடும்படி செய்துவிட்டு வந்தீர்கள்; இப்போது உங்களுடைய கருத்து நிறைவேறி விட்டது; ஆகையால், அந்தக் கபட நாடகங்களை எல்லாம் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்கிறீர்கள்; உங்களுடைய அபாரமான புத்தி விசேஷத்தைப் பற்றி நான் நிரம்பவும் ஆச்சரியம் அடைந்து மெச்சினாலும், இந்த அற்பக் காரியத்தை உத்தேசித்து, நீங்கள் உங்களுடைய கண்ணியத்தையும், மேன்மையையும் இழந்து, மகா கேவலமான இந்த மார்க்கத்தை அனுசரித்ததே, எனக்கு சகிக்க முடியாத அவமானமாக இருக்கிறது; புலி பசித்தாலும் புல்லைத் தின்காது என்பார்கள், அதற்கு மாறாக நீங்கள் செய்திருக்கிறீர்கள்;

உங்களுக்குப் பசித்தால் நீங்கள் குஷ்டரோகம் பிடித்த ஒரு மனிதனைக் கூடப் பிடித்துத் தின்று விடுவீர்கள் போலிருக்கிறது. நீங்கள் இப்படிப்பட்ட இழிவான காரியத்தில் இறங்கியதால், என் விஷயத்தில் எவ்விதப் பிழையும் செய்யாத ஒரு நிரபராதியின் உயிருக்கு அநியாயமாகத் தீம்பு செய்துவிட்டேன். அந்தப் பழி என்னைச் சேரவே சேராது; உங்களைத்தான் சேரும்; ஆனால், ஒரு விஷயம் மாத்திரம் மனசில் உறுதியாக இருக்கட்டும்; நான் சுத்த அசடனாகையால் ஏமாறிப் போய்விட்டேன் என்றும் கடைசி வரையில் என்னை ஏய்த்துவிட்டோம் என்றும் நீங்கள் நினைத்து மனப்பால் குடிக்க வேண்டாம். இந்த விஷயங்களை எல்லாம் இந்த உலகத்தில் உள்ள எல்லா ஜனங்களும் அறியும்படி செய்து, நான் பழிக்குப் பழி வாங்காமல் தூங்குவேன் என்று நினைக்க வேண்டாம், இது சத்தியம்; முக்காலும் சத்தியம். ஆனால் கடைசியாக ஒரு விஷயம் தெரிவித்துக் கொள்ளுகிறேன். என்னை இவ்வளவு தூரம் முட்டாளாக்கி, மதனகோபாலனுடைய விஷயத்தில் என்னைக் கொண்டு மிகவும் அநியாயமான காரியம் செய்வித்து, இப்போதும் என்னை வஞ்சித்து இழிவாகப் பேசியதற்கெல்லாம் ஆறுதலாக நீங்கள் ஒரு காரியம் செய்யுங்கள். நான் எல்லாவற்றையும் மறந்து உங்களுக்கு இனிமேலம் அந்தரங்க மான துணைவனாக இருந்து வருகிறேன். நான் கேட்பது இன்ன தென்பது தெரியவில்லையா? எனக்கும் உங்களிடத்தில் நெடுநாளாக ஓர் ஆசை இருந்து வருகிறது. நீங்கள் துரைஸானி போல வந்து, அந்த ஆசையை அதிகப்படுத்தில் ஒருவிதமான நம்பிக்கையையும் என் மனதில் உண்டாக்கி விட்டீர்கள்; ஆகையால் நீங்கள் எனக்குக் கொடுப்பதாகச் சொல்லிய சன்மானத்தைக் கொடுத்து விடுங்கள்; நாம் இருவரும் ஒத்துப் போய் விடுவோம்" என்று பயமுறுத்தியும் நயமாகவும் பேசினான்.

அவனது சொற்களைக் கேட்ட கல்யாணியம்மாளுக்கு ரௌத்தி ராகாரமான கோபம் பொங்கி எழுந்தது. அவளது உடம்பு பதை பதைத்தது; கண்கள் சிவந்து போயின. காமதகன காலத்தில் ஈசுவரன் நெற்றிக்கண்ணைத் திறந்தது போல அந்த அம்மாள் தனது விழிகளைத் திறந்து மகா கொடூரமான பார்வையாக அவனைப் பார்த்து, "நீ உடனே வெளியில் போகிறாயா? இல்லா

விட்டால், உனக்குத் தகுந்த மரியாதை செய்தனுப்ப வேண்டுமா? என்ன சொல்லுகிறாய்? அந்த மீனாட்சியம்மாளுடைய முக தாட்சணியத்துக்காக நான் இந்நேரம் பொறுத்துக் கொண்டிருந் தேன். இனி மேல் உன்னுடைய வார்த்தை ஒன்றுகூட என் காதில் படக்கூடாது. போ வெளியே!" என்று அழுத்தமாக அதட்டிய குரலில் பேசவே, அவளது கொடூரப் பார்வையாலும் கடூர மொழியாலும் கலகலத்துப் போன துரைராஜா, "சரி; மயிலே மயிலே என்றால், அது இறகு போடாதென்பது சரியாகப் போய்விட்டது. நான் நயமாகக் கேட்டால், நீங்கள் வழிக்கு வரமாட்டீர்கள். இந்த விஷயங்களை எல்லாம் வெளிப்படுத்தி, சந்தி சிரிக்கும்படி செய்கிறேன். அப்படிச் செய்தால்தான், உங்களுக்கெல்லாம் புத்தி வரும். இருக்கட்டும் யாருடைய கை ஓங்குகிறதென்பதை வெகு சீக்கிரத்தில் காட்டுகிறேன்" என்று கூறிக்கொண்டே முறுக்காக வெளியிலே நடந்தான். அவ்வாறு அவ்விடத்தை விட்டு வெளிப்பட்ட துரைராஜா, மிகுந்த கோபத்தினால் பதைபதைத்தவனாய் தன்னை மறந்து பங்களாவிற்கு வெளியே சென்று, அங்கே நின்று கொண்டிருந்த ஸாரட்டில் ஏறி உட்கார்ந்து உடுப்பு மூட்டையை வாங்கி ஜாக்கிரதையாக மடியின் மீது வைத்துக் கொண்டு வண்டியைத் தனது பங்களாவிற்கு ஓட்டும்படி உத்தரவு கொடுக்க, அது அவ்வாறே செல்ல ஆரம்பித்தது. கேவலம் ஒரு விதவைப் பெண் பிள்ளை தன்னைக் கடைசி வரையில் ஏமாற்றி விட்டாளே என்ற நினைவும், ஆத்திரமும், கொதிப்புமே பொங்கி எழுந்து அவனது மனோமெய்களைத் தமது வசமாக்கிக் கொண்டன. தான் கல்யாணியம்மாளை எந்த விதத்தில் அவமானப்படுத்தித் தனது வஞ்சினத்தை முடித்துக் கொள்வது என்ற சிந்தனை இடை யிடையே தோன்றி, அவனது முழு நினைவையும் கொள்ளை கொண்டது. அந்த நிலைமையில், துரைராஜா, அன்றைய பகல் பன்னிரண்டு மணிக்குத் தனது பங்களாவை அடைந்தான். அடைந்தவன் ஸ்நானம் போஜனம் முதலிய எதையும் நாடாமல் நேராகத் தனது சயன அறையை அடைந்து கட்டிலின் மேல் படுத்துக் கொண்டான். அவ்வாறு அரைமணி நேரம் படுத்திருந்து தனது மனத்தில் எழுந்த உக்கிரமான கடுங்கோபத்தை அடக்க முயன்று கொண்டிருக்கையில், அன்றைய பகல் ஒரு மணிக்கு

பசவண்ணா செட்டியார் வருவதாக வாக்களித்திருந்ததன் நினைவு தோன்றியது. அவன் உடனே நிமிர்ந்து கடிகாரத்தைப் பார்க்க, அப்போது பன்னிரண்டரை மணி ஆகி இருந்தது; அவன் உடனே படுக்கையை விட்டுத் துள்ளி எழுந்து விரைவாகக் கீழே சென்று ஸ்நானம் போஜனம் முதலியவற்றை அதிதுரிதத்தில் முடித்துக் கொண்டு, சில வேலைக்காரர்களை அழைத்து, பணம் கொடுத்து கடைக்குப் போய் பசவண்ணா செட்டியாரை உபசரிப் பதற்குத் தேவையான சிற்றுண்டிகள், தாம்பூலாதிகள் முதலிய வஸ்துக்களை வாங்கி வரும்படி அனுப்பிவிட்டு, அவர் வந்திறங்கினால், மிகுந்த மரியாதையோடு அவரை உடனே மேன்மாடத்திற்கு அழைத்து வரும்படி உத்தரவு செய்து விட்டு மேலே சென்றான். அப்போது ஒரு மணிக்கு ஐந்து நிமிஷ நேரமே மிகுதி இருந்தது. செட்டியார் அதிசீக்கிரத்தில் வந்து விடுவார் என்ற நினைவினாலும், ஆவலினாலும், அவனது மனம் துடித்துக் கொண்டிருந்ததால், கல்யாணியம்மாளை பற்றிய நினைவு பின்னடைந்தது. அந்த நிலைமையில் கடிகாரம் ஒரு மணியடித்தது. பசவண்ணா செட்டியார் மிகுந்த சந்தோஷத்தினாலும் புன்னகையினாலும் மலர்ந்த முகத்தினராய் அந்த அறைக்குள் நுழைந்தார்.

★ ★ ★

24–வது அதிகாரம்

## வக்கீல் நோட்டீஸ்

ஒரு நிமிஷ நேரம் முன்னாகவாகிலும் பின்னாகவாகிலும் வந்தவர் என்பதின்றி சரியாக ஒரு மணிக்கு அவர் வந்ததைக் கண்ட துரைராஜா அளவற்ற வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தவனாய், அவர் நிரம்பவும் கண்டிப்பான மனிதர் என்று தனக்குள்ளாகவே நினைத்துக் கொண்டவனாய், எழுந்து கைகுவித்து வணங்கி, "வர வேண்டும்; வரவேண்டும். இப்படி இந்தச் சாய்மான நாற்காலியில் உட்கார வேண்டும்" என்று மிகுந்த உவப்போடும் மரியாதை யோடும் உபசரிக்க, செட்டியார் அப்படியே உட்கார்ந்து கொண்ட வராய், அவனை நோக்கி, "என்ன உங்களுடைய முகம் ஒரு மாதிரியாக இருக்கிறதே! உங்களுக்கு வேறே ஏதாவது அவசரமான

ஜோலி இருக்கையில், அதற்கு இடைஞ்சலாக நான் வந்து விட்டேனோ என்னவோ! ஏதடா இந்தக் கிழவன் வந்து கழுத்தை அறுக்கிறானே என்று நினைத்துக் கவலைப் படுகிறீர்களோ என்னவோ!" என்று பரிகாசமாகவும், சந்தோஷமாகவும் பேச, அதைக் கேட்ட துரைராஜா தனது முகத்தை முன்னிலும் அதிக இனிதாக மலர்த்திய வண்ணம் புன்னகை செய்து கிலேசம் தோற்று வித்து, "நன்றாகச் சொன்னீர்கள்! அப்படி எல்லாம் ஒன்றுமில்லை; உங்களுடைய சிநேகம் எனக்கு ஏற்படுவதைப் பற்றி நான் எவ்வளவு சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? அப்படி இருக்க, நான் இதைப்பற்றி வருந்துவதாவது? ஒரு நாளும் இல்லை. அந்த விஷயம் இருக்கட்டும்; மதனகோபாலன் இப்போது எப்படி இருக்கிறான்? அதை முதலில் சொல்லுங்கள். எனக்கு நேற்று ராத்திரி முதல் அதே கவலையாகவும் விசனமா கவும் இருக்கிறது, இன்று காலையில் நான் எழுந்தவுடனே அங்கே வந்து, அவன் என்ன நிலைமையில் இருக்கிறான் என்பதை நேரில் பார்த்துவிட்டு வரவேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. ஆனால், அதற்குள் வேறோர் அவசரமான ஜோலியைக் கவனிக்கும்படி நேர்ந்தது. அது, காலை முதல் 12-மணி வரையில் பிடித்தது. ஆகையால் நான் அங்கே வரக்கூடாமல் போய்விட்டது" என்று அந்தரங்கமான அன்போடு கூற, செட்டியார், "சரிதான்; அவன் நேற்று ராத்திரி முழுதும் கண்ணைத் திறக்கவே இல்லை. இன்று காலையிலே அந்த டாக்டர் வந்து காயத்தைக் கட்டிவிட்டு, உள்ளுக்கும் மருந்து கொடுத்து விட்டுப் போனார். காலை முதல் அவனுக்குக் கடுமையான ஜுரம் உண்டாகி இருக்கிறது. இன்னம் சில நாட்கள் வரையில் மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளாவிட்டால், அவன் பிழைப்பது அரிதென்று டாக்டர் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார். ஆகையால், நானும் மற்றவர் களும் அவனுக்குப் பக்கத்திலேயே எச்சரிப்பாக உட்கார்ந்திருக்க வேண்டி இருக்கிறது. நான் ஒரு மணிக்கு இங்கே வந்து உங்களைக் காண்பதாகச் சொல்லி இருந்ததைக் கருதி அந்த ஏற்பாட்டுக்குப் பழுது உண்டாகக் கூடாதென்று நினைத்து, அவனுடைய தங்கையை பக்கத்தில் உட்கார வைத்துவிட்டு வந்து சேர்ந்தேன். ஏனென்றால், நீங்களோ பெரிய இடத்துக் குழந்தை. நீங்கள் அநேகம் நண்பர்களைப் பார்க்கும்படியாக இருக்கும்.

அவரவர் களுக்குக் குறித்துள்ள காலம் தவறாமல் அங்கங்கே போகும்படி யாக இருக்கும். அதற்கு நான் குந்தகம் செய்யக் கூடாதல்லவா?" என்று புன்சிரிப்போடு கூறினார். அதைக் கேட்ட துரைராஜா மிகுந்த விசனமடைந்தவன் போலக் காட்டிக் கொண்டு, "அடாடா! நேற்று அந்த டாக்டர் சொன்னதிலிருந்து மதன கோபாலன் இன்று நன்றாகத் தெளிவடைந்து விடுவான் என்றல்லவா நினைத்திருந்தேன். அவனுடைய நிலைமையைக் கேட்க, எனக்கு நிரம்பவும் விசனமாக இருக்கிறது. ஆகா! என்னால் அந்த மனிதன் எப்படிப்பட்ட கஷ்டங்களுக்கெல்லாம் ஆளாகி விட்டான்! அவனுடைய நண்பர்களான உங்களுக்கும் மற்றவர் களுக்கும் இதனால் எவ்வளவு சங்கடங்கள் ஏற்பட்டு விட்டன! அடாடா! என்னுடைய ஆத்திரபுத்தியினாலும் மதியீனத்தினாலும் மகாபாபகரமான காரியத்தையல்லவா செய்துவிட்டேன்! நீங்கள் ஒரு காரியம் செய்திருக்கலாமே; அவனுடைய உடம்பு ஸ்திதி இவ்வளவு கேவலமாக இருக்கிறதென்பதை ஒரு கடிதத்தில் எழுதி ஓர் ஆள் மூலமாக எனக்கு அனுப்பியிருந்தால் நானே அங்கே வந்து உங்களைப் பார்த்திருப்பதன்றி, நானும் அதன் விஷயத்தில் என்னாலான தேகப் பிரயாசையை எடுத்துக் கொண்டும் இருப்பேனே! இப்போதும், நான் அந்த மாதிரி செய்யத் தடை யில்லை. நாம் உடனே புறப்பட்டு அங்கேயே போய் விடுவோமே!" என்று மிகுந்த அபிமானத்தோடு கூற, அதைக் கேட்ட செட்டியார், "ஆனால் அந்த டாக்டர் ஒரு சங்கதி சொல்லி இருக்கிறார். என்னையும் மதனகோபாலனுடைய தங்கையையும் தவிர, வேறே அன்னிய மனிதரை அவன் கண்டால், அவனுடைய மனம் சஞ்சலப்பட்டாலும், படலாம் என்றும், ஆகையால், அவன் அநேகமாகக் குணமடையும் வரையில், அன்னியர் அவனுக்கருகில் இருக்கவிட வேண்டாம் என்றும் அந்த டாக்டர் சொல்லி இருக்கிறார். அதைக் கருதியே நான் உங்களை அங்கே வரவழைக்க வில்லை; அதுவும் தவிர, நான் காலை முதல் இந்நேரம் வரையில், அவனுக்குப் பக்கத்திலேயே இருந்தது எனக்கும் அலுப்பாக இருந்தது. இப்படி வந்துவிட்டுத் திரும்பிப் போனால், மனசுக்கு ஒருவித உற்சாகம் ஏற்படும் என்ற எண்ணமும் என்னை இங்கே வரும்படி தூண்டியது. நான் கிழவனாக இருந்தாலும், எப்போதும் உல்லாச புருஷன். உங்களைப் போன்ற யௌவனப் புருஷர்க

ளோடு சேர்ந்து கொண்டு பலவகையில் புத்தியைச் செலுத்தி சந்தோஷமாக இருப்பதே எனக்கு நிரம்பவும் பிடிக்கும். ஆகையால், நான் இப்போது அவசரப்பட்டுக் கொண்டு, நான் எதிர் பார்க்கும் சந்தோஷத்தை எல்லாம் கெடுத்துக் கொண்டு உடனே திரும்பி அங்கே போய்விட வேண்டும் என்று நான் விரும்பவில்லை" என்றார்.

அதைக் கேட்ட துரைராஜா, மிகுந்த சந்தோஷமும் உற்சாகமும் அடைந்தவனாய்ப் புன்னகை தவழ்ந்த முகத்தோடு அவரை நோக்கி, "நீங்கள் சொல்வதும் சரியான விஷயங்கள்தான். கஷ்டமும் சுகமும் மாறி மாறி இருந்தால்தான், எதிலும் அதிகமான சிரமம் தோன்றாது. நீங்கள் பேசியதில் எனக்கு ஒரே ஒரு சந்தேகம். அதை மாத்திரம் நீங்கள் தெரிவிக்க வேண்டும். மதனகோபால னுடைய தங்கை என்று குறிப்பிட்டீர்களே, அது நேற்று ராத்திரி மேன் மாடத்திலிருந்து அழுது கொண்டு வந்து அவனைக் கட்டிக் கொண்ட பெண்ணோ? அல்லது வேறோ?" என்றான்.

பசவண்ண செட்டியார், "அதே பெண்தான். அவன் அண்ணன். அந்தப் பெண் அவனுடைய தங்கை" என்றார்.

***துரைராஜா:-*** அவர்களுடைய தாய்தகப்பன்மார் எங்கே இருக்கிறார்கள்?

***செட்டியார்:-*** அவர்களுடைய தாய் தகப்பன்மார்கள் இன்னார் என்பது தெரியாது. அவர்கள் இருவரும் அநாதையாக அகப்பட்டு, உங்களுடைய பெரிய தகப்பனாரான என்னுடைய கூட்டாளியின் ஆதரவில் இருந்து வளர்ந்து வந்தார்கள்-என்றார்.

அதைக் கேட்ட துரைராஜா, மிகுந்த வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தான். ஏனெனில், மோகனாங்கி ஒருகால் மதனகோ பாலனது மனைவியாகவோ, அல்லது வைப்பாட்டியாகவே இருப்பாளோ என்ற ஐயத்தை முதல் நாளிலிருந்து கொண்டிருந் தவன் ஆதலால், அவர்கள் இருவரும் சகோதரன் சகோதரிகள் என்ற செய்தியைக் கேட்கவே, அவனது மனம் கரைகடந்த குதூகலம் அடைந்து பொங்கியது. அவளை அடைவதற்கு இனி தான் முயற்சிக்கலாம் என்ற ஒரு பெருத்த நம்பிக்கையும் உண்டாகி விட்டது. தான் எப்பாடு பட்டாகிலும் செட்டியாரது நட்பை பலப்

படுத்திக் கொண்டு, அதன் மூலமாக அந்த எண்ணத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்ற தீர்மானமும் மனதில் ஏற்பட்டு விட்டது. தனக்கு மைத்துனனாகப் போகும் மதனகோபாலனது விஷயத்தில் மிகுந்த அபிமானமும், இரக்கமும், வாத்சல்யமும், உருக்கமும் அப்போதே உண்டாகி விட்டன. இருந்தாலும், தனது மன நிலைமையை உடனே வெளியிடக் கூடாதென்ற ஓர் எண்ணம் உதிக்கவே, அவன் அதை விடுத்து வேறு விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும் என்ற நினைவைக் கொண்டவனாய், அவரை நோக்கி, "அப்படியா! அவர்கள் அநாதைகளா! ஐயோ பாவம்! இப்போது தாங்கள் சொன்ன விஷயத்தைக் கேட்க, என்னுடைய விசனம் ஒன்றுக்குப் பத்தாகப் பெருகுகிறது. என்னுடைய பெரிய தகப்பனார் இவர்களை அபிமானித்துக் காப்பாற்றி, எவ்வளவோ நன்மைகளைச் செய்திருக்கிறார்கள்; அப்படிப்பட்ட இவர்களுக்கு நானும் என்னாலான உதவிகளைச் செய்வதைவிட்டு, இப்படிப் பட்ட பெருத்த துயரத்தையும் துன்பத்தையும் உண்டாக்கியது தான் என்னுடைய நெஞ்சை அறுத்து, என் மனதைத் துளைக்கிறது. (சிறிது மௌனம்) உம். என்ன செய்கிறது! அவனைச் சுட்டுப் போட்டுவிட்டு, இப்போது அழுவதால் அவனுடைய கஷ்டத்தில் கடுகளவாவது குறையப் போகிறதில்லை. அதிருக்கட்டும்; என்னுடைய பெரிய தகப்பனார் ஏதோ ஒரு கடிதம் கொடுத்தனுப்பி இருப்பதாகச் சொன்னீர்களே! அதை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று அன்பாகவும் உரிமை பாராட்டியும் நயமாகவும் கேட்டான்.

உடனே பசவண்ண செட்டியார், "ஓ! கொண்டு வந்திருக்கிறேன். அதைக் கொடுப்பதற்காகத் தானே, நான் இந்தச் சந்திப்பை முக்கியமாக ஏற்படுத்திக் கொண்டது. அது இதோ இருக்கிறது கொடுக்கிறேன்" என்று கூறிய வண்ணம் தமது சட்டையின் உட்புறத்துப் பைகள் ஒன்றனுள் கிடந்த ஒரு காகிதத்தை எடுத்து, அவனுக்கருகில் நீட்ட, அவன் அதை வணக்கமாக வாங்கி, அதன் உறையை நீக்கி உள்ளே இருந்த கடிதத்தை எடுத்துப் பிரித்து வைத்துக் கொண்டு படித்தான். அது அடியில் வருமாறு எழுதப் பட்டிருந்தது:-

கிருஷ்ணாபுரம் சின்ன ஜெமீந்தார் குமாரன் சிரஞ்சீவி துரைராஜாவுக்கு அநேக ஆசீர்வாதம். உபயக்ஷேமம்.

இந்தக் கடிதத்தைக் கொண்டு வருகிறவரான ம-ா-ா-ஸ்ரீ பசவண்ண செட்டியார் அவர்கள், நான் இந்த ஊரில் பல வருஷங் களாகச் செய்து வரும் சந்தனக்கட்டை வியாபாரத்தில், என்னோடு கூட்டாளியாக இருந்து வியாபாரம் செய்து வருபவர்கள். இவர்கள் தக்க பிரபுத்துவமும், கண்ணியமும் வாய்ந்த பெருத்த தனிகர். இந்த மைசூரிலுள்ள பணக்காரர்களை எல்லாம் எல்லா அம்சத்திலும் இவர்களுக்கு அடுத்தபடியாகத் தான் மதிக்க வேண்டும். இவர்கள் மனைவி மக்கள் முதலிய தொல்லைகள் இல்லாமல் இருப்பதால், தமது வாசஸ்தலத்தை மாற்றிக் கொண்டு சென்னையில் ஒரு முதலாளி இருப்பது அவசியமாக இருப்பதாலும், இவர்கள் அங்கே வருகிறார்கள். இவர்களுக்கு சென்னையில் அறிமுகமான வர்கள் வேறே எவரும் இல்லை. ஆகையால் இவர்களுக்கு என்னென்ன சௌகரியங்கள் தேவையோ, அவைகளை எல்லாம் நீ செய்து கொடுத்து, இவர்களைத் தக்கபடி உபசரிப்பாய் என்று நான் நம்புகிறேன்.

நிற்க, உங்களுடைய க்ஷேம சமாசாரங்களை அடிக்கடி எழுதும் படி நான் எத்தனை முறையோ எழுதி இருந்தும், உங்களுடைய கடிதம் கிடைப்பது அத்தி பூப்பது போல இருக்கிறது. மீனாக்ஷி யம்மாளுடைய சௌக்கியத்தையும் சௌபாக்கியவதி கண்மணி யம்மாளுடைய சௌக்கியத்தையும் உன்னுடைய சௌக்கியத் தையும் அறிந்து கொள்ள ஆவலுள்ளவனாக இருக்கிறேன்.

இது நிற்க, சௌபாக்கியவதி கண்மணியம்மாளை, மாரமங்கலம் மைனருக்குக் கட்டிக்கொடுக்க நிச்சயம் ஆகியிருக்கிறதென்றும், அதற்கு நிச்சயதார்த்த முகூர்த்தம்கூட நிருணயிக்கப்பட்டிருக்கிற தென்றும், நான் ஒரு நண்பருடைய கடிதத்தின் மூலமாக அறிந்து கொண்டேன். அந்தச் சம்பந்தம் செய்து கொள்வதில் குழந்தைக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை என்பதையும், அந்தக் கடிதத்தினால் நான் அறிந்து கொண்டேன் மீனாக்ஷியம்மாள் மற்ற எந்த விஷயத் தில் என்னுடைய அபிப்பிராயத்தைக் கலந்து கொள்ளாவிட் டாலும், அதைப்பற்றி எனக்கு அவ்வளவு விசனம் உண்டாகாது. இந்த ஒரு விஷயம் மாத்திரம் எனக்கு மகா முக்கியமானது. ஆகை யால் இந்த விஷயத்தில் என்னுடைய சம்மதியையும் பெற்றுக் கொண்டு ஒரு முடிவைச் செய்ய வேண்டும் என்று நான்

தெரிவித்ததாக, நீ உடனே உன் அத்தையம்மாளிடத்தில் சொல்ல வேண்டும். அவர்கள் மற்ற எந்த விஷயத்தில் என்னுடைய பிரியத்தை அனுசரித்து நடக்காவிட்டாலும் இதில் மாத்திரம் அவர்கள் என்னை ஒரு மனிதனாக மதிப்பார்கள் என்று உறுதியாக நம்பியிருக்கிறேன். இனி எனக்கு நீங்கள் எழுதும் கடிதங்களை எல்லாம், இந்தக் கடிதம் கொண்டு வரும் என்னுடைய கூட்டாளியான செட்டியார் அவர்களிடத்தில் கொடுத்து விட்டால், இவர்கள் தினந்தினம் எனக்கனுப்பும் தபாலோடு சேர்த்து அனுப்பி விடுவார்கள்.

மற்ற விஷயங்களை அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன். அடிக்கடி க்ஷேமத்தை எழுதித் தெரிவிக்கவும்.

**அநேக ஆசிர்வாதம்,**

**சோமசுந்தர-துரை,**

**கிருஷ்ணாபுரம் ஜெமீந்தார்.**

–என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்த துரைராஜா மிகுந்த களிப்படைந்தவனாய், பசவண்ண செட்டியாரை நோக்கி, "உங்களைப் பற்றி என்னுடைய பெரிய தகப்பனார் எழுதியிருப்பதைப் பார்க்க, நான், நீங்கள் இறங்கியிருக்கும் ஜாகைக்கு வந்து உங்களுடைய சமூகம் பார்த்து நடக்க வேண்டியவனாக இருக்கிறேன். அப்படி இருக்க, நான் இவ்வளவு தூரம் பெரிய மனுஷத்தனம் வகித்து, நீங்களே என்னைப் பார்க்க வரும்படியாகச் செய்தது பெருத்த அபசாரமான காரியம் என்று நினைக்கிறேன்" என்று மிகுந்த மரியாதையோடு கூறினான். அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் அவனுக்கு அன்னியோன்னியமான நண்பர் ஆகிவிட்டவர் போல, ஒருவித உரிமையும் நட்பும் அன்பும் தோற்றுவித்து, "அடாடா! ஏதேது! நீங்கள் என்னைப் பிரமாதமாக மதித்து மரியாதை செய்ய ஆரம்பித்து விட்டீர்களே! என்னிடத்தில் இரண்டு காசு அதிகமாக இருக்கலாம். அதனால், நான் வீண்கருவம் பாராட்டி மற்றவரை எல்லாம், நமக்குக் கீழானவர்கள் என்று நினைத்து, வீட்டில் திண்டிலேயே சாய்ந்து கொண்டிருக்கிறவனல்ல. உங்களைப் போன்ற சிறு பிள்ளைகளோடெல்லாம் சேர்ந்து கொண்டு நானும் ஒரு சிறுபிள்ளை போல ஓடியாடித் திரிந்து பணத்தை வாரி இறைத்து சுகங்களை எல்லாம்

அனுபவிக்க வேண்டும் என்பதே என்னுடைய விருப்பம். அதனாலே தான் நான் நேராக இங்கே வந்தேன். அதுவும் தவிர, உங்களுடைய பங்களாவை நான் நேரில் வந்து பார்க்க வேண்டும் என்ற ஆசையும் தூண்டியது" என்றார்.

அதைக் கேட்ட துரைராஜா மிகுந்த குதூகலம் அடைந்தவனாய், "நான் இனிமேல் எப்போதும் உங்களுடன் கூடவே இருக்கிறேன்; என்னால் என்னென்ன காரியங்கள் ஆக வேண்டுமோ அவைகளை எல்லாம் நான் மிகுந்த சந்தோஷத்தோடு உடனே செய்து கொடுக்கிறேன். நீங்கள் இப்போது எங்கே ஜாகை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உங்களுடைய வர்த்தகத்தையும் ஜாகையையும் ஒரே இடத்தில் வைத்துக் கொள்ளப் போகிறீர்களா? அல்லது, அவைகள் தனித்தனியாக இருக்க வேண்டுமா? உங்களுக்கு வசதியான இடம் கிடைக்கிற வரையில் நீங்கள் இந்த பங்களாவிலேயே இருக்கலாம். உங்களுக்கு வேண்டிய சகலமான சௌகரியங்களையும் நான் செய்து கொடுக்கிறேன்" என்றான்.

செட்டியார் மிகுந்த மகிழ்ச்சியடைந்தவர் போல நடித்து, "என்னுடைய நண்பரான வக்கீல் ஒருவர் இருக்கிறார். அவர் மூலமாக நான் தண்டையார் பேட்டையில் ஒரு பங்களாவை விலைக்கு வாங்கி விட்டேன். ஆள்கள் அதற்கு வெள்ளையடித் துக் கொண்டிருக்கிறார்கள். நாளைய தினம் அது தயாராகிவிடும். அதிலே தான் நான் என்னுடைய ஜாகையை வைத்துக் கொள்ளப் போகிறேன். வர்த்தகம் நடத்துவதற்குத் தேவையான இடமும் இரண்டொரு நாளில் அமர்ந்துவிடும். இடங்களைப் பற்றி இப்போது எனக்கு எவ்விதமான கவலையாவது அசௌகரிய மாவது இல்லை. இந்த மதனகோபாலனுடைய கவலை தான் பெரிதாக ஏற்பட்டுவிட்டது. அவன் நிரம்பவும் நல்ல பையன்; கெட்டகுணம் என்பதையே அவன் அறியாதவன். எல்லோரும் புகழும்படியான மாசற்ற நடத்தை உடையவன். அவனுக்கு ஏற்பட்டிருக்கும் இந்தப் பிணி நீங்கி, அவன் பிழைக்க வேண்டுமே என்ற கவலை தான் இப்போது என்னுடைய மனசை எல்லாம் கவர்ந்து கொண்டது. நல்ல மனிதர்களுக்குத் தான் துன்பமெல்லாம் வருகிறது; அவன் அன்னியப் பெண்பிள்ளைகளைக் கண்டால், அஞ்சிப் பயந்து ஐந்து காதவழி தூரம் ஓடக்கூடியவன். அவன்

மேல் சில தினங்களுக்கு முன்னால், ஒரு பெருத்த அவதூறு ஏற்பட்டது. அதனால் அவனுடைய பிழைப்பே கெட்டுப் போய் விட்டது. அவன் வீணை கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்த இடங்களிலெல்லாம், அவனை வேண்டாம் என்று சொல்லி விட்டார்கள். உத்தியோகம் போனால் போகிறது.வேறே இடத் துக்குப் போய் ஆயிரம் உத்தியோகங்கள் சம்பாதித்துக் கொள்ள லாம் என்றால், இப்போது உயிரே போகும்படியான பெரிய விபத்து நேர்ந்து விட்டது. அவனுக்கு இது மிகவும் பொல்லாத காலம் என்றே எண்ண வேண்டியிருக்கிறது. அவனையும், அவனுடைய தங்கையையும் தமது சொந்தக் குழந்தைகள் போல, அதிக வாத்சல்யத்தோடு வளர்த்தவரான உங்களுடைய பெரிய தகப்பனார், அவனுக்கு நேர்ந்துள்ள இந்த இரண்டு பொல்லாங்கு களைப் பற்றியும் கேள்விப்படுவாரானால், அவர்கள் ஆராத் துயரத்திலாழ்வதன்றி உடனே புறப்பட்டு இங்கே ஓடிவந்து விடுவார்கள்" என்று மிகுந்த விசனத்தோடு கூறினார்.

அதைக் கேட்ட துரைராஜா தான் மதனகோபாலனது நட்பையும் பிரியத்தையும் சம்பாதித்துக் கொள்வதற்கு அதுவே தக்க மார்க்கம் என்று தீர்மானித்துக் கொண்டவனாய் அவரை நோக்கி, "மெய்தான்; நான்கூட, சில தினங்களுக்கு முன் வரையில், மதன கோபாலன் கெட்ட நடத்தை உள்ளவன் என்று நினைத்திருந்தேன். நேற்று சாயுங்காலம் தாங்கள் அவனைப்பற்றிப் பேசிய பிறகும், இன்று காலையில் நடந்த இன்னொரு முக்கியமான சம்பவத்தின் பிறகும் நான் அந்த அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டேன். இருந்தாலும், என்னுடைய தங்கை அவனுக்கு எழுதிய கடிதத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஓர் ஆவல் மாத்திரம் இருந்து கொண்டிருக்கிறது; அந்தச் சந்தேகமும் நிவர்த்தியாகி விட்டால், நான் அவனைப் புருஷ உத்தமனென்றே மதிப்பதன்றி, அவனுக்கு அவசியமாகத் தெரிய வேண்டிய வேறே சில ரகசிய விஷயங் களையும் உடனே வெளியிடுவேன். அவைகளைக் கொண்டு, அவனுக்கு ஏற்பட்டுள்ள அவதூறை விலக்கிக் கொள்ளலாம்" என்றான்.

அதைக் கேட்ட செட்டியார், "அப்படியா! அந்தக் கடிதத்தையும் இதோ கொண்டு வந்திருக்கிறேன். பாருங்கள், அந்தச் சந்தேகமும்

நிவர்த்தியாகட்டும்" என்று கூறிய வண்ணம், தமது சட்டைப் பைக்குள்ளே இருந்த இன்னொரு கடிதத்தை எடுத்து துரைராஜா விடத்தில் நீட்ட, அவன் மிகுந்த ஆவலோடு அதை வாங்கிப் பிரித்துப்படித்தான். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

வாத்தியார் அவர்களுக்கு அநேக நமஸ்காரம் செய்து வணக்கமாக எழுதிக் கொள்ளும் விக்ஞாபனம்.

ஒரு முக்கியமான விஷயத்தை நான் உங்களிடம் நேரில் தெரிவிக்க விரும்புகிறேன் ஆகையால், நீங்கள் இன்று சாயுங் காலம் ஏழரை மணிக்கு மேல் எட்டுமணிக்குள்ளாக, எங்களுடைய பங்களாவின் பின்புறத் தோட்டத்திலிருக்கும் ஆலமரத்தடியில் வந்திருக்கும்படி பிரார்த்திக்கிறேன். தோட்டத்தின் பின்புற வேலியில் படலினால் மூடப்பட்ட வழி ஒன்றிருக்கிறது. அந்தப் படலின் கட்டை அவிழ்த்து அதைத் திறந்து கொண்டு சுலபமாக உள்ளே வரலாம். உங்களை எவரும் பார்க்கவும் மாட்டார்கள். நீங்கள் வருவதைக் கண்டாலும் தடை செய்யாமலிருக்கும்படி தோட்டக்காரனிடம் நான் சொல்லி வைக்கிறேன். இப்படி ரகசியமாக நீங்கள் உள்ளே வருவதும், நாம் இருவரும் சந்திப்பதும் தவறான காரியம் என்று நீங்கள் நினைப்பீர்கள் என்பதை நான் அறிவேன். ஆபத்துச் சமயத்தில் பாபம் பார்க்கக்கூடாதென்று சொல்லுவார்கள். அதைப் போல விஷயம் அதிக அவசரமானதும், நிரம்பவும் விபரீதமானது மாதலால், நீங்கள் இதற்குப் பின் வாங்க வேண்டாம். நான் அந்த ஆலமரத்தடிக்கு வந்து அதிக நேரம் காத்திருக்க எனக்கு அவகாசம் கிடைக்கா தாகையால், காலம் தவறாமல் நீங்கள் அவசியம் வந்திருக்க வேண்டுமாய் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்று நீங்கள் அங்கே வரமுடியாமற் போனால், இன்றிரவு நான் இறந்து போய்விட்டேன் என்ற செய்தியை நீங்கள் நாளைய தினம் காலையில் அவசியம் கேட்பீர்கள். உங்களுடைய மனசுக்குப் பிடிக்காத ஒரு காரியத்தைச் செய்யும்படி நான் துணிந்து கேட்டுக் கொள்வதைக் குறித்து என்னை மன்னிக்கும்படி பன்முறையும் வேண்டுகிறேன். இந்தக் கடிதத்தின் எழுத்தைக் கொண்டே, நான் யார் என்பது உங்களுக்கு எளிதில் தெரிந்து விடும் ஆகையால் இதை கையொப்பமில்லாமல் அனுப்பி இருக்கிறேன்.

– என்று தனது தங்கையால் எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்த துரைராஜாவின் முகம் மகிழ்ச்சியும் சந்தோஷத்தையும் காண்பித்தது. அவன் உடனே செட்டியாரை நோக்கி, "இந்தக் கடிதத்திலிருந்து முக்கியமான இரண்டு விஷயங்கள் நிச்சயமாகத் தெரிகின்றன. முதலாவது விஷயம் என்னவென்றால், மதனகோ பாலன் எப்படிப்பட்ட கெட்ட காரியத்தின் பொருட்டும் சந்திக்கவில்லை என்பது. இரண்டாவது என்னவென்றால், மதனகோ பாலன் எப்படிப்பட்ட கெட்ட காரியத்தைச் செய்யவும் இணங்காத மகா பரிசுத்தமான மனிதன் என்பது. ஆனால் இதில் குறிக்கப்பட்டிருக்கும் முக்கியமான விஷயந்தான் இன்னதென்பது தெரியவில்லை. அதிக அவசரமும் விபரீதமுமான ஒரு விஷயத்தைப் பற்றி அவனிடத்தில் பேச விரும்பியதாக இவள் எழுதி இருக்கிறாள்; அவன் வராவிட்டால் அன்றிரவே இறந்து போய்விட உத்தேசித் திருப்பதாகவும் எழுதியிருக்கிறாள். அந்தச் சங்கதிதான் விளங்க வில்லை" என்றான். செட்டியார், "மதன கோபாலனுக்கு இந்தக் கடிதம் வந்தவுடனே, அவன் இதை என்னிடத்தில் கொடுத்ததன்றி, அன்னியருடைய தோட்டத்துக்குள் ராக்காலத்தில் தான் போய் ஒரு யௌவனப் பெண்ணினிடத்தில் சம்பாஷிப்பது தவறென்றும், அதை எவரேனும் காண்பாரானால் அந்தப் பெண்ணின் கற்பைப் பற்றி அவர் சந்தேகிக்கவும், அதனால் அவளுக்குத் துன்பம் நேரவும் கூடுமென்றும், ஆகையால் தான் போகவில்லை என்றும் முடிவாகச் சொல்லி விட்டான். அவன் வராவிட்டால் இறந்து போய்விடுவதாகச் சொல்லுகிறாளே என்பதைக் கருதி, அதைத் தடுக்கும் பொருட்டு, நானே அவனை அனுப்பி வைத்தேன்; அவன் சற்றுமுன் கண் விழித்துப் பார்த்த போது என்னிடத்தில் இரண்டொரு வார்த்தைகள் சொன்னான். அன்றைய தினம் ராத்திரி உங்கள் தங்கைக்கும் மாரமங்கலம் மைனருக்கும் நிச்சயதார்த்தம் குறிப்பிட்டிருந்ததாகவும், மைனரைக் கலியாணம் செய்து கொள்ளத் தனக்குப் பிரியமில்லை என்றும், தான் எவ்வளவு தூரம் நியாயம் சொல்லியும் அத்தையம்மாள் ஒரே பிடிவாதமாக இருந்ததாகவும், ஆகையால் அவர்களுக்கு விரோதமாகப் பேசுவதைவிட, அன்றிரவு தான் வெளிப்படும் முன், மேன்மாடியிலிருந்து கீழே விழுந்து தன்னுடைய உயிரை விட்டுவிடத் தீர்மானித்திருந்ததாகவும் உங்களுடைய தங்கை சொன்னாளாம். ஆனால், மதனகோபாலன்

விஷயத்தில் கல்யாணியம்மாள் சொன்ன அவதூறைக் கேட்க, உங்களுடைய தங்கைக்கு சகிக்க முடியாத துன்பமும் துயரமும் ஏற்பட்டதாம். தான் இறந்து போவதற்குள், அந்த அவதூறு உண்மையானதா அல்லவா என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஓர் அவாவினால், அவனைக் கண்டு பேசும் பொருட்டே, இந்தக் கடிதம் எழுதப்பட்டதாம். அதைத் தவிர வேறொரு ரகசியமும் இல்லையாம்" என்றார்.

அதைக் கேட்ட துரைராஜா ஒருவாறு விசனமடைந்து, "அப்படியா சங்கதி! நல்ல காலந்தான் இந்த நிச்சயதார்த்தம் நின்றது! இல்லை யானால், என்னுடைய தங்கை இந்நேரம் இறந்து போயிருப்பாள்; இந்த விவரங்களையும், மைனருக்கு இவளைக் கட்டிக் கொடுக்கக் கூடாது என்று என்னுடைய பெரிய தகப்பனார் எழுதி இருப் பதையும் நான் உடனே அத்தையம்மாளிடத்தில் தெரிவித்து அந்த நினைவை மாற்றிவிடச் சொல்லுகிறேன். நமக்கு அனுகூலமாக, அந்த மைனரும் பாலாம்பாள் என்ற ஒரு தேவடியாளிடத்தில் பலமாக மாட்டிக் கொண்டு அவளுக்கு மகா விபரீதமான ஒரு பத்திரம் எழுதிக் கொடுத்திருக்கிறான். அந்தப் பத்திரத்தில் கல்யாணியம்மாளும் சிவஞான முதலியாரும் சாக்ஷிகளாகக் கையெழுத்துச் செய்திருக்கிறார்களாம்!" என்று கூறிய வண்ணம், மைனர் மோகனாங்கியைத் தேடிப் போனது முதல், அவன் பாலாம்பாளினது நட்பைப் பெற்று, அவளது மோக வலையில் வீழ்ந்து அவளோடு மைலாப்பூரிலிருப்பது வரையில் உள்ள சகலமான விவரங்களையும், கல்யாணியம்மாளும், சிவஞான முதலியாரும் ஆலந்தூருக்குப் போய் வந்த விவரங்களையும் விரிவாக எடுத்துக் கூறியபின், மேலும் பேசத் தொடங்கி, "அப்படியானால், கல்யாணியம்மாள் மதனகோபாலனைப் பற்றிச் சொன்ன வரலாறு சுத்தக் கட்டுப்பாடுதான் போலிருக்கிறது! அங்கே உண்மையில் என்னதான் நடந்ததாம்?" என்றான்.

அவன் சொன்ன வரலாறுகளை எல்லாம் நிரம்பவும் கவனமாக வும், ஆவலாகவும் கடைசிவரையில் கேட்டு வந்த செட்டியார் அவனை நோக்கி, மதனகோபாலனும் கண்மணியம்மாளும் சில தினங்களுக்கு முன் சம்பாஷித்திருந்த போது மீனாக்ஷியம்மாளும் துரைராஜாவும் திடீரென்று வந்து அவனைக் கண்டித்து

பங்களாவை விட்டு அனுப்பியது முதல் அவன் அதனால் பெருத்த விசனத்தில் மூழ்கி மெய்ம்மறந்து கல்யாணியம்மாளது அந்தப் புரத்திற்குள் நுழைந்ததும், பிறகு அங்கே கல்யாணியம்மாள் செய்த காரியங்களும், அவன் தப்பியோடியதும் ஆகிய சகலமான விவரங்களையும் தெரிவித்தார்.

அந்த வரலாற்றைக் கேட்ட துரைராஜா, மதனகோபாலனது விஷயத்தில் மிகுந்த இரக்கமும் விசனமும் கொண்டதன்றி, கல்யாணியம்மாளின் மீது அளவிலடங்காத அருவருப்பும் கொதிப்பும் அடைந்தவனாய் செட்டியாரை நோக்கி, "இந்த விஷயத்தை நினைக்க நினைக்க, என் மனம் பதறுகிறது. கல்யாணியம்மாள், தானே இவன் விஷயத்தில் தவறாக நடந்து விட்டு, முன் ஜாக்கிரதையின் பொருட்டு அதை வேறாக மாற்றி, எல்லா இடங்களுக்கும் போய் இவனுடைய உத்தியோகத்தை எல்லாம் போக்கி, பெயரையும் கெடுத்ததோடு நிற்காமல், இன்னமும் ஓர் அபாரமான காரியத்தையும் செய்திருக்கிறாள். அதை நான் சொன்னால், நீங்கள் உண்மை என்று நம்பவே மாட்டீர்கள். அந்த விஷயத்தில் அவள் என்னையும் மயக்கி முட்டாளாக்கி தன்னுடைய காரியத்தை சாதித்துக் கொண்டிருக் கிறாள். இப்போது மதனகோபாலன் சுடப்பட்டதற்கும் அவளே மூலகாரணமான மனிஷி. அவளுடைய மோக வலையில் வீழ்ந்த நான் இந்தக் காரியத்தைச் செய்து விட்டேன். இதோ இருக்கும் இந்த மூன்று கடிதங்களையும், நீங்கள் படித்துப்பார்த்தால், எல்லா விஷயங்களும் தெளிவாக உங்களுக்கு விளங்கிப்போம்" என்று கூறிய வண்ணம், துரையம்மாள் என்ற கையெழுத்தோடு தனக்கு வந்த இரண்டு கடிதங்களையும் கொடுத்து, தான் பார்க் உத்தியான வனத்தில் வெள்ளைக்கார உடையில் வந்த ஸ்திரீயைச் சந்தித்த போது நடந்த சம்பாஷணையின் விவரத்தையும் வெளியிட்டு காகித மூட்டைக்குள்ளே இருந்த உடைகளையும் அவருக்குக் காட்டினான். அன்றைய தினம் காலையில் மைனரது கடிதமும் மூட்டையும் கிடைத்த பிறகு தான் ரென் பென்னெட் கம்பெனிக்குப் போய் அங்கே இருந்து கல்யாணியம்மாளிடம் போனதையும், அங்கே நடந்த சம்பாஷணையின் விவரங்களை யும் விரித்துக் கூறினான். பசவண்ண செட்டியார் அந்த மூன்று

கடிதங்களையும் படித்து, அவன் சொன்ன வரலாறுகளையும் கேட்கவே, மிகுந்த வியப்பும், திக் பிரமையும், ஒருவித மகிழ்ச்சியும் அடைந்தவராய், சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்து மௌனமாக இருந்தபின், 'என்ன ஆச்சரியம்! ஒரு பெண்பிள்ளை எப்படிப்பட்ட தந்திரம் செய்திருக்கிறாள் பார்த்தீர்களா! அவள் தன்னுடைய கருத்தை மகா யூகமாக முடித்துக் கொண்டதுமன்றி உங்களையும் ஏமாற்றிவிட்டாள் அல்லவா! அவள் மதனகோபாலன் விஷயத்தில் பெருத்த பெருத்த தீம்புகள் செய்து அவனுடைய உயிருக்கே ஹானி தேடியதோடு, உங்களையும் ஏமாற்றி மகா அக்கிரமமான காரியம் செய்திருக்கிறாள். ஆகையால் நாம் இந்த விஷயத்தை இவ்வளவோடு சும்மா விட்டுவிடக் கூடாதென்று நினைக்கிறேன். நீங்கள் மாத்திரம் நான் சொல்வது போல நடந்து எங்களுக்கு அனுசரணையாக இருப்பதானால் நான் அந்தக் கல்யாணியம்மாளுடைய கண்ணில் விரல் கொடுத்து ஆட்டி விடுவேன்; அதுவும் தவிர, ஊரார் எல்லோரும் ஏளனம் பண்ணி சிரிக்கும் படியாகவும் செய்துவிடுவேன். நாம் எடுத்துக் கொள்ளும் நடவடிக்கையில், அவள் பொறியிலகப்பட்ட எலி போல விழித்துத் திக்குமுக்காடிப் போக வேண்டும்' என்றார்.

அதைக் கேட்ட துரைராஜா, "இனி நான் உங்களுடைய மனிதன்; நீங்கள் எப்படி நடந்து கொள்ளச் சொல்லுகிறீர்களோ அப்படி நடந்து கொள்ள நான் சித்தமாக இருக்கிறேன். அவளுடைய இறுமாப்பையும் கோட்டத்தையும் எப்படியாவது நீங்கள் அடக்கி மட்டந் தட்டினால், என் மனம் குளிரும். ஆனால், நான் சுட்ட விஷயத்தில், மதனகோபாலனும் நீங்களும் மற்றவரும் என் மேல் வருத்தம் பாராட்டாமல், அதை மறந்து என்னை மன்னித்துவிட வேண்டும். நீங்கள் கல்யாணியம்மாள் பேரில் எடுத்துக் கொள்ளும் நடவடிக்கையில் எனக்கு எவ்விதக் கெடுதலும் உண்டாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்" என்றான். உடனே பசவண்ண செட்டியார், "சரி; அப்படியே நடந்து கொள்வோம். நீங்கள் ஒரு காரியம் செய்ய வேண்டும். மதனகோபாலனை நீங்கள் சுட்ட விஷயத்தில் கழிவிரக்கமும் விசனமும் கொண்டு, நீங்களாகவே அவனுக்கு எழுதுவது போல ஒரு கடிதம் எழுதி அதை என்னிடத்தில் கொடுங்கள். துரையம்மாள் என்று கையெழுத்துச் செய்யப்பட்ட

முதலாவது கடிதம் உங்களுக்குக் கிடைத்ததையும், அதன்படி உத்தியான வனத்தில் வந்து சந்தித்த அந்த ஸ்திரீக்கும் உங்களுக்கும் நடந்த சம்பாஷணையின் விவரத்தையும், மறுபடியும் கிடைத்த கடிதத்தின் சங்கதியையும், இன்று மைனரால் அனுப்பப்பட்ட கடிதத்தின் விவரத்தையும், ரென் பென்னெட் கம்பெனியில் கிடைத்த செய்தியையும் எழுதி நீங்கள் அந்த ஸ்திரீயின் மோகவலையிற்பட்டு அவளுடைய வார்த்தைகளை நம்பி, அவனைச் சுட்டுவிட்டபடியால் அதைப்பற்றி இப்போது நிரம்பவும் விசனப்பட்டு வருந்துவதாகவும் மன்னிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்வதாகவும் எழுதி என்னிடத்தில் கொடுங்கள். அதோடு இந்த மூன்று கடிதங்களையும், வெள்ளைக்கார உடைகளடங்கிய இந்த மூட்டையையும் என்னிடத்தில் கொடுங்கள். அதற்கு மேல் ஆகவேண்டிய விஷயங்களை எல்லாம் நான் கவனித்துக் கொள்ளுகிறேன்" என்றார்.

துரைராஜா மிகுந்த சந்தோஷத்தோடு அந்த ஏற்பாட்டை ஒப்புக் கொண்டு, உடனே மேஜைக்கருகில் போய் உட்கார்ந்து கொண்டு, அவர் சொல்லியபடி மதனகோபாலனுக்கு ஒரு கடிதமெழுதி உறைக்குள் போட்டு, அதையும் மற்ற மூன்று கடிதங்களையும், துணி மூட்டையையும் எடுத்து செட்டியாரிடத் தில் கொடுக்க, அவரும் மகிழ்ச்சியோடு அவைகளை வாங்கி, கடிதங்களை சட்டைப் பைக்குள்ளும், மூட்டையை பக்கத்திலும் வைத்துக் கொண்டவராய், "நான் இப்போது இங்கே வந்ததனால் எவ்வளவு பெருத்த அனுகூலம் ஏற்பட்டது பார்த்தீர்களா! இந்த ஆதாரங்களே போதுமானவை. இவைகளை வைத்துக் கொண்டு நான் அந்தக் கல்யாணியம்மாளைக் கதற அடித்து, மதன கோபாலனுடைய காலிலும், உங்களுடைய காலிலும் வந்து விழுந்து கெஞ்சி மன்றாடும்படி செய்துவிடுகிறேன். நாளைய தினம் அவள் என்ன பாடுபடப் போகிறாள் பாருங்கள். (சிறிது நேரம் மௌனம்) சரி; இந்தச் சங்கதியை இவ்வளவோடு நிறுத்துவோம். நான் வந்த போது இந்தச் சங்கதியைப் பற்றி இவ்வளவு நேரம் பேசுவோம் என்ற நான் எண்ணவே இல்லை. இந்த ஒரு விஷயம் ஒருமணி நேரம் இழுத்து விட்டது. நீங்கள் இன்று மூன்று மணிக்கு யாரோ சில அருமையான நண்பர் களுடைய ஜாகைக்குப் போக

வேண்டும் என்று சொன்னீர்கள், அதற்கும் நேரம் நெருங்குகிறது. இன்னமும் எத்தனையோ விஷயங்களைப் பற்றி, நாம் விஸ்தாரமாகப் பேச வேண்டும். உங்களுடைய பிரியமான நண்பர்களை எல்லாம் நானும் பார்த்து அவர்களோடு சிநேகம் செய்து கொள்ள வேண்டும். எனக்கு நீங்கள் அந்த மைனரையும் பாலாம்பாளையும் சிநேகம் செய்துவைக்க வேண்டும். நாம் எல்லோரும், நாடகம், பயாஸ் கோப் முதலியவைகளுக்கும், மற்ற சகலமான வேடிக்கை களுக்கும் போய் சந்தோஷமாகப் பொழுதைப் போக்க வேண்டும். உங்களுக்கு உங்களுடைய பெரிய தகப்பனார் சொற்பமான பணத்தொகையையே அனுப்புவதாக அவர் இரண்டொரு சந்தர்ப்பங்களில் சொல்ல நான் கேள்விப்பட்டிருக் கிறேன். அதனால் நீங்கள் தாராளமாகப் பணச் செலவு செய்ய முடியாமல் இருக்கலாம். இனிமேல் என்னுடைய பணம் எல்லாம் உங்களுடையது. பதினாயிரமல்ல, லட்சமல்ல, எவ்வளவு தொகையானாலும் நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்" என்றார்.

அதைக் கேட்டு பரம சந்தோஷமடைந்து மெய்ம்மறந்து போன துரைராஜா சடக்கென்று எழுந்து, அந்த அறையின் வாசற்படிக்குப் போய் தலையை அப்பால் நீட்டி அங்கே இருந்த வேலைக்காரர் களுக்கு ஏதோ சைகை காட்டிவிட்டு, திரும்பவும் உள்ளே வந்து, அங்கே கிடந்த சில நாற்காலிகளை இழுத்து அங்குமிங்கும் வைக்கத் தொடங்கினான். அடுத்த நிமிஷம் நாலைந்து வேலைக் காரர்கள் சிற்றுண்டிகள், காப்பி, கலர், சோடா, பழவகைகள், தாம்பூலாதிகள் முதலியவற்றை நாலைந்து தட்டுகளில் வைத்து மரியாதையாக எடுத்து வந்து ஒரு பெருத்த மேஜையின் மேல் வைத்து விட்டுப் போக, அதைக் கண்ட செட்டியார் ஒருவாறு கிலேசமடைந்து, "இதென்ன இது? யாருக்காக இந்த ஏற்பாடுகள் எல்லாம் நடக்கின்றன? நான் சாப்பாட்டு ராமன் என்பதை நீங்கள் எப்படியோ அறிந்து கொண்டிருக்கிறீர்களே!" என்று பரிகாசமாகப் பேச, அதைக் கேட்ட துரைராஜா, "நீங்கள் பகல் போஜனம் செய்து அதிகநேரம் ஆகியிருக்கலாம். கோமளேசுவரன் பேட்டையி லிருந்து இவ்வளவு தூரம் பிரயாணம் செய்து அலுத்துப் போயிருக்கிறீர்கள். எழுந்து வாருங்கள்" என்று அன்பாகவும் நயமாகவும் உபசரிக்க, செட்டியார் அதிகமாகப் பிணங்காமல், "சரி; காத்துக் கொண் டிருக்கிறேன். ஒரு வயிற்றுச் சோறு அகப்படாதா என்று

எல்லோரும் அழும்படியான இந்தப் பஞ்ச காலத்தில் இப்படிப்பட்ட பெருத்த விருந்துக்கு அழைப்பதை யாராவது வேண்டாம் என்று சொல்லுவார்களா? நீங்களும் வந்து உட்காருங் கள்; இரண்டு பேருமாகச் சாப்பிடுவோம்" என்று கூறிய வண்ணம் எழுந்து, சிற்றுண்டித் தட்டுகளிருந்த மேஜைக்கருகில் வந்து, பக்கத்தில் கிடந்த நாற்காலிகளுள் ஒன்றன்மேல் உட்கார, துரைராஜாவும் வந்து பக்கத்திலிருந்த ஜலத்தை எடுத்து, அவர் தமது கைகளைச் சுத்தம் செய்து கொள்வதற்கு அதை வார்த்து, அதன் பிறகு தின்பண்டங்களை எல்லாம் பெரும் பாகங்களாக எடுத்து அவருக்கு முன்னால் வைத்து மிகுதியைத் தானும் வைத்துக் கொள்ள, இருவரும் சந்தோஷமாகப் பேசிய வண்ணம், அந்த இன்பகரமான வேலையைச் செய்யத் துவக்கினர்.

அப்போது துரைராஜா மிகுந்த உற்சாகத்தோடு அவரை நோக்கி, "மைசூரில் தாங்கள் நிரம்பவும் ருசியான மிட்டாய்களையும் உயர்ந்த பலகாரங்களையும் சாப்பிட்டவர்கள். இந்த ஊரில் செய்யப்படும் பதார்த்தங்கள் அவ்வளவு சுகமானவையாக இருக்கிறதில்லை; என்ன செய்கிறது! நீங்களும் எங்களூர் மனிதர் ஆகிவிட்டபடியால், நாங்ள் சாப்பிடுவதைத் தான் நீங்களும் சாப்பிட வேண்டும்" என்றான்.

அதைக் கேட்ட செட்டியார் சந்தோஷமாக நகைத்து, "ஏன்! இந்த பட்சணங்களுக்கென்ன குறை? எல்லாம் நன்றாக இருக்கிறதே. ஆனால், நம்மோடு கூட இருந்து சாப்பிட இன்னமும் பல நண்பர்கள் இல்லையே என்பது தான் ஒரு குறை; அதைத் தவிர, வேறே ஒரு குறையுமில்லை" என்றார். உடனே துரைராஜா, "சரி சரி; அந்தக் குறையை நாளைய தினம் நிவர்த்தி செய்து விடுகிறேன்; உங்களுக்கு எப்படிப்பட்ட நண்பர்கள் இருந்தால், சந்தோஷம் அதிகம். ஆண்பிள்ளைகளாக இருப்பது சுகமா? அல்லது பெண் பிள்ளைகளாய் இருப்பது சுகமா?" என்றான்.

அதைக் கேட்ட செட்டியார் கரைகடந்த ஆனந்த பரவசம் எய்திப் பூரித்துப் புளகாங்கிதம் அடைந்தவர் போல நடித்து, "எனக்கு எப்போதும் பெண் பிள்ளைகளோடு கூட சந்தோஷமாக விளை யாடிக் கொண்டிருப்பது தான் பிடிக்கும்; ஆனால், அவர்கள் அதிக வயசானவர்களாக இருக்கக்கூடாது; இருபது வயசுக்கு மேற்பட்ட வர்களே உதவாது" என்றார்.

உடனே துரைராஜா, "பேஷ்! சரியான பேச்சு! நான் பிடிக்கிற வர்களெல்லாம் பதினெட்டு வயசுக்கு மேற்படாமலே இருப் பார்கள்; அவர்கள் மாத்திரம் சிறு பெண்ணாக இருக்க வேண்டும் என்கிறீர் களே; நீங்களும் சிறுபிள்ளையாக இருக்க வேண்டும் என்று அவர்கள் ஆசைப்பட்டால் அதற்கென்ன செய்கிறது?" என்று புரளியாக நகைத்த வண்ணம் வினவினான்.

அதைக் கேட்ட செட்டியார் விசனமடைந்தவர் போலக் காட்டிக் கொள்ளாமல் நிதானமாகப் பேசத் தொடங்கி, "என்னைப் பார்த்தால் அவ்வளவு வயசான கிழவனாகவா இருக்கிறது? எனக்கு இப்போது வயசு முப்பத்தைந்து தானே ஆகிறது. நான் சமீப காலத்தில் பிரமாதமான வியாதியில் பட்டு எழுந்தேன். அதனால், என்னுடைய தோற்றம் கிழத்தோற்றமாக மாறி இருக்கலாம். அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்," என்றார்.

துரைராஜா சந்தோஷமாக நகைத்து, "அப்படியானால், சரி தான். நல்ல பதினாறு வயசுக் குமரிகளாகப் பார்த்து, வலது பக்கத்துக்கு இரண்டு பேரும் இடது பக்கத்துக்கு இரண்டு பேரும் அமர்த்தினால் உங்களுக்குப் போதுமல்லவா?" என்றான்.

செட்டியார் ஆனந்தபரவசம் அடைந்தவராய், "ஓ! போதும் போதும்! நான் தான் இந்த விஷயங்களில் நிரம்பவும் பழகினவன் என்று இதுவரையில் எண்ணிக் கொண்டிருந்தேன். நீங்கள் இவ்வளவு அதிபாலியத்திலேயே என்னைவிட அசாத்தியமாகப் பழகியிருக்கிறீர்கள். உங்களுக்கு இப்போது வயசு எவ்வளவு ஆகிறது?" என்றார்.

துரைராஜா, "எனக்கு இருபத்து மூன்றாவது வயசு ஆரம்ப மாகிறது" என்றான்.

**செட்டியார்:-** உங்களுக்கு இன்னமும் கலியாணம் ஆக வில்லையா?

**துரைராஜா:-** இல்லை. அந்தக் கால்கட்டு எதற்காக? கலியாணம் செய்து கொண்டவனுக்கு ஒரு பெண்டாட்டி; செய்து கொள்ளாத வனுக்கு ஊரெல்லாம் பெண்டாட்டிகள்.

*செட்டியார்:-* மெய்தான். நீங்களோ அதி பாலியமானவராக இருக்கிறீர்கள்; ஸ்திரீகளின் விஷயத்திலோ அபாரமான அனுபவம் வாய்ந்தவராக இருக்கிறீர்கள். நீங்கள் இதுவரையில் ஒரு சுமார் எத்தனை ஸ்திரீகளை அனுபவித்திருப்பீர்கள்? இந்தத் துறையில் நீங்கள் எத்தனை வருஷ காலமாக அனுபவம் சம்பாதித்து வருகிறீர்கள்.

*துரைராஜா:-* (மிகவும் பெருமையாக) நான் பதினைந்தாவது வயசில் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த போதே எனக்கு இந்த விஷயத்தில் அனுபவம் ஏற்பட்டது. கல்வியில் எனக்கு ஒரு சரஸ்வதியின் கருணாகடாக்ஷம் ஏற்படாவிட்டாலும், இந்தக் கல்வியில் எத்தனையோ சரஸ்வதிகளின் கிருபாநோக்கம் ஏற்பட்டு விட்டது. அது முதல் இதுவரையில் எனக்குச் சுகம் கொடுத்த ஸ்திரீகளின் தொகை ஒரு சுமார் ஆயிரம் இருக்கலாம்.

*செட்டியார்:-* (மிகுந்த மகிழ்ச்சியடைந்தவராய்) அப்படியானால், நீங்கள் முதல் வகுப்பில் தேறியவர்கள்தான். ஆனால், எனக்கு இன்னொரு சந்தேகம் உண்டாகிறது. நீங்கள் இதுவரையில் ஒரு சுமார் ஆயிரம் ஸ்திரீகளுடைய நட்பைச் சம்பாதித்துக் கொண்ட தாகச் சொல்லுகிறீர்களே. அவர்கள் எல்லோரும் தாசியின் வகுப்பைச் சேர்ந்தவர்களா? அல்லது, குடும்ப ஸ்திரீகளா?

*துரைராஜா:-* தாசிகள் சுமார் 100-பேர் இருக்கலாம். மற்ற எல்லோரும் குடும்ப ஸ்திரீகளே. அந்தக் குடும்ப ஸ்திரீகளும் பெரும்பாலோர் சொந்தப் புருஷனுக்கு உள்பட்டவர்கள்.

*செட்டியார்:-* (கரைகடந்த மகிழ்ச்சி அடைந்தவர் போல நடித்து) ஆகா! பலே பலே! நீங்கள் இந்த ராஜதானிக்கு முதல் பையனாகத் தேறியவர்கள் என்றே மதிக்க வேண்டும். இது தான் சாமர்த்தியம்! கொண்ட புருஷனுக்கு அடங்கியுள்ள ஸ்திரீகளை அந்தப் புருஷன் மார்களுக்குத் தெரியாமல் அடைவது தான் பரமசுகம்; அது தான் மிகுந்த சூரத்தனம். நீங்கள் இவ்வளவு அபாரமான சக்தி வாய்ந்த மகான் என்ற விஷயம் உங்களுடைய பெரிய தகப்பனாருக்கு இது வரையில் கொஞ்சம்கூடத் தெரியாது. அப்படித் தெரிந்திருந் தாலும் இதன் அருமை அவருக்குத் தெரியப் போகிறதில்லை. அவர் மிகுந்த சந்தோஷம் அடைவதற்குப் பதிலாக, அளவற்ற

அருவருப்பையும், பகைமையையும் கொள்வார். எனக்கும் அவர்களுக்கும் கூட இந்த விஷயத்தினாலே, கொஞ்சம் மனஸ் தாபம்கூட உண்டு. அவர்கள் மகா சுத்தமான மனிதர். அன்னிய ஸ்திரீகளைத் தனது சொந்தத் தாய்மார்களாகவும், தங்கை தமக்கைகளாகவும் மதிக்கிறவர்கள். நானோ உங்களைச் சேர்ந்தவன். நல்ல அழகான பெண்களெல்லாம் நமக்காகத்தான் பிறந்தவர்கள் என்று நீங்கள் எப்படி எண்ணி இருக்கிறீர்களோ அதைப் போலவே அதைப் போலவே நானும் எண்ணுகிறவன். இது அவர்களுக்குப் பிடிக்கிறதில்லை; அவர்கள் என்னை அடிக்கடி கண்டிப்பது வழக்கம். ஆகவே, நான் அவர்களுடைய உபத்திரவம் இல்லாமல் இங்கே வந்து இருந்துவிட உத்தேசித்து விட்டேன். அதிருக்கட்டும்; எனக்கு இன்னொரு சந்தேகம் உண்டாகிறது; எனக்கு இந்த விஷயத்தில் இருக்கும் ஆசையோ ஆகாயத்தை அளாவியதாக அவ்வளவு அபரிமிதமாக இருக்கிறது. ஆனால், உடம்பிலோ வல்லமை இல்லாமல் இருக்கிறது; நானும் உங்களுக்கு மேல் கட்டுமஸ்தான உடம்போடு தானிருந்தேன். அந்தக் காலத்தில்கூட, இரண்டு மூன்று ஸ்திரீகளிடத்தில் கூட நட்பாக இருக்க முடியவில்லையே; நீங்கள் இந்த ஆயிரம் கோபிகா ஸ்திரீகளையும் எப்படித் திருப்தி செய்து நீங்களும் சந்தோஷம் அடைகிறீர்கள்? அதுதான் எனக்கு அதியற்புதமாகத் தோன்றுகிறது!

***துரைராஜா:-*** அந்த விஷயம் உண்மையானதுதான். நானும் ஆரம்பத்தில் அந்தத் துன்பத்தினால் எவ்வளவோ உபத்திரவங்க ளுக்கும் அவமானத்துக்கும் ஆளானேன். கடைசியாக ஒரு தாசியின் போதனையால், நான் சீமையிலிருந்து வரும் மாமிசங் களையும், ஒயின், பிராந்தி, விஸ்கி முதலிய வஸ்துக்களையும் உபயோகிக்கத் தொடங்கினேன்; அதன் பிறகு அவ்வளவு சிரமம் தோன்றவில்லை.

***செட்டியார்:-*** ஓகோ! அப்படியா! அந்த வழியை இது வரையில் எனக்கு ஒருவரும் சொல்லவில்லை. நானும் இனிமேல், அந்த முறையைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டும். இன்னொரு விஷயம்; சீமைச் சரக்குகளை எல்லாம் நீங்கள் இங்கேயே வரவழைக்கிறது வழக்கமோ?

*துரைராஜா:-* அநேகமாக, நானே வெள்ளைக்காரருடைய போஜன சாலைக்குப் போய் திருப்தியாகப் போட்டுக்கொண்டு வந்து விடுவேன்; அதோடு இங்கே வரவழைப்பதும் உண்டு.

*செட்டியார்:-* சரிதான்; ஆனால் அந்த வெள்ளைக்காரர்களுடைய சாமான்கள் எல்லாம் அபாரமான விலையுள்ளவைகள் ஆயிற்றே; உங்களுடைய பெரிய தகப்பனார் அனுப்பும் சொற்பத் தொகையை வைத்துக் கொண்டு, நீங்கள் இத்தனை செலவுகளை யும் எப்படிச் செய்து வருகிறீர்கள்?

*துரைராஜா:-* (மிகவும் பெருமையாக நிமிர்ந்து) என்ன செய்கிறது! பெரிய தகப்பனார் அனுப்புவது விஸ்கி பாட்டில்களுக்குக் கூடக் காணாது; அத்தையம்மாள் கொஞ்சம் கொடுப்பார்கள்; அவர் களுக்குத் தெரியாமல் அவர்களுடைய பெட்டியைத் திறந்து நகைகளை எடுத்து விற்பதுமுண்டு; மைனரிடத்தில் இனாமாக வாவது, கடனாகவாவது வாங்குவதுமுண்டு; என்னிடத்தில் சிநேகமாக இருக்கும் ஸ்திரீகளிடத்தில் ஆயிரம் இரண்டாயிரம் பெறும்படியான உயர்ந்த நகைகள் இருந்தால், அவர்களை ஏமாற்றி அதை அபகரித்து விடுவதும் உண்டு; இந்த வழிகளில் எதிலும் பணம் கிடைக்காவிட்டால், மைனரோடும், இன்னம் சிலரோடும் சேர்ந்து, ரங்குபர்லா என்ற சீட்டாட்டம் ஆடி, அதனால் ஆயிரம், ஐந்நூறு சம்பாதித்து விடுவேன்; என்ன செய்கிறது! நமக்கோ சிற்றின்பப் பிரியம் அதிகம்; பணச் செலவோ அபாரமானது; நியாயமான வழியில் வருமானமோ பூஜ்ஜியம்; அதற்காக, இந்த மாதிரி பலவகையான தந்திரங்கள் செய்ய வேண்டியிருக்கிறது. இப்போதுகூட, எனக்கு ஐயாயிரம் ரூபாய் நிரம்பவும் அவசரமாகத் தேவையாக இருக்கிறது. நான் போய்க் கேட்டால் என்னை நம்பிக் கொடுக்கக்கூடியவர்கள் ஒருவரு மில்லை; அதற்கு என்னவிதமான தந்திரம் செய்யலாம் என்று ராப்பகலாக யோசனை செய்து கொண்டிருக்கிறேன் – என்றான்.

அதற்குள் அவர்களது சாப்பாடும் முடிவடைந்தது. இருவரும் எழுந்து கையலம்பிக் கொண்டு, வேறொரு மேஜையண்டையில் போய் உட்கார்ந்து தாம்பூலம் தரித்துக் கொண்டனர்.

அப்போது செட்டியார் துரைராஜாவை நோக்கி, "சரி; இனிமேல் நீங்கள் பணத்துக்காக இவ்வளவு பாடுபடத் தேவையில்லை; உங்களுக்கு எந்த நிமிஷத்தில் எவ்வளவு பணம் தேவையானாலும் அதை நான் உடனே கொடுத்து உதவுகிறேன். இப்போது ஐயாயிரமல்லவா தேவை என்கிறீர்கள்; நான் வீட்டுக்குப் போனவுடனே பதினாயிரம் ரூபாய் அனுப்புகிறேன். இஷ்டம் போலச் செலவு செய்து கொள்ளுங்கள்; எனக்கு நேரமாகிறது. நாம் மறுபடியும் நாளைய சாயுங்காலம் என்னுடைய பங்களாவில் சந்திக்கலாம். மிகுதி விஷயங்களை எல்லாம் நாம் அங்கேயே பேசிக்கொள்வோம். உங்களுடைய கடிதங்களைப் பார்த்ததி லிருந்தும், உங்களோடு சம்பாஷித்ததிலிருந்தும், உங்களுடைய மனசில் ஓர் ஆசை இருந்து வருவதாகத் தெரிகிறது. மதன கோபாலனுடைய தங்கையான மோகனாங்கியை அடைய வேண்டும் என்று நீங்கள் நிரம்பவும் பிரியப்பட்டு அந்த விஷயத்தில் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அந்தப் பெண் இதுவரையில் நாடகத்தில் சேர்ந்து நடித்து வந்தாள் ஆனாலும் சகலவிதமான நற்குணங்களும், நன்னடத்தையும் வாய்ந்தவள் என்று என்னுடைய கூட்டாளி யான உங்கள் பெரிய தகப்பனார் சொல்லக் கேள்விப்பட்டிருக் கிறேன். எத்தனையோ மகாராஜாக்கள் எல்லோரும் அவளை அடைய வேண்டும் என்று முயற்சித்தார்கள். அவளுடைய விருப்பம் எவரிடத்திலும் செல்லவில்லை. அவள் நாடகத்தில் இருப்பதால், அவளைக் கண்ட ஆண்மக்கள் யாவரும், அவளிடத்தில் துர்மோகங் கொண்டு கெட்டழிந்து போகிறார்கள் ஆகையால், அவளை நாடகத்துக்கு அனுப்பாமல் வைத்துக் கொள்வதே உசிதமானதென்று மதனகோபாலன் சில தினங்களுக்கு முன் என்னுடைய கூட்டாளிக்கு எழுதினான். அவர்களும் அதற்கு இணங்கி, இனி அவளை வெளியிலேயே அனுப்ப வேண்டாம் என்று கண்டித்து எழுதிவிட்டார்கள். ஆகையால், எப்படிப்பட்ட வரும் இனி அவளிடத்தில் நெருங்குவதே முடியாத காரியம். நீங்கள் மதனகோபாலனைச் சுட்ட விஷயத்தில் இப்போது அவர்களுக்கு உங்கள் மேல் அருவருப்பு உண்டாயிருக்கிறது; ஆகையால் நான் முதலில் அவர்களிடத்தில் உங்களுடைய நற்குணங்களை எல்லாம் எடுத்துச் சொல்லி மனசை மாற்ற

முயலுகிறேன். இந்தக் கல்யாணியம்மாளுடைய விஷயத்தில் நீங்கள் கடைசி வரையில் உறுதியாக இருந்து, நம்முடைய வழக்கு ஜெயமாவதற்கு உதவி செய்தால், மோகனாங்கியின் பிரியம் உங்கள் மேல் ஏற்படும். அதன் பிறகு உங்கள் இருவருக்கும் நான் பழக்கம் செய்து வைக்கிறேன். அப்புறம் எல்லாம் உங்களுடைய சாமர்த்தியத்தைப் பொருத்தது" என்றார்.

எதிர்பாராத அந்த சந்தோஷ சங்கதியைக் கேட்ட துரைராஜா, கரைகடந்த களிப்படைந்து பூரித்தவனாய் நன்றியறிவும், புன்னகையும் தவழ்ந்த முகத்தோடு செட்டியாரைப் பார்த்து, "அந்த தெய்வந்தான் எனக்கு உதவி செய்ய நினைத்து உங்கள் ரூபமாக வந்திருக்கிறது! என் விஷயத்தில் நீங்கள் இவ்வளவு அபாரமான பிரியத்துக்குப் பதிலாக நான் உங்களுக்கு என்ன தான் செய்யப் போகிறேன்! நீங்கள், ஒருவனைக் கொன்றுவிட்டு வா என்றால், அதே நொடியில் அப்படியே செய்வேன்; ஒருவனுடைய பெண்ஜாதியைத் தூக்கிக் கொண்டு வா என்றால், நீங்கள் சொல்லி வாய் மூடும் முன் அப்படியே செய்வேன். இன்னம் செய்யத்தகாத வேறே எந்தக் காரியத்தை நீங்கள் செய்யச் சொன்னாலும் நான் உடனே செய்து முடிப்பேன்; இதை நீங்கள் பிரமாணமாக எண்ணிக் கொள்ளலாம்" என்று உறுதியாகவும் உருக்கமாகவும் கூறினான்.

அதைக் கேட்ட பசவண்ண செட்டியார் அளவிலடங்கா மகிழ்ச்சி அடைந்தவர் போல நடித்து, "சிநேகிதர் இருந்தாலும் இப்படி யல்லவா இருக்க வேண்டும்! இவ்வளவு அருமையான குணங்கள் வாய்ந்த சிநேகிதர் இருக்கையில் இனி எனக்கு என்ன குறை ஏற்படப் போகிறது! ஏதோ என்னுடைய நல்ல அதிர்ஷ்டத்தினாலே தான் நான் உங்களுக்கு நண்பனானேன்; எனக்கு நேரமாகிறது; நான் உத்தரவு வாங்கிக் கொள்ளுகிறேன். ஜாகைக்குப் போன வுடனே பணத்தை அனுப்பி வைக்கிறேன். நாளைய தினம் ராத்திரி நீங்கள் தவறாமல் உங்களுடைய நண்பர்களை அழைத்து வந்து எனக்குப் பழக்கம் செய்து வைக்க மறந்து விடாதீர்கள்" என்று கூறி வெள்ளைக்கார உடைகள் அடங்கிய மூட்டையைக் கையில் எடுத்துக் கொண்ட வண்ணம் எழுந்தார். உடனே துரைராஜா அவ்வாறே செய்வதாக உறுதி கூறி அவரையும் அழைத்துக்

கொண்டு, மேன்மாடியை விட்டுக் கீழே இறங்க, அங்கே ஆயத்தமாக நின்று கொண்டிருந்த ஸாரட்டில் பசவண்ண செட்டியார் உட்கார்ந்து மறுபடியும் துரைராஜாவினிடத்தில் விடை பெற்றுக் கொள்ள, உடனே வண்டி புறப்பட்டது.

அது சிறிது தூரம் போனவுடனே செட்டியார் சாரதியை நோக்கி, வண்டியை மைலாப்பூரில் உள்ள வக்கீல் அருணகிரிப்பிள்ளை யின் வீட்டிற்கு ஓட்டும்படி உத்தரவு செய்ய, அவன் அவ்வாறே ஓட்டலானான். துரைராஜாவின் பெரிய தகப்பனாரான கிருஷ்ணா புரம் ஜெமீந்தாரே பசவண்ண செட்டியார் என்ற பெயரை வகித்துக் கொண்டு வந்திருப்பதாக முன்னரே சொல்லப்பட்ட தல்லவா; அவர், இறந்து போன தமது தம்பியின் புத்திரனும் தமக்கு வார்சுதார்னுமான துரைராஜாவைப் பற்றிய பல தடவைகளில் பலர் மூலமாகக் கெட்ட செய்திகளை எல்லாம் கேள்வியுற்றிருந் தார் ஆனாலும் அவைகளை நம்பாமல் நேராகவே வந்து அவனோடு அன்னியோன்னியமாகப் பழகி, அவனது உண்மை யான யோக்கியதை எவ்வளவு என்பதைத் தாமாகவே அறிந்து கொள்ள வேண்டும் என்பது அவரது விருப்பம். ஆகவே, அவர் அவனோடு சம்பாஷித்திருந்த போது அவனது மனப்போக்குக் கிசைய, வார்த்தைகளை எல்லாம் உபயோகித்து, உண்மையில் அவன் எப்படிப்பட்ட நடத்தை உள்ளவன் என்பதை அதிக சுலபத்தில் கண்டு கொண்டார். அவரது மனதை முழுதும் தான் கவர்ந்து அவரை சந்தோஷக் கடலில் ஆழ்த்திவிட்டதாக, துரைராஜா நினைத்து இன்பக் கனவு கண்டு கொண்டிருந்தான் ஆனாலும், செட்டியாரோ அவனை விட்டுப் பிரிந்த பிறகு மிகுந்த விசனத்தில் ஆழ்ந்து, எவ்வளவோ பாடுபட்டுத் தேடிய அபாரமான தமது செல்வம் எல்லாம், அப்படிப்பட்ட அயோக்கிய சிகாமணிக்கா போய்ச் சேருவது என்ற நினைவினாலும் கவலையினாலும் துயருற்றுத் தளர்வடைந்தவராகச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அந்த ஸாரட்டு வண்டி அருணகிரிப் பிள்ளையின் வீட்டு வாசலில் போய் நின்றது. பசவண்ண செட்டியார் உடனே கீழே இறங்கி, உள்ளே போய் வக்கீலைக் கண்டு, அவரிடத்தில் நெடு நேரம் வரையில் பேசிக் கொண்டிருந்த பின்னர், அந்த வக்கீல் மாரமங்கலம் ஜெமீந்தாரினியான கல்யாணியம்மாளுக்கு ஒரு நோட்டீஸ்

தயாரித்து, அதற்கடியில் கையெழுத்துச் செய்து உறைக்குள் போட்டு, தபாற்சாலைக்குப் போய் தபால் தலைகள் ஒட்டி ரிஜிஸ்டர் செய்துவிடும்படி, செட்டியாரிடத்தில் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்டு புறப்பட்ட செட்டியார் நேராக அந்த ஊர்த் தபாற்சாலைக்குப் போய் அதை ரிஜிஸ்டர் செய்தனுப்பி விட்டு, வக்கீல் சிவஞான முதலியாரது ஜாகையை நோக்கிச் சென்றார்.

★ ★ ★

25—வது அதிகாரம்

## ஓயாத் துன்பம் ஒழியா வேதனை

துரைராஜா கல்யாணியம்மாளது அந்தப்புரத்திற்கு வந்து சம்பாஷித்துக் கொண்டிருந்துவிட்டுப் போன அந்த அரை நாழிகைக்குள், அந்த அம்மாளது உடம்பு வியர்த்து விருவிருத்துத் தள்ளாடிப் போய்விட்டது. மனதோ சகிக்க இயலாவிதம் வதைபட்டுப் போய்விட்டது. அந்த சம்பாஷணையைத் தடுக்கவும் மாட்டாமல் பொறுக்கவும் மாட்டாமல் திரிசங்கு சுவர்க்கத்தில் இருப்பவள் போல இருந்த கல்யாணியம்மாள், அவன் வெளியிற் போனவுடனே, ஒரு சாய்மான நாற்காலியண்டை போய், "உஸ் அப்பாடா" என்று ஓய்ந்து அதன் மேல் விழுந்தாள். அந்தச் சீமாட்டியின் மனம், எண்ணிறந்த துன்பங்களால், பெருத்த புண் போல உளைவுற்றிருந்தமையால், அவளுக்கு நேரும் ஒவ்வொரு புதிய வேதனையையும் தாள மாட்டாமல், கல்யாணியம்மாள் நரகவேதனை அடைந்ததன்றி, அவளது உயிரிதும் பெரும் பாகம் உடம்பை விட்டுப் போய் விட்டது போலவும் இருந்தது.

முதல் நாள் முழுதும் அந்தச் சீமாட்டி மைனரது பத்திர விஷயத்தைப் பற்றியும், துரைஸானியம்மாள் மோகனரங்கனிடத்தில் நடந்து கொண்ட விஷயத்தைப் பற்றியும் சிந்தனை செய்து விசனித்து வருந்தி, அவற்றிற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்து, பெருத்த வேதனைக் கடலில் ஆழ்ந்து கிடந்தவள் அல்லவா. துரைஸானியம்மாளை அன்றிரவில் அறைக்குள் வைத்துப் பூட்டியப்பின், கோமளவல்லியை அழைத்துத் தனது அந்தப்

புரத்திலேயே அவளையும் சயனிக்க வைத்துக் கொண்டு அந்த இரவைப் போக்கினாள் ஆனாலும், அவள் தனது இமைகளை மூடாமலே வதைபட்டுக் கிடந்தாள். தனது மூத்த புத்திரியின் துர்க்குணங்களும் துர்நடத்தையும் கோமளவல்லிக்குப் பழகாமல் இருக்க வேண்டுமே என்ற கவலையும் அச்சமுமே பெரிதாக வருத்தின. துரைஸானியம்மாள் மோகனரங்கனிடத்தில் வைத்துக் கொண்ட துர்நடத்தையைக் கண்டு, தான் அவளைச் சிறை வைத்ததை மறைத்து, அவளுக்குக் கடுமையான தலைவலியாய் இருப்பது பற்றி, அவள் தனியாக இருப்பது நலம் என எண்ணியே அவ்வாறு செய்ததாகச் சொல்லி வைத்திருந்தாள். கோமளவல்லியும் அதை வேத வாக்கியமாக நம்பியிருந்தாள்; அன்றிரவு முழுதும் கல்யாணியம்மாள் அந்த விஷயத்தைக் குறித்து யோசனையில் ஆழ்ந்திருந்தாள். மறுநாளும் துரைஸானியம்மாள் சிறை வைக்கப் பட்டிருந்ததால், அந்த விஷயம் பங்களா முழுதும் பரவி, அவளது கற்பைப்பற்றி எல்லோரும் இழிவாகப் பேச இடங்கொடுக்கும் ஆதலால், மறுநாட் காலையில் கதவைத் திறந்து வைத்துவிட வேண்டும் என்று கல்யாணியம்மாள் முடிவு செய்து கொண்டாள். மோகனரங்கன் செங்கல்பட்டிற்கு அனுப்பப்பட்டுப் போனமை யால், அவள் அவனோடு ஓடிப் போவாள் என்ற அச்சம் அவ்வளவாக இல்லாமல் இருந்தது. அப்படி இருந்தாலும், தான் அவளது விஷயத்தில் எச்சரிப்பாகவே இருக்க வேண்டும் என எண்ணிய கல்யாணியம்மாள், தனது இளைய குமாரியான கோமளவல்லியை நோக்கி, "கண்ணு! நீ போய், அக்காளுடைய அந்தப்புரத்திலேயே இன்று பகல் முழுதும் இருந்து, அவளைப் பார்த்துக் கொண்டிரு. இன்றைக்கு முழுதும் அவள் வெளியே வந்து நடமாடாமல் உள்ளேயே இருக்க வேண்டும் என்று நான் கண்டிப்பாக உத்தரவு செய்ததாகச் சொல். நானும் காலைத் தபால்களைப் பார்த்துவிட்டு, அக்காளுக்கு வேண்டிய மருந்துகளை வாங்கிக் கொண்டு, அங்கே வந்து உங்களைப் பார்த்து விட்டு வருகிறேன். அக்காள் பிடிவாதக்காரி; அவள் ஏதாவது அலுவலின் மேல் எங்கேயாவது அனுப்பினாலும், நீ அவ்விடத்தை விட்டு வரக்கூடாது. உன்னோடு கூட நான்கு தாதிகளையும் நான் அனுப்புகிறேன். ஏதாவது காரியம் ஆக வேண்டுமானால், அவர்கள் மூலமாகச் செய்து கொள்ளுங்கள். தெரிகிறதா?"

என்றாள். அதைக் கேட்ட அந்தப் பெண்மணி அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு, திறவுகோலை வாங்கிக் கொண்டு துரைஸானியம்மாளது அந்தப்புரம் போய்ச் சேர்ந்தாள். உடனே கல்யாணியம்மாள் நான்கு தாதிகளை அழைத்து, அவர்களுக்கு அவ்வாறே கட்டளையிட்டு, துரைஸானியம்மாளை விட்டகலாமல் அவளை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளும்படி கண்டித்துக் கூறி, தான் அடிக்கடி வந்து பார்க்கப் போவதாகவும், யாராவது தமது கடமையில் தவறி இருந்ததைக் கண்டால், உடனே அபராதம் போட்டு விடுவதாகவும் பயமுறுத்தி அனுப்பி வைத்தாள்.

அவ்வாறு கல்யாணியம்மாள் அவர்கள் எல்லோரையும் அனுப்பிய பின், துரைஸானியம்மாள் எவ்வித முரண்டலும் செய்யாமல் படிந்திருக்கிறாள் என்ற செய்தியை வேறொருத்தியின் மூலமாக அறிந்து கொண்டு, ஒருவாறு திருப்தி அடைந்தவளாய், உட்கார்ந்து, அன்றைய காலைத் தபால்களைப் பார்த்துக் கொண்டிருந்த சமயத்திலே தான் எதிர்பாராவிதமாக, துரைராஜா அங்கே வந்து, அவளைக் கலக்கி மறுபடியும் நரக வேதனையில் ஆழ்த்திவிட்டுச் சென்றான். அவன் சென்ற பின் கால் நாழிகை நேரம் வரையில் நிரம்பவும் வதைபட்டிருந்த கல்யாணியம்மாள், உடனே தனது பணிப் பெண்ணைக் கூப்பிட்டு, பொன்னம்மாளை அழைத்து வரும்படி ஆக்ஞாபிக், அவள் வெளியிற் போய், அடுத்த நிமிஷத்தில் பொன்னம்மாளை உள்ளே அனுப்பினாள்.

கரைகடந்த விசனத்தினால், தலை சாய்ந்து தடுமாறி உட்கார்ந் திருந்த கல்யாணியம்மாள், தனது பக்கத்தில் பொன்னம்மாள் வந்து நிற்கிறாள் என்பதை உணர்ந்து மெதுவாக நிமிர்ந்து அவளது முகத்தை உற்று நோக்கி, "என்ன பொன்னம்மா! நான் எந்தக் காரியத்தைச் செய்தாலும் அது நிறைவேறுகிறதில்லை. அதோடு போகாமல், நமக்கு அதனால் பெருத்த பொல்லாங்கும் வந்து நேருகிறது. நேற்று நீ போய்க் கருப்பாயியை அழைத்து வந்தாயே. அந்த விஷயம் நம்முடைய பங்களாவில் உள்ள வேறே யாருக்காவது தெரியுமா?" என்று நயமாகவும் கவலை யோடும் வினவினாள்.

அந்தச் சீமாட்டியின் விசனத் தோற்றத்தைக் கண்டு அவளது வார்த்தைகளைக் கேட்ட பொன்னம்மாள் மிகுந்த கவலையும்

அச்சமும் கொண்டு, "நான் போயி அவளெ இட்டாந்தது ஒருத்தருக்குந் தெரியாதுங்களே. அவ ராத்திரி நேரத்துலே வந்தா, நாம்ப தனியா இருந்து பேசினோம். அதுக்குப் பொறவாலே அவ ஒருத்தருக்குந் தெரியாமே பதுங்கி ஓடிப்புட்டா. சங்கதி காதுங் காதும் வச்சாப்பலே நடந்திருக்குது. இத்தெ யாரு பார்த்திருப் பாங்க! ஏன் என்னா நடந்திச்சு?" என்றாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள், "நீ ஒரு பெரிய பைத்தியக் காரி; உனக்குக் கண்ணும் தெரியாது மண்ணும் தெரியாது. ஒருவரும் பார்க்கவில்லை என்று நீ நினைத்துக் கொண்டிருக்கி றாய்; சங்கதி பெருத்த விபரீதமாக முடிந்து விட்டது. நீ காலையில் ஆலந்தூருக்குப் போனது, இரவில் நீயும் அவளும் வந்தது, நாம் மூவரும் தனியாகப் பேசிய சங்கதிகள் ஆகிய எல்லாவற்றையும் ஒரு வார்த்தை விடாமல் இன்று காலையில் யாரோ இந்த பங்களா விலிருந்து போய் மைனருக்குத் தெரிவித்திருக்கிறார்கள். அவன் அந்த விவரங்களை எல்லாம் மைனருக்குத் தெரிவித்திருக்கிறார்கள். அவன் அந்த விவரங்களை எல்லாம் கண்டு ஒரு கடிதம் எழுதி துரைராஜாவுக்கு அனுப்பியிருக்கிறான். துரைராஜா கொஞ்ச நேரத்துக்கு முன் இங்கே வந்து அந்தக் கடிதத்தை என்னிடத்தில் காட்ட, நான் அதை என்னுடைய கண்ணால் பார்த்தேன். அப்படி இருக்க சங்கதி அவனுக்கு எட்டிவிட்டதென்பதைப் பற்றி எள்ளளவும் சந்தேகமில்லை; ஆனால் யார் இங்கே இருந்து போய் இதை எல்லாம் தெரிவித்திருப்பார்கள் என்பது தான் தெரிய வேண்டும். ஒரு வேளை துரைஸானியம்மாள் செய்தி சொல்லி அனுப்பியிருப்பாளோ என்று சந்தேகிக்கவும் இடமில்லை. அவள் நேற்று முழுதும் தலைவலியினால் சங்கடப்பட்டுக் கொண்டு தன்னுடைய விடுதியை விட்டு வெளியில் வராமலே படுத்திருந் தாள். அவளைத் தவிர, மற்ற எவரும் எனக்கு விரோத மாக நடக்கக் கூடியவர்களல்ல. இது தான் பெருத்த ஆச்சரியமாக இருக்கிறது!" என்றாள்.

பொன்னம்மாள், "நேத்து ஒங்களோடெ இருக்க வேண்டிய மொறெ சின்னம்மாறும். நாம்ப பேசற போது அவகூட இல்லியே! சங்கதி எப்பிடி வெளியாச்சு! இது அதிசயமா இருக்குதே!

என்னமோ போங்க; யாரு சொன்னாவளோ அந்த ஆண்டவனுக்குத் தான் தெரியணும். நான் எவருக்கிட்டவும் மூச்சுப் பேச்சு உடல்லே" என்றாள்.

உடனே கல்யாணியம்மாள், "சரி; யார் சொன்னது என்பதைப் பற்றி நாம் இப்போது விசாரணை செய்து கொண்டிருப்பது சரியல்ல. அதைப் பின்னால் வைத்துக் கொள்வோம். இப்போது மேலே நடக்க வேண்டிய விஷயங்களையே நாம் உடனே கவனிக்க வேண்டும். கட்டையன் குறவன் வந்தாலும் சரி; ஈசுவரன் வந்தாலும் சரி, பத்திரத்தை அபகரித்துக் கொண்டுவர முடியாமல், தான் செய்யப் போவதாக மைனர் துரைராஜாவுக்கு எழுதி இருக்கிறான். அவன் பத்திரத்தை அந்த பங்களாவில் வைக்காமல், வேறே யாரிடத்திலாவது கொடுத்து வைப்பான் போலிருக்கிறது; ஆகையால் கட்டையன் குறவன் போவதில் உபயோகமில்லை. இதனால் மைனருக்கு நம்மேல் வீண் ஆத்திரம் உண்டாவது தான் மிஞ்சும். அதுவும் தவிர கட்டையன் குறவன் குடிவெறியோடு போவான். பத்திரம் அகப்படவில்லை என்கிற மூர்க்கத்தில் மைனரை அடித்துப் போட்டாலும் போட்டு விடுவான்; அது காசைக் கொடுத்துத் தேளைக் கொட்ட விட்டுக் கொள்வது போல முடியும்; ஆகையால் ஒரு காரியம் செய். நேற்று மாதிரி, நீ இங்கே இருந்து உடனே புறப்பட்டு ஒரு குதிரை வண்டியில் ஆலந்தூருக்குப் போய்க் கருப்பாயியைக் கண்டு, விஷயம் வெளி யாகிவிட்ட சங்கதியையும், அவர்கள் எப்படி முயற்சி செய்தாலும், இன்று பத்திரம் அகப்படாதென்றும் சொல்லி, இன்று சும்மா இருந்து விடும்படி அவர்களிடத்தில் சொல்லிவிட்டு வா!" என்றாள்.

பொன்னம்மாள் சிறிது தயங்கி, "அப்படியே ஆவட்டம்; நான் போறேனுங்க; அவுங்க ரெண்டு பேரும் கெட்ட நாயிங்க; நாம்ப குடுக்கறோமுன்னு சொன்ன பாக்கிப் பணத்தெக் கொண்டாந்து களட்டு இன்னு கேட்டாலும் கேப்பாங்க; அதுக்கு என்ன செய்யறதுங்க" என்றாள்.

கல்யாணியம்மாள் சிறிது யோசனை செய்தபின், "சரி; தொலைகிற வாய்முட்டெல்லாம் தொலையட்டும்; அவர்கள் அங்கே போய் வீண் கலகம் செய்து, நமக்கு உபத்திரவம்

செய்விப்பதைவிட சும்மா இருப்பதே போதுமானது; நாம் சொன்னபடி மிகுதிப் பணத்தையும் அவன் இங்கே வந்து வாங்கிக் கொண்டு போகட்டும்; பிறகு பத்திரம் எங்கே இருக்கிற தென்பது தெரிந்தால், அப்போது அவர்களை ஏவி, அந்தக் காரியத்தை முடித்துக் கொள்வோம்; நீ உடனே போ! தாமசம் பண்ண வேண்டாம்" என்று கூறிய வண்ணம் எழுந்து பெட்டியைத் திறந்து, வண்டிச் செலவிற்குப் பணம் எடுத்துக் கொடுக்க, பொன்னம்மாள் அதை வாங்கிக் கொண்டு வெளியிலே போய் விட்டாள். உடனே கல்யாணியம்மாள் தனது அந்தப்புரத்தின் கதவுகளை எல்லாம் தாளிட்டுக் கொண்டு, கட்டிலின் மேல் ஏறிப் படுத்துக் கொண்டாள்; அவளது உடம்பு நடுக்குஜுரம் கொண்டது போல சகிக்க இயலாத வேதனையைக் கொடுத்துக் கொண்டிருந் தது; மனதோ சல்லடைக் கண்கள் போலத் துளைபட்டு விண் விண் என்று தெறித்துக் கொண்டிருந்தது. தான் ஒரு துன்பத்தை விலக்குவதற்கு முயற்சித்தால், அதன் பின்னால் ஒன்பது துன்பங்கள் முளைக்கின்றனவே என்ற கவலையும் திகிலும் ஏற்பட்டு அவளை வதைக்க ஆரம்பித்தன; உலகத்தார் எல்லோருமே தன்னைப் பகைத்து, தனக்குப் பெருத்த இடர்களைச் செய்யக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களோ என்னலாம்படி, எந்த நிமிஷத்தில் எந்த மனிதரும் ஒரு புதிய பிராதோடு வந்து தன்னை வளைத்துக் கொள்ளக் கூடுமென்ற ஓர் எண்ணமும், உலகம் இவ்வளவு கெட்டதா என்ற நினைவும், உலகத்தில் வாழ்வது இவ்வளவு கடினமானதா என்ற மலைப்பும் தோன்றி அவளை ஒறுத்தன. நாலா பக்கங்களிலும் வளைத்துக் கொண்டு தன்னை வதைக்கும் துன்பங்களிலிருந்து மீண்டு, கவலையற்ற வாழ்க்கையாக வாழும் காலமும் வரப் போகிறதா என்ற ஏக்கமும், விசனமும், அவமானமும் பெருத்த சுமைகளாக அவளது மனத்தையும் தேகத்தையும் அழுத்திக் கொண்டிருந்தன. தொடர்ந்து சில தினங்களாக ஆகாரம், துயில், ஒய்வு முதலியவை இன்றி மாறிமாறித் துன்பத்தினாலும் விபத்தினாலும் வருத்தப் பட்டவளாக இருந்தவள் ஆதலால், கல்யாணியம்மாள் மாலை ஆறு மணி சமயத்தில் கண்விழித் தெழுந்தாள்; எழுந்தவள் உடனே கடிகாரத்தைப் பார்க்க, அதன் கைகள் ஆறுமணி

காட்டியதைக் கண்டு, அவள் பெருத்த வியப்படைந்து, தான் அவ்வளவு நீண்டகாலம் தூங்கியதுண்டா என்ற சந்தேகங் கொண்டு, ஒருகால் கடிகாரத்தின் கைகள் நின்றுபோய் இருக்குமோ என்று ஐயமுற்றவளாய், எழுந்து கடிகாரத்தண்டை போய்ப் பார்க்க, அது ஒழுங்காகப் போய்க் கொண்டிருந்தது; அவள் உடனே கதவுகளைத் திறந்து வெளிப்பக்கத்தை நோக்க, ஆங்காங்கு விளக்குகள் கொளுத்தப்பட்டிருந்தன அவளது பணிப்பெண் உடனே உள்ளே நுழைந்தாள். அவளைக் கண்ட கல்யாணியம்மாள், 'அடீ! இப்போது மணி எவ்வளவு? நான் சுமார் 10-மணிக்குப் படுத்தேனே! இவ்வளவு நேரம் வரையிலா தூங்கினேன்! என்னை எழுப்பக் கூடாதா?' என்றாள்.

அதைக் கேட்ட பணிமகள், "எஜமானே! இப்போது சாயுங்கால வேளை ஆகிவிட்டது. தாங்கள் கதவுகளை எல்லாம் மூடிக் கொண்டு படுத்திருந்தீர்கள். உடம்பு அசௌக்கியமாக இருக்கிற தாகையால் தொந்தரவு செய்யக்கூடாதென்று நினைத்து நான் நெடு நேரம் பொறுத்திருந்தேன்; தாங்கள் ஸ்நானமும் செய்யவில்லை போஜனமும் செய்யவில்லை. நேரம் ஆக ஆக, எங்களுக்கு நிரம்பவும் கவலையாக இருந்தது; கதவையும் தட்டிப் பார்த்தேன். இன்னம் கொஞ்ச நேரம் பார்த்துவிட்டு, கதவை பலவந்தமாகத் திறந்து கொண்டாவது வந்து பார்க்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டிருந்தேன்; நல்ல வேளையாகத் தாங்களே எழுந்தீர்கள்" என்று மிகுந்த கவலையோடும் அபிமானத்தோடும் பேசினாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் மகிழ்ச்சியும் புன்னகையும் கொண்டவளாய், "எனக்கு உடம்பு நிரம்பவும் அசௌக்கியமாக இருந்ததாகையால், மெத்தையின் மேல் படுத்தேன்; மெய்ம்மறந்து அவ்வளவு நேரம் தூங்கிவிட்டேன்; நான் தூங்கிக் கொண்டிருந்த போது வேறே ஏதாவது விசேஷம் நடந்ததோ?" என்றாள்.

பணிமகள், "விசேஷம் ஒன்றும் நடக்கவில்லை" என்றாள்.

கல்யாணியம்மாள், "மூத்த குழந்தையின் உடம்பு எப்படி இருக்கிறதென்பது உனக்குத் தெரியுமா?" என்றாள்.

பணிமகள், "தெரியும்; துரைஸானியம்மாளுக்கு உடம்பு அநேகமாக குணமடைந்து விட்டது. இருந்தாலும் அவர்கள் படுக்கையிலேயே படுத்துக் கொண்டிருக்கிறார்கள். சின்னக் குழந்தையும், தாதிகளும் கூடவே இருந்து, ஆகவேண்டியதை எல்லாம் செய்து கொண்டிருக்கிறார்கள்" என்றாள்.

உடனே கல்யாணியம்மாள், "சரி; அதிருக்கட்டும்; பொன்னம் மாள் தன்னுடைய மனுஷியாள் யாரையோ பார்க்கப் போவதாகச் சொல்லி உத்தரவு கேட்டுக் கொண்டு, இன்று காலையில் போனாள். அவள் வந்துவிட்டாளா? அவளை நீ பார்த்தாயா?" என்றாள்.

பணிமகள், "அவளை நான் இன்று காலையிலே தான் பார்த்தேன்; அதற்குப் பிறகு அவள் என்னுடைய கண்ணில் படவில்லை," என்றாள்.

கல்யாணியம்மாள், "சரி; அப்படியானால் நீ போய் அவள் வந்து எங்கேயாவது இருந்தால், அழைத்துக் கொண்டு வா!" என்று கூற, பணிமகள் உடனே போய்த் தேடிப் பார்த்துவிட்டு அரைக்கால் நாழிகை நேரத்தில் திரும்பி வந்து, "அவளை எங்கேயும் காணோம்; அவள் இன்னமும் திரும்பி வரவில்லை போலிருக்கிறது" என்றாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள், "சரி; வராவிட்டால் தொலையட்டும்; இன்று முழுதும் ஸ்நானம் செய்யாமையால் உடம்பு அசுதியாக இருக்கிறது; உடனே போய் ஸ்நானத்துக்கு ஏற்பாடு செய்; நான் இதோ வருகிறேன்" என்று கூற, பணிமகள் உடனே போய்விட்டாள்.

காலையில் போன பொன்னம்மாள் அதுகாறும் திரும்பி வராதிருந்தது, கல்யாணியம்மாளது மனதில் ஒருவித சஞ்சலத்தை உண்டாக்கியது. ரகசியம் வெளியாகிவிட்டதாகையால், அன்றைய தினம் பத்திரத்தை அபகரிக்கப் போக வேண்டாம் என்ற ஓர் அற்ப விஷயத்தைச் சொல்லிவிட்டு வர, அவ்வளவு கால தாமதம் ஆக வேண்டிய காரணம் என்ன என்று கல்யாணியம்மாள் யோசித்து யோசித்துப் பார்க்க, எதையும் நிச்சயமாக அறிய மாட்டாதவளாய், மறுபடியும் தளர்வடைந்து, மௌனமாக நடந்து, ஸ்நான அறைக்குப் போய், நன்றாக நீராடியபின் சுமார் ஏழரை மணிக்கு

போஜன அறைக்குப் போய் ஏதோ சொற்ப ஆகாரம் பார்த்துக் கொண்டு, நேராக துரைஸானியம்மாளது அந்தப்புரத் திற்குப் போய், அவளது உடம்பின் நிலைமையைப் பற்றி விசாரித்த பின் அவ்விடத்தை விட்டுத் தனது அந்தப்புரம் போய்ச் சேர்ந்தாள்.

அப்போது மணி எட்டரை ஆகியிருந்தது. பொன்னம்மாள் ஆலந்தூரிலிருந்து திரும்பி வந்திருந்தால், எப்படியும் உடனே வந்து தன்னைப் பார்த்து விவரத்தைச் சொல்லியிருப்பாள் என்ற எண்ணத்தினால், அவள் வரவில்லை என்று நிச்சயப்படுத்திக் கொண்டு அதே கவலையாக உட்கார்ந்து கொண்டிருந்தாள். நாழிகை ஏற ஏற அவளது கவலையும் ஆவலும் பெருகின. அவளது மனம் வேறு எந்த விஷயத்திலும் செல்லாமல் அதே தியானமாக இருந்து வேதனை அடைந்திருந்தது. கருப்பாயி எப்படியும் அன்றிரவிற்குள் வருவாள் என்ற நம்பிக்கை இருந்த தாகையால், எந்நேரமானாலும் தான் உட்கார்ந்திருந்து அதன் முடிவை அறிந்து, தனது மனதை சமாதானப் படுத்திக் கொண்ட பிறகே, தான் படுக்க வேண்டும் என்ற நினைவினால் தூண்டப் பட்டவளாய் கல்யாணியம்மாள் கதவுகளைத் தாளிடாமல் வெறுமையாக மூடிவைத்து விட்டு, பணிப் பெண்ணையும் வெளியில் படுத்திருக்கும்படி சொல்லி அனுப்பிவிட்டு நாற்காலி யில் சாய்ந்த வண்ணம் தபசு பண்ணிக் கொண்டிருந்தாள்.

நடுநிசி வேளையும் கழிந்தது. கடிகாரம் ஒரு மணி அடித்தது. அப்போது கதவை மெதுவாகத் திறந்து கொண்டு பொன்னம்மாள் உள்ளே நுழைந்தாள். அவளுக்குப் பின்னாக, கருப்பாயியும், கட்டையன் குறவனும் தொடர்ந்து வந்தார்கள். மூவரும் உள்ளே வந்தவுடனே பொன்னம்மாள் கதவுகளை எல்லாம் உட்புறத்தில் தாளிட்டுக் கொண்டு வந்தாள். உணர்வோ, அல்லது, நித்திரையோ என்ற சந்தேகமான நிலைமையில் ஒய்ந்து சாய்ந்திருந்த கல்யாணி யம்மாள் ஒரு நிமிஷ நேரம் வரையில் அப்படியே இருந்து சடக்கென்று நிமிர்ந்து உட்கார்ந்து தனது கண்களை நன்றாகத் துடைத்துக் கொண்டு அவர்கள் மூவரையும் உற்று நோக்கினாள். அந்த அம்மாள் கட்டையன் குறவனைப் பார்த்தது அதுவே முதல் தடவை ஆகையால், மதுரை வீரனைப் போலக் கருத்த பயங்கர மான தோற்றத்தோடு ஆஜானுபாகுவாகக் காணப்பட்ட அந்த

அரக்கனைக் கண்டவுடனே பிரமிப்பும் திகிலுமடைந்து கிடுகிடுத்துப் போய் வாயைத் திறந்து பேசமாட்டாமல் மௌனமாக இருந்து பொன்னம்மாளை நோக்கி, "ஏன் இவ்வளவு தாமசம்?" என்று கேட்பவள் போலத் தனது முகஜாடையால் அறிவித்தாள்.

அதற்குள் அவர்கள் மூவரும் கல்யாணியம்மாளுக்கருகில் வந்து நெருங்கி நின்றனர். கட்டையன் குறவன் குடிவெறி முகத்திலேயே விளங்க, ஒரு பெருத்த காட்டு மிருகம் போலக் காணப்பட்டான். பொன்னம்மாளது முகமும், கருப்பாயினது முகமும் சந்தோஷத் தைக் காட்டின. அதைக் கண்ட கல்யாணியம்மாளது மனதில் ஒரு வகையான துணிவு ஏற்பட்டது; அப்போது பொன்னம்மாள் கல்யாணியம்மாளைப் பார்த்து, "நான் காலையிலே போனவ, அது மொதக் கொண்டு, கருப்பாயியோடெ ஊட்டுலேயே குந்திக்கிட்டுக் கெடந்தேன். அவ ஊட்டெவிட்டுக் காத்தாலெ போனவளாம்; அப்பாலெ வரவே இல்லே. ராத்திரிப் பன்னண்டு மணி நேரம் வரெயிலெ அங்கிட்டே காத்திருந்தேன். இவுங்க ரெண்டு பேரும் இப்பதான் ரெண்டு நாளிக்கு மின்னே வந்தாங்க. இவுங்களை நேருலெயே இட்டாந்துட்டேன். காரியமும் முடிஞ்சு போச்சுதாம்" என்று சந்தோஷமாகக் கூறினாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் மிகுந்த களிப்படைந்து, "காரியம் முடிந்து போய்விட்டதா?" என்று வியப்போடு கேட்க, உடனே கருப்பாயி, "கட்டையனும் கருப்பாயியும் மனசுவச்ச காரியம் முடியாமெப் போவுமா! அவன் எட்டுக்கண்ணு படச்ச ஈசுபரனா இருந்தாலும், கதறக்கதற அடிச்சுமாட்டமா. அப்பிடி இருக்க இந்த வாலாம்பா எந்த மூலை! நானும் கட்டையனும் போனோம். கட்டையன் அவுங்க ரெண்டு பேரையும் குண்டுக் கட்டாக் கட்டிப் போட்டான். நான் ஊடெல்லாம் தேடிப் பார்த்தேன்; அந்தப் பொம்புள்ளே இந்தப் பத்தரத்தே ரவுக்கெக் குள்ளற சொருகி வச்சிருந்தா. பயந்துக்கிட்டுக் குந்தினாப்பலே எடுத்துக் குடுத்துப்புட்டா. இதோ இருக்குது பாத்துக்குங்க!" என்று கூறிய வண்ணம், பத்திரத்தைப் பிரித்துக் காட்ட, அதனடியில் தனது கையெழுத்தும், சிவஞான முதலியாரது கையெழுத்தும் இருந்ததைக் கண்ட கல்யாணியம்மாள் கரைகடந்த மகிழ்ச்சி அடைந்து பூரித்துப் புளகாங்கிதம் அடைந்தவளாய்க் குதித்துக் கொண்டெழுந்து

இரும்புப் பெட்டியண்டை ஓடி இருபதினாயிரம் ரூபாய்க்கு நோட்டுகளை அள்ளிக் கொண்டு வந்து, கட்டைய னுக்குப் பதினாயிரம் ரூபாயும் கருப்பாயிக்குப் பதினாயிரம் ரூபாயும் கொடுத்து, அவர்களது சாமர்த்தியத்தைப் பற்றி வாய் கொண்ட மட்டும் புகழ, அவர்கள் இருவரும் கல்யாணியம் மாளைக் காட்டிலும் இரட்டிப்பிலும் மடங்கு சந்தோஷம் அடைந்தவர்களாய் நோட்டுகளை வாங்கித் தங்களது வஸ்திரங்களில் பத்திரமாக முடிந்து கொண்டனர். கல்யாணியம்மாள் கருப்பாயியால் மேஜையின் மேல் வைக்கப்பட்ட பத்திரத்தை மிகுந்த ஆவலோடும், அளவற்ற மகிழ்ச்சியோடும் எடுத்து, அதை ஒரு முறை படித்துப் பார்த்து, அடியிலிருந்த கையெழுத்துக்கள் உண்மையில் தங்க ளுடையவைகள் தானே என்பதை ஆராய்ந்து, திருப்தி அடைந்த வளாய், அந்த ஒரு நிமிஷ நேரம் ஒப்புயர்வற்ற பேரின்பம் அடைந்திருந்தாள். அப்போது அவள் அந்தப் பத்திரத்தைத் தற்செயலாக திருப்பிப் பார்க்க, அதன் பின்புறம் முழுதிலும் எழுத்துக்கள் காணப்பட்டன; கல்யாணியம்மாள் உடனே வியப்படைந்து அவற்றைப் படிக்கவே, ஆகா! அந்தப் பத்திரம் அன்றைய பகலில் மைனரால் சப்ரிஜிஸ்டிராரது கச்சேரியில் ரிஜிஸ்டர் செய்யப்பட்டுப் போயிருந்த தென்ற விவரங்கள் அந்தப் பக்கத்தில் காணப்பட்டன. அதை உணர்ந்த கல்யாணியம்மாள் கதிகலங்கிப் போய், ஆலகால விஷத்தை உண்டவள் போல ஸ்மரணை தப்பிப் படேரென்று கீழே சாய்ந்து விட்டாள்.

★ ★ ★

26—வது அதிகாரம்

## கோட்டைவிட்ட போலீஸ்புலி குலாமாராவுத்தர்

**அ**வ்வாறு உணர்வற்று கீழே விழுந்த கல்யாணியம்மாள் மறுபடியும் தனது உணர்வைப் பெற்று விழித்த போது, பொழுது நன்றாக விடிந்திருந்தது; சூரியன் உதயமாகி மிகுந்த கோபத்தோடு ஆகாயத்தில் உயர்ந்து கொண்டிருந்தான். கல்யாணியம்மாள் தனது பஞ்சணையின் மீது படுக்க வைக்கப்பட்டிருந்தாள். பொன்னம்மாள் ஒருத்தியே கட்டிலிற்கருகில் இருந்த ஓர் ஆசனத்தின்

மேல் உட்கார்ந்து, அந்தச் சீமாட்டியின் அழகிய வதனத்தை உற்று நோக்கிய வண்ணம் இருந்தாள். அந்த நிலைமையில் மெதுவாகத் தனது கண்களைத் திறந்து நாற்புறங் களையும் பார்த்த கல்யாணி யம்மாள், மிகுந்த வியப்பும் திகைப்பு மடைந்தாள். முதல் நாள் இரவில் வந்திருந்த கட்டையன் குறவனும், கருப்பாயியும், தன்னிடத்தில் சொல்லிக் கொள்ளாமல் போய்விட்டதும், மறுநாட் காலை வரையில் தான் தூங்கியோ அல்லது ஸ்மரணை தப்பியோ, மெய்ம்மறந்து கிடந்ததும் ஒருவிதக் கிலேசத்தை உண்டாக்கின; அவள் மெதுவாக எழுந்து உட்கார்ந்து திண்டில் சாய்ந்து கொள்ள, அதைக் கண்ட பொன்னம்மாள் எழுந்து பஞ்சணையினருகில் வந்து நின்று, "ஒடம்பு என்ன செய்கிறது? அப்ப படுத்த நீங்க, இந்நேரம் கண்ணெத் தொறக்காமெக் கெடந்தது எனக்கு ரொம்ப பயமா இருந்திச்சு; இப்ப ஒடம்பு சவிக்கியந்தானா?" என்று வினவினாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் நிரம்பவும் அருவருப்பாக வும் தளர்வாகவும் பேசத் தொடங்கி, "என்ன உடம்பு வேண்டி இருக்கிறது! நான் நல்ல ஜென்மம் எடுத்தேன்! எனக்கு நல்ல குழந்தைகள் வந்து வாய்த்தார்கள்! அவர்கள் ஒவ்வொருவராலும் இப்படிப்பட்ட இழிவுகளுக்கும் அவமானத்துக்கும் துன்பங்களுக் கும் ஆளாகி இருந்து வாழ்வதைவிட இந்த உயிரை விட்டு விடுவதே மேலானது. இந்த உயிரை விட்டுவிடுவதற்கும் வழி தெரியவில்லை. ஒரே நொடியில் உயிரை அழித்துவிடக் கூடிய தான வீரபாஷாணம் எங்கேயாவது அகப்பட்டால், கொஞ்சம் வாங்கிக் கொண்டு வந்து கொடுக்கிறாயா? கொடுத்தால், என் உடம்பில் உள்ள பிணிகள் எல்லாம் ஒரே நொடியில் தீர்ந்து போகும்" என்று மிகுந்த விரக்தியோடு பேசினாள்.

**பொன்னம்மாள்:-** (மிகுந்த அபிமானத்தோடும் அன்போடும் பேசத்தொடங்கி) ஏம்மா இதுக்குள்ளற இப்பிடி பயப்பட்றீங்க? இது என்னா தலெபோற காரியமா? சின்ன வயசிலே கொயந்தைங்க என்னமோ அப்படி ஒரு காரியத்தெச் செய்யறது தான். அதுக்காவ பெரியவங்க நாக்கெப் பிடுங்கிக்கினு செத்தாப் பூடுவாங்க. இந்தப் பத்தரம் ஒங்களே என்னா செய்ய முடியும்?

அந்த வாலாம்பா மூண்டெ நாளைக்குள்ளற தொலெஞ்சு பூடப் போறா; உடனே நாம்ப மைனருக்குக் கண்ணிமணியம்மாளெப் புடிச்சுக் கட்டிப்புட்டா எல்லாம் சரியாப்போவுது; அதுக்குள்ளற தொரெசானியம்மாளெயும் ராமலிங்கப்புரத்துலே கட்டிக் குடுத்துடப் போறோம்; ஒடனே அவுங்க ரெண்டு பேரும் அடங்கிப் பூடுவாங்க; அப்புறம் நமக்கென்ன கவலை? சின்னக் கொயந்தை தங்கமானது; அதெப்பத்திப் பயமே இல்லீங்க – என்றான்.

***கல்யாணியம்மாள்:-*** (பெரிதும் வியப்படைந்து) என்ன! அந்த பாலாம்பாள் நாளைக்குள் தொலையப் போகிறாளா! நாளைக்குள் எங்கே போகப் போகிறாள்?-என்றாள்.

***பொன்னம்மாள்:-*** அவளாப் போவமாட்டாதான்; நேத்தி ராத்திரி வந்திருந்தானே கட்டெயன் கொறவன்; அவன் கடைசியாப் போவச்சே சொல்லிவிட்டுப் போனான்; நாளெ ராவுக்குள்ளற அவளெ அந்த வங்களாவுலே இருந்து களப்பிக் கொண்டு போயி, அவ திரும்பி வராமெப் பண்ணிப்புறேனுன்னு சொல்லிப்புட்டுப் போயிருக்கறான். அவன் சொன்னானுன்னா, சூரியன் சந்தரன் வடக்கு தெக்காப் போனாலும், அவனோடெ பேச்சு மாத்தரம் பெறளாது – என்றாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் ஒருவாறு திகிலும் திகைப்பு மடைந்து, "அதென்ன சங்கதி? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக இருக்கிறதே! கட்டையன் குறவன் பாலாம்பாளை எதற்காக அப்படிக் கொண்டு போய் மறைத்துவிடப் போகிறானாம்? எனக்கு நன்றாக விளங்கும்படி பேசு" என்றாள்.

***பொன்னம்மாள்:-*** நேத்து ராவுலே நீங்க அந்தப் பத்தரத்தெப் பாத்து மொதமொதல்லே சந்தோஷப்பட்ட அப்பாலே, அதெத் திருப்பிப் பாத்துப்புட்டு மயங்கிப் போயி உளுந்தீங்கள். அப்ப ஒங்க வாயிலே இருந்து ஒரு பேச்சு வந்திச்சு; "ஐயோ! பத்தரத்தை இஸ்திரி ஆபீசுலே பதிஞ்சு வச்சுப்புட்டானே! இந்தப் பத்தரத்தெ எடுத்தாந்ததுலே ஒண்ணும் பெரயோசன மில்லியே" இன்னு நீங்க சொல்லிக்கினே உளுந்தீங்க. அந்தப் பேச்செக் கேட்ட ஒடனே

கட்டெயன் கொறவன் சங்கதியை அறிஞ்சுக்கினான். "மைனரும் அந்தப் பொம்புள்ளெயும் நம்பளெயெல்லாம் ஏமாத்திட்டாங்க பாத்தியா! அவளெ உட்டேனா பாரு இந்தப் பத்தரத்தெ இஸ்திரி ஆபீசுலே பதிஞ்சுட்டாப்பிலே, ஆயிப்போச்சா. அந்தப் பொம்புள்ளேயக் கொண்டு போயி, அவ மைனரோடே இனிமே ஒரு நாளும் இருக்க முடியாமெ அடிச்சுப்புட்றேன். அதுக்கு மேலே, இந்தப் பத்தரத்தெ வச்சுக்கினு யாரு என்ன செய்ய முடியும்" இன்னு அந்தக் கொறவன் சொன்னான். அது எனக்கும் கருப்பாயிக்கும் நல்ல காரியமா இருந்திச்சு; அப்பிடியே செய்யச் சொல்லிப்புட்டோம்; அப்புறம் ஒரு நாளி நேரம் வரெயிலே, அவுங்க காத்திருந்தாங்க. நீங்க கண்ணெத் தொறக்கவே இல்லெ; நானும் கருப்பாயியும் சேர்ந்து ஒங்களைத் தூக்கிக் கட்டுலு மேலே படுக்க வச்சோம். நீங்க அசந்து மூச்சுப் பேச்சில்லாமெக் கெடந்தீங்க. அந்த சமயத்துலே யாராச்சும் வந்தாக்கா, அவுங்க ரெண்டு பேரையும் பார்த்துடப் போறாங்களேயின்னு, நான் அவுங்க ரெண்டு பேரையும் போவச் சொல்லிப்புட்டேன். அதுக்குப் பொறவாலே நீங்க இப்பதான் கண்ணெத் தொறந்தீங்க" என்றாள். அந்த வரலாற்றைக் கேட்ட கல்யாணியம்மாள் மிகுந்த அச்சமும் கவலையும் அடைந்து, "ஏதேது! நீங்கள் எல்லோரும் சேர்ந்து என்னை சந்தியில் இழுத்துவிட்டு அநர்த்தத்தில் கொண்டு போய் விடுவீர்கள் போலிருக்கிறதே! நாம் இவர்களை விட்டுப் பத்திரத்தைத் திருட்டுத்தனமாக எடுத்துக் கொண்டுவரச் சொன்னோம் என்ற சங்கதி நேற்றைய காலையிலேயே மைனருக்குத் தெரிந்து, நம்முடைய எண்ணம் பலியாதபடி அடித்து விடுவதாக, அவன் துரைராஜாவுக்குக் கடிதம் எழுதி இருந்தான். அந்தப்படி அவன் நேற்றைய தினமே பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்து வைத்துக் கொண்டிருந்து, நம்முடைய எண்ணம் நிறைவேறாதபடி செய்துவிட்டான். இந்தக் கட்டையன் குறவனும் கருப்பாயியும் நேற்று ராத்திரி அவர்களைக் கட்டிப் போட்டுப் பல வகையான உபத்திரவங்களை செய்திருக்கிறார்கள்; நம்முடைய அம்மாளே இந்த ஆள்களை விட்டு இவ்வளவு தூரம் செய்யும்படி தூண்டினார்கள் அல்லவா என்ற ஆத்திரமும் கோபமும் மைனருக்கு இருக்கும். அவனோ மகா துஷ்டன்; அவன் நேரில்

இங்கே வந்து தாறுமாறாகப் பேசுவதோடு, நமக்கு ஏதாவது துன்பம் செய்தாலும் செய்வான். அந்த உபத்திரவங்களை எல்லாம் நான் எப்படியாவது பொறுத்துக் கொள்ளலாம். நாளைய தினம் இவர்கள் போய் பாலாம்பாளையும் தூக்கிக் கொண்டு போய் விட்டால், அதிலிருந்து என்னென்ன சங்கடங்கள் உண்டாகுமோ தெரியவில்லையே! அவனோ அந்தக் கூத்தாடிச்சியின் மோக வலையில் மீளாதபடி சிக்கிக் கொண்டிருக்கிறான். அந்த நிலைமையில், அவள் போய்விட்டால், அவன் தலைகால் தெரியாமல், எதைச் செய்தாலும் செய்வான். அவனுடைய குணம் எப்படிப்பட்ட தென்பது உனக்குத் தெரிந்திருந்தும், முன்பின் யோசிக்காமல் நீயும் அந்த ஏற்பாட்டுக்கு இணங்கிவிட்டாயே! கட்டையன் குறவன் பெருத்த மிருகமாயிற்றே! அவனுக்கு இந்த யோசனை எல்லாம் தோன்றுமா? உள் மர்மங்களை எல்லாம் தெரிந்து கொண்டிருக்கிறவளான நீ யல்லவா, "அப்படிச் செய்ய வேண்டாம். அம்மாள் விழித்துக் கொண்ட பிறகு அவர்களிடத்தில் யோசனை செய்து நாளைக்குச் சொல்லுகிறேன். அதற்கு மேல், எந்தக் காரியத்தையும் செய்யலாம்" என்று சொல்லியிருக்க வேண்டும். இனி அவனுக்கும் நமக்கும் நேருக்கு நேர் யுத்தந்தான் நடக்கப் போகிறது. நீ கொஞ்சம் யோசனை செய்திருந்தால் இந்தப் புதிய சங்கடம் இல்லாதிருக்கும் அல்லவா?" என்றாள்.

அவள் அவ்வாறு கூறி முடித்த போது ஒரு வேலைக்காரி அந்த அந்தப்புரத்தின் வெளியிலிருந்தபடி கதவை மெதுவாகத் தட்டி, "பொன்னம்மா! பொன்னம்மா!" என்று தாழ்ந்த குரலாகக் கூப்பிட்டாள். அதைக் கேட்ட பொன்னம்மாள், ஏதோ அலுவல் இருப்பதனாலேயே, வேலைக்காரி அவ்வாறு துணிந்து கூப்பிடுகிறாள் என்று நினைத்துக் கொண்டு அங்கிருந்து போய்க் கதவை அடைந்து, அடுத்த நிமிஷத்தில் திரும்பிக் கல்யாணியம் மாளிடத்தில் வந்து தபாற்காரன் வந்திருப்பதாகவும், அவன் இதர கடிதங்களோடு, ரிஜிஸ்டர் செய்யப்பட்ட ஒரு கடிதமும் கொண்டு வந்திருப்பதாகவும், எஜமானியம்மாளுடைய கையெழுத்தை வாங்கிக் கொண்டு அந்த ரிஜிஸ்டர் காகிதத்தைக் கொடுக்க வேண்டும் என்று அவன் சொல்வதாகவும் தெரிவித்தாள்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் கடிதங்களையும், தான் கையெழுத்துச் செய்ய வேண்டிய துண்டுக் காகிதங்களையும் வாங்கிக் கொண்டு வரும்படி பொன்னம்மாளை வெளியிலே அனுப்பி வைத்தாள். மாரமங்கலம் என்பது நிரம்பவும் பெருத்த சமஸ்தானம் ஆகையால், அதில் குடிகளிடத்திலிருந்தும் சர்க்கார் கச்சேரிகளிலிருந்தும், ரிஜிஸ்டர் செய்யப்பட்ட கடிதங்கள் அடிக்கடி அந்தச் சீமாட்டிக்கு வருவதும், அவள் கையெழுத்துச் செய்து விட்டு அவற்றை வாங்குவதும் வழக்கம் ஆதலால், கல்யாணியம்மாள் அதைப்பற்றி எவ்விதமான கவலையும் கொள்ளாமல், சாதாரணமாக நினைத்து, மைனரது விஷயத்தி லேயே தனது சிந்தனை முழுதையும் செலுத்தினவளாக இருந்தாள்.

வெளியில் சென்ற பொன்னம்மாள் கடிதங்களையும் துண்டுக் காகிதத்தையும் வாங்கிக் கொண்டு வந்து வழக்கம் போல மேஜையின் மீது வைக்க, அதற்குள் பஞ்சணையை விட்டுக் கீழே இறங்கி வந்த கல்யாணியம்மாள், மேஜைக்கருகில் உட்கார்ந்து துண்டுக் காகிதங்களில் கையெழுத்தைச் செய்து பொன்னம்மாளி டத்தில் கொடுத்து, "இதைக் கொண்டு போய் தபால்காரனிடத்தில் கொடுத்துவிட்டு வந்து, இவைகளை எல்லாம் பார்த்துக் கொண்டு ஜாக்கிரதையாக இரு; நான் ஸ்நான அறைக்குப் போய் முகம் சுத்தி செய்து கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுப் பின்புற வாசலின் வழியாக அப்பால் போய்விட்டாள். கைச்சாத்துகளைப் பெற்றுக் கொண்ட பொன்னம்மாள் விரைவாக வெளியில் சென்று வாசற்படிக்கு அப்புறத்தில் நின்று கொண்டிருந்த தபாற்காரனிடத் தில் அவைகளைக் கொடுத்துவிட்டு, உடனே திரும்பி வந்து பஞ்சணைக்கருகில் இருந்த ஓர் ஆசனத்தில் உட்கார்ந்தபடி எஜமானியம்மாளது வருகையை எதிர்பார்த்திருந்தாள்.

பின்புற வாசலின் வழியாக வெளியில் சென்ற கல்யாணியம் மாள் தனது காலைக்கடன்களை முடித்துக் கொண்டு, புதிய உடைகள் தரித்து நெற்றியில் விபூதியணிந்து காப்பி முதலிய சிற்றுண்டிகளில் சிறிதளவு உண்டபின், துரைஸானியம்மாளது அந்தப்புரத்திற்குச் சென்று அன்றைக்கும் முதல் நாள் போல துரை ஸானியம்மாள் எங்கும் நடமாடாமல் உள்ளே இருக்க வேண்டும்

என்று தந்திரமாகச் சொல்லி, எல்லோரையும் எச்சரித்துவிட்டு, அவ்விடத்தை விட்டுத் தனது அந்தப்புரத்திற்கு வந்து சேர்ந்தாள். பாலாம்பாளது பத்திரத்தை அபகரித்த விஷயத்திலும், அன்றைய தினம் கட்டையன் குறவன் பாலாம்பாளைத் தூக்கிக் கொண்டு போய் விட்டால் அந்த விஷயத்திலும், மைனருக்கும் தனக்கும் எவ்விதமான போராட்டம் ஏற்படுமோ என்ற கவலை ஒருபுறம் வதைத்தது. முதல் நாள் துரைராஜாவினால் ஏற்பட்ட சஞ்சலமும் அச்சமும் இன்னொரு புறத்தில் வதைத்தன. அப்போது துரை ஸானியம்மாளைப் பார்த்துவிட்டு வந்தது முதல், அவளைப் பற்றிய கவலையும் எழுந்து வளைத்துக் கொண்டது. அவள் திரும்பவும் மோகனரங்கனைக் காணும் முன் அவளை எப்படியாகிலும் ராமலிங்கபுரம் ஜெமீந்தாரது குமாரனுக்கு மணம் புரிவித்து வைத்து விட வேண்டும் என்ற நினைவும் ஆவலும் துடித்துக் கொண்டிருந்தன. ராமலிங்கபுரம் சமஸ்தானத்து ஜெமீந்தாருக்கு அந்தச் சீமாட்டி கடிதம் எழுதியனுப்பியது அதற்கு முந்திய நாளைக்கு முந்திய நாள் ஆதலால், அன்றைய தினம் அந்த கடிதத்துக்கு மறுமொழி வந்திருக்குமோ என்ற நினைவும் ஆவலும் எழுந்து தூண்டின. ஆகவே, அன்றைய தபால்களை உடனே பார்க்க வேண்டும் என்ற ஒரு பதப்பைக் கொண்டவளாய்க் கல்யாணியம்மாள் விசையாக நடந்து வந்து, தபால்கள் வைக்கப்பட்டிருந்த மேஜைக்கருகில் இருந்த நாற்காலியின் மீது அமர்ந்தாள். அப்போது பொன்னம்மாள் எழுந்து வந்து மேஜையின் ஒரு பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். உடனே கல்யாணியம்மாள் பொன்னம்மாளை நோக்கி, "நான் ராமலிங்கபுரத்துக்கு எழுதின கலியாண கடிதத்துக்கு அநேகமாக இன்றைய தினம் பதில் கடிதம் வந்திருக்க வேண்டும். வந்திருந்ததால் அது, இந்தக் கடிதங்களுக்குள் தான் இருக்க வேண்டும்" என்று கூறிய வண்ணம் எதிரில் வைக்கப்பட்டிருந்த கார்டுகள் கவர்கள் ஆகிய சுமார் 20 காகிதங்கள் அடங்கிய அடுக்கைத் தனது கையில் எடுத்தாள். அப்போது பொன்னம்மாள், "அங்஖னெ யிருந்து கடுதாசி வந்திருந்தா மஞ்சக்குறி இருக்குமே. தள்ளிப்பாருங்கள்" என்றாள். அதுவும் நல்ல யோசனை தான் என்று நினைத்த கல்யாணியம்மாள் கடிதங்களை எல்லாம் ஒவ்வொன்றாகத் தள்ளி எதிலாகிலும் மஞ்சட்குறிகள் இருக்

கின்றனவோ என்று பார்த்தாள். அவைகளுள் ஒரே ஒரு கடிதத்தில் மஞ்சட்குறிகள் வைக்கப்பட்டிருந்தன. அதைக் கண்டவுடனே கல்யாணியம்மாளது முகம் மிகுந்த சந்தோஷத்தினால் மலர்ந்தது; மன மகிழ்ச்சி அடைந்தது; தேகம் பூரித்தது. அவள் உடனே பொன்னம்மாளை நோக்கி, 'பொன்னி! ஈஸ்வரன் இப்போது தான் நம்முடைய விஷயத்தில் கிருபாநோக்கம் வைத்தார் போலிருக்கிறது! நல்ல காலந்தான்! எப்படியாவது இந்த துரைஸானியம்மாளுடைய பெயர் கெடாமல் இவள் தன்னுடைய புருஷன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டால், என்னுடைய கவலையில் முக்கால் பங்கு விலகிப் போய்விடும்; அப்புறம் மைனரைப் பற்றி எனக்குக் கவலையே இல்லை; அவன் ஆண் பிள்ளை; அவனைப் பற்றி யாரும் அவ்வளவாகத் தூற்ற மாட்டார்கள். ஆகையால், இந்தக் கலியாணம் நிச்சயமான மாதிரிதான். முகூர்த்தத்தை இன்னம் ஒரு வாரத்திற்குள்ளாகவே நடத்திவிட வேண்டும். நாம் இன்றைய தினமே இந்தப் பீடை பிடித்த ஊரைவிட்டு மாரமங்கலம் போய்ச் சேர்ந்துவிட்டால், இந்தக் கலியாணம் ஆனமாதிரிதான்' என்று கதரைகடந்த குதூகலமும் உற்சாகமும் அடைந்து மெய்ம்மறந்து கூறிய வண்ணம் அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு மற்றவைகளை அப்பால் போட்டுவிட்டு அதை ஒரு பக்கமாகக் கிழித்து உள்ளே இருந்த கடிதத்தை வெளியில் இழுத்துப் பிரித்து அந்த விஷயத்தைப் பொன்னம்மாளும் கேட்டு ஆனந்தங் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தோடு ஓங்கிப் படிக்கலானாள். அந்தக் கடிதம் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

மாரமங்கலம் ஜெமீந்தாரிணியம்மாள் அவர்களுக்கு,

மோகனரங்கன் செங்கல்பட்டுக்குப் போகவில்லை. அவன் துரைஸானியம்மாளை எப்படியும் உங்களுடைய பங்களாவி லிருந்து அழைத்துப் போய், நாளைய தினம் இரவு ஒன்பது மணிக்குள் அவளுக்குத் தாலிகட்டத் தீர்மானித்து விட்டான். நீங்கள் எவ்விதமான பக்கபலத்தோடு இருந்தாலும், அவனுடைய எண்ணம் நிறைவேறாமல் தடுக்க, அந்த ஈசுவரனாலும் முடியாது; நீங்களும்கூட இருந்து சந்தோஷமாக இந்தக் கலியாணத்தை முடித்து வைக்க விருப்பமா, அல்லது, உங்களுடைய தகவலின்றி

இந்தக் காரியம் நடக்க விருப்பமா என்பதை உடனே ஒரு கடிதத்தில் எழுதி, நாளை சாயுங்காலம் சரியாக ஆறு மணிக்கு உங்களுடைய பங்களாவின் வாசலில் உள்ள தபாற்பெட்டி யண்டையில் வந்து நிற்கும் மனிதரிடத்தில் கொடுத்தனுப்பினால், காரியம் அதன்படி நிறைவேறும்; கடிதம் கொடுக்காவிட்டால், நீங்கள் கலியாணத்திற்கு வர விரும்பவில்லை என்று நினைத்துக் கொள்ளுங்கள்.

இப்படிக்கு தங்கள் விதேயன்,
நக்ஷத்திரத்தரகன்.

– என்று எழுதப்பட்டிருந்த விந்தையான கடிதத்தைப் படித்த வுடனே கல்யாணியம்மாள், பொன்னம்மாள் ஆகிய இருவரது முகங்களும், சடக்கென்று மாறுபட்டன. சிறிது நேரத்திற்கு முன் அவர்கள் அடைந்திருந்த களிப்பும், மகிழ்ச்சியும் போன இடம் தெரியாதபடி மறைந்து போயின. மறுபடியும் கலக்கமும், குழப்பமும், திகைப்பும், பிரமிப்பும், பெருந்திகிலும் எழுந்து கல்யாணியம்மாளது மனதை வளைத்துக் கொண்டன. அந்தக் கடிதம் உண்மையான கருத்தோடு எழுதப்பட்டதாக இருக்குமா, அல்லது, தங்களைப் புரளி செய்யும் பொருட்டு எழுதப்பட்ட பொய்க் கடிதமாக இருக்குமா என்ற சந்தேகம் எழுந்தது. அதை ஒரு பெருத்த விபத்தாக நினைப்பதா, அல்லது, அதை அலட்சிய மாக மதிப்பதா என்ற நினைவைக் கொண்டவளாய், கல்யாணி யம்மாள் அரை நாழிகை நேரம் வரையில் மௌனமாக இருந்து, கடைசியாக நிமிர்ந்து பொன்னம்மாளது முகத்தை நோக்கி, "என்னடீ இது! துரைஸானியம்மாளுடைய காரியம் அதிசீக்கிரத் தில் ஒழுங்குப்பட்டு விடும் என்று நினைத்து மனக்கோட்டை கட்டி நாம் சந்தோஷப்பட்டதென்ன! இப்போது கிடைத்திருக்கும் சங்கதி என்ன! ராமலிங்கபுரத்தாருடைய கடிதம் வராமல் இருந்ததைப் பற்றி எனக்கு அவ்வளவு கவலை உண்டாகவில்லை. அவர் களுடைய கடிதம் இன்றைக்கு வராவிட்டால், இன்னம் இரண்டொரு நாளில் எப்படியும் வந்து சேரும். நம்முடைய சம்பந்தமும் கிடைக்குமா என்று மிகுந்த ஆவலோடு அவர்கள் காத்திருக்கிறபடியால் அவர்கள் ஒருகால் நேரிலேயே மனிதரை அனுப்பினாலும் அனுப்பலாம். ஆகையால், அதைப்பற்றி

எவ்வித சந்தேகமும் வேண்டியதில்லை. அதற்குள், இந்தத் தொந்தரவு ஒன்று புதிதாகக் கிளம்பி இருக்கிறதே. காரியம் இப்படி நேரும் என்று நான் சொப்பனத்தில்கூட நினைக்கவில்லையே. இந்த மோகனரங்கன் செங்கல்பட்டுக்குப் போகாமல் வழியிலேயே இறங்கித் திரும்பி வந்திருக்கலாம். அதைப் பற்றி சந்தேகமில்லை. ஆனால், இவ்வளவு துணிகரமாகக் கடிதம் எழுத அவனுக்கு அவ்வளவு யோக்கியதை எப்படி உண்டாயிற்று! வக்கீல் அவனை இங்கே கொண்டு வந்து வேலைக்கு வைத்த போது அவன் யாருமற்ற அநாதைப் பையன் என்றல்லவா சொன்னார். இவ்வளவு பெரிய பட்டணத்தில் இப்படி முன்னாகவே அறிவித்துவிட்டு வந்து பெண்ணைக் கொண்டு போவது சுலபமான காரியமா? அதற்கு ஏராளமான ஆள்கள் இருக்க வேண்டாமா? அவர்களுக்கெல்லாம் பணத்தை வாரி இறைக்க வேண்டாமா? இந்த அநாதைப் பையனுக்குத் திடீரென்று அவ்வளவு பணமும் ஜனக்கட்டும் எப்படி உண்டாயிருக்கும்! இது நினைக்க நினைக்க ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றாள்.

பொன்னம்மாள் சிறிது நேரம் யோசனை செய்து, "அந்த அண்ணாடங்காச்சிப் பையனாவது இப்படி எழுதவாவது! அடிச்சாக்கூட அவுனுக்கு சரியா அளத்தெரியாதே. அவன் எளுதிப் போட்டிருப்பான். இந்தக் கடுதாசியினாலெ ஒரு கொசுவுகூட சாகப் போறதில்லெ கிளிச்சிக் குப்பையிலே போடுங்க. இதுக்கெல்லாமா நாம் பயந்துக்கறது?" என்றாள்.

கல்யாணியம்மாள் கால் நாழிகை நேரம் வரையில் சிந்தனை செய்து, "அவன் எழுதக்கூடியவன்தான். ஆனால் மோகனரங்கனுக்கும் துரைஸானியம்மாளுக்கும் சிநேகம் என்பதும், நாம் அவனைச் செங்கல்பட்டுக்கு அனுப்பியதும், துரைராஜாவுக்குத் தெரியவே வகையில்லையே?" என்றாள்.

பொன்னம்மாள், "நீங்க என்னெ ஆலந்தூருக்கு அனுப்பிச்சதும் கருப்பாயி இஞ்சே வந்ததும் எப்பிடி அவர்களுக்குத் தெரிஞ்சிச்சோ, அதெப்போலெதான் இதுவும் தெரிஞ்சிருக்கும். நம்ப வங்களாவுலெ ஆரோ ஒரு உள்ளாளு இருந்தே, இப்பிடி எல்லாம் காரியம் நடக்குது. அதெத்தான் நாம்ப மின்னாலே கண்டு பிடிக்கணும். இந்தக் கடுதாசியிலே எளுதியிருக்கிறபடி காரியம்

ஆயிடப் போவுதேயின்னு நீங்க பயப்பட வேண்டியதே இல்லை" என்றாள்.

கல்யாணியம்மாள் மிகுந்த கவலையும் கலக்கமும் அடைந்தவளாய் பொன்னம்மாளை நோக்கி, "என்ன காலத்துக்குத்தான் நமக்கு இப்படிப்பட்ட சங்கடமெல்லாம் வருகிறதோ தெரியவில்லையே! ஒரு நிமிஷ நேரமாவது கவலையில்லாமல் தலையை சாய்த்துப் படுக்க முடியாமல் போய்விட்டதே! எந்தப் பக்கம் திரும்பினாலும் எதில் கையை வைத்தாலும், புற்றிலிருந்து ஈசல்கள் கிளம்புவது போல, என்னென்னவோ எதிர்பாராத விநோதம் எல்லாம் வந்து முளைக்கிறதே! நேற்று அந்தப் பத்திரத்தை எடுத்து வரப் பார்த்தோம். அதை மைனர் ரிஜிஸ்டர் செய்து, முன்னிலும் அதிக இடைஞ்சலான நிலைமையை உண்டாக்கி வைத்து விட்டான். அந்தக் கடையன் குறவன் நமக்கு இன்னமும் அனுகூலம் செய்து வைப்பதாகச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறான். அதிலிருந்து என்ன புதிய விபரீதம் கிளம்பப் போகிறதோ தெரியவில்லை. இந்த மோகனரங்கனை வெளியூருக்கு அனுப்பி விட்டால் துரைஸானியம்மாளைப் பற்றிய கவலை நீங்கிப் போய் விடும் என்று நினைத்தால், அதுபோக, இந்தப் பெருத்த இடிவந்து பயமுறுத்துகிறது. இது எப்படித்தான் முடியுமோ தெரியவில்லை. எல்லாவற்றிற்கும் நீ ஒரு காரியம் செய்; உடனே புறப்பட்டு நேரில் நீயே மைலாப்பூருக்குப் போய், வக்கீல் ஐயாவைக் கண்டு, எப்படிப்பட்ட அவசரமான ஜோலி இருந்தாலும், அதை நிறுத்தி விட்டு, உடனே இங்கே வந்துவிட்டுப் போகும்படி சொல்லி அழைத்துக் கொண்டு வந்து சேர்; இந்த விஷயம் நிரம்பவும் விபரீத மாக இருக்கிறதாகையால், நாம் அலட்சியமாக நினைத்து சும்மா இருப்பது பிசகு. அவர் எப்படி நடந்து கொள்ளச் சொல்லுகிறாரோ அப்படியே நடந்து கொள்ளும்" என்று முடிவாகக் கூறினாள்.

அதைக் கேட்ட பொன்னம்மாள் அதற்கு மேல் எவ்வித சமாதானமும் சொல்லாமல், "சரி; அப்படியே செய்யறேனுங்க. இதோ சண நேரத்துலே அவரெ இட்டாறேன்" என்று கூறிக் கொண்டே வெளியில் போய்விட்டாள்.

அவள் போன பிறகு கல்யாணியம்மாள் சித்தப்பிரமை கொண்டவள் போல வெறுவெளியைப் பார்த்து விழித்துக் கொண்டு அப்படியே நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தாள். மற்ற எல்லாக் கவலைகளையும் விட துரைஸானியம்மாளைப் பற்றிய கவலையே சகிக்க ஒண்ணாத அபாரமான துன்பமாகத் தோன்றி வதைத்தது. அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தபடி துரைஸானியம்மாளை மோகனரங்கனது மனிதர்கள் பலவந்த மாகக் கொண்டு போக நேருமானால், அதன்பிறகு அந்த அவமானத்தைப் பொறுத்துக் கொண்டு, ஊராரினது முகத்தில் விழிப்பதை விட தான் எந்த தான் எந்த வகையிலாவது தனது உயிரை மாய்த்துக் கொள்வதே சரியான காரியம் எனத் தோன்றியது. அப்படிப்பட்ட மகா கலவரமான மனநிலைமையில், மிகுதியிருந்த கடிதங்களை எடுத்துப் படிக்கவும் அந்தச் சீமாட்டிக்கு எண்ணம் உண்டாகவில்லை. பெருத்த விசனத்திலும் கவலையிலும் ஆழ்ந்து அரை நாழிகை நேரம் வரையில் கிடந்த கல்யாணியம்மாள் மெதுவாக நிமிர்ந்து, அந்தக் கடிதத்தை எடுத்து இன்னொரு முறை உற்று நோக்கினாள். மோகனரங்கனது எழுத்தின் அடையாளம் அவளுக்கு நன்றாகத் தெரியும் ஆதலால், அந்தக் கடிதத்தின் எழுத்து அவனால் எழுதப்பட்டதா அல்லவா என்பதை ஆராய்ந் தாள். கடிதத்தின் எழுத்துக்கள் அவனால் எழுதப்பட்டவை அல்லவெனத் தோன்றியது. அந்தக் கடிதத்திலிருந்த சங்கதியை இன் னொரு தரம் படிக்க வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. அவ்வாறே அவள் கடிதத்தை இன்னொருமுறை படித்தாள். அந்தக் கடிதத்தைப் படிக்கப் படிக்க, அவளது மனோவேதனை விஷம் போலப் பெருகிக் கொண்டே இருந்தது. ஒரு நாழிகைக்கு மேலாயிற்று. அப்படி ஆனது ஒரு நாள் கழிந்தது போல இருந்தது. ஒரு கால் அதற்குள் யாராகிலும் துரைஸானியம்மாளை அபகரித்துக் கொண்டு போயிருப்பார்களோ என்ற அச்சமும், அதற்கு மேல், அவளைத் தனியாக விட்டு வைத்திருக்காமல் தனது பார்வை யிலேயே வைத்திருக்க வேண்டும் என்ற நினைவும் தோன்றின. அவள் அப்போது என்ன நிலைமையில் இருக்கிறாள் என்பதைப் பார்த்துவிட்டு வரவேண்டும் என்ற ஓர் அவா உண்டாயிற்று; ஆகவே, வக்கீல் வருவதற்குள் தான் போய்விட்டு வந்துவிடலாம் என்று தீர்மானித்துக் கொண்டவளாய், கல்யாணியம்மாள் தனது

ஆசனத்தை விட்டெழுந்து, பின்புற வாசலின் வழியாக வெளியே சென்று, துரைஸானியம்மாளது அந்தப்புரத்திற்கருகில் போய்ச் சேர்ந்தாள்.

போனவள் திடீரென்று உள்ளே நுழையாமல், தயங்கி வெளியி லேயே நின்றாள். துரைஸானியம்மாள் தனது மூத்த பெண் குழந்தையாயிற்றே என்ற கரைகடந்த வாத்சல்யத்தினாலும், அவளும் தோற்றத்தில் தன்னைப் போலவே இருக்கிறாள் என்ற நினைவினாலும், அவளிடத்தில் அளவிலடங்காத அபிமானமும் வாஞ்சையும் வைத்திருந்த கல்யாணியம்மாள் பெரும் பாடுபட்டு அருமையாக ஊட்டி வளர்த்து மனுஷியாக்கப்பட்ட தனது சீமந்த புத்திரி, அப்படிப்பட்ட இழிவான நடத்தையில் இறங்கிவிட்டாளே என்ற ஏக்கத்தினாலும் துயரத்தினாலும் தளர்வடைந்தவளாய், அவளை எப்படிக் கண்டிக்கிறது என்ற கிலேசம் அடைந்தவளாய், உள்ளே போகாமல் வெளியிலேயே நின்றாள்; அன்றைய காலையிலும் முந்திய நாளிலும் தான் போய்ப் பார்த்த காலத்தில் துரைஸானியம்மாள் தனது தாயை இலட்சியமே செய்யாமல் அசட்டையாகப் படுத்து வேறொரு புறத்தில் தனது முகத்தைத் திருப்பிக் கொண்டிருக்க, கல்யாணியம்மாள் அதைப் பாராட்டா மல் கோமளவல்லியிடத்திலும் தாதிகளிடத்திலும் பேசிக் கொண் டிருந்துவிட்டு வர நேர்ந்ததாகையால், தான் மறுபடியும் உள்ளே போவதில் எவ்வித உபயோகமுமில்லை எனத் தோன்றியது. அப்போது தாதிகள் பெண்கள் இருவரையும் வைத்துவிட்டுத் தங்களது காலைப் போஜனத்தை முடித்துக் கொண்டு வரப் போயிருந்தமையால், பெண்கள் இருவரும் தனியாக இருந்ததும் தெரிந்தது; ஆகவே, கல்யாணியம்மாள் மெல்ல நடந்து, ஒரு ஜன்னலண்டை போய், ஓசை செய்யாமல் நின்று கொண்டிருந் தாள். அந்த ஜன்னலை அடுத்தாற் போல உட்புறத்தில், துரை ஸானியம்மாளது கட்டில் போடப்பட்டிருந்த தாகையால், உட்புறத்தில் பேசப்படும் வார்த்தைகள் அந்த ஜன்னலுக்கு வெளியில் நன்றாகக் கேட்டன. கல்யாணியம்மாள் தனது செவியைக் கம்பிகளுக்கிடையில் வைத்து கவனமாகக் கேட்கத் தொடங்கினாள்; உட்புறத்தில் அக்காளும் தங்கையும் மாத்திரம் தனியாக இருந்து மெதுவாகப் பேசியது நன்றாகத் தெரிந்தது.

**கோமளவல்லி:-** (நயமாகவும் அன்பாகவும்) என்ன அக்கா! என்னிடத்தில்கூட நிஜத்தைச் சொல்லக்கூடாதா? கொஞ்ச நேரத்துக்கு முன் தாதி குப்பம்மாள் உன்னிடத்தில் நெருங்கி நிற்பது போல இருந்து ஒரு கடிதத்தை ரகசியமாக உன்னுடைய வயிற்றுப் பக்கமாகப் புடவைக்குள் சொருகினாள்; அதை நான் கவனிக்கிறேனா இல்லையா என்பதை அறியும் பொருட்டு நீ என்னை உற்றுப் பார்த்தாய்; அதன் பிறகு அந்த நாவல் புஸ்தகத்தை எடுத்துப் பிரித்து, அதற்குள், அந்தக் கடிதத்தை வைத்துக் கொண்டு படித்துவிட்டு அதை ஒளித்து வைத்தாய். இது வரையில் நிரம்பவும் விசனமாக இருந்த நீ கடிதத்தைப் படித்தது முதல் மிகவும் குதூகலமாகப் பேசுவதோடு, நாங்கள் எல்லாரும் அன்னியர்கள் போலவும், எங்களுக்கும் உனக்கும் இனி எவ்வித சம்பந்தமும் இல்லாமல் போய்விட்டது போலவும் புது மனுஷி போல ஒருவித வேற்றுமையாகவும் பேசுகிறாய். நீ இது வரையில் என்னிடத்தில் கபடமில்லாமல் பேசுவாய்; இப்போது ஏன் இப்படி இருக்கிறாய்? அந்தக் கடிதம் எங்கே இருந்து வந்தது? அதில் இருந்த சந்தோஷ சங்கதி என்ன? எனக்குச் சொல்லக்கூடாதா?

**துரைஸானி:-** நீ தான் பெரிய சிப்பாயாயிற்றே; ஜெயில் கைதியைக் காக்கிறது போல, நீ இங்கே வந்து என் மேல் பாராக் கொடுத்துக் கொண்டிருக்கும்படி அம்மாள் செய்திருக்கிறார்களே. அப்படி இருக்க, உன்னை நான் பழைய கோமளவல்லியாக நினைத்து நம்பி எப்படி உண்மையைச் சொல்லுகிறது; எனக்குக் கடிதம் வந்தது உண்மை தான்; அதை நான் உனக்குக் காட்டாமல் மறைத்ததும் நிஜந்தான். ஆனால், உன்னைப் போல இவ்வளவு கபடமற்ற மனிஷியை நான் இந்த உலகத்திலேயே பார்த்ததில்லை; நீ இந்த இரண்டு நாளாக இங்கேயே இருக்கிறாய்; எனக்கு உடம்பு அசௌக்கியமாக இருப்பதால், நான் வெளியில் போகாமல் இங்கேயே இருக்கும்படி நீ பார்த்துக் கொள்ள வேண்டும் என்று அம்மாள் உனக்குச் சொல்லியிருப்பதை உண்மை என்றே நீ இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறாய். அப்படி இருக்க, குப்பம்மாள் என்னிடத்தில் கடிதம் கொடுத்ததையும், அதை நான் மறைத்துப் படித்தேன் என்பதையும் மாத்திரம் நீ எப்படிக் கண்டு கொண்டாய்! அது தான் எனக்கு நிரம்பவும் ஆச்சரியமாக இருக்கிறது!

**கோமளவல்லி:-** அக்கா! நீ சொல்வதெல்லாம் வேடிக்கையாக இருக்கிறதே! இரண்டு நாளைக்கு முன் ஒரு பகலில் உனக்குத் தலை நோவாக இருக்கிறதென்றும், அறையில் தனியாக இருக்க வேண்டும் என்றும் சொல்லிவிட்டு வந்தாய். அதுமுதல் நீ இங்கேயே படுத்திருக்கிறாய்; மருந்துகளையும் சாப்பிட்டு வருகிறாய்; அம்மாளும் வந்து வந்து பார்த்து உன்னுடைய தேகஸ்திதியைப்பற்றி விசாரித்துவிட்டுப் போகிறார்கள். அப்படி இருக்க, நீ தேக அசௌக்கியத்தோடு இருக்கிறாய் என்று நினைக்காமல் நான் வேறே எப்படி நினைக்கிறது?

**துரைஸானி:-** நாங்கள் ஆயிரம் சொல்லுகிறோம். சொன்னாலும் உனக்குச் சுய அறிவும் யூகமும் கொஞ்சமாவது இருக்க வேண்டாமா? ஏதோ தலைவலி உண்டானால், இரண்டொரு நாழிகை நேரத்தில் போய்விடுகிறது. இந்த மூன்று நாட்களாக தலைவலிக்காக யாராவது இப்படிப் படுக்கையிலேயே படுத்திருப்பதுண்டா? இந்த இரண்டு நாட்களாக எனக்குத் தலைநோவு இல்லை என்று நான்தான் சொல்லிக் கொண்டு வருகிறேன்; அப்படி இருக்க, என்னைப் படுக்கையிலேயே வைத்திருக்க வேண்டிய காரணம் என்ன? எனக்கு உண்மையிலேயே ஏதாகிலும் வியாதி இருந்தால், இந்நேரம் எத்தனை வைத்தியர்கள் வந்திருப்பார்கள்! அம்மாள் என்னை விட்டு அப்பால் நகருவார்களா? அதை எல்லாம் நீ கொஞ்சமாவது யோசித்துப் பார்த்தாயா? உலகத்தில் உள்ள கபடமெல்லாம் திரண்டு ஒரு வடிவமாக வந்திருக்கும் அம்மாளுடைய வயிற்றில், இப்படிப்பட்ட சுத்த வெள்ளை மனுஷியான நீ எப்படி வந்து பிறந்தாய் என்பதுதான் எனக்கு அதிக ஆச்சரியமாக இருக்கிறது.

**கோமளவல்லி:-** அக்கா! நீ என்னை எவ்வளவு தூரம் தூஷித்தாலும் வைதாலும் எனக்கு வருத்தமே உண்டாகவில்லை. நம்முடைய அம்மாளைப் பற்றி நீ தூஷணையாகப் பேசுவதைக் கேட்பது மாத்திரம் எனக்குக் கொஞ்சமும் சகிக்கவில்லை, என்ன காரணத்தினாலோ உனக்கு அம்மாளிடத்தில் இவ்வளவு வெறுப்பும் குரோதமும் ஏற்பட்டிருக்கின்றன! அவர்கள், தலை போவதானாலும், கெட்ட காரியத்தில் பிரவேசிக்கக் கூடியவர்கள் அல்ல. அயோக்கியத்தனம் செய்கிறவர்களுடைய முகத்தில்

விழிப்பதும் அவர்களுக்குப் பிடிக்காது. அப்படிப்பட்ட பரிசுத்தமான தாயின் வயிற்றில் பிறந்த நீ மாத்திரம் ஏன் இப்படித் தனியாக ஒரு புது மனுஷியாக இருக்கிறாய்! அம்மாளை நீ கபடி என்று சொல்லுகிறாயே; அன்றைய தினம் தலை நோவென்று சொல்லி விட்டு வந்த நீ இப்போது எல்லாம் பொய் என்று சொல்லுகிறாயே. இதை என்னவென்று சொல்லுகிறது? என்னிடத்தில் நீ கபடமாகத் தானே இந்த மூன்று நாட்களாக நடந்து கொண்டிருக்கிறாய். தன்னைப் போலவே உலகம் எங்கும் இருக்கும் என்று நினைப்பதே பெரும்பாலோருடைய சுபாவம் ஆகையால், நீ உன்னுடைய கபட குணத்தினால் அம்மாளுடைய காரியத்தை எல்லாம் கபடம் கபடம் என்று தப்பாக எண்ணிக் கொண்டிருக்கிறாய் போலிருக் கிறது. உண்மையில் அம்மாள் பரிசுத்தமான மனசை உடைய வர்கள். அவர்கள் எந்த விஷயத்திலாவது நம்மிடத்தில் கபடமாக நடந்து கொண்டிருந்தால், அது நம்முடைய நன்மையையும் க்ஷேமத்தையும் கருதியதாக இருக்குமேயன்றி, அது நம்மைப் பாதிக்கக்கூடியதாக ஒரு நாளும் இராது. தாம் பெற்ற குழந்தை களுக்கு எவராவது துரோகம் செய்வார்களா! ஒருநாளும் இல்லை. நீ நம்முடைய அம்மாள் விஷயத்தில் வைத்திருக்கும் கெட்ட நினைவை எல்லாம் விட்டுவிட்டு, அவர்கள் சொல்லுகிறவைகள் செய்கிறவைகள் ஆகிய எல்லாம் நல்லவைகளாகத்தான் இருக்கும் என்ற ஒரு பக்தியையும் அந்தரங்க விசுவாசத்தையும் வைத்து நடந்து கொள்வாயானால் உனக்கு எவ்விதக் குறைவும் ஏற்படாது. நீ எப்போதும் க்ஷேமமாகவே இருப்பாய். இப்படிப்பட்ட துன்ப மெல்லாம் உண்டாகவே உண்டாகாது. இந்த மூன்று நாட்களாக உனக்குத் தலைநோவென்று அம்மாள் உன்னைப் பொய்யாக வைத்திருப்பதாகப் பொருள்படும்படியாகவும் எங்களை எல்லாம் உன்மேல் காவலாக வைத்திருக்கிறார்கள் என்றும் நீ சொன்னாயே. அதற்குக் காரணமென்ன? அதைச் சொல். குற்றம் யாருடைய தென்பதை நான் உடனே சொல்லுகிறேன்.

**துரைஸாணி:-** நீ இவ்வளவு அசடாகவும் கர்னாடக மனிஷியாக வும் இருப்பாய் என்று நான் நினைக்கவே இல்லை. தாய் தகப்பன் என்றால், அவர்கள் மாத்திரம் சர்வமும் தெரிந்த மேதாவிகளா? அவர்களுக்குப் பிள்ளைகளைவிட வயசு மாத்திரம் அதிகம் என்றே

ஒரு விஷயத்தை நிச்சயமாகச் சொல்லலாம். புத்திசாலித்தனத்தினா லும், தந்திர யுக்திகளிலும், வித்தையிலும், உலக அனுபோகத்திலும் தாய் தகப்பனைவிடப் பிள்ளைகள் மேலானவர்களாக இருப்ப தில்லையா? அப்படி இருக்க, எந்த விஷயத்திலும் தாய் தகப்பன் மார்கள் செய்வதெல்லாம் நன்மையானதென்பதும், பிள்ளைகள் செய்வதெல்லாம் தீமையான தென்பதும் பின்னவர்கள் முன்னவர் களை தெய்வம் என்று மதித்து அவர்கள் சொற்படியே நடக்க வேண்டும் என்பதும் நியாயமாகுமா? தாய் தகப்பன்மார்கள் எப்படிப்பட்டவர்களாக இருந்தாலும், நாம் அவர்களை வணங்கி அவர்கள் சொல்லுகிறபடி எல்லாம் குருட்டுத்தனமாகச் செய்தே தீரவேண்டும் என்பது உன்னுடைய கொள்கை. என்னுடையது அதுவல்ல. தாய் தகப்பன்மார்கள் நல்ல விவேகிகளாகவும், கண்ணியமான நடத்தை உள்ளவர்களாகவும் இருந்தால் மாத்திரம் நாம் அவர்களைப் பணிந்து அவர்களுடைய சொற்படி நடக்க வேண்டுமன்றி, அவர்கள் அருகமற்றவர்களாக இருந்தால், நாம் கூடியமட்டில் அவர்களைத் திருத்தி நல்ல வழிக்குக் கொண்டுவர முயல்வதே நம்முடைய கடமையன்றி, குருட்டு பக்தியினால் அவர்களைப் பார்த்து நாமும் கெட்டுப் போகக் கூடாதென்பதே என்னுடைய கொள்கை.

*கோமளவல்லி:-* (நிரம்பவும் கிலேசமும் சங்கடமும் அடைந்தவ ளாய்) அக்கா! நீ சொல்வது பொதுவான நியாயமாக இருந்தாலும் நம்முடைய அம்மாள் விஷயத்தில் நீ இப்படிப்பட்ட தகாத வார்த்தையை வாயில் வைத்துப் பேசுவதும் அடாத விஷயம். நீ இப்படிப் பேசுவதைக் காதால் கேட்கவே எனக்குச் சகிக்கவில்லை. அபாரமான புத்தி விசேஷமும், மாசற்ற நடத்தையுமுள்ள நம்முடைய தாயைக் கேவலம் முட்டாளாகவும் இழிகுணம் உடையவளாகவும் மதித்துப் பேசுவது மகா பாவம். இனிமேல் இந்த மாதிரி பேச வேண்டாம்.

*துரைஸானி:-* அம்மாளை நான் முட்டாள் என்று சொல்ல வில்லை. அவர்கள் சரியான நடத்தையுள்ளவர்கள் அல்ல என்பது தான் என்னுடைய எண்ணம். அன்றைய தினம் அம்மாள் அந்த மதனகோபாலன் மேல் மோகங் கொண்டு அவனைத் துரத்திக் கொண்டு ஓடியதை நாம் கண்ணால் பார்த்தோம் அல்லவா.

அப்படிச் செய்ததுமன்றி அவர்கள் அவன் மேலேயே பழியை எல்லாம் சுமத்தி அவனுடைய பெயரையும் பிழைப்பையும் கெடுத்துவிட்டார்களே. அவர்கள் கேவலம் விதவை. அவர்கள் விபசார தோஷத்துக்குப் பாத்திரமாகலாமா? அவர்கள் அப்படிச் செய்ததனால் எவ்வளவு கெடுதல் உண்டாகிவிட்டது தெரியுமா? ஒரு யௌவனப் புருஷன் மேல் நெடுநாளாக என் மனம் சென்று கொண்டே இருந்தது. அம்மாளிடத்தில் நான் வைத்திருந்த பயபக்தியினால் இதுவரையில் நான் என் மனசை அடக்கிக் கொண்டிருந்தேன். அம்மாளே ஒருவன் மேல் மோகங்கொண்டு துரத்தியதைக் கண்டவுடனே என்னுடைய பயமெல்லாம் போய் விட்டது. நான் ஆசை வைத்திருந்த அந்த அழகான பையனிடத்தில் நான் உடனே சிநேகம் செய்து கொண்டேன். அதை அம்மாள் கண்டு கொண்டார்கள். அந்த விஷயத்தில் அம்மாள் என்னைக் கண்டிக்க அவர்களுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? அவர்கள் சுத்தமாக இருந்தால், என்னைக் கண்டிக்க அவர்களுக்கு யோக்கியதை உண்டு. அவர்களே அசுத்தர்களாக இருக்கையில், அவர்கள் வெளிக்கு மாத்திரம் சுத்தமாக நடிப்பதைக் கண்டால், அது எனக்கு மிகுந்த கோபத்தைத் தருகிறது.

**கோமளவல்லி:-** சிவசிவா! நீ சொல்லுகிற ஒவ்வொரு வார்த்தையும் கன்ன கடூரமாக இருக்கிறதே! அக்கா! நீ இவ்வளவு கொடியவளாக மாறிப் போவாய் என்று நான் கனவிலும் நினைக்கவே இல்லை. அம்மாள் மதனகோபாலன் விஷயத்தில் தவறான எண்ணத்தோடு நடந்து கொண்டதாக நீ சொல்வதற்கு எவ்வித மான ஆதாரமுமில்லை. அது உன்னுடைய யூகமேயன்றி வேறல்ல. ஏதோ சில சந்தேகத் தோற்றங்களைக் கொண்டு நீ அந்த மாதிரி நிச்சயிப்பது நியாயமாகாது. நீ நல்ல விவேகியாக இருந்தால் என்ன செய்திருக்க வேண்டும் என்றால், இன்னமும் சொற்ப காலம் பொறுமையோடிருந்து, அவர்களுடைய நடத்தையைக் கவனித்து, சந்தேகமற ஆராய்ந்து அதன் பிறகு அவர்கள் விஷயத்தில் கெட்ட அபிப்பிராயம் கொள்ள வேண்டும். அப்படிக் கெட்ட அபிப்பிராயம் கொண்டாலும், உன்னுடைய கடமை என்ன? உன்னால் கூடுமானால் நீ அவர்களைச் சரியான வழிக்குத் திருப்ப முயலவேண்டும். இல்லையானால் நீ அதைப்பற்றி

கவனிக்காமல் கொஞ்ச காலம் இருந்து ஒரு புருஷனைக் கட்டிக் கொண்டு இவர்களை விட்டு விலகிப் போய்விட வேண்டும். அப்படிச் செய்யாமல், ஏதோ வெளித்தோற்றமான சில சம்சயங் களை வைத்துக் கொண்டு அம்மாளைப் பற்றி நிரம்பவும் கேவல மான அபிப்பிராயத்தைக் கொண்டாய். அதை ஆதாரமாக வைத்துக் கொண்டு, உடனே நீயும் ஒருவனிடத்தில் கள்ள நட்பு வைத்துக் கொண்டு விட்டாய். நியாயம் எவ்வளவு அழகாக இருக்கிறது! உண்மை என்னவென்றால், உனக்கு ஒரு புருஷனி டத்தில் துர் எண்ணம் உண்டாகி, அது பொறுக்க முடியாத நிலைமையிலிருந்து வந்தது. நீ அம்மாளுக்காக பயந்து கொண்டே வந்தாய்; இந்த மதனகோபாலன் விஷயத்தில் ஏற்பட்ட ஒரு சந்தேகத்தை உனக்கு அனுகூலமான ஒரு முகாந்திரமாக வைத்துக் கொண்டு, நீ உடனே துர்நடத்தையில் இறங்கிவிட்டாய்; நீ செய்த காரியம் சரியானதென்று காட்டிக்கொள்வதற்காக நீ அம்மாளை இப்படி இழிவாகத் தூஷித்துப் பேச ஆரம்பித்து விட்டாய். சற்று முன் நீ என்ன சொன்னாய்? தாய் தகப்பன்மார்கள் உண்மையில் கெட்டவர்களாக இருந்தால், பிள்ளைகள் அவர்களைச் சரிப்படுத்த வேண்டுமேயன்றி, அவர்களைப் பார்த்துப் பிள்ளைகளும் குருட்டுத் தனமாகக் கெட்ட வழியில் இறங்கக் கூடாதென்பது உன்னுடைய கொள்கையென்று சொன்னாயே; அந்த நீதியை நீ ஏன் மறந்தாய்? அம்மாளிடத்தில் காணப்பட்ட சிறிய சந்தேக மாகிய ஓர் அற்பத் தவறுக்கு பதிலாக நீ அடியோடு பாதாளத்தில் விழுந்து விட்டாயே! அம்மாளுக்காவது உலக வாழ்க்கை எல்லாம் ஒருவாறாக முடிவடைந்து போய்விட்டது. நீயோ யௌவனப் பருவத்தில் உள்ள பெண். நீ ஒரு புருஷனைக் கட்டிக்கொண்டு நல்ல பெயரெடுத்து வாழ வேண்டாமா? அம்மாள் தமக்குத் தாமே எஜமானி; அவர்கள் எதை வேண்டுமானாலும் செய்யலாம். அவர்களுக்கு எவருடைய தயவும் தேவையில்லை. அவர்கள் எவருக்கும் அஞ்சுவது அநாவசியம் நீ இன்றைக்கு ஒரு கள்ள நாயகனைப் பிடித்துக் கொண்டு எல்லோரையும் அசட்டையாக மதித்து உலகத்தாருக்குப் பயப்படாமல் நடந்தால், எல்லோரும் உன்னை விலக்கிவிட மாட்டார்களா! இப்போது நீ செல்வாக்கான இடத்தில் இருக்கிறாய், என்றும் யௌவனப் பெண்ணாக

இருக்கிறாய் என்றும் நினைத்து உன்னிடத்தில் மோகித்திருக்கும் அந்தக் கள்ளப்புருஷன் நீ நாளைக்கு ஏழையாகப் போய்விட்டாய் என்பதையும், மோகம் முப்பது நாள் ஆசை அறுபது நாள் என்றபடி உன்னிடத்தில் உள்ள சுகம் இவ்வளவு தான் என்பதையும் கண்டு உன்னை வெறுத்து விலக்கிவிடுவானானால் அதன் பிறகு நீ என்ன செய்வாய்? எப்படி இருந்தாலும், ஒரு புருஷனை சாஸ்திரப்படி கலியாணம் செய்து கொள்வதைப் போன்ற நிரந்தரமான காரியமும் உறுதிப்பாடும் மற்றவைகளில் இருக்குமா? ஒருவனை சாஸ்திரப்படி கட்டிக் கொண்டவளுக்கு இப்படிப்பட்ட இழிவும் அவமானமும் என்றைக்காவது ஏற்படுமா? உன்னுடைய சுயக்காரியத்தையும், பிற்காலத்து க்ஷேமத்தையும் கூட நினையாமல் ஆத்திரப்பட்டு இப்போதைய அற்ப சந்தோஷத்தைக் கருதி இவ்வளவு பெருத்த தவறைச் செய்த உன்னை யாராவது விவேகி என்று சொல்லுவார்களா? உன்னைப் பெருத்த அகங்காரி என்று சொல்லுவார்களேயன்றி, நீ மகா புத்தி சாலித்தனமாக நடந்து கொண்டிருக்கிறாய் என்று இவ்வளவு பெருத்த உலகத்தில் ஒருவர்கூட உன்னைப் புகழ்ந்து கொண்டாட மாட்டார்கள். இப்படி மதியீனமாக நடந்து கொண்டிருக்கும் நீ, நம்மைவிட எவ்வளவோ அதிக அனுபோகசாலியான நம்முடைய தாயைப்பற்றிக் கெட்ட அபிப்பிராயம் கொடுத்தால், அதற்கு ஏதாவது மதிப்பு ஏற்படுமா? ஒருநாளும் ஏற்படாது; அதிருக் கட்டும்; நீ ஒரு புருஷனைப் பிடித்துக் கொண்டதை அம்மாள் கண்டு கொண்டதாகச் சொன்னாயே? அதன் பிறகு இந்தத் தலைவலி வேஷம் எதற்காகப் போட்டாய்?

**துரைஸானி:-** ஓகோ! நீகூட அம்மாளைப் போல தரும சாஸ்திர மூட்டைகளை அவிழ்க்கக் கற்றுக் கொண்டு விட்டாயா! இனிமேல் பரவாயில்லை; அம்மாளைப் போல நீயும் நன்றாக வெளி வேஷம் போடலாம். நீங்கள் எல்லோரும் உள்ளொன்றும் புறமொன்றுமாக நடக்கிறவர்கள்; நான், மனம் எதை நினைக்கிறதோ அதை மறைக்காமல், அதன்படி காட்டிக்கொள்ளக் கூடியவள்; அம்மாள் ரகசியத்தில் எத்தனையோ துன்மார்க்கமான காரியங் களைச் செய்துவிட்டு, வெளிப்பார்வைக்கு மகா சுத்தமான மனிஷி போல நடக்கிறதை எல்லாம் நான் அறிவேன்; எனக்கு அப்படி நடப்பது

பிடிக்காது; ஒரு புருஷன் மேல் ஆசை வைத்தேன்; அதை அடக்க என்னால் முடியவில்லை; நான் அதை வெளியில் காட்டி, அதன்படி நடந்துவிட்டேன். அந்தப் புருஷனை நான் நாயகனாகவும் அடைந்து விட்டேன். இந்த விஷயத்தில் நான் உண்மையில் தவறு செய்து விட்டதாகவே வைத்துக் கொள்வோம்; இப்போது அம்மாள் என்ன செய்திருக்கிறார்கள் என்றால், என் ஆசை நாயகனான அந்த மோகனரங்கனை மிகவும் தந்திரமாக வெளி யூருக்கு அனுப்பிவிட்டு, என்னை இந்த இடத்தில் சிறை வைத்திருக்கிறார்கள்; ராமலிங்க புரம் ஜெமீந்தாருடைய பிள்ளைக்கு என்னைக் கட்டிக்கொடுத்து விடுவதாகத் தீர்மானித்து அவர்களுக்குக் கடிதம் எழுதி அதற்கு பதிலை எதிர்பார்த்துக்கொண்டு இருக்கிறார் கள். ராமலிங்கபுரம் ஜெமீன்தாருடைய பிள்ளையின் பார்வைக்கு, நான் இதுவரையில் வேறே புருஷனை மனசாலும் நினைக்காத மகா பரிசுத்தமான கன்னிகை போல நடித்து அவனை வஞ்சித்துக் கட்டிக் கொள்ள வேண்டும் என்று அம்மாள் சொல்லுகிறார்கள்; அப்படிப்பட்ட படுமோசத்தில் இறங்க எனக்கு இஷ்டமில்லை. நல்லதோ, கெட்டதோ, தவறானதோ, சரியானதோ நான் ஒரு சம்பந்தம் செய்து விட்டேன். அதை மறைக்கவும், பிறரை வஞ்சிக்கவும் எனக்கு மனமில்லை. உள்ளும் புறமும் ஒத்து நடக்க நாணி ஆசைப்படுகிறவள் ஆகையால் நான் அந்த மோகனரங்க னோடு போய்விட எண்ணுகிறேன். அம்மாள் அதைத் தடுக்கிறார்கள், யார் சொல்வது சரியானது, யார் சொல்வது தவறானதென்பதை நீயே சொல் பார்க்கலாம்.

**கோமளவல்லி:-** சிவசிவா! இருந்திருந்து இந்த மோகனரங் கனையா பிடித்துக் கொண்டாய்! இந்தச் சங்கதியை வாயில் வைத்துச் சொல்ல உனக்கு வெட்கமில்லாமல் போனதுதான் ஆச்சரியமாக இருக்கிறது! அடாடா! நம்முடைய குலமென்ன! கோத்திரமென்ன! பெருமையென்ன! செல்வாக்கென்ன! உன் புத்தி இப்படிப்பட்ட இழிந்த காரியத்தைச் செய்யவும் நினைத்ததா! அவன் கேவலம் நம்மிடத்தில் பதினைந்து ரூபாய்க்கு சேவகா விருத்தி செய்யும் ஒரு பேடிப் பையன்; தாய்தகப்பன் யாரோ, அவன் எந்த ஜாதியைச் சேர்ந்தவனோ, அது சுவாமிக்குத்தான்

வெளிச்சம். ஆனால் அவன் பார்ப்பதற்கு அழகாக இருக்கிறான்; எஜமானுடைய வீடாயிற்றே என்று நம்மிடத்தில் எல்லாம் பயந்து பணிவாக நடந்து கொள்ளுகிறான்; அவனுடைய உடம்பின் அழகையும் பணிவையும் தவிர அவனுடைய உண்மையான குணம் எப்படிப்பட்டதென்பதையும், அவனுக்குக் கல்வியறிவு எவ்வளவு என்பதையும் நாம் கவனிக்க வேண்டாமா? அவன் யோக்கியதை, நாணயம் முதலியவைகள் உள்ளவனாக இருக்கிறானா என்பதைப் பார்க்க வேண்டாமா? முக்கியமான அம்சங்களை எல்லாம் கவனியாமல், அவனுடைய உடம்பின் அழகொன்றையே அபாரமான சிறப்பாகவும் போதுமான மேம்பாடாகவும் மதித்து நீ உன்னுடைய பெயரையும் இந்தக் குடும்பத்தாருடைய பெயரையும் கெடுத்து நமக்கெல்லாம் என்றைக்கும் அழியாத அவமானத்தையும், களங்கத்தையும் செய்து வைக்கப் பார்க்கலாமா? மனசு விரும்பியதை மறைக்காமல் வெளியிட்டு உள்ளும் புறமும் ஒத்து நடந்து கொள்ள வேண்டும் என்கிறாயே! உள்ளும் புறமும் ஒத்து நடக்க வேண்டும் என்பது நல்ல காரியங்களுக்குப் பொருந்தாது. நீ ஒரு நல்ல காரியத்தைச் செய்ய நினைத்தால், அதை மறைக்காமல் அப்படியே செய்ய வேண்டும்; ஒரு கெட்ட காரியத்தைச் செய்ய வேண்டும் என்று அக்ஞானத்தினால் உன் மனம் தூண்ட, அதனால் நீ ஒரு பிழை செய்துவிட்டாலும், அதிலிருந்து திருந்தாமல் அந்தப் பிழையையே எப்போதும் செய்துகொண்டே இருக்க வேண்டும் என்று சொல்வது உள்ளும் புறமும் ஒத்த நடத்தையில் சேர்ந்ததாகுமா! ஒருநாளும் ஆகாது; உன்னுடைய கொள்கை எப்படி இருக்கிற தென்றால், மனிதன் ஒவ்வொருவனும், தான் நினைத்ததை எல்லாம் செய்தே தீரவேண்டும்; அது தவறாக இருந்தாலும் அதைச் செய்துகொண்டே போக வேண்டும்; அதுதான் உள்ளும் புறமும் ஒத்த நடத்தை; அவன் திருந்தி நல்ல வழிக்கு வந்தால், அது மனப்போக்குக்கு மாறான காரியம்; அப்படிச் செய்வதால் பெருத்த பாவம் உண்டாகும் என்று சொல்வது போல இருக்கிறது; இதன்படி பார்த்தால் குற்றம் செய்த மனிதர்களை நியாயஸ்தலத்தார் தண்டித்து அவர்களை நல்ல வழிக்குத் திரும்ப முயல்வதே தவறான காரியம் என்றாகிறது. நீ நல்ல ஆழ்ந்த புத்திசாலி என்று நான் இதுவரையில்

நினைத்த நினைப்பை எல்லாம் நீ சிதற அடித்துவிட்டாய். போனது போகட்டும்; ஏதோ தவறு செய்து விட்டாய்; இனிமேலாவது அதை நீ தவறென்று உணர்ந்து அம்மாள் சொல்லுகிறபடி நடந்துகொள்; அந்தப் பையனிடத்தில் நீ கொண்ட துர்மோகத் தினால் வீணாக மதியை இழந்து எதற்கும் துணிந்த காரியத்தைச் செய்ய நினைக்காதே.

**துரைஸானி:-** நான் இனிமேல் இந்த விஷயத்தில் செய்வதற்கு என்ன இருக்கிறது? நான் ஆசைப்பட்டாலும், ஆசைப்படா விட்டாலும் இன்றைய தினம் அவர்கள் என்னை பலவந்தமாகக் கொண்டு போய் அந்த மோகனரங்கனுக்குக் கலியாணம் செய்து வைக்கப் போகிறார்களாம்; இவர்கள் எவ்வளவு பக்கபலத்தோடு இருந்தாலும், அவர்களுடைய காரியத்தைத் தடுக்க இவர்களால் முடியாதாம்; ராத்திரி சரியாக ஒன்பது மணிக்குக் கலியாணம் நடக்கப் போகிறதாம். இந்த விவரங்கள்தான் எனக்குக் கிடைத்த கடிதத்தில் எழுதப்பட்டிருக்கின்றன; இதை மோகனரங்கன் குப்பம்மாளிடத்தில் கொடுத்து அனுப்பி இருக்கிறான்.

**கோமளவல்லி:-** (வியப்பும் திகைப்பும் அடைந்து) என்ன ஆச்சரியம்! இப்படிப்பட்ட பெருத்த பட்டணத்தில் இப்படியும் நடக்குமா! பட்டிக்காடுகளில் கொள்ளைக்காரர்கள் முன்னால் அறிவித்து விட்டுத் தீப்பந்தங்களோடு வந்து திருடுவதுண்டென்று கேள்விப்பட்டிருக்கிறேன். இதுவும் அது போல இருக்கிறதே! நாம் இனி சும்மா இருப்பது பிசகு. உடனே அம்மாளிடத்தில் போய் இந்த விஷயத்தைத் தெரிவித்தால், அவர்கள் இதற்குத் தக்க போலீஸ்காரர்களையும் ஆள்களையும் வைத்துக் கொண்டு எச்சரிப்பாக இருப்பார்கள். நான் அம்மாளிடத்தில் போய் இதைச் சொல்லட்டுமா?

**துரைஸானி:-** நீ சொல்லுகிற வரையில் இது அம்மாளுக்குத் தெரியாமல் இருக்கிறதா? அவர்களுக்கும் இதைப்பற்றி ஒரு கடிதம் எழுதி அனுப்பி இருக்கிறார்களாம். நேருக்கு நேர் விஷயத்தைச் சொல்லிவிட்டே பகிரங்கமாக இதை அவர்கள் நடத்தப் போகிறார் களாம். அதுதான் சூரத்தனம். அப்படிப்பட்ட வீராதி வீரனான புருஷனைக் கட்டிக் கொள்வதும் ஒரு பெருமையல்லவா! – என்றாள்.

அதைக் கேட்ட கோமளவல்லியம்மாள் மிகுந்த விசனமும் கலக்கமும் சஞ்சலமும் அடைந்து யோசனையில் ஆழ்ந்தாள். அந்தச் சமயத்தில் தாதிகள் போஜனத்தை முடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தார்கள், உடனே சகோதரிகளினது சம்பாஷணையும் அவ்வளவோடு முடிவுற்றது. அதுகாறும் அந்த சம்பாஷணையைக் கேட்டுக் கல்லாகச் சமைந்து நின்று கொண்டிருந்த கல்யாணி யம்மாள் தான் அதற்கு மேலும் ஜன்னலண்டை நின்றால், எவரேனும் கண்டு கொள்வார்கள் என்று நினைத்து அவ்விடத்தை விட்டுத் தனது அந்தப்புரத்தை நோக்கி நடக்கலானாள்.

அப்படி நடந்தவள் அளவிலடங்காத வியப்பும், திகைப்பும் பிரமிப்பும், விசனமும் அடைந்து சொப்பனாவஸ்தையில் ஆகாயத்தில் மிதந்து செல்பவள் போல மெய்ம்மறந்து, உயிரற்ற பதுமை போல நடந்தாள். தனது செவியில் விழுந்த சம்பாஷணை உண்மையில் நடந்ததோ, அல்லது கனவில் நடந்ததோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. தனது மூத்த குமாரி தன் விஷயத்தில் வைத்திருந்த அருவருப்பும், பகைமையும், கெட்ட அபிப்பிராய மும் எவ்வளவு அதிகமாக இருக்கின்றன என்பதைக் காண, அவளது உள்ளம் பதறித் தவித்தது. தான் அவளிடத்தில் எவ்வள விற் கெவ்வளவு வாத்சல்யமும் பிரேமையும் வைத்திருந்தாளோ அவ்வளவிற் கவ்வளவு தன்னிடத்தில் துரைஸானியம்மாள் குரோதமும் வெறுப்பும் பாராட்டி அவமதிப்பாகவும் தூஷணை யாகவும் பேசியதை நினைக்க நினைக்க, அவளது மனம் அப்படியே இடிந்து போய்விடக் கூடிய மகா விபரீதமான நிலைமையை அடைந்தது. தான், மதனகோபாலனிடத்தில் எவ்விதமான துர் எண்ணமும் கொள்ளாமல், அவனை ஒரு குழந்தை போல மதித்து ஓர் அற்பக் காரியம் செய்யப் போனது ஒரு மலை போல வளர்ந்து தனக்கு எத்தனையோ தீமைகளைச் செய்ததுமன்றி, தனது புத்திரியையும் கெட்ட நடத்தையில் புகுத்தி விட்டதை நினைத்து, அவள் தன்னைத் தானே வெறுத்து வைது கொண்டாள். தான் ராமலிங்கபுரத்து ஜெமீந்தாருக்குக் கடிதம் எழுதியது முதலிய சகலமான சங்கதிகளையும் துரைஸானி யம்மாள் அறிந்து கொண்டிருந்தது பெருத்த விந்தையாகத் தோன்றியது. தனக்கு மோகனரங்கனிடத்திலிருந்து வந்திருந்த

கடிதத்தைப் போலத் தனது புத்திரிக்கும் ஒரு கடிதம் வந்திருந்ததி லிருந்து, அவளை உண்மையாகவே அபகரித்துப் போவதற்கான முயற்சிகள் செய்யப்படுகின்றன என்பது நிச்சயமாகவே, அவளது புத்தி கலங்கியது; தேகம் தடுமாறியது. தனது மூத்த புத்திரிக்குத் தாதி குப்பம்மாளே தூதாக இருந்து சகலமான காரியங்களையும் நடத்தி வருகிறாள் என்பதும் நிச்சயமாயிற்று. ஆகவே, அவளை இனி வேறே இடத்துக்கு மாற்றிவிட வேண்டும் என்ற தீர்மானமும் ஏற்பட்டது. அப்படிப்பட்ட மகா சங்கடமான நிலைமையில் தனது இளைய குமாரியான கோமளவல்லியின் சிறந்த நற்குணங்களும், ஆழ்ந்த புத்திசாலித்தனமும், அவள் தன்னிடத்தில் வைத்திருந்த மதிப்பும், வாஞ்சையும், பயபக்தியும் அளவிடக்கூடாமல் இருந்ததை நினைக்க நினைக்க, இடையிடையே, கல்யாணி யம்மாள் பூரித்துப் புளகாங்கிதம் அடைந்தவளாய், அத்தனை இடர்களுக்கிடையில், அப்படிப்பட்ட விலையில்லா மாணிக்கம் தனக்கு மகளாக இருந்தது ஒரு பெருத்த ஆறுதலாகத் தோன்றியது. தனது இளைய குமாரியைப் போலவே மூத்தவளும் நற்குண நல்லொழுக்கம் உள்ளவளாக இருந்தால், தனக்கு நிகரான அதிர்ஷ்டசாலிகள் வேறே எவரும் இருக்க மாட்டார்கள் என்ற நினைவு அடிக்கடி எழுந்து கல்யாணியம்மாளது மனதை வதைத்துப் புண்படுத்தியது.

அப்படிப்பட்ட நிலைமையில் அந்த அம்மாள் தனது அந்தப் புரத்தை அடைந்து நாற்காலியின் மேல் உட்கார்ந்து சாய்ந்தாள். உடனே வாசற்கதவைத் திறந்து கொண்டு பொன்னம்மாள் வந்தாள். வக்கீல் சிவஞான முதலியார் பின்னால் வந்து உள்ளே நுழைந்தார். உடனே பொன்னம்மாள் கதவை மூடி உட்புறத்தில் தாளிட்டுக் கொண்டு வந்து சேர்ந்தாள். வக்கீலைக் கண்டவுடனே கல்யாணியம்மாள் எழுந்து மரியாதையாக நின்று, "வாருங்கள், வாருங்கள். இந்த சோபாவில் உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்று அன்பாக உபசரிக்க, அவர், "வருகிறேன்; நீங்களும் உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்று கூறிய வண்ணம் கல்யாணியம்மாளுக் கருகில் இருந்த ஒரு சோபாவில் உட்கார, அந்த அம்மாளும் தனது ஆசனத்தில் அமர்ந்து கொண்டவளாய், பாலாம்பாளுக்கு மைனரால் எழுதிக் கொடுக்கப்பட்டிருந்த பத்திரத்தையும், அன்றைய தினம்

வந்திருந்த கடிதத்தையும் எடுத்து நீட்டினாள். அவைகளை வாங்கிக் கொண்ட சிவஞான முதலியார், "விஷயம் இன்னதென்பதை பொன்னம்மாள் ஒருவிதமாகச் சொன்னாள். எல்லா வேலைகளையும் உடனே நிறுத்திவிட்டுப் புறப்பட்டு வர வேண்டும் என்று உடைகளைப் போட்டுக் கொண்டு வாசலுக்கு வந்தேன். அங்கே தற்செயலாகப் போய்க் கொண்டிருந்த சைதாப் பேட்டை போலீஸ் ஸ்டேஷன் சப் இன்ஸ்பெக்டரைக் கண்டேன். கண்டவுடனே, அவர் என்னுடைய அடையாளத்தைக் கண்டு கொண்டு என்னோடு பேசினார். நான் அவரிடத்தில் நின்று கால் நாழிகை நேரம் பேசிவிட்டு வர நேர்ந்தது. அதனாலே தான், நான் இங்கே வருவதற்கு இவ்வளவு தாமசமாயிற்று; இல்லாவிட்டால், கொஞ்ச நேரத்துக்கு முன்னேயே இங்கே வந்திருப்பேன். ஆனால், நான் அவரிடத்தில் பேசிக் கொண்டிருந்ததில் முக்கியமான சில சங்கதிகள் தெரிய வந்தன. நாம் அன்றைய ராத்திரி ஆலந்தூருக்குப் போய் பாலாம்பாளைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்தபோது திருடர்கள் வந்து நம்மை அடித்தார்கள் அல்லவா. அப்போது போலீஸ் இன்ஸ்பெக்டர் போல வந்து நம்முடைய நகைகளும் வேஷ்டி புடவைகளும் இருந்த மூட்டையை எடுத்துக் கொண்டு ஓடிப் போன மனிதர் யார் என்பதைப்பற்றி அவர்கள் நிரம்பவும் பிரயாசைப்பட்டு விசாரணை செய்தார்களாம். யாரோ ஒரு பெண் பிள்ளை போலீஸ் இன்ஸ்பெக்டர் போல உடைகள் போட்டுக் கொண்டு ராத்திரிக் காலங்களில் தனியான இடங்களில் குதிரை மேலிருந்து, நம்மிடம் செய்தது போலத் தந்திரம் செய்து, சொத்துக்களை அபகரித்துக் கொண்டு போகிறாளாம். பல மனிதர்கள் இந்த மாதிரி சொத்துகளை இழந்து விட்டதாக அந்தப் போலீஸ் ஸ்டேஷனில் வந்து அடிக்கடி புகார் சொல்லிக் கொள்ளுகிறார்களாம். அவள் நல்ல யௌவனப் பருவமுள்ள பெண் பிள்ளையாம்; மகா தந்திரமாக எல்லாரையும் ஏமாற்றிவிட்டு எங்கேயோ போய் மறைந்து கொள்ளுகிறாளாம். அவள் நம்முடைய சொத்து மூட்டையை எடுத்துக் கொண்டு போன அன்றைய தினம் காலையில் இந்த சப் இன்ஸ்பெக்டர், அந்தத் திருட்டுப் பெண்பிள்ளை ஏறிக்கொண்டு போன குதிரையின் காலடிச் சுவடுகளைப் பின்பற்றிக் கொண்டே போனாராம். அவைகள் அடையாறு என்னும் ஊர் வரையில் போய் மறைந்து

போய் விட்டனவாம். அடையாற்றில் உள்ள வீடுகளில், எந்தெந்த வீட்டில் குதிரை இருக்கிறதென்று அவர் பார்த்தாராம். நாலைந்து வீடுகளில் குதிரைகள் இருந்தாலும், முக்கியமாக ஒரு மனிதரின் மேலேதான் அவருக்குச் சந்தேகம் உண்டாயிற்றாம். சைதாப் பேட்டை ஸ்டேஷனில் சுந்தரம் பிள்ளை என்று ஓர் ஹெட் கான்ஸ்டேபில் இருந்தானாம். அவன் மகா ஜெகஜகாலப் புரட்டனாம். அவன் வேலையிலிருந்த வரையில் பெருத்த பெருத்த மோசங்களை எல்லாம் செய்து லஞ்சம் வாங்கி ஊரார் சொத்துகளை எல்லாம் கொள்ளையடித்துச் சேர்த்துக் கடைசியில் ஏதோ தவறில் மாட்டிக் கொண்டு வேலையிலிருந்து நீக்கப் பட்டானாம். அவன் அடையாற்றில் வாடகைக்கு ஒரு பங்களா வாங்கி அதில் யாரோ ஒரு வைப்பாட்டியை வைத்துக் கொண்டு இருந்து வந்தானாம். அவனும் அவனுடைய வைப்பாட்டியும் சேர்ந்து இப்படிப்பட்ட மோசங்களையும் திருட்டுகளையும் நடத்தி வருகிறார்கள் என்று போலீசார் சந்தேகப்பட்டு, அவனுடைய இருப்பிடத்தில் சோதனை போடவும், திருடப்பட்ட பொருள் ஏதாகிலும் அகப்பட்டால், அவர்களைப் பிடித்துக் கைதி செய்வதற்கும் போலீசார் வாரண்டு வாங்கினார்கள். அந்தச் சங்கதியை எப்படியோ அறிந்து கொண்ட சுந்தரம் பிள்ளை அந்த பங்களாவைக் காலி செய்துவிட்டு, இடம் மாற்றிக் கொண்டு எங்கேயோ போய்விட்டானாம். போலீசார் அவனுடைய இருப்பிடம் எங்கே இருக்கிறதென்று தேடியலைந்து கொண்டிருக் கிறார்களாம். இந்த விவரங்களை எல்லாம் அந்த சப்இன்ஸ்பெக்டர் சொல்ல, அதைக் கேட்டுக் கொண்டிருந்து, அவரிடத்தில் விடை பெற்றுக் கொண்டு வரக் கொஞ்சம் தாமசமாகிவிட்டது. ஒரு பெண் பிள்ளை எவ்வளவு சாமர்த்தியமாகத் திருடுகிறாள் பார்த்தீர்களா?" என்று வியப்போடு மொழிந்தார்.

அந்த வரலாற்றைக் கேட்ட கல்யாணியம்மாள் பெரிதும் ஆச்சரியம் அடைந்தவளாய், "ஊர் கெட்ட கேடு நன்றாக இருக்கிறதே! அன்றைக்கு வந்து மூட்டையைக் கொண்டு போனது பெண் பிள்ளையா! ஆகா! பெருத்த விநோதமாக இருக்கிறது! இதெல்லாம் இந்த ஊரில் காட்டப்படும் பயாஸ்கோப்புக்கு நம்முடைய ஜனங்கள் போய்ப் பார்ப்பதால் ஏற்படுகிற தீம்புகள்;

ஒரு பெண் பிள்ளை எவ்வளவு துணிகரமான காரியத்தைச் செய் திருக்கிறாள்! அவள் சாதாரண மனிஷியாக இருக்கவே மாட்டாள்! பெருத்த ராக்ஷசியாகத்தான் இருக்க வேண்டும்" என்றாள்.

சிவஞான முதலியார், "அவள் எப்படிப்பட்ட கெட்டிக்காரியாக இருந்தாலும், ராக்ஷசியாக இருந்தாலும், அவளைப் போலீசார் எப்படியும் பிடித்தே தீருவார்கள்; பல நாளைய திருடன் ஒரு நாளைக்கு அகப்படுவான் என்று சொல்லுவார்கள் அல்லவா" என்று கூறிய வண்ணம், பத்திரத்தையும், கடிதத்தையும் வாங்கிப் படித்துப் பார்த்தார். பார்த்தவர் கல்யாணியம்மாளை நோக்கி, "இந்தப் பத்திரம் ரிஜிஸ்டர் செய்யப்பட்டுப் போனதைப் பற்றி இனி நாம் அவ்வளவாகக் கவலைப்பட வேண்டியதில்லை; நல்ல வேளையாக இந்தப் பத்திரம் நம்மிடத்தில் வந்து சேர்ந்துவிட்டது; இந்தப் பத்திரத்தில் நம்முடைய கையெழுத்துக்கள் இருப்பதுதான் முக்கியமான விஷயம். சப் ரிஜிஸ்டிராருடைய கச்சேரியில் இன்னார் என்று நம்முடைய பெயர்களை எழுதிக் கொண்டிருப் பார்கள்; நீங்கள் ஒரு காரியம் செய்யுங்கள்; இந்தப் பத்திரத்தைப் போல ஒரு நகல் எழுதி வைத்துக்கொண்டு, இதை உடனே நெருப்பில் போட் டுக் கொளுத்தி விடுங்கள். நாம் இதில் கையெழுத்து போடவில்லை என்றும், பாலாம்பாளே நம்முடைய கையெழுத்தைப் போலப் பொய்க் கையெழுத்துப் போட்டு ரிஜிஸ்டர் செய்வித்திருக்கிறாள் என்றும் நாம் சொல்லி வாதாடி ஜெயித்து விடலாம்; இந்தப் பத்திரம் அவர்களிடத்தில் இல்லாமல் போய் விட்டதாகையால், அவர்கள் சப் ரிஜிஸ்டிரார் கச்சேரியி லிருந்து ஒரு நகல் வாங்கி வைத்துக் கொள்ள உத்தேசித்திருக் கிறார்கள் போலிருக்கிறது; அப்படியே செய்யட்டும்; நாம் தான் கையெழுத்துச் செய்தோம் என்பதை இந்த அசல் பத்திர மில்லாமல் ருஜுப்படுத்த முடியாது; இந்தப் பத்திரத்தில் உள்ள விஷயங்களும் பைத்தியக்கார சங்கதிகளாக இருக்கிறபடியால், இது எழுதப்பட்டது நமக்குத் தெரியாதென்று நாம் வாதாடினால், அதை நியாயஸ்தலத்தாரும் உண்மை என்றே நம்புவார்கள். நாம் சாட்சிக் கையெழுத்துச் செய்தோம் என்பதை அவர்கள் ருஜுப்படுத்த முடியாமல் போய் விடும். அதன் பிறகு பத்திரம் மைனர் ஒருவரால் மாத்திரம் தமது சொந்த ஜெவாப்தாரித் தனத்திலேயே எழுதிக் கொடுக்கப்பட்டதாக

முடியும்; ஆகையால், அவளுக்கு நாம் ஏதாவது ஜீவனாம்சம் மாத்திரம் சொற்பத் தொகை கொடுத்துவர நேரும்; அவள் அதோடு போகட்டும்; பாலாம்பாளை இன்றைய தினம் தூக்கிக் கொண்டு போவதாகக் கட்டையன் குறவன் சொல்லி விட்டுப் போனான் என்று பொன்னம்மாள் சொல்லக் கேள்விப்பட்டேன்; அந்தக் காரியம் நடக்க நாம் இடம் கொடுக்கக் கூடாது; ஏனென்றால், நேற்றைய தினம் அவள் காணாமல் போய்விட்டாள் என்றால், பிறகு நம்மேல் தான் சந்தேகம் ஏற்படும்; அதனால் வீண் உபத்திர வங்கள் நேரும். ஆகையால், நீங்கள் முதலில் ஒரு காரியம் செய்யுங்கள்; இந்தப் பொன்னம்மாளை மறுபடியும் இப்போது உடனே அனுப்பி, பாலாம்பாளைத் தூக்கிக் கொண்டு போக வேண்டாம் என்று கருப்பாயியிடத்திலும் கட்டையனிடத்திலும் சொல்லிவிட்டு வரச் செய்யுங்கள்' என்றார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் ஒருவாறு துணிவடைந்தாள். பத்திர விஷயத்தில் அவளது மனதை வதைத்துக் கொண்டிருந்த சஞ்சலங்கள் குறைவுபட்டன. அவள் உடனே எழுந்து வண்டிச் செலவுக்குப் பணம் கொடுத்துப் பொன்னம்மாளை வெளியில் அனுப்பிவிட்டுக் கதவை மூடித் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்து திரும்பவும் உட்கார்ந்து சிவஞான முதலியாரது முகத்தை நோக்கினாள். உடனே முதலியார் அவளைப் பார்த்து, "இந்தக் கடிதத்தைப் பற்றி நீங்கள் உண்மையிலேயே கவலைப்படுகிறீர் களா? இதில் எழுதப்பட்டிருக்கிறபடி காரியம் நடந்து விடும் என்று நீங்கள் பயப்படுகிறீர்களா? அந்த மோகனரங்கன் ஓர் அனாதைப் பையன். அவனுக்கு அக்காள் ஒருத்தி இருக்கிறாள். அவள் அடையாற்றில் பெண்கள் பள்ளிக்கூடத்தில் வாத்திச்சியாக இருக்கிறாளாம். அவளைத் தவிர, இந்த மோகனரங்கனுக்கு வேறே மனிதரே இல்லை. அவன் செங்கல்பட்டுக்குப் போகாமல் நடுவழியில் இறங்கி வந்திருக்கலாம். ஆனால் இப்படிப்பட்ட விபரீதமான காரியத்தை நிறைவேற்ற அவனால் முடியுமா? இந்தக் கடிதம் அவனால் எழுதப்பட்டதாகவே தோன்றவில்லை. உங்கள் மனசைப் புண்படுத்த வேண்டும் என்று ஒருவேளை இது மைனராலாவது, அல்லது, வேறே மனிதராலாவது எழுதப்பட்ட தாக இருக்கலாம். இதைப்பற்றி, உங்களுக்கு எவ்விதக் கவலையும் வேண்டாம்" என்று அழுத்தமாகக் கூறினார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் அவரை நோக்கி, "நானும் முதலில் இப்படித்தான் நினைத்தேன். ஆனால் கொஞ்ச நேரத்துக்கு முன் எனக்கு இன்னொரு சங்கதி தெரிய வந்தது. அதிலிருந்து இந்தக் கடிதம் உண்மையான கருத்தோடு எழுதப்பட்டிருப்பதாக நிச்சயப்படுகிறது. துரைஸானியம்மாளோடு கூடவே இருக்கும்படி கோமளவல்லியம்மாளையும், சில தாதிகளையும் நான் இந்த இரண்டு தினங்களாக வைத்திருக்கிறேன். இன்று பொன்னம்மாளை உங்களிடத்திற்கு அனுப்பிய பிறகு நான் எழுந்து அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று பார்க்கப் போய், ஒரு ஜன்னலண்டை நின்று, அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைக் கவனித்தேன். அந்தச் சமயத்தில் பெரியவளுக்கும் சின்னவளுக்கும் இந்த விஷயமாக விவாதம் நடந்து கொண்டிருந்தது; துரைஸானியம்மாளுக்குக் குப்பம்மாள் என்று ஒரு தாதி இருக்கிறாள். அந்தத் தாதியின் மூலமாகவே ஏதோ கடிதப் போக்குவரத்துக்கள் நடந்திருக்கின்றன. அந்த மோகனரங்கன் இன்று அவள் மூலமாக துரைஸானியம் மாளுக்கும் ஒரு கடிதம் அனுப்பி இருக்கிறானாம். இந்தச் சங்கதி அவர்களுடைய சம்பாஷணையிலிருந்து வெளியாயிற்று. அதற்கு ஒத்தபடி நமக்கும் கடிதம் வந்திருக்கிறது. அப்படியிருக்க, நாம் இந்த விஷயத்தில் அசட்டையாக இருக்கலாமா? நீங்கள் எப்படிச் சொன்னாலும் அப்படி நடக்க நான் சித்தமாக இருக்கிறேன்" என்றாள். அதைக் கேட்ட சிவஞான முதலியார் திகைப்பும், கவலையும் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தவராய்க் கால் நாழிகை நேரம் வரையில் மௌனமாக இருந்து, "துரைஸானியம்மாளுக்கும் குப்பம்மாள் மூலமாக சமாசாரம் வந்திருக்கிறதென்பதைப் பார்த்தால், இதை நாம் அசட்டை செய்யக் கூடாதென்று தான் நானும் நினைக்கிறேன். இருந்தாலும், இந்தச் சங்கதி எனக்கு நிரம்பவும் ஆச்சரியமாகவே இருக்கிறது. இப்படி முன்னால் அறிவித்துவிட்டு, ஒரு பங்களாவில் நுழைந்து பெண்ணை பலவந்தமாக அபகரித்துப் போவதென்றால், அது சாதாரணமான காரியமா! அப்படிச் செய்யக்கூடியவன் மகா திடசாலியாகவும், பணத்திமிர் ஜனக்கட்டு முதலியவைகள் உள்ளவனாகவும் இருக்க வேண்டும்; இந்த அற்பப் பையனுக்கு இப்படிப்பட்ட யோக்கியதை திடீரென்று எப்படி உண்டாகி இருக்கப் போகிறது. எனக்கு இன்னமும் இந்த மைனரின் மேலே தான் சந்தேகம் உண்டாகிறது; மைனருக்கும்

துரைஸானிக்கும் உள்ள பிரியத்தினால், அவளுடைய வேண்டுகோளின் மேல், அவர் இதற்கு அனுசரணையாக இருந்து அவளை அப்புறப்படுத்த ஏற்பாடு செய்து கொண்டிருப்பாரோ என்ற சந்தேகம் உண்டாகிறது. அப்படி இருந்தால், நமக்குத் தெரியாமல் ரகசியமாக இந்தக் காரியத்தைச் செய்வதை விட்டு, இப்படி மகா இறுமாப்பாக முன்னால் தெரிவித்திருப்பதன் கருத்துதான் எனக்கு விளங்கவே இல்லை. பெண்ணை அபகரித்துக் கொண்டு போக வேண்டும் என்ற எண்ணம் இருப்பதோடு, அவன் அபார வல்லமை உள்ளவன் என்பதும் அவனுடைய கருத்தை எப்படிப் பட்டவர்களாக இருந்தாலும் தடுக்க முடியாதென்பதும், இந்தக் கடிதத்தின் மூலமாக நமக்கு அறிவிக்கப்பட்டிருக்கின்றன. இம்மாதிரி செய்யப்பட்டிருப்பதன் கருத்துதான் விளங்கவில்லை. எல்லா வற்றிற்கும் நாம் எச்சரிப்பாகவே நடந்து கொள்வோம். இந்த பங்களாவில் இப்போது சுமார் இருபது வேலைக்கார ஆண் பிள்ளைகள் இருக்கிறார்கள்; அவர்கள் எல்லோரையும் கூப்பிட்டு, பங்களாவின் நாற்புறங்களிலும் ஜாக்கிரதையாகக் காவல் காத் திருக்கும்படி வைப்போம். சைதாப்பேட்டையில், என்னுடைய சிநேகிதரான ஒரு மிராசுதார் இருக்கிறார். அவருக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினால், அவர் சுமார் 30, 40-ஆள்கள் வரையில் அனுப்புவார். அத்தனை ஆள்களும் பங்களாவைச் சுற்றி நின்று கொண்டிருக்கட்டும். நான் உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் இந்த டிவிஷன் இன்ஸ்பெக்டரைக் கண்டு, அவரிடத்தில் இந்தக் கடிதத்தைக் காட்டி, சில போலீஸ் ஜெவான்களை அனுப்பிக் காவல் காக்கும்படி ஏற்பாடு செய்து விட்டு வருகிறேன். இந்த விஷயமோ எவருக்கும் தெரியாதபடி மறைத்து வைக்கப்பட வேண்டிய ரகசியமான விஷயம். நடந்த சங்கதிகளை எல்லாம் நாம் அப்படியே வெளிப்படுத்தாவிட்டாலும், ஒரு மாதிரியாக மாற்றியாகிலும் சொல்லியே தீரவேண்டியிருக்கிறது. ஏனென்றால், இதற்கு ஏராளமான மனிதர்களுடைய சகாயம் நமக்கு அவசியமாக வேண்டியிருக்கிறது. என்ன செய்கிறது! ஆபத்துச் சமயத்தில் மானம் அவமானம் பார்க்க முடிகிறதா!" என்றார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாள் மிகுந்த கவலையும் கிலேசமும் அடைந்தவளாய், "என்ன சங்கடம் இது! இந்தப் பெண்

செய்த காரியம் ஊர் முழுதுமா அடிபட வேண்டும்! இந்த விஷயம் இப்படி சந்தி சிரிக்கையில் ராமலிங்கபுரத்தார் வந்து இதைக் கேள்வி யுற்றால், குடிகெட்டுப் போய்விடும்! அப்புறம் அவர்கள் நம்முடைய வீட்டில் தண்ணீர்கூடக் குடிக்க மாட்டார்களே! ஈசுவரா! என்ன கொடுமை இது!" என்று கூறி நிரம்பவும் விசனத்தி லாழ்ந்தாள்.

உடனே சிவஞான முதலியார் கல்யாணியம்மாளை நோக்கி, "சரி; இனிமேல் என்ன செய்கிறது. வருவதை அனுபவித்துத் தான் தீரவேண்டும். இவ்வளவு தைரியமாகக் கடிதம் எழுதியிருக்கிற மனிதர்கள் எப்போது வருவார்களோ, எப்படிப்பட்ட ஏற்பாடுக ளோடு வருவார்களோ என்பது தெரியவில்லை. ஆகையால் நாம் இந்த நிமிஷம் முதலே ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நான் இனி காலதாமசம் செய்வது சரியல்ல. நான் உடனே ஒரு கடிதம் எழுதியனுப்புகிறேன்" என்று கூறிய வண்ணம் எழுந்து, காகிதம் முதலிய எழுது கருவிகள் இருந்த மேஜையண்டை போய் உட்கார்ந்து ஒரு கடிதம் எழுதி உறைக்குள் போட்டு மேல்விலாச மெழுதி வைத்துக் கொண்டு ஒரு தாதியை அழைத்து, அரண்மனை யில் உள்ள வேலைக்காரர்களை எல்லாம் அழைத்து வரச் சொல்ல, சொற்ப நேரத்தில் சுமார் இருபது ஆட்கள் அங்கே நின்றனர். உடனே சிவஞான முதலியார் அவர்களுள் ஒருவனை அழைத்து அவனிடத்தில் கடிதத்தைக் கொடுத்து வேகமாக சைதாப் பேட்டைக்கு ஓடி அங்கே இருந்த தமது நண்பரான மிராசுதார் யோகலிங்க முதலியாரிடம் அதைச் சேர்த்து மறுமொழி எழுதி வாங்கிக் கொண்டு உடனே ஓடி வரும்படி சொல்லி அவனை அனுப்பிவிட்டு, மற்றவர்களை நோக்கி, "நீங்கள் எல்லோரும் இன்று பகலிலும் ராத்திரியிலும் எங்கேயும் போகாமல் பங்களா வைச் சுற்றிலுமிருந்து ஜாக்கிரதையாகக் காவல் காத்துக் கொண் டிருக்க வேண்டும். நம்முடைய சமஸ்தானத்து மூத்த குழந்தையான துரைஸானியம்மாளைக் கலியாணம் செய்து கொடுக்கும்படி பல ஜெமீந்தார்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள்; ராமலிங்கபுரம் ஜெமீந்தாருடைய பிள்ளைக்குக் கொடுப்பதாக நாங்கள் தீர்மானித்து இரண்டு நாளைக்கு முன் கடிதம் எழுதினோம். அந்த சங்கதியை அறிந்து கொண்ட இன்னோரிடத்து ஜெமீந்தார்

ஆள்களோடு இன்றைய தினம் வந்து பெண்ணை பலவந்தமாக எடுத்துப் போக ஏற்பாடு செய்து கொண்டிருப்பதாகக் கடிதம் வந்திருக்கிறது. நீங்கள் எல்லோரும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நமக்கு சைதாப்பேட்டையிலிருந்து இன்னம் ஆள்கள் வரப் போகிறார்கள். போலீசாரும் வந்து பந்தோபஸ்தாக இருப்பார்கள். நீங்கள் எல்லோரும் உடனே போய் நாற்புறங்களி லும் இருந்து கவனித்துக் கொண்டிருங்கள். எவனாவது உத்தர வில்லாமல் உள்ளே வந்தால், அவனை விடவேண்டாம். உடனே அந்தச் சங்கதியை எங்களுக்குத் தெரிவியுங்கள்" என்றார்.

அந்தச் செய்தியைக் கேட்ட ஆட்கள் மிகுந்த பதைப்பும் கோபமும் அடைந்து, "ஆகா! அவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டதா! எவன் வந்தாலும் வரட்டும். நாயை அடிப்பது போல அவனை அடித்து இடுப்பை முறித்து இந்தப் பங்களாவிலேயே உயிரோடு சமாதி வைத்து விடுகிறோம்" என்று வீறாப்பு மொழிகள் பேசிக் கொண்டு வெளியே போய் பாணாத்தடிகளோடு பங்களா வின் நாற்புறங்களிலும் நின்று பாராக்கொடுக்கத் தொடங்கினர்.

அதன் பிறகு சிவஞான முதலியார் கல்யாணியம்மாளை நோக்கி, "நான் போலீஸ் கமிஷனருடைய கச்சேரிக்குப் போய் இந்த டிவிஷன் இன்ஸ்பெக்டரைக் கண்டு தக்க ஏற்பாடுகள் செய்து விட்டு அதிசீக்கிரமாக வந்து சேருகிறேன். அதற்குள் நீங்கள் ஒரு காரியம் செய்யுங்கள்; அந்தப் பெண் ஒரு பக்கத்திலும் நீங்கள் ஒரு பக்கத்திலுமாக இருப்பது சரியல்ல. இனிமேல், அந்தப் பெண் உங்களுடைய கண் பார்வையிலே தான் இருக்க வேண்டும். ஆனால் அவர்களை எல்லாம் நீங்கள் இங்கே அழைத்துக் கொண்டு வருவது இப்போது நன்றாக இருக்காது. ஆகையால் நான் வருகிற வரையில் நீங்கள் அங்கேயே இருங்கள். அதன் பிறகு போலீஸ் இன்ஸ்பெக்டர் சொல்லுகிறபடி நடந்து கொள்ளுவோம்" என்று கூற, கல்யாணியம்மாள் அதை ஒப்புக் கொண்டாள். இருவரும் உடனே அந்த அந்தப்புரத்தை விட்டு வெளிப்பட்டனர். கல்யாணியம்மாள் அதன் வெளிக் கதவை மூடிப் பூட்டிக்கொண்டு துரைஸானியம்மாளினது அந்தப்புரத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்.

அவ்விடத்தை விட்டுப் புறப்பட்ட சிவஞான முதலியார் பங்களாவின் நாற்புறங்களிலும் சென்று சுற்றிப் பார்த்து ஆங்காங்கு

கையும் தடியுமாக நின்று கொண்டிருந்த வேலைக் காரர்களை எல்லாம் உஷாாப்படுத்தி விட்டு, பங்களாவின் வாசலில் நிறுத்தப் பட்டிருந்த தமது ஸாரட்டில் ஏறிக் கொண்டு பங்களாவிற்கு வெளியே வந்தார். வந்தவர் அந்த பங்களாவின் வடபுறமாகச் சென்ற ராஜபாட்டையின் வழியாகப் போலீஸ் கமிஷனரினது கச்சேரிக்கோ, அல்லது, போலீஸ் ஸ்டேஷனுக்கோ போக வேண்டும் ஆதலால், அதன் வழியாக ஸாரட்டை ஒட்டச் செய்தார். அவ்வாறு ஸாரட்டு வண்டி அரைக்கால் மயில் தூரம் போகவே, அவ்விடத்தில் வெளியூர்களில் இருந்து வந்த இரண்டு வைக்கோல் வண்டிகள் வழியில் தாறுமாறாக நின்றதும், அவ்விடத்தில் குதிரை மேல் ஏறிக் கொண்டிருந்த ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டரும், ஒரு ஜெவானும் அந்த வண்டிக்காரர்களை சார்ஜ் செய்வதாக அதட்டி சரியான வழியில் போகும்படி சொல்லிக் கொண்டிருந்ததும் தெரிந்தன. கும்பிடப்போன தெய்வம் குறுக்கிட்டது போல, தமது வழியிலேயே நின்று கொண்டிருந்த போலீசாரைக் காணவே சிவஞான முதலியாருக்கு மிகுந்த சந்தோஷமுண்டாயிற்று. அடுத்த நிமிஷத்தில் ஸாரட்டு வண்டி அந்த இடத்தை அடைந்தது. ஒரு பெருத்த குதிரையின் மீது ஆடம்பரமாக உட்கார்ந்திருந்தவரும், முறுக்காகவும் அழகாகவும் ஒதுக்கி விடப்பட்டிருந்த தாடி மீசைகளோடு காணப்பட்டவரும், துருக்க ஜாதியைச் சேர்ந்தவருமான அந்தப் போலீஸ் இன்ஸ் பெக்டர், ஸாரட்டைக் கவனிக்காமல், வைக்கோல் வண்டிக்காரர் களை நோக்கி, கடுகடுத்த முகத்தோடு அதட்டி, ஜெவானைப் பார்த்து, "இந்த முட்டாள் பயல்களை உடனே ஸ்டேஷனுக்குக் கொண்டு போ. ரஸ்தாவை எல்லாம் சுத்தமாக அடைத்து விட்டார்கள்" என்று கூறினார். அதைக் கேட்ட ஜெவான் பார்த்து பயந்து அங்குமிங்கும் குதித்து நாட்டியமாடி, "வாங்கடா, வாங்கடா; ஓட்டுங்கடா ஸ்டேஷனுக்கு" என்று கூறி ஆவேசங் கொண்டவன் போலத் தலை விரித்தாடிக் கொண் டிருந்தான். அப்போது சிவஞான முதலியார் தமது வண்டியை ஒருபுறமாக நிற்கவைத்து விட்டுக் கீழே இறங்கி, போலீஸ் ஜெவான் இருந்த இடத்திற்குப் போய் அவனண்டையில் நெருங்கி நின்று, "அப்பா, அடேய்! இவர் இந்த டிவிஷன் இன்ஸ் பெக்டரா?" என்றார். அந்த ஜெவான், "இந்த டிவிஷன் எஜமான் தான்" என்றான். அவன்

இருந்த உக்கிரத்தைக் கண்ட சிவஞான முதலியார் மேலும் அவனிடத்தில் பேச அஞ்சித் தயங்கி, "ஐயாவுடைய பெயரென்ன" என்றார். அதைக் கேட்ட ஜெவான் மிகவும் எரிச்சலாக, "அடெ நீ யாரைய்யா இப்ப வந்து பூசெ வேளெயிலே கரடியேவிட்டு ஓட்டரே! போய்யா அப்பாலெ; அவரோட பேரு குலாம்ராவுத்தரு. இது தெரியாதா!" என்றான்.

அதற்குள் அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் அவ்விடத்தை விட்டு அப்பால் போகும் கருத்தோடு குதிரையைத் திருப்பியதைக் கண்ட சிவஞான முதலியார் மெல்ல நடந்து இன்ஸ்பெக்டருக் கெதிரில் போய் நின்று புன்னகை அரும்பிய முகத்தோடு அவருக்குச் சலாம் செய்து, "உங்களுக்கு என்னுடைய அடையாளம் தெரிகிறதா? நீங்கள் என்னை அடிக்கடி போலீஸ் கோர்ட்டில் பார்த்திருப்பீர்கள். என்னை வக்கீல் சிவஞான முதலியார் என்று சொல்லுவார்கள்" என்று நயமாகக் கூறினார். அந்த வார்த்தைகளைக் கேட்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் அப்போதே தூக்கத்திலிருந்து விழிப்பவர் போல எங்கேயோ சென்றிருந்த தமது மனதைச் சடக்கென்று அங்கே திருப்பி அவரைப் பார்த்துப் புன்னகை செய்த வண்ணம், "ஓகோ! அப்படியா! சிவஞான முதலியாரா! பார்த்திருப்பேன். ஆனால் எனக்கு அவ்வளவாக ஞாபகம் உண்டாகவில்லை" என்றார்.

*சிவஞான:-* இதோ தெரிகிறதே; இது மாரமங்கலம் ஜெமீந்தாரு டைய பங்களா. இதிலிருந்து நான் இப்போது தான் புறப்பட்டு, நிரம்பவும் அவசரமான ஒரு காரியத்தின் பொருட்டு போலீஸ் கமிஷனருடைய கச்சேரிக்குப் போய், இந்த டிவிஷன் இன்ஸ் பெக்டரைப் பார்க்க வேண்டும் என்று கிளம்பி வந்தேன். தெய்வச் செயலாக நீங்கள் இவ்விடத்திலேயே அகப்பட்டுவிட்டீர்கள் – என்று விநயமாகக் கூறினார்.

அதைக் கேட்ட இன்ஸ்பெக்டர், "அப்படியானால் உங்களுடைய காரியம் ஜெயமாகும் என்பதற்கு இது நல்ல அறிகுறிதான். நான் ஓர் அலுவலின் மேல் போய்க் கொண்டிருக்கிறேன். இருந்தாலும் பரவாயில்லை; நீங்கள் விஷயத்தைச் சொல்லுங்கள்" என்றார்.

உடனே சிவஞான முதலியார் இன்ஸ்பெக்டரை சிறிது தூரம் தனியாக அழைத்துப் போய், மாரமங்கலத்தாரது வரலாற்றில்

அவருக்கு எவ்வளவு தெரிய வேண்டுமோ அதை வெளியிட்டு, தமது கையில் இருந்த நக்ஷத்திரத் தரகனது கடிதத்தையும் கொடுத்தார். ஆனால் மோகனரங்கன் மீது துரைஸானியம்மாளே காதல் கொண்டிருக்கிறாள் என்பதையும், அவனுக்கும் அவளுக்கும் தேக சம்பந்தமும் ஆகிவிட்ட தென்பதையும் மறைத்து, குமாஸ்தா வேலையிலிருந்த மோகனரங்கன் ஜெமீந்தார் வீட்டுப் பெண் மீது துர்மோகங் கொண்டு, அந்தப் பெண்ணின் மனதை மருந்தின் மூலமாக மயக்கி, அவளைப் பலவந்தமாக அபகரித்துப் போக எத்தனிப்பதாகக் கூறியதன்றி, தாங்கள் வேலைக்காரர்களுக் கெல்லாம் பொய்யாகச் சொல்லியிருந்த வரலாற்றையே அவருக் கும் தெரிவித்து வைத்தார்.

அந்த விவரங்களை எல்லாம் கேட்டு அந்தக் கடிதத்தையும் படித்த இன்ஸ்பெக்டர் குலாம்ராவுத்தர் மிகுந்த கவலையும் கலக்க மும் அடைந்து, "ஏதேது! இது மகா துணிகரமான காரியமாக இருக்கிறதே! இப்படிப்பட்ட காரியங்கள் பட்டிக்காடுகளிலே தான் நடப்பதுண்டென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்த சென்னப் பட்டணத்தில் இப்படிப்பட்ட பகிரங்கத் திருட்டு இது வரையில் நடந்ததாகவே நான் கேள்விப்பட்டதில்லை; இருந் திருந்து இது என்னுடைய டிவிஷனில் தானா நடக்க வேண்டும்! இவன் அசாத்தியமான மனிதனாக இருக்கிறானே! இதற்கு நாம் தக்கபடி முன்னெச்சரிக்கையாக இல்லாவிட்டால், வீணாக எனக்குக் கெட்ட ஷராவோ, சம்பளக் குறைவோ, உத்தியோகம் தகையரோ ஏற்படுவது நிச்சயம்; சரி; நான் எதற்காக வந்தேனோ அந்தக் காரியத்தை அப்புறம் பார்த்துக் கொள்ளுகிறேன். அடேய் 1317 அந்த வண்டிக்காரர்களை அனுப்பிவிட்டு இப்படி வா; உனக்கு இங்கே அவசரமான ஜோலி இருக்கிறது. முதலியாரே! வாருங்கள்; பங்களாவுக்குப் போவோம்; நான் முதலில் இந்த பங்களாவுக்குள் நுழைந்து எல்லா இடங்களையும் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்று கூறிய வண்ணம் குதிரையை அந்த பங்களாவின் பக்கமாகத் தட்டி நடத்தினார்; சிவஞான முதலியார் உடனே ஸாரட்டில் ஏறிக் கொண்டு பின்னால் தொடர்ந்து வந்தார். ஜெவானும் வைக்கோல் வண்டிகளை அனுப்பிவிட்டு, அவர்க ளோடு கூடவே வந்தான்.

அவ்வாறு அவர்கள் மூவரும் சென்று பக்கத்திலிருந்த மாரமங்கலத்தாரது பங்களாவை அடைந்து உள்ளே சென்றனர்; சிவஞான முதலியாரும் இன்ஸ்பெக்டரும் கீழே இறங்கி ஜெவானை வெளியிலேயே நிற்க வைத்துவிட்டுக் கட்டிடங்களுக்குள்ளே சென்றனர். கால் நாழிகை நேரத்திற்குள் அந்த மாளிகையின் உட்புறத்தில் ஓரிடம் விடாமல் எல்லாவற்றையும் சிவஞான முதலியார் இன்ஸ்பெக்டருக்குக் காட்டியதன்றி, கல்யாணியம்மாளையும் அவளது அந்தப்புரத்திற்குள் வரச் செய்து, இன்ஸ்பெக்டரை அந்தச் சீமாட்டிக்கு அறிமுகம் செய்து வைத்து, அவரது அபிப்பிராயத்தைக் கேட்க, இன்ஸ்பெக்டர் சிறிது யோசனை செய்தவராய் அவரை நோக்கி, "கடிதம் எழுதப் பட்டிருக்கும் தோரணையைப் பார்த்தால், பெருத்த கலகம் உண்டாகும் போலத் தோன்றுகிறது; ஆனால் இன்று பகலில் கலகம் நடக்கும் என்று நான் நினைக்கவில்லை; சாயுங்காலம் ஆறுமணிக்குத் மேல் ஒன்பது மணிக்குள்ளாகவே கலகம் நடக்கும் என்று யூகிக்க வேண்டியிருக்கிறது; உங்களுடைய ஆள்களான ஐம்பது அறுபது ஆள்களையும் சாயுங்காலம் வரையில் மறைவாகவே வைத்து வையுங்கள்; அதற்கு மேல் அங்கங்கே நிறுத்தி வைக்கலாம்; நான் இப்போது இந்த ஜெவானை ஸ்டேஷனுக்கு அனுப்பி இன்னும் சில ஜெவான்களை வரவழைத்து வைத்துக் கொண்டு, இந்த பங்களாவுக்குள் ஒரு பக்கத்தில் மறைவாக இருக்கிறேன்; இன்று சாயுங்காலம் ஆறு மணிக்குத் தபால் பெட்டியண்டையில் ஓர் ஆளை அனுப்புவதாக இந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருக்கிறதல்லவா? அவன் வருகிறானா என்பதைக் கவனிப்போம். வராவிட்டால், இந்தக் கடிதம் அநேகமாகப் பொய்யான கடிதம் என்றே நாம் யூகித்துக் கொள்ளலாம்; ஆள் வரும் பட்சத்தில், அவனைத் தந்திரமாகப் பிடித்துக் கொண்டு வந்து உண்மையை அறிந்து கொள்வோம். அதற்கு மேல் எதிரியின் பலாபலத்தை அறிந்து கொண்டு, அதற்குத் தேவையானபடி, எத்தனை ஜெவான்களை வேண்டுமானாலும் நான் வரவழைக்கிறேன். நீங்கள் இதைப்பற்றி இனிக் கொஞ்சமும் கவலைப்படவேண்டாம். எத்தனை ஆயிரம் ஆள்கள் வந்தாலும் வரட்டும். துப்பாக்கியால் சுட்டுத் தள்ளிவிடச் செய்கிறேன். பெண்ணை அழைத்து வைத்துக் கொண்டு ஜெமீந்தாரிணி அம்மாள் இந்த அந்தப்

புரத்திலேயே இருக்கட்டும். நீங்களும் நானும் வேறொரு தனியான அறையில் இருப்போம். அது மேன் மாடத்தில் உள்ள அறையாக இருக்க வேண்டும்; அங்கே இருந்து நாம் நாற்புறங்களையும் பார்க்க அனுகூலமான அறையாக இருக்க வேண்டும்" என்றார்.

அதைக் கேட்ட மற்ற இருவரும் அப்படியே செய்வோம் என்று கூறி அதை ஏற்றுக் கொண்டார்கள்.

உடனே சிவஞான முதலியார் இன்ஸ்பெக்டரை அழைத்துக் கொண்டு மேன் மாடத்திற்குப் போய், அங்கே இருந்த அனுகூல மான ஓர் அறையில் சோபா நாற்காலி மேஜைகள் முதலிய வற்றைப் போடச் செய்து, அங்கே அவரை இருக்கச் செய்தார். அவரது விருப்பத்தின்படி போலீஸ் ஜெவானை உள்ளே அனுப்பிவிட்டு சிவஞான முதலியார் கீழே சென்றார்.

அதன் பிறகு ஒரு நாழிகை நேரத்தில் அவர்களது ஏற்பாடுகள் எல்லாம் சரியாக முடிவுற்றிருந்தன. கல்யாணியம்மாள் தந்திரமாகத் தனது குமாரத்திகள் இருவரையும் தனது அந்தப்புரத்திற்கே வரவழைத்து வைத்துக் கொண்டதன்றி, எல்லா வேலைக்காரிகளை யும், அந்த அந்தப்புரத்திற்குப் பக்கத்தில் உள்ள அறைகளில் ஆயத்தமாக வந்திருக்கும்படி செய்துவிட்டு, மிகுந்த கவலையும் திகிலும் ஆவலும் கொண்டு, "என்ன நடக்குமோ! என்ன நடக்குமோ!" என்று தியானம் செய்த வண்ணம் நெருப்பின் மேல் இருப்பவள் போலத் துடித்துக் கொண்டிருந்தாள்.

அதற்குள் சைதாப்பேட்டையில் இருந்து நாற்பது ஆட்கள் வந்து சேர்ந்தார்கள்; சிவஞான முதலியார் மொத்தத்தில் அந்த பங்களாவி லிருந்த அறுபது ஆட்களையும் அன்று சாயுங்காலம் வரையில் வெளியில் வந்து தலைகாட்டாமல் மறைவான ஓர் இடத்திலேயே இருக்கும்படி சொல்லி எச்சரித்துவிட்டு, அவர் களுக்கெல்லாம் தேவையான ஆகாராதிகளுக்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் செய்து விட்டு இளநீர், பழங்கள், சிற்றுண்டிகள், காப்பி, சோடா முதலிய சகலமான வஸ்துக் களையும் வருவித்து இன்ஸ்பெக்டரது அறைக்கு அனுப்பிவிட்டு, மாறிமாறி அங்குமிங்கும் போய் எல்லோரையும் எச்சரித்த மணியமாக ஓய்வின்றி அலைந்து கொண்டிருந்தார். இன்ஸ்பெக்டர் தம்மோடு வந்த ஜெவானை

அனுப்பி வேறே நான்கு ஜெவான் களை கத்திகள், துப்பாக்கிகள் சகிதம் அழைத்துவரச் செய்து, அவர்களுள் இருவரை ஆயுதபாணி களாகக் கல்யாணியம்மாளது அந்தப்புரத்தில் இரண்டு வாசற்படி களிலும் நிற்க வைத்துவிட்டு, மற்ற இரண்டு ஜெவான்களையும் ரோட்டின் ஓரமாக, பங்களாவின் வெளிவாசலுக்கருகில் இருந்த மரத்தின் மேல் ஏறி மறைந்திருக்கும்படி செய்துவிட்டு, தமது அறையில் இருந்தபடி ஜன்னல்களின் வழியாக நாற்புறங்களையும் கவனித்துக் கொண்டிருந்தார். பங்களாவின் வாசலில் மரத்தின் மீதிருந்த ஜெவான்களுக்கு ஏதாகிலும் சம்சயம் தோன்றினால், அவர்கள் உடனே ஒரு சிவப்புத் துணித்துண்டை ஆட்டுவ தென்றும், அதிலிருந்து இன்ஸ்பெக்டர் உட்புறத்தில் எச்சரிப்பாவ தென்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

இவ்வாறு அன்றைய பகல் முழுதும் மாரமங்கலத்தாரது பங்களா யுத்தகளம் போல பெருத்த போருக்கு ஆயத்தமாக வைக்கப்பட் டிருந்தது. பொழுதும் போய்க் கொண்டே இருந்தது. எவருக்கும் ஆகாரத்திலாவது தண்ணீரிலாவது ஒய்விலாது புத்தி செல்லாமை யால் எல்லோரும் அதே தியானமாக இருந்தனர். எங்கேயாவது ஓர் எலி ஓடிய ஓசையோ, அல்லது, பட்சி இறகை அடித்துக் கொண்ட ஓசையோ கேட்குமானால், அந்தப் பங்களாவிலிருந்தோரது இருதயங்கள் எல்லாம் திடுக்கு திடுக்கென்று அடித்துக் கொள்ளும். எல்லோரும் திடுக்கிட்டுப் பதைபதைத்துத் தங்களது கையில் இருந்த ஆயுதங்களை உறுதியாகப் பிடித்தனர். எல்லோரிலும் கல்யாணியம்மாளது நிலைமையும் கோமளவல்லியம்மாளது நிலைமையுமே பரம சங்கடமானவையாக இருந்தன. அவர்களது ஆவலும் பேரச்சமும் உச்ச நிலையை அடைந்து கொண்டே இருந்தன. அடிக்கடி அவர்களுக்கு நாவறண்டு போயிற்று. துரைஸானியம்மாள் ஒருத்தியே எவ்விதமான சலனமும் அற்றவள் போலக் காணப்பட்டு, "இந்த உலகமே அழிவதானாலும், அதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை" என்று சொல்லுகிறவள் போல ஏதோ ஒரு நாவலைப் படித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். வேலைக்காரிகள் எல்லோரும் மூட்டைகள் போல அசைவற்றுப் பேச்சு மூச்சின்றி அப்படியப்படியே உட்கார்ந்து குட்டுகுட்டென்று விழித்துக் கொண்டிருந்தனர். அந்த நிலைமையில் மாலை ஐந்தரை

மணியாயிற்று. போலீஸ் இன்ஸ் பெக்டர் சிவஞான முதலியாரை அழைத்து அவரிடத்தில் சில வார்த்தைகள் சொல்லிவிட்டு, அதற்கு முன்னாலேயே தருவித்து வைத்துக் கொண்டிருந்த சில வஸ்திரங் களை எடுத்து அணிந்து கொண்டார். அவர் தமது போலீஸ் உடைகளை எல்லாம் தரித்துக் கொண்டிருந்தார் ஆனாலும், ஒரு வஸ்திரத்தை எடுத்து இரண்டாக மடித்துத் தமது இடுப்பில் கட்டிக் கொண்டார்; இன்னொரு சால்வையை எடுத்து தலை உடம்பு முதலிய அவயங்களை எல்லாம் போர்த்தி முகத்தைத் தவிர மற்ற பாகங்களை எல்லாம் மறைத்துக் கொண்டு வெளியில் போய் பங்களாவின் அப்புறத்தில் ராஜபேட்டையின் மேலிருந்த தபாற் பெட்டியண்டை நின்ற ஆல மரத்தின் மறைவில் சுருட்டி முடக்கிக் கொண்டு முகம் தெரியாமல் நாய் போலத் தரையில் படுத்துக் கொண்டிருந்தார்; அவர் அங்கே வரும் போதே, ஜெவான்கள் ஏறி ஒளிந்து கொண்டிருந்த மரத்தண்டை போய், சிவஞான முதலியார் கனைத்துக் கொண்டால், உடனே வந்துவிட வேண்டும் என்று சொல்லி விட்டு வந்து மரத்தடியில் முன் சொல்லப்பட்டபடி படுத்திருந்தார். அந்த ராஜபாட்டையில் ஜன நடமாட்டம் அதிகமாக இல்லையாகையால், அப்போதைக் கப்போது இரண்டொரு குதிரை வண்டியோ மோட்டார் வண்டியோ, போய்க்கொண் டிருந்ததன்றி, இரண்டொரு தனித்து வழிப்போக்கரும் போய்க் கொண்டிருந்தனர்; அப்படி வந்த வண்டியாவது மனிதராவது தபாற் பெட்டியண்டை நிற்கவில்லை; மணி சரியாக ஆறாயிற்று; அப்போது அந்த ராஜபாட்டையின் வழியாக ஓடி வந்து கொண்டிருந்த ஒரு குதிரை வண்டி, தபாற் பெட்டியண்டையில் வந்தவுடனே சடக்கென்று நின்றது; அதற்குள் இருந்து ஒருவர் கீழே இறங்க; அந்த வண்டி உடனே திரும்பி விரைவாகப் போய்விட்டது. அங்கே இறக்கி விடப்பட்டது ஒரு பெண்பிள்ளை; அவள் குள்ளமும் கட்டையுமான உடம்பைக் கொண்டிருந்தாள் ஆனாலும், நிரம்பவும் வயதான கிழவி போல ஒரு கோலை ஊன்றிக் கொண்டு சிறிதளவு குனிந்து நடந்த வண்ணம் தபாற் பெட்டியண்டை போய் உட்கார்ந்து கொண்டாள்; அவள் ஒரு பெரிய துப்பட்டியால் தலை முதல் கால் வரையில் நன்றாக மூடி எந்த பாகமும் வெளியில் தெரியாதபடி தன்னை மறைத்துக்

கொண்டிருந்தாள்; ஆனால், பார்ப்பதற்காக மாத்திரம் முகத்தில் கண்களுக்கு நேராக இரண்டு துளைகள் விடப்பட்டிருந்தன; ஆகையால், அவளது தோற்றம் துருக்க ஜாதி ஸ்திரீயின் தோற்றமாக இருந்தது; அவளது உடம்பிலிருந்த துப்பட்டி நிரம்பவும் அழுக்கடைந்ததாக இருந்ததாகையாலும், அவளது கையில் இருந்த ஊன்று கோல் அநாகரீகமான விறகு குச்சியாக இருந்ததாகையாலும், அவள் வெள்ளிக்கிழமை தினங்களில் துருக்கரது மசூதிகளின் வாசலில் பிச்சை கேட்பதற்காக உட்கார்ந்திருக்கும் ஒரு பிச்சைக்காரி போலக் காணப்பட்டாள்; அவள் அடிக்கடி மாரமங்கலத்தாரது பங்களாவின் பக்கம் திரும்பிப் பார்ப்பதும், ராஜபாட்டையின் இருபுறங்களையும் பார்ப்பதுமாக இருந்தாள்; அப்போது சிவஞான முதலியாரும் கல்யாணி யம்மாளும் பங்களாவை விட்டு வெளியில் வந்தார்கள்; இன்ஸ் பெக்டர் அவர்களுக்குச் சொல்லி வைத்திருந்ததற்கிணங்க அவர்கள் நிரம்பவும் பயந்து கலவரமடைந்து சோர்ந்திருந்தவர்கள் போல நடித்து மெல்ல நடந்து ராஜபாட்டையை அடைந்து திரும்பித் திரும்பி அங்குமிங்கும் பார்த்தனர். வேறே எவரும் வருவதாகத் தெரியவில்லை; பிச்சைக்காரி போலக் காணப்பட்ட அந்தத் துருக்கப் பெண்பிள்ளை தங்களது விஷயத்தில் சம்பந்தப் பட்டவளாக இருக்க மாட்டாள் என்ற சந்தேகம் உண்டானதாகை யால், அவர்கள் அவளைப் பொருட்படுத்தாமல் மேலும் கால் நாழிகை நேரம் வரையில் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு நின்றனர். மணி ஆறேகால் ஆயிற்று; உடனே கல்யாணியம்மாள் மெல்ல நடந்து தபாற் பெட்டியண்டை வந்து, அந்தத் துருக்கப் பெண்பிள்ளையை உற்று நோக்கி, "யார் அம்மா அது? ஏன் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்?" என்று நயமாக வினவினாள்.

அதைக் கேட்ட அந்தப் பெண்பிள்ளை கோலை ஊன்றிக் கொண்டு எழுந்து குனிந்து நின்றவண்ணம், "இந்த பங்களாவிலே இருக்கிற அம்மாள் ஒரு கடிதம் கொடுக்கப் போகிறார்கள். அதை வாங்கிக் கொண்டு போகிறதற்காக இங்கே உட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் தான் அந்த அம்மாளா? அப்படியானால், ஏதாவது கடிதம் கொடுப்பதானால் கொடுங்கள்; நான் புறப்பட்டுப் போகிறேன்" என்று நடுக்கலான குரலில் கிழவி பேசுவது போலப் பேசினாள்.

சிறிதும் எதிர்பாராத அந்த மறுமொழியைக் கேட்ட அவர்கள் இருவரும் வியப்பும் கலக்கமும் திகைப்பும் அடைந்தனர். ஏனெனில், ஆறேகால் மணியாகியும், எவரும் வரவில்லை ஆகையால், கடிதம் பொய்யானதென்று நினைத்து ஒருவாறு மகிழ்ச்சியடைய ஆரம்பித்த அவர்களுக்கு, அந்தக் கடிதம் உண்மையானது தான் என்ற நிச்சயம் உண்டாகிவிட்டது. உடனே சிவஞான முதலியார் இரண்டு மூன்று தரம் நன்றாகக் கனைத்துக் கொண்டவராய் மெல்ல அவளிடம் நெருங்கித் தமது கையில் வைத்துக் கொண்டிருந்த ஒரு கடிதத்தை நீட்டி, "இதோ இந்தக் கடிதத்தைக் கொண்டு போய்க் கொடு" என்று கூற, உடனே அந்தத் துருக்க ஸ்திரீ அதை வாங்கிக் கொண்டு அவருக்குச் சலாம் செய்து, "நான் போகலாமா?" என்றாள். உடனே முதலியார், "ஓ! போகலாம்" என்றார். அதைக் கேட்ட துருக்க ஸ்திரீ, "எனக்கு ஏதாவது இனாம் சனாம் இல்லையா?" என்றாள். அந்தச் சமயத்தில் இரண்டு ஜெவான்களும், போலீஸ் இன்ஸ்பெக்டரும் திடீரென்று வந்து நாற்புறங்களிலும் சூழ்ந்து கொண்டனர்; இன்ஸ்பெக்டர் தமது வஸ்திரங்களை எல்லாம் விலக்கிவிட்டு இன்ஸ்பெக்டரது உடையிலேயே வந்திருந்தார். அவ்வாறு போலீசார் திடீரென்று வந்து அந்தத் துருக்க ஸ்திரீயை வளைத்துக் கொள்ளவே, அவள் திடுக்கிட்டு மான் போல மருண்டு மிகுந்த அச்சத்தோடு நாற்புறங்களிலும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கடிதத்தை விரைவாக மடியில் சொருகிக் கொண்டு நடுநடுங்கி நின்றாள். உடனே இன்ஸ்பெக்டர் அவளை நோக்கிப் புன்னகை செய்து, "ஏ! பெண் பிள்ளை! உனக்கு இனாம் சனாம் கொடுக்கும்படி கேட்டாயோ! நீ இவர்களுக்கு என்ன உபகாரம் செய்தாய்? எதற்காக இனாம் கேட்கிறாய்?" என்றார்.

அதைக் கேட்ட அந்த ஸ்திரீ அவர்களுக்கு மறுமொழி சொல்லத் தான் கடமைப்பட்டவள் அல்ல எனக் காட்டிக் கொள்பவள் போல இரண்டோரடி எடுத்து வைத்து, "இனாமா? யாருக்கு இனாம்? நான் ஏன் இனாம் கேட்கிறேன்?" என்று கூறிய வண்ணம் அப்பால் நடந்தாள். அப்போது இன்ஸ்பெக்டர் அவளுக்கு முன்னால் போய் வழிமறித்து நின்று, "என்ன! நான் கேட்கிறேன்! நீ சரியானபடி பதில் சொல்லாமல் போகிறாயே! உன்னைச் சுலபத்தில் விட்டுவிடுவோம்

என்று பார்த்தாயா? நில் அப்படியே; நகராதே. இவர்களிடத்தில் எதற்காக இனாம் கேட்டாய்? நிஜத்தைச் சொல்லி விடு" என்று அதட்டிக் கூறினார். அதைக் கேட்ட அந்த ஸ்திரீ நிரம்பவும் பயந்து அழுபவள் போல நடித்து, "ஐயா! நான் வழியோடு போகிற பிச்சைக்காரி. என்னை ஏன் இப்படி வதைக்கிறீர்கள்? நான் என்ன திருடினேனா? முடிச்சவிழ்த்தேனா? நான் ஏழை; எனக்கு ஏதாவது பிச்சை கொடுங்கள் என்று இவர்களிடத்தில் கேட்டேன். இவர்கள் கொடுக்கவில்லை. போகிறேன்" என்று கூறிய வண்ணம் மறுபடியும் நடக்க ஆரம்பித்தாள். அப்போதும் அவளை விடாமல் மறித்துக் கொண்ட இன்ஸ்பெக்டர், "ஏ! பெண் பிள்ளை! நீ இப்படி அழுதால் உன்னை விட்டுவிடுவோம் என்று நினைக்காதே; நீ ஒரு நிமிஷத்துக்கு முன் இவர்களிடத்திலிருந்து ஒரு கடிதத்தை வாங்கிக் கொண்டாய்; உடனே இனாம் கேட்டாய்; இப்போது பிச்சைக்காரி என்றும், பிச்சை கேட்டேன் என்றும் பொய் பேசுகிறாய். எனக்கு எல்லாச் சங்கதியும் தெரியும். நீ இனி மறைத்துப் பேசுவதில் உபயோகமில்லை. உண்மையில் நீ யார்? உன்னை இங்கே அனுப்பிய மனிதர் யார்? அவர் எங்கே இருக்கிறார்? அந்த விவரங்களை எல்லாம் உள்ளதை உள்ளபடி நீ சொல்லியே தீரவேண்டும். இல்லாவிட்டால், உன்னுடைய முதுகுத் தோலை உரித்துவிடச் சொல்லுவேன். ஜாக்கிரதை" என்று அதட்டிக் கூறினார். அதைக் கேட்ட அந்த ஸ்திரீ ஒன்றையும் அறியாதவள் போல நடித்து, "ஐயோ! ஐயோ! அடிக்கிறார்களே! கொல்லுகிறார்களே" என்று பெருத்த கூக்குரலிட்டு அழுது ஆரவாரம் செய்யத் தொடங்கி, "வழியோடு போன பிச்சைக்காரியான என்னைப் பிடித்துக் கொண்டு, கடுதாசி என்கிறார்கள், சங்கதி எல்லாம் தெரியும் என்கிறார்கள்; ஐயோ! எனக்கு ஒரு சங்கதியும் தெரியவில்லையே!" என்று கூறி ஓலமிட்டழத் தொடங்கினாள். அவளது மகா சாமர்த்தியமான பாசாங்கைக் கண்ட சிவஞான முதலியாரும், கல்யாணியம்மாளும் பிரமித்து வாய் திறந்து பேச மாட்டாமல் ஸ்தம்பித்து நின்றனர். அப்போது இன்ஸ்பெக்டர் அந்த ஸ்திரீயை நோக்கி, "அடி கழுதை! உன்னை யாராவது தொட்டார்களா? அடித்தார்களா? ஏன் இப்படிக் கூச்சலிட்டு அழுகிறாய்! இவர்கள் கொடுத்த கடிதம் உன் மடியில் இருக்கிறது.

ஒன்றையும் அறியாதவள் போல ஊளையிடுகிறாயே! இப்படி எல்லாம் பாசாங்கு செய்தால், உன்னை விட்டுவிடுவோம் என்று எண்ணிக் கொண்டாயா? வா இப்படி; நீ நிஜத்தைச் சொன்னால் தப்பலாம். இல்லாவிட்டால், இன்றோடு, உன்னுடைய உடம்பு உனக்கு உதவாமல் போய் விடும்" என்று அதட்டிக் கூறிய வண்ணம், அவளது உடம்பின் மீதிருந்த துப்பட்டியைக் கையால் பிடித்து அவளை நிறுத்தினார். அவள் அப்போதும் தனது ரோதனத்தை நிறுத்தாமல், "ஐயோ! இந்த அக்கிரமத்தைத் கேட்பார் இல்லையா! கோஷாப் பெண் பிள்ளையைப் பிடித்து அக்கிரமம் செய்கிறார்களே! ஏன் ஐயா! என்னைத் தொடுகிறீர்? நான் நிஜத்தைச் சொல்லுகிறேன். என்னைத் தொட வேண்டாம். தூர நில்லும்" என்றாள்.

அதைக் கேட்ட இன்ஸ்பெக்டர் தமது கையின் பிடிப்பை விட்டு, "அது சரி; உன்னைத் தொடவில்லை; உண்மையைச் சொல்லி விடு" என்றார். அவள் அவர்களை நோக்கி, "உண்மை யாகவே நான் பிச்சைக்காரிதான்; வழியோடு வந்து கொண்டிருந் தேன். இந்த ரஸ்தாவில் கொஞ்ச தூரத்துக்கப்பால் ஓர் ஆள் இருக்கிறான். அவன் இந்த இடத்தில் நான் இருந்தால் இவர்கள் கடிதம் கொடுப்பார்கள்; அதை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தால், 4-அணா கொடுப்ப தாகச் சொன்னான். அதற்காக வந்திருந்தேன். எனக்கு வேறே ஒரு சங்கதியும் தெரியாது. இவர்கள் கடிதம் கொடுத்தது நிஜந்தான். அதை நான் மடியில் சொருகிக் கொண்டிருக்கிறேன். என்னை விட்டு விடுங்கள்; நான் போக வேண்டும்" என்றாள். உடனே இன்ஸ்பெக்டர், "சரி; அப்படியானால், நாங்கள் உன்னோடு கூடவே வருகிறோம். அந்தக் கடிதத்தை எங்களுக்கெதிரிலேயே நீ அந்த மனிதரிடத்தில் கொடு. உன்னை விட்டு விடுகிறோம்" என்றார். அவள் "அப்படியே ஆகட்டும்; நடவுங்கள்" என்று கூறி, ஏழெட்டு கஜதூரம் நடந்தவுடனே, ஏதோ நினைத்துக் கொண்டவள் போல நின்று, "அந்த மனிதன் இருக்கிறானோ இல்லையோ? அவன் இருந் தாலும், உங்களுக்கெதிரில் நான் இதை அவனிடத்தில் கொடுத்தால், அவன் வாங்கிக் கொள்ளாமல் அன்னியன் போலப் பாசாங்கு பண்ணுவான்; நீங்கள் என்மேல் கோபித்துக் கொள்வீர்கள்.

ஆகையால் அங்கே போவதில் உபயோகமில்லை. நான் சொன்னதுதான் நிஜம். வேறே எந்தச் சங்கதியும் தெரியாது. என்னை விட்டுவிடுங்கள். நான் போக வேண்டும்" என்று கூறிய வண்ணம் நின்று வந்த வழியிலேயே திரும்பி நடக்கலானாள்.

அவளது ஜெகஜால வித்தையைக் கண்டு பெரிதும் கோபம் கொண்ட இன்ஸ்பெக்டர், "ஆகா! நீ கற்ற வித்தையை எல்லாம் காட்டுகிறாயா! கோஷாப் பெண்பிள்ளையாக இருக்கிறாயே என்று நான் கொஞ்சம் மரியாதை பார்த்தால், நீ எங்களை ஏய்த்துவிட்டுப் போகவா பார்க்கிறாய்! உன்னைக் கொண்டு போய் மறைவான இடத்தில் வைத்துக் கொண்டு நன்றாக அடித்தால், தானாக நிஜம் வெளியில் வரும். எங்கே போகிறாய்? நில் அப்படியே" என்று கூறிய வண்ணம் மறுபடியும் அவளது துப்பட்டியைப் பிடித்து, "பங்களாவுக்குள்ளே போகலாம் வா" என்று இழுத்தார்.

அவள் உடனே முறைப்பாக நிமிர்ந்து பார்த்து, "ஏன் ஐயா, என்னை இப்படித் தொட்டு இழுக்கிறாய்! நீ முசல்மானாக இருந்தும் கொஞ்சம்கூட ரோஷமில்லாமல் கோஷாப் பெண் பிள்ளையைத் தொட்டு இழுக்கிறாயே! நான் என்ன குற்றத்தைச் செய்துவிட்டேன்? எந்தச் சட்டத்தின்படி குற்றம் செய்தேன்? அதைச் சொன்னால் தான் நான் வருவேன்; சொல்லாவிட்டால் நான் வரமாட்டேன்" என்றாள்.

அதைக் கேட்ட இன்ஸ்பெக்டர் முன்னிலும் அதிகமான கோப மடைந்தவராய், "ஓகோ! இவ்வளவு தூரம் சட்டம் படிக்கிறவளான நீ தான் பிச்சைக்காரியோ! நீ பலே வேஷக்காரி என்பது நன்றாகத் தெரிகிறது. நீ செய்த குற்றம் என்ன என்பதைச் சொல்லாவிட்டால் நீ வரமாட்டாயோ? இந்த பங்களாவில் உள்ள ஒரு சிறு பெண்ணை பலவந்தமாக அபகரித்துக் கொண்டு போகும் குற்றத்துக்கு உடந்தையாக இருப்பதான குற்றத்தை நீ செய்கிறாய். ஆகையால் உன்னைக் கைதியாக்கி இருக்கிறோம். நீ பேசுகிற டீக்கைப் பார்த்தால் நீ கோஷாப் பெண்பிள்ளை அல்லவென்றே நான் நினைக்கிறேன். ஆகையால், நீ உண்மையை எல்லாம் சொல்லுகிற வரையில் நான் உன்னை விடப்போகிறதில்லை. உன்னை இந்த பங்களாவுக்குள் கொண்டு போய் வைத்துக் கொண்டு பெண் பிள்ளைகளை விட்டு, உன் துப்பட்டியை விலக்கச் செய்து நீ

கோஷா ஸ்திரீயா என்பதைப் பார்க்கச் செய்கிறேன்" என்று கூறிய வண்ணம் அவளது துப்பட்டியைப் பிடித்து அவளைப் பரபர வென்று இழுத்துக் கொண்டு பங்களாவிற்குள் போக, மற்றவர்கள் மிகுந்த வியப்பும் கலக்கமும் அடைந்து கூடவே தொடர்ந்து சென்றனர். அந்தத் துருக்க ஸ்திரீ அப்போதும் ஓங்கிப் பேசிக் கூக்குரலிட்டு ஆரவாரம் செய்து, "நீங்கள் என்னை எங்கே வேண்டுமானாலும் கொண்டு போய்ப் பாருங்கள். நான் பிச்சைக்கார கோஷாப் பெண்பிள்ளை என்பதை நான் ருஜுப்படுத்துகிறேன். இந்த பங்களாவில் உள்ள சின்னப் பெண்ணை நான் எப்போது கண்டேன்? இல்லாதது பொல்லாததை எல்லாம் சொல்லி என்னை வதைக்கிறீர்களா! இருக்கட்டும்; உங்களை நான் இலேசில் விடப்போகிறதில்லை. ஆகட்டும்; ஒரு கை பார்க்கலாம்" என்று பலவாறு பிதற்றிக் கொண்டே போனாள். அடுத்த நிமிஷம் அவர்கள் பங்களாவின் கட்டிடங்களை அடைந்தனர். அங்கே மறைத்து வைக்கப்பட்டிருந்த ஆட்கள் எல்லோரும் ஒன்றுகூடி எதிரியைச் சேர்ந்த ஒரு பெண்பிள்ளையைப் போலீசார் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்பதையும் உணர்ந்து, அவள் ஏதோ பெருத்த குற்றம் செய்துவிட்டதாக யூகித்துக் கொண்டு அவளை அடிக்க வேண்டும் என்றும், உதைக்க வேண்டும் என்றும், கொல்ல வேண்டும் என்றும் ஒருவருக்கொருவர் சொல்லிப் பதைபதைத்து அங்கே வந்து சூழ்ந்து கொண்டனர். அதைக் கண்ட இன்ஸ்பெக்டர் அவர்களை எல்லாம் முன் போல மறைவில் போய் இருக்கும்படி செய்துவிட்டு, அந்த கோஷா ஸ்திரீயை இழுத்துக் கொண்டு, மற்றவர்களோடு உட்புறத்தில் சென்று, தனியான ஓர் அறைக்குப் போய், அவளை மாத்திரம் அங்கே இருக்கச் செய்து வெளியில் வந்து, நாலைந்து வேலைக் காரிகளை அழைத்து உள்ளே இருந்த பெண் பிள்ளையின் துப்பட்டியையும் முகமூடியையும் எடுத்து விட்டு அவளது உடம்பின் அங்க மச்ச அடையாளங்களையும், அவளது வயதையும் அறிந்து வரும்படி கூறி அனுப்பினார். அவ்வாறே அந்தப் பெண்பிள்ளைகள் உள்ளே போய் அரைக்கால் நாழிகை நேரம் இருந்துவிட்டு வெளியிலே வந்து, "ஐயா! அவள் மிகவும் பொல்லாதவளாக இருக்கிறாள்; அவளுடைய துப்பட்டியை

எடுக்க அவள் சுலபத்தில் இடங்கொடுக்கவில்லை. நாங்கள் பலவந்தமாகவே அதை எடுத்தோம்; அவள் துருக்கஜாதிப் பெண் பிள்ளையல்ல; முகத்தில் மஞ்சள் பூசிக் குளித்து சாந்துப் பொட்டு வைத்துக் கொண்டிருக்கிறாள். நல்ல அழகான பதினெட்டு வயசுக் குமரியாக இருக்கிறாள். தமிழரைச் சேர்ந்த பெண்பிள்ளையாகக் காணப்படுகிறாள்" என்றார்கள்.

அப்போது அங்கே இருந்தவர்களான இன்ஸ்பெக்டர், சிவஞான முதலியார், கல்யாணியம்மாள் ஆகிய மூவரும் அதைக் கேட்டு மிகுந்த வியப்பும் பிரமிப்பும் அடைந்தவர்களாய் வேலைக்காரிகளை வெளியிலேயே இருக்கச் சொல்லிவிட்டு உள்ளே சென்று பார்க்க, வேலைக்காரிகள் சொன்னது நிஜமாகவே இருந்தது; சிவஞான முதலியார் அந்தப் பெண்ணைக் கண்டு சகிக்க ஒண்ணாத பிரமிப்பும் கொதிப்பும் அடைந்தவராய், "ஆ! ராஜாயீ! நீ இவ்வளவு தூரத்துக்கு வந்துவிட்டாயா! ஆகா! என்ன ஆச்சரியம்! போன வருஷம் ஒன்றையும் அறியாத பைத்தியக்காரியாக இருந்த நீ இதற்குள் எப்படி மாறிப் போயிருக்கிறாய்! ராஜாயீ! இது என்ன முட்டாள் காரியம்! உன்னுடைய தம்பி சிறுபிள்ளைத் தனத்தினால் தவறான ஒரு காரியத்தைச் செய்து விட்டாலும், அவனுக்கு அக்காளாக இருக்கும் நீ அவனுக்குத் தக்க புத்திமதிகளைச் சொல்லி அவனை நல்ல வழிக்குக் கொண்டு வருகிறதா? நீயும் அவனுக்கு அனுசரணையாக இருந்து, இப்படிப்பட்ட மோசங்களில் எல்லாம் இறங்குகிறதா? இப்படிக் கடிதம் எழுதியனுப்பி இருக்கிறீர்களே; யாருடைய துர்போதனையைக் கொண்டு இப்படி எழுதினீர்கள்? அப்படி போதித்தவன் யாராக இருந்தாலும் உங்களுடைய எண்ணம் நிறைவேறுமாறு நினைத்துக் கொண்டாயா? ஆகா! அக்காள் தம்பி ஆகிய நீங்கள் இருவரும் உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கிறவர்களாக இருக்கிறீர்களே! உன்னுடைய தம்பியை நான் இவர்களிடத்தில் கொண்டு வந்து விட்டு அநாதைப் பையன் என்று சொல்லி எவ்வளவோ வேண்ட, இவர்கள் தயவாக அவனை வைத்துக் கொண்டு வந்திருக்க, அவன் இங்கேயே அயோக்கியத்தனமாக நடந்து கொண்டான் அல்லவா! அது போனாலும் போகட்டும் என்று அவனை நான் செங்கல்பட்டுக்கு அனுப்பினால் அங்கே போகாமல் நடுவழியிலேயே திரும்பி வந்து, உன்னோடு சேர்ந்து கொண்டு இப்படிப்பட்ட தலைப்பாகை

மாற்றிக் காரியம் எல்லாம் செய்து கொண்டிருக்கிறான்! நீயும் அதற்கு அநுசரணையாக இருந்து அவனைவிட அதிகமாக நீயும் மாயாவி வித்தையெல்லாம் செய்கிறாய்! குழந்தைப் பருவத்தி லிருந்து உங்களை வளர்த்து ஆளாக்கி பிழைப்புக்கும் வழி செய்து கொடுத்த மனிதனான என்னிடத்திலேயே நீங்கள் உங்களுடைய கைவரிசையை எல்லாம் காட்ட ஆரம்பித்தது தான் மிகவும் மெச்சக் கூடியதாக இருக்கிறது. நீங்கள் எப்படிப்பட்ட கீர்த்தியும் நல்ல பெயரும் சம்பாதித்துக் கொள்ளுகிறீர்கள்! உங்களை நான் வளர்த்துக் காப்பாற்றியதற்கு இதைவிட வேறே சன்மானம் வேண்டுமா? ஆகா! ராஜாயீ! உன்னைப் பார்க்கக் கண் கூசுகிறது" என்றார்.

அதைக் கேட்ட இன்ஸ்பெக்டர், "ஓகோ! அப்படியா! இவள் தான் அந்தப் பையனுடைய அக்காளோ! இருந்தாலும் இப்படிப் பட்ட அக்காளல்லவா இருக்க வேண்டும்! கொஞ்ச நேரத்துக்குள் நல்ல அசல் துருக்கப் பெண்பிள்ளை போலவே நாடகம் ஆடி விட்டாளே! என்ன சாகசம்! என்ன சாமர்த்தியம்! ராஜாயி அம்மா! மெச்சினேன்! மெச்சினேன்!" என்றார். கல்யாணியம்மாள் அவளை நோக்கி, "முழிக்கிற முழியைப் பாருங்கள். காக்கை பிடிக்கிற குறத்தி போல இருக்கிறாள்; கொஞ்ச நாழிகைக்குள் எவ்வளவு ஆடம்பரம் செய்துவிட்டாள்; இவள் ஓலமிட்டு அழுததும், சட்டம் பேசினதும், பிச்சைக்காரி போல நடித்ததும் நிஜம் போல இருந்ததே! ஆகா! இவள் தற்கொலை செய்வதற்கும் அஞ்சமாட்டாள்! இவளை என்ன செய்தாலும் பாவம் ஏற்படாது" என்றாள்.

அந்த வார்த்தைகளை அசட்டையாகக் கேட்டுக் கொண்டிருந்த ராஜாயி அம்மாள் அவர்களை எல்லாம் நிரம்பவும் அலட்சியமாகப் பார்த்து, "சரி; நீங்கள் மூன்றுபேரும் எனக்குக் கொடுத்த புகழ்ச்சிப் பத்திரங்களை எல்லாம் ஏற்றுக் கொண்டேன். என்னால் ஆக வேண்டிய காரியம் இவ்வளவு தானே? நான் இனிமேலாவது போகலாம் அல்லவா?" என்றாள்.

அதைக் கேட்ட இன்ஸ்பெக்டர், "உன்னை இவ்வளவோடு விட்டு விடுவதற்காகவா நாங்கள் உன்னை இங்கே கொண்டு வந் தோம். நீ மரியாதையாக நிஜத்தைச் சொல்லிவிடப் போகிறாயா? அல்லது, நல்ல உடம்பை வீணில் கெடுத்துக் கொள்ளப் போகிறாயா? இந்தக் கடிதத்தை அனுப்பியது யார்? அவர் எங்கே

இருக்கிறார்? உங்களுடைய எண்ணம் என்ன என்கிற விவரங் களை எல்லாம் நீ சொல்லிவிடு; உன்னை நாங்கள் இன்றைய ராத்திரி முழுதும் இங்கேயே வைத்திருந்து, நீ சொன்னது உண்மைதானா என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டு, நாளைய காலையில் உன்னை உன்னுடைய இருப்பிடத்துக்கு அனுப்பி விடுகிறோம். சொல்லாவிட்டால், நீ உபத்திரவத்துக்கு ஆளாவதோடு, இன்றைய ராத்திரி இங்கே வர உத்தேசித்திருக்கிற மனிதர்களும் துன்பத்தில் மாட்டிக் கொள்வார்கள்" என்றார்.

அதைக் கேட்ட ராஜாயி அம்மாள் நிரம்பவும் அலட்சியமாக அவரைப் பார்த்து, "இன்று ராத்திரி யாராவது பெண்ணை அபகரித்துக் கொண்டு போவதற்காக இங்கே வந்தால், உங்களுக்குச் சாமர்த்தியம் இருக்கும் பட்சத்தில் நீங்கள் அவர் களை இங்கேயே பிடித்துக் கொள்ளுங்கள். அவர்கள் யார் என்பது முதலான விவரம் எல்லாம் எனக்குத் தெரியாது. அப்படித் தெரிந்தாலும், நான் அதை வெளியிடக் கடமைப் பட்டவள் அல்ல; அந்த விவரத்தை எல்லாம் நான் வெளியிடா விட்டால் அது எந்தச் சட்டத்தின்படி குற்றமாகிறதென்பதும் தெரியவில்லை. நான் சம்பந்தப்பட்ட வரையில் இப்போது என்மேல் என்ன குற்றமோ அதற்கு நீங்கள் சட்டப்படி என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்து கொள்ளுங்கள். இப்போது நீங்கள் என்னை வெளியில் விட்டாலும் சரி; விடாவிட்டாலும் சரி; உங்களுடைய பிரியப்படி செய்து கொள்ளலாம்" என்றாள். அதைக் கேட்ட எல்லோரும் மிகுந்த பிரமிப்பும் வியப்பு மடைந்தனர். அவ்வளவு யௌவனப் பருவமும் அழகும் உடைய அந்த ஸ்திரீ ஓர் ஆண்பிள்ளையை விட அதிக மனோ திடமும் அஞ்சாமையும் பெற்றிருந்ததைக் காண அவர்கள் பெரிதும் ஆச்சரியமடைந்தனர்.

உடனே சிவஞான முதலியார் அவளை நோக்கி அன்பான குரலில் பேசத் தொடங்கி, "ராஜாயி! என்னைக்கூட நீ அலட்சிய மாகத்தான் நடத்தப் போகிறாயா? பழைய விசுவாசத்தையும், அன்பையும், நன்றியையும் சுத்தமாக மறந்து விட்டாயா? முகமறியாத அன்னிய மனிஷி போல நீ என்னிடத்தில் நடந்து கொள்வது எனக்கு நிரம்பவும் ஆச்சரியமாக இருக்கிறது! இது வரையில் நடந்தது நடந்து போய்விட்டது. அதை எல்லாம் நாங்கள் பாராட்டுவதில்லை. நீங்கள் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறீர்கள்?

இதற்கெல்லாம் உங்களுக்கு உதவியாக இருப்பது யார்? என்ற எல்லா விவரங்களையும் சொல்; நாங்கள் அந்த மனிதரை வரவழைத்து ஒருவிதமாக சமாதானப்படுத்திக் கொள்ளுகிறோம். மோகனரங்கன் இப்போது எங்கே இருக்கிறான் என்பதையும் சொன்னால், அவனுக்கு மறுபடியும் நல்ல வேலையாகப் பார்த்து அவனை அமர்த்தி வைக்கிறேன். முன்பின் யோசனை செய்து பேசு" என்று நயமாகக் கூறினார்.

ராஜாயி அம்மாள், "இந்தக் கடிதம் மோகனரங்கனாலே தான் எழுதப்பட்டது. எங்களுக்கு வேறே யாரும் உதவி செய்ய வில்லை. உங்களைப் பயமுறுத்துகிறதற்காக இந்தக் கடிதம் சும்மா எழுதப்பட்டது. அவ்வளவுதான் சங்கதி" என்றாள்.

சிவஞான முதலியார், "அப்படியானால் குப்பம்மாள் மூலமாக ஒரு கடிதம் எழுதி ரகசியமாக துரைஸானியம்மாளுக்கு அனுப்ப வேண்டிய காரணம் என்ன? நீங்கள் அவளையும் பயப்படுத்த வேண்டிய அவசியமில்லையே?" என்றார்.

ராஜாயி அம்மாள், "அதென்னவோ அந்தச் சங்கதி எனக்குத் தெரியாது. ஒருவேளை மோகனரங்கன் அனுப்பியிருக்கலாம். அதைப் பற்றி அவனைத்தான் கேட்க வேண்டும்" என்றாள். அது வரையில் மிகுந்த பொறுமையோடிருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் கோபமடைந்து, "வக்கீல் ஐயா! மயிலே மயிலே என்றால் அது இறகு போடாது. அதற்குச் சரியான பக்குவம் செய்தால்தான் போடும்; இவள் சாதாரண மனுஷியல்ல; மகா நெஞ்சழுத்தம் உடையவளாகவும் சட்டமெல்லாம் கற்றவளாகவும் இருக்கிறாள். நீங்கள் இன்றைய ராத்திரி முழுதும் நயந்து வேண்டினாலும் இவள் உண்மையை வெளியிடக் கூடியவளல்ல. ஆகையால், நான் இவளை இப்போது போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு போய், மந்திரம் போட்டு, உண்மையைக் கிரகித்துக் கொண்டு, இவளையும் சிறைச்சாலையில் அடைத்துவிட்டு வருகிறேன். பங்களாவில் ஒரு பெட்டி வண்டி இருந்தால், உடனே குதிரையைப் பூட்டச் செய்யுங்கள்" என்றார்.

சிவஞான முதலியார் மறுபடி அவளை நோக்கி, "என்ன ராஜாயீ, நீ வீணாக உபத்திரப்படப் போகிறாய். நாம் வளர்த்த குழந்தை யாயிற்றே என்ற பாசம் இன்னமும் என் மனசில் போராடுகிறது;

இப்போதாவது உண்மையைச் சொல்லிவிடு!" என்று நயமாக வினவினார்.

ராஜாயி, "நான் சொல்லக்கூடியதை எல்லாம் முன்பே சொல்லி விட்டேன். இனி நான் சொல்வதற்கே ஒன்றுமில்லை. போலீஸார் அக்கிரமமாக என்னை வதைத்தால் நான் என்ன செய்யலாம். அவர்கள் செய்வதைச் செய்து கொள்ளட்டும்" என்றாள்.

உடனே கல்யாணியம்மாள் வெளியில் நின்ற ஒரு வேலைக் காரியைக் கூப்பிட்டு உடனே பெட்டி வண்டியைத் தயாரிக்கும்படி உத்தரவு செய்தாள். சில நிமிஷங்களில் பெட்டி வண்டி ஒன்று ஆயத்தமாயிற்று. இன்ஸ்பெக்டர் நான்கு ஜெவான்களை பங்களா விலேயே ஜாக்கிரதையாக இருக்கும்படி சொல்லிவிட்டு தம்மோடு ஒருவனை அழைத்துக் கொண்டு ராஜாயியின் கையில் விலங்கைப் பூட்டி அவளை அழைத்துக் கொண்டு வெளியிலே சென்றனர். சென்றவர், சிவஞான முதலியாரை நோக்கி, "ஐயா! நான் அரை நாழிகைக்குள் திரும்பி வந்துவிடுகிறேன். அது வரையில் எல்லா ஆள்களையும் எச்சரிக்கையாக இருக்கச் சொல்லி நீங்களும் விழிப்பாகவே இருங்கள். நான் போகும் பெட்டி வண்டியை என்னுடைய ஜெவானே ஓட்டுவான். வீணாக உங்களுடைய ஆள்களில் ஒருவனையும் அனுப்ப வேண்டாம். நான் திரும்பி வருவதற்குள் ஏதாவது விபரீதம் நேர்ந்தால், ஜெவான்களில் ஒருவனை உடனே ஒரு கால் குதிரைமேல் வைத்து என்னிடத் துக்கு அனுப்புங்கள்" என்று சொல்லிவிட்டு, வெளியிலே போய், ராஜாயியைப் பெட்டி வண்டிக்குள் உட்கார வைத்துக் கொண்டு போய்விட்டார்.

அப்போது மாலை ஏழுமணி சமயமாகிவிட்டது. எங்கும் இருள் சூழ்ந்து கொண்டது. பங்களாவின் ஒவ்வோரிடத்திலும் பிரகாச மான விளக்குகள் கொளுத்தி வைக்கப்பட்டன. பங்களாவிலிருந்த வேலைக்காரர்களும், சைதாப்பேட்டையில் இருந்து வந்த ஆட்களும் சேர்ந்து சுமார் அறுபது மனிதர் இருந்தனர். அவர்கள் எல்லோரும் பெருத்த தடிகளை வைத்துக் கொண்டு நாற்புறங் களிலும் எச்சரிக்கையாக நின்று இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். இரவு நேரம் வரவர, சிவஞான முதலியார், கல்யாணியம்மாள் முதலிய சகலமான ஜனங்களினது நெஞ்சம்

திடுக்கு திடுக்கென்று அடித்துக் கொண்டது; எல்லோரும் நெருப்பின் மேல் கிடப்பவர் போல, என்ன செய்வதென்பதை அறியாதவராகத் தத்தளித்து அங்குமிங்கும் போவதும் வருவதும் பங்களாவின் நாற்புறங்களையும் உற்றுப் பார்ப்பதுமாக இருந்தனர். அதுகாறும் போலீஸ் இன்ஸ்பெக்டர் அந்த பங்களாவிலிருந்தது அவர்களுக்குப் பெருத்த பலமாக இருந்தது. ஆகையால் அவர் எப்போது திரும்பி வரப்போகிறார் என்ற ஆவலே பெரிதாக எழுந்து வதைத்தது. சரியாக ஒன்பது மணிக்குத் தாலி கட்டுவதாகக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்த தாகையால், எதிரிகள் வரக்கூடிய காலம் நெருங்கிவிட்டது; இந்த நிமிஷத்திலோ அடுத்த நிமிஷத்திலோ ஆட்கள் வந்துவிடுவார்கள் என்று எல்லோரும் கலவரமடைந்து விவரிக்க ஒண்ணாத சஞ்சலமுற்றுத் துடிதுடித் திருந்த சமயத்தில், பங்களாவின் வாசலில் மோட்டார் வண்டி ஒன்று வந்து நின்றது. அதன் ஓசையைக் கேட்டதும் எல்லோரும் திடுக்கிட்டு நடுங்கினர். அடிமுதல் முடிவரையில் உரோமம் சிலிர்த்தது. "ஆள்கள் வந்துவிட்டார்கள்" என்று ஒவ்வொருவரும் ரகசியமாகச் சொல்லிக் கொள்ளத் தலைப்பட்டனர். ஆனால் அந்த வண்டியிலிருந்து போலீஸ் இன்ஸ்பெக்டர் குலாம் ராவுத்தரும், அவரோடு சென்ற போலீஸ் ஜெவானும் இறங்கி உள்ளே வரவே, அவர்களைக் கண்டு எல்லோரும் திரும்பவும் தைரியமும் உற்சாகமும் அடைந்தனர். அவர் எப்போது வருவார் வருவார் என்று மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்திருந்த கல்யாணியம்மாளும் சிவஞான முதலியாரும் எதிர்கொண்டோடி அவரை நடுவழியி லேயே கண்டனர்.

ஆனால், இன்ஸ்பெக்டர் அன்றைய பகலில் இருந்தது போல அப்போது அவ்வளவு மனோதிடத்தோடிருந்ததாகத் தோன்ற வில்லை; அவரது முகத்தின் கவலையும் உடம்பின் பதைபதைப் பும் ஏதோ விபரீதத்தைக் காட்டின. அந்த மாறுபாட்டைக் கண்ட மற்ற இருவரது நெஞ்சமும் கலங்கித் தவித்தது. விஷயம் இன்ன தென்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் துடித்தது; அந்த நிலைமையில் அவர்கள் மூவரும் ஒரு தனியான இடத்திற் குப் போய்ச் சேர்ந்தனர்; உடனே இன்ஸ்பெக்டர் அவர்களை நோக்கி, "முதலியாரே! நான் இன்று பகல் முழுதும் இந்த

விஷயத்தை அவ்வளவாகப் பொருட்படுத்தாமல் நிரம்பவும் அலட்சியமாக மதித்திருந்தேன்; இது பெருத்த விபரீதமாக இருக்கிறது. இங்கே வந்த பெண்பிள்ளையின் துடுக்கையும் துணிவையும் மன உரத்தையும் பார்த்தீர்கள் அல்லவா? அவளுக்கு அவ்வளவு அதிகமான பக்கபலம் இருப்பதனாலே தான் அவள் அவ்வளவு இறுமாப்பாகவும் எடுப்பாகவும் பேசினாள்; அவளை அழைத்துப் போய் ஸ்டேஷனில் வைத்துக் கொண்டு, நயமாக எவ்வளவோ கேட்டோம்; அவள் வாயைத் திறக்கவே இல்லை; பிறகு எங்களுடைய மருந்தை நன்றாக உபயோகப்படுத்தினோம். உடனே அவள் கலங்கிப் போய் வழிக்கு வந்து நிஜத்தை எல்லாம் கக்கிவிட்டாள்; உண்மை என்ன வென்றால், அவள் அடையாற்றில் வாத்திச்சியாக இருந்தாள் அல்லவா; அதற்குப் பக்கத்தில் திருவாமூர் என்று ஓர் ஊரிருக்கிறது. அங்கே ஒரு பெருத்த ஜெமீந்தார் இருக்கிறார். அவர் பெருத்த டம்பாச்சாரி; அவர் இவளை வைப்பாட்டியாக வைத்துக் கொண் டிருக்கிறாராம். அவர் இப்போது சரியாக எட்டு மணிக்கு 200 ஆள்களோடு வந்து இந்த பங்களாவை வளைத்துக் கொள்ளப் போகிறாராம்; அத்தனை ஆள்களிடத்திலும் கத்திகளும் துப்பாக்கி களும் இருக்கின்றனவாம்; அவர்கள் எப்படியும் இன்றைய தினம் பெண்ணைக் கொண்டு போய்விடப் போகிறார்களாம். ஒன்பது மணிக்கு முகூர்த்தத்தை நடத்த புரோகிதர் மேளக்காரர்கள் ஆகிய சகலமானவர்களும் ஆயத்தமாக இருக்கிறார்களாம். ஆகையால் இனி ஒரு நிமிஷங்கூட நாம் அஜாக்கிரதையாக இருந்தால், பெண் போய் விடும். இந்த விவரங்களை எல்லாம் கேட்டேன்; உடனே அவளைச் சிறைச்சாலையிலேயே அடைத்து வைத்துவிட்டு, இங்கே பறந்து வந்திருக்கிறேன். பெட்டி வண்டியில் வந்தால் கால தாமசமாகும் என்று நினைத்து, அங்கே இருந்த ஒரு மோட்டாரில் ஏறிக்கொண்டு போலீஸ கமிஷனருடைய கச்சேரிக்குப் போய், அவரிடத்தில் இரண்டொரு நிமிஷ நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு இங்கே வந்தேன். உங்களுடைய துரதிர்ஷ்டத்துக்கு அனுசரணையாக இன்னோர் இடைஞ்சல் வந்து இன்றைய தினம் குறுக்கிட்டிருக்கிறது; இன்றைய தினம் மைலாப்பூரில் ரிஷபவாகன உற்சவம் ஆதலால், இந்த டவுனில் உள்ள போலீஸ் ஜெவான்கள் எல்லோரும் அங்கே அனுப்பப்பட்டுப் போயிருக்கிறார்கள்.

அங்கே லக்ஷக்கணக்கில் ஜனங்கள் கூடுவார்கள் ஆகையால், அவர்களுக்கெல்லாம் பாதுகாப்பாக அத்தனை ஜெவான்களும் இருக்க வேண்டியது அத்தியாவசியமாக இருக்கிறது. அங்கே அனுப்பப்பட்டிருக்கும் ஜெவான்களை எல்லாம் அவ்விடத்தை விட்டு அழைத்துக் கொண்டு வந்தால் கமிஷனர் முதல் எங்கள் எல்லோருக்கும் உத்தியோகம் போய்விடும். பல இடங்களில் சிதறி நிற்கும் அந்த ஜெவான்களை இப்போது ஒன்று கூட்டுவதும் சாத்தியமில்லாத காரியம். இன்று ஜெவான்கள் எல்லோரும் மைலாப்பூருக்குப் போய்விடுவார்கள் என்ற தைரியத்தினாலேயே அந்த டாம்பாச்சாரி ஜெமீந்தார் இவ்வளவு துணிகரமாக இந்த விஷயத்தை பகிரங்கப்படுத்தி இருக்கிறார் என்று நினைக்க வேண்டி இருக்கிறது. இப்போது எங்களிடத்தில் சுமார் பத்து ஜெவான்கள் இருக்கிறார்கள். அவர்களிடத்தில் சரியான ஆயுதங்களும் இல்லை. இந்த பங்களாவில் உங்களால் வைக்கப் பட்டுள்ள அறுபது ஆள்கள் அவ்வளவாக உபயோகப்பட மாட்டார்கள் என்பது என்னுடைய அபிப்பிராயம். நானும் அந்தப் பத்து ஜெவான்களும் இங்கே வந்திருந்து எங்களால் ஆன உதவியைச் செய்யத் தடையில்லை; ஆனால், எதிரி ஆயுதங்க ளோடு இருநூறு மனிதர்களை அழைத்து வந்தால், அவர்களை வெல்ல எங்களால் முடியும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. நாம் எல்லோரும் இங்கேயே இருந்து வருவதை அனுபவிப்பது நல்லதென உங்களுக்குத் தோன்றினால் அப்படியே செய்வோம். அப்படி இல்லாவிட்டால், போலீஸ் கமிஷனர் துரை இன்னோர் உபாயம் சொல்லியிருக்கிறார்; அந்த மாதிரி செய்ய உங்களுக்குப் பிரியமிருந்தால் அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்யவும் நாங்கள் தயாராக இருக்கிறோம். போலீஸ் கமிஷனருடைய அந்த பங்களாவில் நான் என்னுடைய கச்சேரியை நடத்திக்கொள்ள அவர் விட்டு வைத்திருக்கிறார். இப்போது எவருக்கும் தெரியாமல் நீங்களும், ஜெமீந்தாரிணி யம்மாளும், அவர்களுடைய இரண்டு பெண்களும் ரகசியமாகப் புறப்பட்டு மோட்டார் வண்டியில் உட்கார்ந்து கொண்டு கமிஷனருடைய கச்சேரிக்குப் போய்விட்டால், அந்தக் கச்சேரியி லாவது, நான் ஆபீஸ் நடத்தும் பக்கத்து பங்களாவிலாவது நீங்கள் மறைந்திருந்து காலையில் இங்கே வந்துவிடலாம்.

கமிஷனருடைய கச்சேரியில் இருபது ஜெவான்கள் கத்தி, துப்பாக்கிகளோடு எப்போதும் காவல் காத்திருப்பார்கள்; ஆகையால் அங்கே இருந்தால் உங்களுக்கு எவ்வித இடைஞ்சலும் உண்டாகாது. எதிரிகள் எத்தனை பேராக இருந்தாலும் அங்கே வந்து வாலையாட்ட முடியாது. கமிஷனர் துரை இன்று ராத்திரி முழுதும் மைலாப்பூரிலேயே இருப்பார். ஆகையால் அவருடைய கச்சேரியில் உங்களை எல்லாம் கொண்டு வந்து பந்தோபஸ்தாக வைக்கும்படி அவரே சொல்லிவிட்டுப் போனார். அந்த மாதிரி செய்வதே உசிதமாகத் தோன்றுகிறது. இங்கே இருந்து நாம் எதிரிகளோடு சண்டை செய்தால், எத்தனை பேர் உயிரைவிட நேருமோ! எத்தனை பேருக்கு மண்டை உடையுமோ! அதனால் என்னென்ன வியாஜ்ஜியங்களும் வழக்குகளும் அவமானமும் உண்டாகுமோ! அதை இப்போது சொல்ல முடியாது. வந்தபின் காப்பதைவிட வரும் முன் காப்பதே விவேகிகளுக் கழகு; இன்றைய ராத்திரி பொழுது இப்படிக் கழிந்து போகுமானால், நாளைய தினம் முதல் ஆயிரம் ஜெவான்கள் வேண்டுமானாலும் நான் அனுப்பத் தடையில்லை. இப்போது ஒரு நிமிஷ நேரங்கூட நாம் தாமசிக்கக்கூடாது. நீங்கள் யோசனை செய்து உங்களுடைய முடிவை உடனே தெரிவியுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட கல்யாணியம்மாளும் சிவஞான முதலியாரும் மிகுந்த திகிலடைந்த நடுநடுங்கிச் சிறிது நேரம் யோசனை செய்து, கடைசியில் இன்ஸ்பெக்டர் சொன்னபடி கமிஷனருடைய கச்சேரி யில் போயிருப்பதே நல்லதெனத் தீர்மானித்துக் கொண்டு தங்களது முடிவை இன்ஸ்பெக்டரிடத்தில் உடனே வெளியிட்ட னர். அவர் அதைக் கேட்டு மிகுந்த சந்தோஷம் அடைந்தவராய், உடனே பெண்களை அழைத்துக் கொண்டு புறப்படும்படி கல்யாணியம்மாளிடத்தில் கூறியனுப்பிவிட்டு, சிவஞான முதலி யாரைப் பார்த்து, "நீங்கள் ஒரு காரியம் செய்யுங்கள். இங்கே இருக்கும் ஆள்களுக்கு ஒரு சங்கதி சொல்லிவிட்டு வாருங்கள். பங்களாவில் உள்ள சொத்துகளை எல்லாம் அவர்கள் ஜாக்கிரதை யாகப் பார்த்துக் கொள்ளச் சொல்லுங்கள். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு எதிரிகள் வந்தால், இவர்கள் அவர்களோடு சண்டை போட வேண்டாம். எஜமானியம்மாளும் பெண்களும் மைலாப்பூருக்குப் போயிருப்பதாகவும், ராத்திரி முழுதும் அங்கேயே இருந்துவிட்டுக்

காலையிலே தான் வருவார்கள் என்றும் இவர்கள் சொல்லட்டும். அவர்கள் சந்தேகித்தால், அவர்களில் சிலரை அழைத்துக் கொண்டு வந்து உள்ளே பார்த்துவிட்டுப் போகும்படி செய்யட்டும். அவர்கள் பார்த்துவிட்டுப் போய்விடுவார்கள்; நம்மவர்கள் எதிரி களிடத்தில் சண்டைக்கே போக வேண்டாம். அவர்கள் ஏதாவது சொத்துகளை எடுத்தால் அப்போது வேண்டுமானால், அதைத் தடுக்கட்டும். அநாவசியமான கலகம் உண்டாகாமல் பார்த்துக் கொள்ளும்படி சொல்லி எச்சரித்து வையுங்கள். அதுவும் தவிர, இன்னொரு காரியம்; அங்கே ஜெமீந்தாரிணி அம்மாளுக்கும் பெண்களுக்கும் துணையாக நாலைந்து தாதிகளும் கூட இருப்பது நல்லது; நான் ஒரு மோட்டார் வண்டி தான் கொண்டு வந்திருக்கிறேன். இங்கே இன்னொரு மோட்டார் வண்டி அகப் படுமா?" என்றார். முதலியார், "இல்லை; ஸாரட்டு தான் இருக்கிறது" என்றார்.

இன்ஸ்பெக்டர், "அப்படியானால், ஒரு காரியம் செய்வோம். நான் கொண்டு வந்திருக்கும் மோட்டார் வண்டியில் நான்கு மனிதர்கள் தான் உட்கார இடமிருக்கிறது. ஜெமீந்தாரிணி அம்மாளும், பெண்கள் இருவரும் உள்ளே உட்கார்ந்து கொள்ளட்டும். நான் ஓட்டுகிறேன். என்னுடைய ஜெவான்கள் ஐந்து பேரும் மோட்டாரின் முன்னாலும் பின்னாலுமாகத் தொற்றிக்கொண்டு நிற்கட்டும். ஸாரட்டு வண்டியில் நாலைந்து தாதிகளை வைத்து அதை நீங்கள் ஓட்டிக் கொண்டு வாருங்கள். இரண்டு வண்டிகளையும் சேர்ந்தாற் போல ஓட்டிக் கொண்டு போலீஸ் கமிஷனருடைய ஆபீசுக்குப் போய்விடுவோம். போங்கள்; சீக்கிரமாக வாருங்கள்" என்றார். அதைக் கேட்ட சிவஞான முதலியார் அப்படியே செய்வதாகச் சொல்லிவிட்டு ஓட்டமாக ஓடினார்.

அதன் பிறகு அரைக்கால் நாழிகை நேரம் கழிந்தது. அரண்மனை முழுதும் அல்லோலகல்லோலப்பட்டது. யாவரும் பயத்தினால் வேர்த்து விருவிருத்துப் போயிருந்தனர். தான் வரமாட்டேன் என்று மறுத்த துரைஸானியம்மாளை, கல்யாணியம்மாளும் தாதிகளும் பலவந்தமாக இழுத்துக் கொண்டு வந்து மோட்டார் வண்டியில் வைத்தனர். கோமளவல்லியும் கல்யாணியம்மாளும் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டனர். அந்த மோட்டார் வண்டி கோஷாப் பெண்பிள்ளைகளுக்காக உபயோகப்படும் மூடு

வண்டியாகையால், அவர்கள் மூவரும் இருந்த பாகம் பெட்டி வண்டி போல மூடப்பட்டது. கையில் கத்தி துப்பாக்கிகளோடு இருந்த ஐந்து ஜெவான்களும் அதன் நாற்புறங்களிலும் உள்ள காலடி வைக்கும் தகட்டின் மேல் ஜாக்கிரதையாக நின்று கொண்டனர். முன்னால் உட்கார்ந்து கொண்ட இன்ஸ்பெக்டர் குலாம்ராவுத்தர் வண்டியை ஓட்ட ஆரம்பித்தார்.

சிவஞான முதலியாரோ இன்ஸ்பெக்டர் சொன்னபடி ஆட்களுக்கெல்லாம் செய்தி சொல்லி நிரம்பவும் ஜாக்கிரதையாக இருக்கவும் எதிரிகள் வந்தால் நயமாகவே சொல்லி அவர்களை அனுப்பி விடவும் கூறிவிட்டு, ஐந்து கிழத்தாதிகளை அழைத்துக் கொண்டு வந்து தமக்காக ஆயத்தமாக நிறுத்தப்பட்டிருந்த ஸாரட்டில் அவர்களை எல்லாம் ஏற்றி, தாமும் உட்கார்ந்து கொண்டு வண்டியை ஓட்டலானார். முன்னால் போன மோட்டார் வண்டியிலிருந்த இன்ஸ்பெக்டர் சிவஞான முதலியாரைப் பார்த்து வண்டியை விசையாக ஓட்டிக் கொண்டு வரச்சொல்ல, இரண்டு வண்டிகளும் பங்களாவிற்குள்ளே இருந்து வெளிப்பட்டு பக்கத்திலிருந்த ராஜபாட்டைக்கு வந்து திரும்பின. அப்போது அங்கே ஆலமரங்களின் மறைவிலிருந்து, "வண்டியை விடாதே யுங்கள்; வண்டியை விடாதேயுங்கள்; பெண்ணை ஒளிக்கப் போகிறார்கள்" என்ற குரல்கள் உண்டாயின. அதே காலத்தில் மூங்கில் தடிகளின் ஓசை தடதடவென்று கேட்டது. இருளி லிருந்து சில ஆட்களும் வெளிப்பட்டனர். அந்த விபரீதமான ஓசையைக் கேட்ட கல்யாணியம்மாள் முதலியோர் கிடுகிடுத்து நடுநடுங்கிக் கண்ணீர் விடுத்துக் கலங்கி அழத் தொடங்கினர். உடனே இன்ஸ்பெக்டர், "முதலியாரே! விசையாக ஓட்டிக்கொண்டு வாருங்கள்; நிற்க வேண்டாம்" என்று ஓங்கிக் கூறிய வண்ணம் மோட்டாரின் விசையை எவ்வளவு அதிகமாக முறுக்க முடியுமோ அவ்வளவு விசையாக முறுக்கி விடவே, மோட்டார் வண்டி கணிபொறி தெறிக்கக்கூடிய அவ்வளவு பிரமாதமான விசையோடு பறக்க ஆரம்பித்தது. சிவஞான முதலியாரும் சவுக்கை ஓங்கித் தமது பலம் கொண்ட மட்டும் குதிரையை அடிக்க, அது நல்ல உன்னத ஜாதிக் குதிரை ஆதலால், நாற்கால் பாய்ச்சலில் பிடுங்கிக் கொண்டு காற்றாகப் பறந்தது; மரங்களின் மறைவிலிருந்து வெளிப்பட்ட ஆட்கள் அந்த வண்டியைத் துரத்திக் கொண்டு

அரைக்கால் மயில் தூரம் வரையில் ஓடிவந்து கடைசியாகப் பின்தங்கி விட்டதாகத் தோன்றியது. அதற்குள், முன்னால் போன மோட்டார் வண்டி தலை கால் தெரியாமல் வாயுவேக மனோ வேகமாகச் சென்று கண்ணிற்குத் தெரியாமல் மறைந்து போய் விட்டது. ஸாரட்டு வண்டியிலிருந்த சிவஞான முதலியார் பெருத்த திகிலடைந்து வேர்த்து விருவிருத்து அன்றைய தினம் தாம் தப்புவதில்லை என்றே நினைத்து அவ்வளவு தூரம் வந்தவர் பின்னால் ஆட்கள் தொடர்ந்து வரவில்லை என்பதை உணரவே, அவருக்கு ஒரு வகையான துணிவு தோன்ற ஆரம்பித்தது; அப்படி இருந்தும், அந்த ஆட்கள் இன்னமும் அதிகமான ஆட்களை அழைத்துக் கொண்டு ஒருவேளை மறுபடியும் தொடர்ந்து வருவார்களோ என்ற அச்சமும் கவலையும் எழுந்து தூண்டவே, அவர் தமது விசையைத் தளர்த்தாமல் குதிரையை நாற்கால் பாய்ச்சலிலேயே துரத்திக் கொண்டு போனார். இருந்தாலும், கல்யாணியம்மாளுமு, பெண்களும், அந்நேரம் பத்திரமாகப் போய்ச் சேர்ந்திருப்பார்கள் என்ற நினைவும் திருப்தியும் உண்டாயின. அப்போது அந்த வண்டிக்குள் இருந்த தாதிகள் எல்லோருக்கும் கருப்பம் கலங்கிக் குடல் நடுக்க மெடுத்துப் போனது. அவர்கள் வண்டிக்கு வெளியில் பார்க்கவும் அஞ்சித் தங்களது கண்களை மூடிக் கொண்டு பேச்சு மூச்சின்றி அச்சமே வடிவாக வௌவால்கள் போல மூலையோடு மூலையாகத் தொற்றிக் கொண்டிருந்தனர். சிவஞான முதலியார் வண்டிக்காரன் முதலிய வேறு எந்த ஆண் பிள்ளைகள் உதவியுமின்றி நாலைந்து கிழத் தாதிகளை அழைத்துக் கொண்டு போனதனாலும், அவர் அழகாகச் சவுக்கங் கட்டிப் பேசுவதைத் தவிர, தடியைக் கண்டால் தஞ்சாவூர் வரையில் ஓடக்கூடியவர் ஆதலாலும், அவரது நிலைமை விவரிப்பதற்குச் சாத்தியமற்றதாக இருந்தது. அவரது பிராணனில் முழுப்பாகமும் எமனுலகை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த தென்று சொல்வது மிகையாகாது. அவரது ஸாரட்டின் குதிரையினது உடம்பிலிருந்து வியர்வை வெள்ளம் பெருக்கெடுத்து வழிந்தது. அவரது குதிரைக்கு இரைப்பெடுத்ததைக் காட்டிலும் அதிகமாக அவருக்கு இரைப்பெடுத்ததைக் காண்போர், அந்த ஸாரட்டை அவர் தான் இழுத்துக் கொண்டு ஓடி வந்தவரோ என்று ஐயங் கொள்ளத்தக்கதாக இருந்தது. அவரது தலைப்பாகை சட்டைகள் வஸ்திரங்கள் முதலிய யாவும் நனைந்து போய் சேறாகி விகாரத்

தோற்றமடைந்தன. அப்படிப்பட்ட மகா பரிதாபகரமான நிலைமையில் தமது உயிருக்காக ஓடிக்கொண்டிருந்த சிவஞான முதலியார் அரை நாழிகை நேரத்தில் எழும்பூரை அடைந்து அங்கே இருந்த போலீஸ் கமிஷனரது கச்சேரியின் வாசலண்டை போய், செத்தேன் பிழைத்தேன் என்று வண்டியை நிறுத்தினார். அப்போது சந்றேறக்குறைய எட்டு மணி அடிக்கும் சமயமாக இருந்தது. ராஜபாட்டையில் ஆங்காங்கு பழுத்துத் தொங்கிய மின்சார விளக்குகள் ஜெகஜ்ஜோதியாக மின்னிக் கொண்டிருந்தன. அந்தப் பாட்டையில் அப்போது ஜனங்களினது நடமாட்டம் அவ்வளவாக இல்லாமலிருந்தது. ஸாரட்டு வண்டியை நிறுத்திய சிவஞான முதலியாருக்கு அப்போதும் வேர்த்து விருவிருத்து மேல் மூச்சு வாங்கியதாகையால் அவர் பெரும்பாடுபட்டுக் கீழே இறங்கினார். அது தான் தாங்கள் இறங்க வேண்டிய இடம் என்பதை உணர்ந்த உடனே ஸாரட்டிலிருந்த கிழத் தாதிகளுக்கெல்லாம் உயிர் திரும்பி வந்தது. பின்னால் ஆட்கள் துரத்திக் கொண்டு வருவதற்குள் தாம் வண்டியை விட்டிறங்கி அங்கே இருந்த கட்டிடத்திற்குள் நுழைந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலோடு எல்லோரும் சரசரவென்று கீழே இறங்கினார்கள். அவர்கள் இறங்கியவுடனே, சிவஞான முதலியார் வண்டியையும் குதிரையையும் மறந்து, தாதிகளை அழைத்துக் கொண்டு தடதடவென்று போலீஸ் கமிஷனரது கச்சேரியிலிருந்த் பங்களாவிற்குள் நுழைந்து உள்ளே இருந்த கட்டிடத்தை அடைந்து அதற்குள்ளேயும் தாராளமாக நுழைய ஆரம்பித்தார். அந்தக் கச்சேரி விஸ்தாரமான ஒரு கட்டிடம் ஆதலால் அதற்குள் எங்கும் நாற்காலிகளும் மேஜைகளும் நோட்டுப் புஸ்தகங்களும் தஸ்தாவேஜுகளுமாக நிறைந்திருந்தன. மின்சார விளக்குகள் கச்சேரி முழுதிலும் நன்றாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அப்போது அங்கே சில குமாஸ்தாக்கள் உட்கார்ந்து அவசரமான ஏதோ சில அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தனர். கச்சேரிக்குள்ளே நுழையும் தாழ்வாரத்தில் இரண்டு போலீஸ் ஜெவான்கள் உட்கார்ந்து பாராக் கொடுத்துக் கொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில் நாலைந்து கிழவிகளை அழைத்துக் கொண்டு குடுகுடுவென்று உள்ளே நுழைந்த சிவஞான முதலியாரைக் கண்ட ஜெவான்களுள் ஒருவன், "யாரையா அது? எங்கே உள்ளே போகிறீர்கள்? இந்தப் பெண் பிள்ளைகள் எல்லாம் யார்? சங்கதி இன்னதென்று சொல்லாமல் உங்கள்

பாட்டிலே உள்ளே நுழைகிறீர்களே? என்ன ஐயா விசேஷம்?" என்று அதட்டிக் கேட்ட வண்ணம் குறுக்கே வந்து அவர்களை எல்லாம் திரும்பித் தள்ளிக் கொண்டு வந்து தாழ்வாரத்தின் கீழே இறக்கிவிட, அப்போது இரைப்படங்காமை யால் மேல்மூச்சு விடுத்துக் கொண்டிருந்த சிவஞான முதலியார் உடனே மறுமொழி சொல்லமாட்டாமல் சிறிது தத்தளித்தார். அதைக் கண்ட ஜெவான் அவரைப் பார்த்துப் புரளியாகப் பேசத் தொடங்கி, "என்ன ஐயா கேட்கிறேன். ஆடு திருடின கள்ளனைப் போல முழிக்கிறீரே! நீ யார்? இந்தக் கிழவிகள் எல்லாம் யார்? இவர்களை எல்லாம் அழைத்துக் கொண்டு இங்கே என்ன அலுவலாக வந்தீர்? சட்டென்று சொல்லும் இல்லாவிட்டால் போம் வெளியே. துரை உள்ளே இருக்கிறார்; எழுந்து வெளியே வருகிற சமயம்; யாரும் எதிரில் நிற்கக் கூடாது" என்று கூறினான்.

அதைக் கேட்ட சிவஞான முதலியாருக்கு அப்போதுதான் பேசுவதற்கு வல்லமை ஏற்பட்டது. அவர் ஜெவான்களை நோக்கி மிகவும் தணிவான குரலில் பேசத் தொடங்கி, "அப்பா! நாங்கள் இன்னார் என்று சொன்னால் உங்களுக்குத் தெரியுமோ தெரியாதோ. சற்று நேரத்துக்கு முன் தேனாம்பேட்டை டிவிஷன் இன்ஸ்பெக்டர் மோட்டார் வண்டியில் வந்தாரே; அவர் இங்கே வந்தாரா?" என்றார்.

ஜெவான், "அவர் ஏன் இங்கே வருகிறார்? அவர் ரிஷபவாகனத் திருவிழாவுக்காகப் போகிறதாகச் சொல்லிவிட்டுக் காலையிலேயே மைலாப்பூருக்குப் போய்விட்டாரே. அவர் இப்போது இங்கே வரக் காரணமில்லையே!" என்று வியப்பாகக் கூறினான்.

சிவஞான முதலியார், "இல்லையப்பா! அவர் ஓர் அவசரமான காரியமாக இப்போது இங்கே வந்தார். பெரிய மனிதர் வீட்டு ஜனங்கள் சிலரை மோட்டார் வண்டியில் வைத்து அழைத்துக் கொண்டு இப்போது தான் அவர் இங்கே வந்தார். அந்த ஜனங்களுக்கு ஏற்படப் போகும் ஓர் ஆபத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றுவதற்காக, கமிஷனர் துரை அவர்களை இங்கே அழைத்துக் கொண்டு வரச் சொன்னாராம். அவர் இப்போது தான் வந்தார். பத்து நிமிஷ நேரங்கூட ஆகியிராது" என்றார்.

ஜெவான், "பகல் பன்னிரண்டு மணி முதல் நான் இவ்விடத்தி லேயே இருக்கிறேன். அவர் இங்கே வரவில்லை. அவர் வேறே எங்கே போனாரோ தெரியவில்லை" என்றான்.

சிவஞான முதலியார் தலையைச் சொரிந்து கொண்டு சிறிது நேரம் தயங்கி, "கமிஷனர் துரையின் ஜாகையான அடுத்த பங்களாவிலே அவர்களை இறக்கி வைப்பதாக அந்த இன்ஸ்பெக்டர் சொன்னார்; ஒருவேளை மோட்டார் வண்டியோடு அங்கே போயிருப்பாரோ?" என்றார். அதைக் கேட்ட ஜெவான்கள் இருவரும் பெரிதும் திகைப்பும் வியப்பும் அடைந்து புரளியாகக் கலகலவென்று நகைத்தனர். அது வரையில் அங்கே நடந்த சம்பாஷணையைக் கவனித்துக் கொண்டிருந்த குமாஸ்தாக்களுள் ஒருவர், சிவஞான முதலியாரது தோற்றத்திலிருந்து, அவர் யாரோ தக்க பெரிய மனிதர் என்று யூகித்துக் கொண்டு, தமது நாற்காலியை விட்டெழுந்து வந்து, "ஐயா! உங்களுக்கு என்ன வேண்டும்? தேனாம்பேட்டை யைச் சேர்ந்த இன்ஸ்பெக்டர் இன்று காலை முதல் இங்கே வரவே இல்லை. இந்தக் கச்சேரிக்கு அடுத்த பங்களாவானது கமிஷனர் துரையின் ஜாகை என்று யாரோ சொன்னதாகச் சொல்லுகிறீர்களே! அப்படி யார் உங்களுக்குச் சொன்னது?" என்றார்.

சிவஞான முதலியார் மிகுந்த குழப்பமும் கலக்கமும் அடைந்து, "அந்த இன்ஸ்பெக்டர் தான் சொன்னார். ஆனால், போலீஸ் கமிஷனர் அதில் இருப்பதில்லை என்றும், அவர் ஏகாங்கி ஆகையால் மதராஸ் கிளப்பில் இருக்கிறார் என்றும் அந்த இன்ஸ்பெக்டர் சொன்னார்" என்றார்.

அந்த வரலாற்றைக் கேட்ட குமாஸ்தா முன்னிலும் அதிக வியப் படைந்து, "நீங்கள் சொல்வதெல்லாம் புதிய சங்கதியாக இருக் கிறதே! இந்தக் கமிஷனர் துரை சேத்துப்பட்டில் ஒரு பங்களாவில் இருக்கிறார்; இந்தக் கச்சேரிக்குப் பக்கத்தில் உள்ள பங்களா ஒரு செட்டியாருக்குச் சொந்தமானது; அதில் அந்தச் செட்டியாரே குடும்ப சமேதராக இருந்து வருகிறார். இந்த மாதிரியான தப்பு சங்கதிகளை எல்லாம் உங்களுக்கு எந்த இன்ஸ் பெக்டர் சொன்னார்" என்று கேட்டார்.

உடனே சிவஞான முதலியாரது மனதில் பெருத்த குழப்பமும், திகிலும் உண்டாயின; தாம் காண்பது கனவோ நனவோ என்ற

ஐயமுதித்தது. இரண்டொரு நிமிஷ நேரம் அவர் தமது தலையைச் சொரிந்து கொண்டு நின்றவராய், "இந்த விவரங்களை எல்லாம் அந்தத் தேனாம்பேட்டை இன்ஸ்பெக்டர்தான் சொன்னார்" என்று அழுத்தமாகவும் உறுதியாகவும் கூறினார்.

அதைக்கேட்ட குமாஸ்தா மிகுந்த ஆச்சரியமடைந்து பக்கத்தி லிருந்த ஜெவான்களைப் பார்த்து, "என்னடா இது! தேனாம் பேட்டை இன்ஸ்பெக்டர் மிச்சல் துரை இல்லாத மூட்டை எல்லாம் விட்டுக் கொண்டு திரிகிறான் போலிருக்கிறதே. அவன் எல்லாரிடத் திலும் இப்படி ஒன்றுகிடக்க ஒன்றாகப் புளுகிக் கொண்டே திரிகிறானே" என்றார்.

அதைக் கேட்ட சிவஞான முதலியார் திடுக்கிட்டு நடுநடுங்கி, "என்ன! என்ன! தேனாம்பேட்டை இன்ஸ்பெக்டருடைய பெயர் என்ன? இப்போது வேலை பார்க்கிறவருடைய பெயரைச் சொல் லுங்கள்" என்றார்.

குமாஸ்தா அலட்சியமாக, "இப்போது அந்த டிவிஷனில் வேலை பார்க்கிற இன்ஸ்பெக்டருடைய பெயர் மிச்சல் துரை; அவன் ஒரு பறங்கிக்கார துரை; அவன் இரண்டு வருஷகாலமாக அந்த டிவிஷனிலே தான் இருக்கிறான். இந்த நிமிஷத்தில்கூட அவன் அங்கே தான் இன்ஸ்பெக்டராக இருக்கிறான்; உங்களிடத் தில் சொன்னது அந்த மிச்சல் துரைதானே?" என்றார்.

சிவஞான முதலியார் சகிக்க மாட்டாத வேதனையும் கலவரமும் அடைந்து, என்ன மறுமொழி சொல்வதென்பதை உணராமல் சிறிது நேரம் தயங்கி நின்றவராய், "அப்படியானால் குலாம்ராவுத்தர் என்பவர் இப்போது எந்த டிவிஷனில் வேலை பார்க்கிறார்" என்றார்.

அதைக் கேட்ட குமாஸ்தா கரைகடந்த வியப்பும் திகைப்பும் அடைந்து, "யாரது? குலாம்ராவுத்தரா? அது யாரப்பா அது? குலாம் ராவுத்தர் என்ற பெயருடைய இன்ஸ்பெக்டர் இந்த ஜில்லாவி லேயே இல்லையே! அவர் சொன்ன பெயரை நன்றாக ஞாபகப் படுத்திச் சொல்லும்" என்றார்.

சிவஞான முதலியார் நெருப்பின் மேல் நிற்பவர் போலத் தவித்த வராய், "நீங்கள் சொல்வது நிஜந்தானா? அந்தப் பெயருடைய

இன்ஸ்பெக்டரே சென்னப்பட்டணத்தில் இல்லையா? அப்படி யானால், அந்தப் பெயருடைய சப் இன்ஸ்பெக்டர் யாராவது இருக்கிறாரா?" என்றார்.

குமாஸ்தா, "அந்தப் பெயருடைய இன்ஸ்பெக்டருமில்லை; சப் இன்ஸ்பெக்டருமில்லை; இது நிச்சயமான சங்கதி; போலீஸ் சிப்பந்திகளுக்கெல்லாம் மாசாமாசம் சம்பளப்பட்டி தயாரிக்கிறவன் நான்தான்; ஆகையால் நீங்கள் இதை நிச்சயமாக நம்பலாம்" என்றார்.

அதைக் கேட்ட சிவஞான முதலியாரது மனநிலைமை எப்படி இருந்திருக்கும் என்பதை வார்த்தைகளினால் விவரிப்பது சாத்திய மில்லாத காரியம்; தாங்கள் அன்று முழுதும் ஏதோ பெருத்த படு மோசத்திற்காளாகி ஏமாறிப் போய்விட்டோம் என்ற நினைவு உண்டாகி விட்டது. உடனே அவரது மனதில் கோடானுகோடி எண்ணங்களும் யூகங்களும் கவலைகளும் அச்சமும் தோன்றி அவரது மனதை நரகவேதனைக் குள்ளாக்கின; அவரது தேகமோ என்ன செய்வதென்பதை உணர மாட்டாமல் பதறிப் பதைத்துக் கொண்டிருந்தது; கைகால்கள் எல்லாம் வெடவெடவென நடுங்கு கின்றன. இன்னொரு முறை ஸ்நானம் செய்தது போல, அவரது உடம்பில் வியர்வை குபீரென்று வெளிப்பட்டு தாரைதாரையாக வழிந்தது. நக்ஷத்திரத் தரகன் என்று கையெழுத்திட்டுக் கல்யாணி யம்மாளுக்குக் கடிதம் அனுப்பிய மனிதனே அவ்வாறு போலீஸ் இன்ஸ்பெக்டர் போல வந்து தங்களை எல்லாம் அவ்வளவு தந்திரமாக ஏமாற்றிவிட்டுப் பெண்ணைக் கொண்டு போய் விட்டான் என்ற உறுதி ஏற்பட்டது. முதல் நாள் அவனால் எழுதப் பட்ட கடிதம் மறுநாள் கல்யாணியம்மாளிடம் போய்ச் சேரும் என்பதையும், அவர்கள் உடனே போலீசாரை அழைக்கப் போவார்கள் என்பதையும் யூகித்துக் கொண்டு, அவன் இன்ஸ் பெக்டர் போல வந்து பங்களாவிற்குச் சமீபத்தில் நின்று கொண்டிருந்து காரியத்தை மகா சாமர்த்தியமாக நிறைவேற்றிக் கொண்டு போயிருக்கிறான் என்பதும் தெளிவுபட்டது. அப்படி யானால், ஜெவான்களாக வந்தவர்கள் யார்? அவர்கள் அணிந் திருந்த உடுப்புகள் கத்திகள் துப்பாக்கிகள் முதலியவைகள் எப்படி அவனுக்குக் கிடைத்தன? அவனுடைய மனிஷியான ராஜாயியை அவன் அவ்வளவு தூரம் வருத்தி வற்புறுத்தி, அவள் ராஜாயி

என்பதை எல்லோரும் அறிய வெளியிட்டதன் காரணம் என்ன? கடைசியாக பெண்களையும், கல்யாணியம்மாளையும், தாதிகளையும் வண்டியில் வைத்துக் கொண்டு வந்தபோது பங்களாவின் வெளியில் மரங்களில் மறைந்திருந்து துரத்திய ஆள்கள் யார்? அவர்கள் உண்மையில் பெண்ணை அபகரித்துப் போக வந்திருந்த ஆள்களாக இருந்தால், வாசலின் இரண்டு பக்கங்களிலும் இருந்து வண்டிகளை வளைத்துக் கொண்டிருப் பார்களேயன்றி ஒரே பக்கத்தில் மறைந்திருந்த காரணமென்ன? என்ற எண்ணிறந்த கேள்விகளும் சமாதானங்களும் அவரது மனதில் எழுந்து எழுந்து மின்னல் தோன்றித் தோன்றி மறைவது போல மறைந்து கொண்டிருந்தன. மூத்த பெண்ணாகிய ஒருத்தியை அவன் அபகரித்துப் போகாமல் தடுப்பதற்காக; தாமும் ஏராளமான அத்தனை ஜனங்களும் காலை முதல் பெரும்பாடு பட்டு முயன்றிருந்தும், ஒரே ஒரு மனிதனான அவன் மூத்த பெண்ணோடு சின்னப் பெண்ணையும் அவர்களது தாயையும் கொண்டு போனது அவரால் தாங்க முடியாத மகா ஆச்சரியமான சங்கதியாக இருந்தது. ஆகவே, தாம் அப்போது என்ன செய்வது? அந்த மனிதனைத் தேடுவதா? அப்படியானால், எங்கே போய்த் தேடுவது? அல்லது, தாம் ஏமாறிய விவரங்களை எல்லாம் உடனே போலீஸ் கமிஷனரிடத்தில் சொல்லுவதா? அல்லது, பங்களாவுக்குத் திரும்பிப் போய், ஒன்பது மணி வரையில் ஒரு பக்கத்தில் மறைந்திருந்து, எதிரியின் ஆள்கள் வந்து ஏதாவது கலகம் செய்கிறார்களா என்பதையும் அறிந்து கொண்டு, வந்து புகார் செய்வதா? என்பன போன்ற கேள்விகளில் சிவஞான முதலியார் அழுந்திப் போய்ப் பேச்சுமூச்சின்றி சித்திரப் பதுமை போல ஸ்தம்பித்து அப்படியே நின்றார்.

---

சுதேசமித்திரன் 1.6.26–ம் தேதியில் எழுதுகிறது:–

# மதிப்புரை

## மாயா விநோதப் பரதேசி

*(சென்னை திருவல்லிக்கேணி கே. விஜயம் கம்பெனியின் சொந்தக்காரரான ஸ்ரீமான் வடுவூர் – கே. துரைஸாமி ஐயங்கார் எழுதியது; இரண்டு பாகங் களாய் பைண்டு செய்யப்பட்டது.*

**ஸ்ரீமான் வடுவூர் – கே. துரைஸாமி ஐயங்காரைத்** தமிழ் உலகம் நன்கறியும்; அவர் ஏற்கெனவே வெளியிட்டுள்ள பல அரிய நாவல்கள் தமிழ் நாட்டினரைப் பரவசப்படுத்தியிருக்கின்றன வென்பதிலையமில்லை. சென்ற ஒரு வருஷகாலமாக மனோரஞ்சனியில் வெளியாகி வந்த **மாயா விநோதப் பரதேசி**யென்னும் நாவலானது சென்ற மாதத்திய இதழுடன் சம்பூரணமடைந்து இப்பொழுது புத்தகரூபமாக விற்பனைக்குத் தயாரா யிருக்கிறது. மேனாடுகளில் பலரும் நம் நாட்டிற் சிலரும் சாசுவதமான நன்மையை விளைவிப்பதில் நாட்டமின்றி, தங்களுடைய நாவல் விலையாகிப் பணம் கைக்கு வரவேண்டுமென்ற ஒரே எண்ணத்துடன் சிதாவுசிதம், யுக்தா யுக்தம் முதலியவைகளைக் கவனியாது படிக்கும்போது மட்டில் ஒருவித இன்பத்தை விளைவிக்கக்கூடியதாகவும், சில சமயங் களிலும் தீய வழிகளிலும் பிரவர்த்தித்துவிடப் படிப்போரைத் தூண்டிவிடக் கூடிய வழியிலும் எழுதியிருப்பதைப் போலில்லாது நமது நூலாசிரியர் தற்காலம் நமது சமூகத்திலிருந்துவரும் குறைகளை உணர்ந்து அவை களைப் பரிகரிக்கும் நோக்கத்துடன் படிப்பவருடைய மனதில் நல்ல வழியான வாழ்வில் நாட்டம் கொள்ள வேண்டுமென்ற ஆவல் சுலபமாய் உதிக்கக்கூடிய விதமாய் எளிய நடையிலும் மனதை உருக்கக்கூடிய விதமாகவும் நாவல்களை எழுதி வெளியிட்டு வருவதற்குத் தமிழ் மக்கள் என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள். நம் முன்னிருக்கும் இந்த நாவலில் மனித வாழ்வில் சுக துக்கங்கள் மாறி மாறி வருவது இயல்பென்பதையும், ''கடவுளை நம்பினோர் கைவிடப்படார்'' என்பதையும், ''கெடுவான் கேடு நினைப்பான்'' என்பதையும், மேனாட்டுக் கல்வி முறையினாலும் சகவாஸ தோஷத்தினாலும் ஏற்படக்கூடிய கேடுகள் இன்னவையென்பதையும் ஸத்சங்கத்தால் எவ்விதம், சரீரத்தில் வெகு காலமாக ஊறிப் போயுள்ள கெட்ட வழக்கங்களையும் சுலபமாக விட்டு விடக்கூடியது சாத்தியமென்பதையும், மனிதருடைய புத்தி யுக்தியால் எத்துணை விஷயங்களையும் எவ்விதம் சுலபமாகக் கண்டுபிடித்துவிடக் கூடுமென்பதையும் நூலாசிரியர் வெகு அழகாயும், தெள்ளிய நடையிலும் படிக்கப் படிக்க இன்பத்தைக் கொடுக்கக்கூடிய விதமாகவும் வர்ணித் திருக்கிறார். முன்னர் இந்நூலாசிரியர் வெளியிட்டுள்ள திகம்பர சாமியார்

என்ற கதையின் தொடர்ச்சியாக இக்கதையிருக்கிறது. அந்தக் கதையில் கண்ணப்பாவும், வடிவாம்பாளும், திகம்பர சாமியாரும் முக்கிய பாத்திரங் களாக விளங்கியதுபோல் இதில் கண்ணப்பாவின் சகோதரரான கந்தசாமியும், முடிவில் அவருடைய மனைவியான மனோன்மணியும், திகம்பர சாமியாரும் முக்கிய நடிகர்களாக இருக்கின்றனர். கல்வி அறிவில் கரை கடந்து மேனாட்டுப் பழக்க வழக்கங்களிலும் சம்பிரதாயங்களிலும் முழுகி, நமது புராதன தர்மங்களில் மிகுந்த வெறுப்படைந்திருந்த கதாநாயகியை கந்தசாமிக்கு மணமுடிக்க உபயகுலப் பெற்றோர்களும் தீர்மானம் செய்திருந்தும், பூர்விக தர்மங்களில் கண்ணுங் கருந்துமுடைய வனாயினும் தான் மணம் செய்து கொள்ளவிருக்கும் பெண்ணை நேரில் கண்டு அவளுடைய குணாதிசயங்களை அறிந்துவர விரும்பிய கந்தசாமி தமது நண்பரொருவருடன் அவருடைய மனைவிபோல் வேடம் பூண்டு பெண்ணைப் பார்க்கச் செல்லுவதும், கந்தசாமியின் பெற்றோருடைய குடும்பத்தாரிடத்தில் தீரா வைரம் வைத்திருந்த சிலர் தங்களுடைய க்ஷாத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளக் கருதி மணமகளைக் களவாட வருவதும், பெண்ணைப் பார்க்க வந்தவர்கள் சொல்லியபடி மணமகளின் குடும்பத்திற்கு அவர்கள் பந்துக்களல்லவென்பதை மணமகனின் பிதா உணர்ந்தும், அவர்களை அவர்களறியாமல் சிறை வைப்பதும், மணமகளைக் களவாட வந்தவர்கள் பெண் வேஷத்துடன் வந்திருந்த கந்தசாமியைக் களவாடிச் செல்லுவதும், அவனை சட்டநாத பிள்ளையின் சகோதரன், புருஷன் என்பதை அறியாமல் விவாகம் செய்து கொள்ளுவதும், அவனிடமிருந்து கந்தசாமி சாமர்த்தியமாக வெளிப்படுவதும், திகம்பர சாமியாருக்கு அவருடைய விரோதிகள் செய்யும் கேடுகளும் அவை களிலிருந்து அவர் தப்பி, சமயத்திற்குத் தகுந்த வேடந்தரித்து தமது நண்பர்களுக்கு உதவி செய்து வருவதும், காணாமற்போன கந்தசாமி திரும்பி வரவேண்டுமென்று அவனுடைய பெற்றோரும், உற்றாரும் தெய்வப் பிரார்த்தனை நடத்துவதும் அதுகாலை கந்தசாமியின் தகப்பனார் தெய்வத்தைத் தொழுத பாடல்களின் உருக்கமான தன்மையையும் அவைகளின் உட்கருத்தையும் உணர்ந்த மனோன்மணி தனது புத்தியை மாற்றிக் கொண்டு உத்தமப் பெண்மணியாக மாறிவிடுவதும், முடிவில் கந்தசாமி க்ஷேமமாகத் திரும்பி வந்தபிறகு இருவருக்கும் சுபமுகூர்த்தத் தில் விவாகம் நடைபெறுவதும் இந்த நாவலில் விவரிக்கப்பட்டிருக்கிறது. படிப்பவருடைய மனதில் நல்லெண்ணங்களும், தெய்வபக்தியும் சுதா வாகவே எழுந்து நவீன நாகரிகத்தில் வெறுப்பு ஏற்படக்கூடிய விதமாக இது எழுதப்பட்டிருக்கிறது. இத்துணை உயரிய நாவல்களை எழுதித் தமிழ் உலகிற்கு உதவிவரும் இந்நூலாசிரியருக்குத் தமிழ் மக்கள் தங்கள் பூர்ண ஆதரவைத் தந்து, மேன்மேலும் இத்துறையிலீடுபட அவருக்கு ஊக்கத்தைக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

# ஆங்கிலத்தில் ஷெர்லாக்ஹோம்ஸ்
# நவீன காலத்தில் 007 ஜேம்ஸ்பாண்டு
# அன்றும் இன்றும் என்றும் தமிழகத்தில்

## திகம்பர சாமியார்

1. பூர்ண சந்திரோதயம் பாகம் - 1
2. பூர்ண சந்திரோதயம் பாகம் - 2
3. பூர்ண சந்திரோதயம் பாகம் - 3
4. பூர்ண சந்திரோதயம் பாகம் - 4
5. பூர்ண சந்திரோதயம் பாகம் - 5
6. கும்பகோணம் வக்கீல் பாகம் - 1
7. கும்பகோணம் வக்கீல் பாகம் - 2
8. மாயா வினோதப் பரதேசி பாகம் - 1
9. மாயா வினோதப் பரதேசி பாகம் - 2
10. மாயா வினோதப் பரதேசி பாகம் - 3
11. மேனகா பாகம் - 1
12. மேனகா பாகம் - 2
13. சௌந்திர கோகிலம் பாகம் - 1
14. சௌந்திர கோகிலம் பாகம் - 2
15. சௌந்திர கோகிலம் பாகம் - 3
16. சௌந்திர கோகிலம் பாகம் - 4
17. மதன கல்யாணி பாகம் - 1
18. மதன கல்யாணி பாகம் - 1
19. மதன கல்யாணி பாகம் - 2
20. வித்யாசாகரம்
21. வசந்த மல்லிகா

... ... ... இதற்கு மேலும் வருவார் !